# மோகனக் கடல்

என்ற

## இராமாயண இரத்னுகரம்

## (கம்பர், துளசி, வால்மீகி)

### அறிமுகம்

பாரத நாடு பழம் பெரு நாடு. இதன் பண்பாடும் இலக்கியமும் ஜகப்பிரசித்தி பெற்றவை. திராவிட கலாச் சாரத்தின் சிகரமாகிய தென்னிந்தியாவும், ஆரிய நாகரி கத்தின் மகுடமாகிய வடஇந்தியாவும் பாரத தேசத்தின் இரு கண்மணிகளுக்கு ஒப்பானவை. இவைகளின் மேம் பாடும் மகிமையும் இமயமலையும் குமரிமுனையும் உலகில் உள்ளவரை நிலைத்து நிற்கும். இப்படிப்பட்ட நம் இந்தியா ஞானம், பக்தி, கலை, கல்வி, சாஸ்திரம், சிற்பம், கைத் தொழில், இவைகளிலும், வேதம், வேதாந்தம், வேதாங்கம், சித்தாந்தம், முதலிய அற்புத, அமர கிரந்தங்களிலும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாததாய், ஈடிணையற்றுத் திகழ்கிறது. பல வேறு திறப்பட்ட மதத்தினரும், பாஷை யினரும் ஒருமித்து மனமொத்து வாழும் இப் பரதகண்டம் இந்து நாகரிகத்தின் களஞ்சியம். ருக்வேத காலம் தொடங்கி காந்தியுகம் வரையில் தன் தனி மேன்மையை அழியாது உலகமுழுதும் ஜொலிக்கச் செய்திருப்பது இந்தப் பாரதப் பண்பாடுதான்.

உலகப் புராதன இலக்கியங்களுள் தலை சிறந்தது பாரத இலக்கியம். இதற்குச் சான்று ருக்வேதம்.

இந்திய கலாச்சாரத்தின் தந்தையாகிய ஸம்ஸ்கிருத மொழி கலைச்செல்வ மணிகளும், கல்விச் செல்வ முத்துக்களும், அநுபவச் செல்வப் பவளக்காடுகளும் நிறைந்த வற்றாத மகா சமுத்திரம். இம்மொழியில் ஜொலிக்கும் மூன்று மாணிக்கச் சுடர்களாக விளங்குபவை வால்மீகி இராமாயணம், வியாச பாரதம், பாகவத புராணம் என்னும் மூன்று நூல்கள். இவைகளைப் பற்றி அறியாத இந்தியர்கள் இருக்கமாட்டார்கள்.

இவைகளுள் ஆதி கவி எனப் புகழப்படும் மகரிஷி வால்மீகியினால் இயற்றப்பட்டது இராமாயணம் எனும் மாபெரும் காவியம். இதில் அயோத்தியாதிபதி அறச் செல்வன் இராமனின் சரித்திரமும், மிதிலைபுரி அரசிளங் குமரி வைதேகியின் கற்பும் வருணிக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் காவியத்தின் சிறப்பையும், நயத்தையும் மொழி பெயர்ப்பின் மூலம் உள்ளபடி உணரமுடியாது, மூல மொழியில் நல்ல பாஷா ஞானம் பெற்று வாசித்தால் அதன் பெருமை நன்கு விளங்கும்.

இராமாயண காவியத்தின் சிறப்பு அது அனேகமாக எல்லா இந்திய மொழிகளிலும், உயர்ந்த கவிகளால் தழுவப்பட்டு இயற்றப்பட்டிருப்பதி லிருந்தே தெரியவரும். வால்மீகி இராமாயணத்தைப் போலவே ஆனந்த இராமாயணம், அத்யாத்ம இராமாயணம் இரண்டும் ஸம்ஸ்க்ருத மொழியில் சிறப்பு வாய்ந்தவை. ஆனால் இவைகள் அதிகம் ஞான பரமாக, தத்துவ ரூபமாக இருப்பதால் சாதாரண ஜனங்கள் அதிகம் படிப்பதில்லை. வித்துவான்கள், ஞானிகளிடையே இவைகளுக்கு மதிப்பு அதிகம். நிற்க.

வால்மீகி இராமாயணத்துக்கு ஆதாரம் நாரதர் வாய்மூலம். வாய்மொழியாகச் சொல்லப்பட்ட

ஸம்க்ஷேப (சுருக்கமான) இராமாயணம். வால்மீகி அதை விஸ்தரித்தார். இதை அவரே இராமாயண ஆரம் பத்தில் சொல்கிருர்:.

''தபஸ்வாத்யாய நிரதம், தபஸ்வீ வாக்விதாம் வரம்
நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முனிபுங்கவம்''

அதாவது 'தவசி வால்மீகியானவர், தவத்திலும் கல்வி கேள்விகளிலும் சிறந்தவரும், பேச்சில் வல்லவருமான நாரத மகரிஷியைப் பார்த்துக் கீழ்க்கண்டவாறு கேட்டார்'' என்பது பொருள். வால்மீகியின் கேள்விகளுக்கு நாரதர் சொன்ன பதிலே சம்க்ஷேப இராமாயணமாகும். அதைக் கொண்டே வால்மீகி இராமாயணம் இயற்றப்பட்டது.

காலம் செல்ல செல்ல, ஒவ்வொரு பாரத மொழி யிலும் இராமாயணம் இயற்றப்பட்டது, ஸம்ஸ்கிருதத்தி லேயே பல காவியங்கள், நாடகங்கள், இராமகாதைகள் வால்மீகியை ஆதாரமாகக் கொண்டு இயற்றப்பட்டன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வோர் விதத்தில் சிறப்பு வாய்ந்தது.

ஒவ்வொரு பாரதப் பிராந்திய பாஷையும் (சில வரி வடிவு, இலக்கியம் இவைகள் இல்லாதவற்றைத் தவிர) ஒரு இலக்கியச் சுவை மிகுந்த, நவரசம் நிறைந்த இராமாய ணத்தை உற்பத்தி செய்த பெருமைக்குப் பாத்திரமாகி இருக்கிறது. இவைகளுள் எல்லாவற்றையும் விட (மலையா ளம், மராத்தி, தெலுங்கு இராமாயணங்கள் பெயர் பெற் றவை.) மிகவும் பிரக்யாதிப் பெற்றுப் பொதுஜனப் பிரேமைக்கு இருப்பிடமாக உள்ளவை இரண்டு. தென் இந்தியாவில் விஜய துந்துபி முழக்கும் கம்ப இராமாயண மும், வடஇந்தியாவில் ஜயக்கொடி நாட்டியுள்ள துளசி இராமாயணமும் ஆகும். கம்ப இராமாயணம் நம் தாய்

மொழியாகிய தமிழ் மொழியில் கவிச் சக்கரவர்த்தி கம்பரால் இயற்றப்பட்டது. துளசி இராமாயணம் பாரத தேசிய ராஜீய பாஷையாகிய ஹிந்தியில் துளசிதாசரால் இயற்றப்பட்டது. இவை இரண்டும் இராமபக்திக்குப் பெயர் போனவை. இவைகளுக்கு ஆதாரமான வால்மீகி இராமாயணம் பாரத கலாச்சார மொழியாகிய ஸம்ஸ்கிருதத்தில் வால்மீகி முனிவரால் இயற்றப்பட்டது.

கம்ப இராமாயணம் கம்பர் என்னும் கவியினால் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதஸ்வாமி கோவில் முன்பு அரங்கேற்றப்பட்டது. துளசி இராமாயணம் அயோத்தியில் துளசிதாசரால் அரங்கேற்றப்பட்டது. வால்மீகி இராமாயணம் அவரது சிஷ்யர்கள், இராம குமாரர்கள் இலவ-குசர்களால், அயோத்தியில் ஸ்ரீராமரது அஸ்வமேத மகா மண்டபத்தில் பாடப்பெற்றது.

இந்த மகா கவிகளின் வாழ்க்கை விவரம் அதிகம் ஒன்றும் தெரியாது. இதற்குக் காரணம் நம் கவிகளின் ஜீவிய சரித்திரத்தைப் பற்றி நாம் கொண்டுள்ள அசட்டையே. கவிகளோ அடக்கம் நிறைந்தவர்கள். தம்மைப் பற்றிப் பறைசாற்றிக் கொள்ள மாட்டார்கள், ஜனங்களோ காவியத்தைப் பூஜிப்பார்கள், கவியை மறந்துவிடுவார்கள். இது இந்தியக் கவிகள் எல்லோர் விஷயத்திலும் பொருந்தும், இது நமது தேசிய குணாதிசயம். நிற்க,

## கம்பர் வரலாறு

கர்ண பரம்பரைக் கதையின்படி கம்பர் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். இவர் கம்பங் கொல்லை காக்கும் தொழிலைச் சிறுவயதிலேயே ஜீவனோபாயத்துக்காக மேற்கொண்டார். ஒரு நாள் ஒரு பணக்காரரின் குதிரை,

சிறுவராகிய கம்பர் காவல் காக்கும் கொல்லையுள் புகுந்து பயிரை அழிக்கத் தொடங்கியது. இதைக் கண்டு கோபங் கொண்ட கம்பர் எவ்வளவு விரட்டியும் குதிரை நகரவில்லை. உடனே அவர் திடீரென்று "வாய்த்த வைரபுர மாகாளி அம்மே கேள்" என்று ஆரம்பித்து "காளிங்கராயன் ஏறும் குதிரை மாளக் கொண்டு போ" என்று ஒரு கவிதை பாடினார். உடனே அக்குதிரை இறந்து விட்டது. இந்த அதிசயத்தைக் காண ஊர் ஜனங்கள் திரண்டு வந்தார்கள். குதிரையின் சொந்தக்காரர் மிகவும் வேண்டிக்கொண்டதின்பேரில் இரக்கம் மிகுந்து முன்பு பாடிய அதே கவிதையைச் சற்றுத் திருத்தி 'குதிரை மீளக் கொண்டுவா" என்று பாடினார். குதிரை பிழைத்து எழுந்துவிட்டது. இந்தச் சம்பவத்தைக் கண்ணாரக் கண்ட வள்ளல், ரஸிகமணியாகிய சடையப்பர் என்பவர் கம்பரிடம் இயற்கையாக அமைந்துள்ள கவிதா சக்தியைக் கண்டு வியந்து அவரைத் தன்னுடன் வைத்துக் கொண்டு ஆதரித்ததாகக் கூறப்படுகிறது.

அன்று முதல் தாய் தந்தையற்ற அனாதைச் சிறுவன் கம்பருக்கு அதிர்ஷ்டம் பிறந்தது. கல்வி பயில்வித்து, பல விதத்திலும் ஆதரித்துப் பெற்ற தந்தைபோல் கம்பரைப் பேணி வளர்த்தார் சடையப்ப வள்ளல் என்னும் பெரியார். இந்தப் பெரியவர் கம்பரைக் கண்டுபிடித்திராவிட்டால் தமிழ்மொழி எப்பேர்ப்பட்ட மாணிக்கத்தை இழக்க நேர்ந்திருக்கும்? இவர் செய்த பேருதவிக்கு எதுதான் ஈடாகும்?

"செய்யாமற் செய்த உதவிக்கு
வையகமும் வானகமு மாற்றலரிது"

அதனால் தான் கம்பர் "அடையா நெடுங்கதவும் அஞ்சல் என்ற சொல்லும் உடையான் சடையப்பனூர்"

என்று மனமார வாயார வாழ்த்துகின்றூர் கம்பரைத் தந்த கருணை வள்ளலுக்கு இந்த வாழ்த்துரை தகுதிதானே?

இந்தக் கதையில் குதிரை இறந்ததும் எழுந்ததும் உண்மையோ பொய்யோ, நடந்திருக்குமோ நடந்திருக் காதோ! தெரியாது. ஆனல் கம்பர் ஒரு பிறவிமேதை என்பது இதனல் தெளிவாகிறது, இல்லாவிட்டால் வால் மீகி எழுதிய பிறகு இராமாயணத்தை இவ்வளவு இனிமை யாக இயற்ற முடியுமா?

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு சிறுவன் கம்பன் பெரிய வன் ஆகி, பிறகு கவி கம்பர் ஆகி, பிறகு கம்பநாடர் ஆகி, அதன் பின் கவிச்சக்கரவர்த்தி கம்பர் ஆகி விட்டார். எப்படி? தன் கவிதா விலாசத்தினல் தான். இந்தக் கவிச் சக்கரவர்த்திப் பட்டம் கிட்டிய மற்றெருரு பாரத மாணிக்கம் காளிதாஸன் ஒருவனே. வடமொழி காவிய உலகில் காளிதாஸன் எப்படிக் கவிகுல சூடாமணியாக இன்றளவும் விளங்குகின்றூனே அப்படியே தமிழ் இலக்கியப் பூங்காவில் கம்பர் வாடாமலராகக் கவிதை மணம் வீசுகிறூர். "கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவி சொல்லும்" என்பது தமிழ் நாட்டுப் பழமொழி. இதனல் கபீர்தாஸரைப் போல கம்பரும் துணிநெய்யும் தொழில் உடையவர் என்று எண்ண இடமேற்படுகிறது. நூல் இழையைக் கோத்துத் துணி நெய்வதுபோலவே சொற்சுவையைப் பொருட்சுவையுடன் கோத்துக் காவியம் புனைந்தார் கம்பர் என்னும் கவி மன்னர். வல்லவனுக்கு எல்லாம் எளிது. கம்பரது பிறந்த ஊர் தேரழுந்தூர். இவர் ஒளவையார், புகழேந்தி, ஒட்டக்கூத்தர் என்னும் மூன்று புலவர்களின் சம காலத் தவர் என்று தெரிய வருகிறது. இவரை ஆதரித்த சடை யப்ப வள்ளலின் இருப்பிடம் வெண்ணெயூர்,

சடையப்பருடன் இருந்துவந்த, நாளடைவில் புகழடைந்த கம்பர், குலோத்துங்கன் என்னும் சோழ அரசனுல் சமஸ்தான கவி (ஆஸ்தான கவி) ஆக்கப்பட்டார். கவி உலகம் கம்பரை வணங்கியது, தமிழ்மொழியும் புது மேனியுடன் விளங்கியது.

இவர் ஆஸ்தானக் கவியாக இருந்த காலத்தில் தான் இராமாயணம் எழுதும்படி சோழ அரசன் தூண்டினுன். அதுவுமல்லாமல் கொஞ்சம் பொருமை உள்ளம் படைத்த ஒட்டக்கூத்தரை அழைத்து ''நீரும் ஒரு உயர்ந்த கவி; ஆதலால் நீர் ஓர் இராமாயணம் எழுதும், யாருடையது சிறந்தது என்று பார்த்து அரங்கேற்றுவோம்'' என்று ஆஞ்ஞாபித்தான்.

கம்பர், ஒட்டக்கூத்தர் இருவரும் காவியம் இயற்றத் தொடங்கினுர்கள். இதில் ஓர் விநோத சம்பவம் கூறப்படுகிறது. அதாவது, கம்பர் பல மாதங்கள் ஒன்றுமே எழுதவில்லை;எழுத ஆரம்பிக்கவேயில்லை. ஆனுல் முயற்சி மிகுந்த ஒட்டக்கூத்தரோ அனுமார் முதலிய வானர வீரர்கள் கடல் காணும் படலம் வரை எழுதி முடித்து விட்டார். ஒரு நாள் அரசன் இரு கவிகளையும் அவரவர்கள் எழுதிய நூலைக் கொண்டுவந்து சபையில் மறுநாள் படித்துக் காட்டும்படி உத்தரவிட்டான், விழித்துக் கொண்டார் கம்பர், ''எவ்வளவுதூரம் வரை எழுதியிருக்கிறீர்கள்'' என்று அரசன் கேட்டான். ஒட்டக்கூத்தரோ, ''கடல் காணும் படலம் வரை'' என்ருர். கம்பர், ''கடல் தாவும் படலம் வரை'' என்று துணிந்து பதில் சொன்னுர். வீடு சென்ற கம்பர் அன்று இரவிலேயே அனுமார் கடல் தாவு படலம், சுந்தர காண்டம் ஆரம்பம் ஒரே மூச்சில் எழுதி முடித்தார். மறு நாள் சபையில் வாசித்தும் காட்டினுர். அதன் கற்பனை

யழகும், நடையழகும் கேட்டோர் உள்ளங்களை ஒருங்கே கவர்ந்து விட்டன. கம்பர் முன் தான் நிற்க முடியாது என்று உணர்ந்து கொண்ட ஒட்டக்கூத்தர் வெட்கமடைந்தார். அத்துடன் நிற்கவில்லை. வீடு சென்று தான் முழுவதும் அனேகமாக எழுதிமுடித்திருந்த இராமாயணச் சுவடிகளை ஒவ்வொன்ருக அக்கினி பகவானுக்கு சுவாஹா செய்துவிட்டார், தற்செயலாக அங்கு வந்த கம்பர் இந்த அடாத செய்கையைக் கண்டு மனம் தாளாது அவர் கையில் மிச்சமிருந்த சுவடிகளைப் பிடுங்கிக் கொண்டார். கம்பரால் அப்படிக் காப்பாற்றப்பட்டு மிஞ்சியது தான் ஒட்டக்கூத்தர் எழுதிய உத்தர இராமாயணம் என்னும் உயரிய தமிழ் நூல்.

இந்த ஒட்டக்கூத்தர் என்ன காரியம் செய்து விட்டார் ஆராயாமல். அருமையானதொரு தமிழ்க் காவியத்தை அநியாயமாக எரித்து விட்டாரே, என்ற வருத்தமே ஏற்படுகிறது. அவ்வளவு சிறப்பாக அமைந்திருக்கிறது அவர் எழுதிய உத்தர இராமாயணம். நல்ல வேளையாக இதையாவது கம்பர் காப்பாற்றிஞரே, அது தமிழ் செய்த புண்ணியமே.

இந்தச் சம்பவம் எவ்வளவு உண்மையோ தெரியாது. ஆஞல் இதிலிருந்து கம்பரின் நினைத்த மாத்திரத்தில் நூற்றுக்கணக்காகக் கவிபாடும் திறமை, அவரது தமிழ்க் காதல், அவருடைய கவிதையின் மேன்மை முதலியன புலஞகின்றன. கம்பரின் பெருந்தன்மை அவர் உத்தர இராமாயணத்தைக் காப்பாற்றியதில் மட்டும் விளங்கவில்லை. ஆஞல் ஒட்டக்கூத்தருக்காகத் தான் உத்தர காண்டம் எழுதாமல் யுத்தகாண்டம், இராம பட்டாபிஷேகத்துடன் தன் இராமாயணத்தை முடித்துவிட்ட தாராள சிந்தனையே அவர்

பெருந்தன்மைக்குச் சான்று. எந்தக் கவிஞன் (எந்த ஆஸ் தானக்கவி) தன் சகோதரக் கவிஞனின் எரிந்துபோய் மிச்சப்பட்ட நூலைக் காப்பாற்றுவதற்காகத் தான் மேற் கொண்ட காரியத்தைத் தியாகம் செய்ய முன்வருவான், அது கம்பர் ஒருவரால் தான் முடியும். கம்பர் ஒரு உயர்ந்த கவி மட்டுமல்ல; அவர் ஒரு இதயம் படைத்த மனிதன், தமிழ் மகன்.

இன்று கம்பஇராமாயணம், ஒட்டக்கூத்தர் உத்தர இராமாயணம் இரண்டும் சேர்ந்ததே பூரணத் தமிழ் இராமாயணம் ஆகும். அதை அப்படிச் செய்தவரும் கம்பர் தான். என்னே தமிழ்ப் பெருமகனின் பெருந் தன்மை.

கம்பர், தன் இராமாயணத்தை அரங்கேற்றப் பட்ட பாடு கொஞ்சநஞ்சமல்ல. ஏன் என்றால், அக்காலத்தில் பொதுஜனங்கள் கல்வி கேள்விகளில் சிறந்தவர்கள். ஆனதால் ஒரு நூலை உடனே ஆராயாது ஒப்புக் கொண்டு நற்சாட்சிப் பத்திரம் அளிக்க முன்வர மாட்டார்கள். அதுவு மல்லாமல், தமிழ் நாட்டின் தலைசிறந்த நாவலர், பாவலர், எல்லாரும் ஒருமுகமாகப் படித்துப் பார்த்து விமரிசனம் செய்து அத்தாட்சிப் பத்திரம் அளித்தால்தான் ஒரு நூலை அரங்கேற்றமுடியும். தற்காலம் போல் ''தேசமெங்கும் புலவர் எனத் திரியமுடியாது''. தந்தையாகிய கம்பரின் நூலுக்கு மகனாகிய அம்பிகாபதி சாற்றுக்கவி கொடுக்க வேண்டும். மகன் என்ற முறையிலல்ல ; கவி என்ற முறையில்.

தில்லை மூவாயிரவர் என்று பிரசித்தி பெற்ற சிதம்பர பண்டிதர்கள் மூவாயிரம் பேரும் ஒருமித்து ஒப்புக்கொள்ள

வேண்டும். இதுதான் மிகக் கடினமான பிரச்சினை. ஏன் என்றால் தில்லை மூவாயிரவர்கள் சிவ பக்தர்கள். இராமாயணமோ விஷ்ணுபரமான நூல். அதை அவர்கள் ஒப்புக் கொள்வார்களா? மதக்கொள்கையின்படி பார்த்தால் மாட்டார்கள். ஆனால் கவிகள், பண்டிதர்கள், விமரிசகர்கள் என்ற முறையில் ஒப்புக்கொண்டார்கள். அதுதான் அவர்கள் குணவிசேஷம். அதுவே ஹிந்து நாகரிகத்தின் விசேஷமும் ஆகும். உண்மையில் சிறப்பு இருந்தால் மதிப்புக் கொடுப்பதுதான் மனிதத்தன்மை. கம்பர் தன் நாக பாசப் படலத்தைப் படித்ததாலேயே பாம்புகடித்து உயிரிழந்த ஒரு சிறுவன் உயிர் பெற்று எழுந்தானும். அந்த அற்புதத்தைக் கண்கூடாகக் கண்ட பின்னரே தில்லை மூவாயிரவர் கம்ப இராமாயணத்துக்குத் தங்கள் சம்மதியும் சாற்றுக்கவியும் அளித்தார்கள் என்பது கர்ணபரம்பரைக் கதை. எது எப்படியானால் என்ன? தில்லை மூவாயிரவரின் பெறற்கரிய சம்மதியைக் கம்பர் பெற்றார், ஆனால் அதுவும் போதுமானதாகக் கருதப்படவில்லை.

காக்கை பாடினியார் எனும் ஒரு பெண்கவி. காகமும் உகக்கும்படி கவி இயற்றுபவர் என்று பிரக்யாதி பெற்றிருந்தவர் ஒப்புக் கொண்டுசாற்றுக்கவி தரவேண்டும் என்று கூறப்பட்டதாம் அவ்வளவு பாண்டித்தியம் பெற்றவர் அப்பெண்மணி. ஔவையாரின் காலத்திலேயே தில்லை மூவாயிரவர்கள் சம்மதிக்குப் பிறகு, கம்பரின் இராமாயண காவியத்துக்கு ஒரு தமிழ்ப் பெண்கவி சாற்றுக் கவி அளித்தார் என்றால் அவர் எவ்வளவு மேதா விலாஸம் பொருந்தியவராக இருந்திருக்க வேண்டும்?

இவ்வளவு விமரிசனங்களுக்குப் பிறகே கம்பராமாயணம் அரங்கேறியது. ஸ்புடம் செய்த தங்கம் போல்

அந்தப் பரிட்சையினுலேயே, இன்றளவும் மங்காது ஜொலிக்கின்றது சாணைபிடித்த வைரம் போல் இந்தமகா காவியம்.

இராமாயண காவியத்தைத் தவிர ஏரெழுபது என்ற ஒரு சிறு காவியமும் கம்பரால் பாடப்பட்டுள்ளது. இச்சிறு நூல் உழவர் பெருமையை விளக்குவது, இவைகளைத் தவிர தனிப்பாடல்களாக கம்பர் பாடியுள்ளவை அனேகம்.

''வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு

வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள்—வெள்ளை

அரியாசனத்து அரசரோ டென்னைச்

சரியாசனத்து வைத்த தாய்''

என்பது கம்பர் வாக்கு.

''கம்பா சிலம்பெங்கே?'' எனச் சரஸ்வதி ஒற்றைக் கால் சிலம்புடன் கம்பரிடம் ஓடிவந்த கதையெல்லாருக்கும் தெரியும்.

சோழ அரசனுல் அவமதிக்கப்பட்ட கம்பர் பெருமான்

''மன்னவனும் நீயோ, வள நாடும் உன்னதோ

உன்னையறிந்தோ தமிழை ஓதினேன்—என்னை

விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ?
உண்டோ?

குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு''

என்று சுயமரியாதை மிக்க குரலில் கூறி

"உன்னைப் போன்ற ஓர் அரசன் பக்கத்தில் நின்று வெற்றிலை மடித்துக் கொடுக்கத் திரும்பி உன் இராஜ்யத்துக்குள் வராவிட்டால் என் பெயர் கம்பனல்ல" என்று சபதம் கூறி வெளியேறியதும், பின் சேரன் அரண்மனையில் ஆஸ்தானக் கவியானதும் அங்கு அவர் பெருமையைக் காணப் பொறுக்காத மனிதர்கள், அவரை அவமதிக்க முயன்றதும், கம்பர் கலைவாணியின் அருளால் அவர்களைத் தங்கள் தவற்றை உணரும்படி செய்ததும் ; இதற்குள் கம்பரைப் பிரிந்து வருந்திய சோழன், மன்னிப்புக் கோரி அவரைத் திரும்பி வரும்படி அழைத்ததும், தன் சபதம் நிறைவேறுவதற்காகக் கம்பர் சேர ராஜன் வெற்றிலை மடித்துக் கொடுக்கச் சோழ நாட்டில் பிரவேசித்ததும் ஒவ்வொரு தமிழ்க் குழந்தையும் நன்கறிந்த கதை. "அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்."

இன்னும் பற்பல தனிப்பாடல்களும் சரசுவதி அந்தாதியும் கம்பர் பெயரால் வழங்கி வருகின்றன. ஆனால் அவருக்கு அழியாப் புகழ் தந்தது இராமாயணமே.

——

## துளசிதாசர் வரலாறு

கோஸ்வாமி துளசிதாஸர் என்னும் பெரியார் வட இந்தியாவில், இலட்சுமணபுரிக்கருகில் உள்ள எடாவா என்னும் ஜில்லாவில், உன்னாவ் என்ற கிராமத்தில் ஆத்மாராம் என்றவருக்கும் அவர் மனைவி ஹுலஸி என்ற பெண் மணிக்கும் பிறந்தவர். துளஸிதாஸர் நல்ல பிராமண குலத்தில் அவதரித்தார். ஆனால் சிறுவயதிலேயே பெற்றோர்களை இழந்து அனாதையானார். அவரை ஒரு வித்வத் நிரம்பிய வள்ளல் எடுத்து ஆதரித்து வந்தார்.

பால்யபருவத்திலேயே துளஸிதாஸர் கல்வி கேள்விகளிலும் தர்க்கம், சாஸ்திரம், வேதம், வேதாந்தம் இவைகளிலும் நல்ல புலமையும், தேர்ச்சியும் பெற்று விளங்கினுர். பத்துப் பன்னிரண்டு வருஷ காலம் க்ஷேத்திராடனம் புரிவதிலும், பண்டிதர்கள், மகான்கள் இவர்களிடம் அமர்ந்து அத்தியயனம் புரிவதிலும் ஈடுபட்டார்.

இவரது ஒழுக்கம், அடக்கம், நற்குண நற்செய்கைகள் இவைகளைக் கண்டு மகிழ்ந்து இவரை ஆதரித்து வந்த வள்ளல் தமது மகள் மமதா அல்லது இரத்னுவளி என்பவரை இவருக்கு மணம் செய்து கொடுத்தார்.

நல்லறமாகிய இல்லறத்தில் புகுந்த துளஸிதாஸர் ''இளமையில் எளியரானுர்'' என்று நம்ப இடமிருக்கிறது.

''அதிகடினம் அனங்கம் மாரணம் மானுஷாணும்'' (இளமையின் தொல்லையைச் சகிப்பது மனிதர்களுக்கு மிக, மிகக் கடினம்) என்பது அனுபவ சித்தாந்தம் அன்ரே? இதற்கு வித்வான்களும் விதிவிலக்கல்ல.

இல்லறத்திலிருந்து துளசி துறவறம் பூண்டது குறித்து ஒரு இரஸமான சம்பவம் கூறப்படுகிறது. இதற்கு ஆதாரம், வழக்கம்போல், கர்ணபரம்பரைக் கதைதான்.

ஒரு சமயம் இவரது மனைவியார் ஏதோ காரியமாக அடுத்த கிராமத்தில் இருக்கும் தனது தந்தை வீட்டுக்குச் சென்றிருந்தார். போகும் போது ஏதோ அசந்தர்ப்பத்தினுல் தன் கணவராகிய துளஸியிடம் சொல்லிக் கொண்டு போக இயலவில்லை ''பக்கத்து கிராமந் தானே மறுநாள் மாலைக்குள் திரும்பிவிடலாம்'' என்று நினைத்தார் மமதா தேவியார்.

ஆனால் மனைவியை விட்டு ஒரு நாள் இரவு கூடத் தனித்திருக்கப் பொறுக்காத துளஸிதாசர் கொட்டுகிற மழையில், நல்ல இருட்டில், பிணத்தைத் தெப்பக் கட்டையாகவும், நாகப்பாம்பை நூலேணியாகவும் உபயோகித்து மனைவியின் மாடியில் ஏறிக் குதித்தார் என்றும், இவரை இக்கோலத்தில் கண்ட இவரது பத்தினியார் மனம் வருந்தி,

''அஸ்தி சர்ம மய் தேஹ்மம
ஜா மேம் ஜஸீ ப்ரீதி
ஹோதஹி தோ ஸ்ரீராம் பத்
ஹோதி ந தோ பவ-பீதி;''

"எலும்பும் தோலும் நிறைந்த அநித்தியமான என் உடல் மேல் வைத்திருக்கும் அன்பைச் சாட்சாத் பரம் பொருளாகிய ஸ்ரீராமனின் திருவடியில் வைத்தால் பிறவித்துயர் நீங்குமல்லவா?'' என்ற ஒரு சிறு செய்யுள் மூலம் தன் கருத்தை அழகாக வெளியிடவே, தூங்கிக் கிடந்த துளஸியின் ஆத்மா விழித்துக்கொண்டது என்றும், அக்கணமே அவர் பெண்ணாசை மட்டுமல்ல, பொன்னாசை, மண்ணாசை யாவையும் துறந்து, துறவியாகி வெளியேகினார் என்றும் கூறப்படும் பிரசித்தக் கதையிலிருந்து, அவர் வாழ்க்கை எப்படித் திரும்பியது, திருந்தியது என்று ஒருவாறு ஊகித்தறிய முடிகிறது.

மனிதனுக்குத் தன் வாழ்க்கைப் பிரயாணத்தில் சிற்சில சமயங்களில் சிறுசிறு சம்பவங்களின் மூலம் திருப்பங்கள் (Turning Points) ஏற்படுகின்றன. துளஸி துறவியானார். மனைவியின் வெடித்தெழுந்த இதயத்

தாபத்தின் மூலம். தனக்கெனச் சுயநலம் பாராட்டாது உலகுக்கு, துறவுக்கு, இந்தி இலக்கியத்துக்குத் துளஸியை உவந்தளித்த இவ்வம்மையாரை எவ்வளவுதான் போற்றிப் புகழ்ந்தாலும் போதாது.

இந்த அற்புத இராம பக்தை தானும் துறவியாகி வெகு நாட்கள் வரை உயிருடனிருந்தார் என்றும் தெரிய வருகிறது. என்னே பெண் இதயத்தின் பெருமை! இந்தியப் பெண்மையின் இயல்பே மகிமை வாய்ந்ததுதான்!

துறவியான பின் துளஸிதாஸர் காசியில் அதிகம் வசிக்கலானுர், அங்குதான் பல அமர .கிரந்தங்களும் இயற்றினுர். இவர் மொகலாயச் சக்ரவர்த்தி அக்பர் காலத்தில் வாழ்ந்தவர், கபீர்தாசருக்கும் ஸூர்தாசருக்கும் சம காலத்தவர். அக்காலத்தில் விஷவிருக்ஷம் போல் பரவி இருந்த சைவ-வைஷ்ணவ வேற்றுமையை வேரற அழித்த பெநமை ஸ்ரீதுளஸி ஒருவரையே சாரும்.

ஸ்ரீராமாயணத்தை இவர் விக்ரம ஸம்வத்ஸரம் 1631-ஆம் வருஷம், வஸந்த ருது, நவமி திதி, செவ்வாய்க் கிழமையில், ''அவத்புரீ யஹ் சரித் பிரகாசா'' அயோத்யாபுரியில் அரங்கேற்றியதாக ''இராம சரித மான''ஸில் தானே கூறுகிருர்.

இந்த மகானையும் கூட துஷ்டர்களும், சுயநலமிகளும், விதண்டாவாதிகளும், நாஸ்திகர்களும் சும்மா விடவில்லை, என்று தோன்றுகிறது. ஏன் என்ருல் இராமாயண ஆரம்பத்தில், துளஸிதாசர், ''வந்தஹூம் ஸந்த அஸஜ்ஜன சரணு'' ''துஷ்டர்களையும் சிஷ்டர்களையும் சமமாக வணங்குகிறேன்'' ஏன் என்ருல் என்று ஆரம்பித்து துஷ்டர் பிரதாபத்தை விளக்குகிருர்.

"யேவினுகாஜ் தாஹினஹூம் பாயேம்" "வேலே இல்லாமலேயே பிறர் விஷயத்தில் தலையிடுபவர்கள்" என்று பட்டமும் சூட்டுகிறுர். வாஸ்தவம் தானே!

முதன் முதலில் துளஸிதாஸர் இராமாயணத்தை ஸம்ஸ்கிருதத்தில் எழுதத் தொடங்கினுர் ஆனுல் ஒரு நாள் இரவில் அவர் தூங்கும் போது ஸ்ரீராமபிரான் கனவில் தோன்றி, 'துளஸீ, வால்மீகி எழுதிய இராமாயணத்தை உன்னுல் மறுபடி ஸம்ஸ்கிருதத்தில் எழுதி வெற்றி பெறமுடியுமா? அது வீண் முயற்சி. அதுவுமல்லாமல் நீ உன் தாய்மொழியில் எழுதுவதுதான் சரி" என்று கூறினுராம், அதனுல் தான் ஸம்ஸ்கிருத மொழியில் மகா பாண்டித்யமுடைய துளஸிதாஸர் இராமாயணத்தை ஹிந்தியில் எழுதி முடித்ததாகவும் கூறப்படுகிறது. துளஸிதாஸர் இதை ஸம்ஸ்கிருதத்தில் எழுதியிருந்தால் வால்மீகியை மிஞ்சி இருப்பார் என்று சொல்ல முடியாது. ஆனுல் எழுதி இருந்தால் கட்டாயம் வெற்றி பெற்றிருப்பார், ஏன் என்ருல் அவர் ஆங்காங்கு எழுதியுள்ள சுலோகங்கள் பாண்டித்யம், பக்தி, நடை, கற்பனை, சொல்நயம், பொருள்நயம் அனைத்திலும் ஒருங்கே சிறந்து விளங்குகின்றன.

ஸ்ரீ துளஸிதாஸர் தனது இராமாயணத்துக்கு ஸ்ரீராம சரிதமானஸ், அதாவது இராமரது சரித்திரமாகிய மானஸ ஸரஸ் (மானஸரோவர்) என்று அழகான பெயர் கொடுத்திருக்கிறுர். அதாவது எப்படி மானஸரோவர் தடாகத்தில் இருந்து சகல ஜீவ நதிகளும் உற்பத்தியாகின்றனவோ அப்படி ஸ்ரீராம கதையிலிருந்து சகல உத்தம குணங்களும் உயர்ந்த வாழ்க்கைத் தத்துவங்களும் வெளிப்படுகின்றன என்பது கருத்து. உண்மையில் ஞானம், பக்தி,

யோகம், கர்மம் என்னும் ஜீவ நதிகள் துளஸிதாஸரின் இராம சரித மானசில் இருந்து உற்பத்தியாகிப் பொங்கிப் பூரித்துக் கொந்தளித்துக் குமிழியிட்டெழுந்து, அன்பர் இதயங்களை வளம்பெறக் குளிரச் செய்து, பரப்ரும்ம ரூப மாகிய சப்தப்ரும்மம் என்னும் கவிதைக் கடலுடன் இரண் டறக் கலக்கின்றன.

துளஸிதாஸர் அனேக அமரகிரந்தங்கள் இயற்றி யுள்ளார். ஒல்வொன்றும் ஒவ்வொரு மாணிக்கமே. விநய பத்திரிகா, கவிதாவளி, கீதாவளி, பார்வதி மங்கள். பரவை இராமாயண் முதலிய நூல்கள் மிகப் பிரசித்திப் பெற்றவை, தனிப்பாடல்களும் அனந்தம்.

துளஸிதாஸரின் தாய்பாஷை அவதி எனப்படும், அயோத்யாவிலும் அதைச் சார்ந்த பிரதேசங்களிலும் பேசப்படுவது அவதி. அயோத்யா என்னும் சொல் மருவி அவதி என்ருயிற்று. தற்கால ஹிந்தியினின்றும் இது முற்றிலும் மாறுபட்டது.

ஹிந்தி பாஷை பொதுவாக முப்பெரும் பிரிவுகளை உடையது. வடமதுரை, பிருந்தாவனம் முதலிய இடங் களில் பேசப்படுவது "வ்ரஜ பாஷா". அதாவது கோகுல பாஷை எனப்படும். ஸ்ரீ கிருஷ்ணரின் லீலா பூமியாகிய கோகுலத்தில் பேசப்படும் பாஷையாதலால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது. இது மிகவும் மதுரமானது. இனிய ஓசை உடையது. இந்த பாஷையைத்தான் பக்த மகாகவி ஸூர்தாஸர் கையாண்டிருக்கிருர். அவதி பாஷையோ இராமபிரானின் இராஜ்யத்தில் பேசப்படுவது. கம்பீரமும் கவர்ச்சியும் கொண்டது. இதன் நடை மத்தகஜம் போன் றது. இதைத்தான் துளஸிதாஸர் கையாண்டிருக்கிருர். இதில் கவிதை புனைவது கடினம். ஆனுல் செயற்கரிய

செய்வர் பெரியர் அல்லவா? இவ்விரண்டு பாஷை களிலும் அருமையான நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. இவ்விரண்டும் இந்தியில் இரு கண்மணிகளுக்கொப் பானவை. மூன்ருவது தான் மீரட், டில்லி முதலிய இடங் களில் பேசப்படும் நமது இராஷ்டிர பாஷையாகிய, நவீன ஹிந்தி. இது "கடீ போலி" எனப்படும். மேற்கூறிய இரண்டும் "புராணி ஹிந்தி" அதாவது புராதன ஹிந்தி என்று பெயர் பெறும். கவி வித்யாபதி கையாண்டுள்ளது "மைதிலீ" எனப்படும் பாஷை. அதுவும் ஹிந்தியின் பிரிவுதான், நிற்க.

அவதி பாஷை சற்று அவதி தருவதுதான். அதை அதிமனோகரமாக்கிய பெருமை துளஸிதாஸருடையது. அதைப் பயன்படுத்தி எழில் பெறச் செய்தவர் துளஸி. அவதி பாஷையின் நடையை வனப்புறச் செய்தவர் துளஸி. வடஇந்தியா முழுவதும் அவதியை ஜாஜ்வல்யமாகச் சொலிக்கச் செய்தவர் துளஸி. இவருக்கு முன்னல் இலக்கிய அவதி கரடு முரடாகத்தான் இருந்து வந்தது. அதைத் தனது மேதையினுலும் உழைப்பினுலும் மேன்மைப் படுத்தியவர் துளஸி. அவதி பாஷை என்ருலே துளஸியின் பெயர்தான் முன்னே வந்து நிற்கும்.

## துளஸி இராமாயணத்தின் சிறப்பு

தமிழ் மொழிக்குக் கம்ப இராமாயணம் எப்படி ஒப்பற்ற பொக்கிஷமோ வடமொழிக்கு வால்மீகி இராமாயணம் எப்படித் தேடக் கிடைக்காத திரவியமோ அப்படியே தான் ஹிந்தி மொழிக்கு துளஸி இராமாயணம்.

முதல் நூலாகிய வால்மீகி இராமாயணம் இராமரை ஒரு மகா புருஷராக மகாநுபாவராக, தெய்வீகக்குணங்கள்

பொருந்திய மனிதருள் மாணிக்கமாக மதித்துப் போற்று கிறது. ஆனால் கம்ப இராமாயணமும், துளஸி இராமா யணமும் வெகு காலம் பின்னால் ஏற்பட்டவை. ஆகவே, இவ்விரண்டும் இராமரை அவதார புருஷராக, மானிட ரூபம் கொண்ட மகாவிஷ்ணுவாக மதிக்கின்றன. ஆதலால், இவைகளில் பக்திப் பிரவாகம் கரைபுரண்டு ஓடுகிறது, தமிழ் நாட்டில் கம்ப இராமாயணம் இராம பக்திக்குப் பெயர் போனது. அதேபோல் வடநாட்டில் துளசி இராமாயணம் அவ்விதமே பக்திக்குப் பிரசித்தி பெற்றது.

நவரசங்களும் மிளிரும் துளசி இராமாயணம் ஞானத் திலும் மிகச் சிறந்து விளங்குகிறது சைவ—வைஷ்ணவ பேத மனப்பான்மையை நசுக்கும் அத்வைத வேதாந்தம் இதில் அற்புதமாகச் சுடர் விடுகிறது. உத்தர காண்டத் தில் தான் ஞானமும் பக்தியும் விரக்தியும் கங்கை, யமுனை, சரஸ்வதி போலக் கலந்து மிளிர்கின்றன.

## துளஸி இராமாயணத்துக்கு ஆதாரம்

நாநா புராண நிகமாகம ஸம்மதம் யத்
ராமாயணே நிகதிதம் க்வசிதன்யதோபி
ஸ்வாந்தஸ் ஸுகாய துளஸி ரகுநாதகாதா
பாஷா நிபந்தம் அதி மஞ்சுளம் ஆதனோதி,

என்று இராமாயண ஆரம்பத்தில் ஸ்ரீ துளஸி கூறுகிறார். அதாவது பற்பல புராணங்களிலிருந்தும், வால்மீகி இராமா யணத்திலிருந்தும் இன்னும் வேதாகமத்துக்கு முரண்படாத நூல்களில் இருந்தும் எடுத்து இராமரது கதையைத் துளஸி யானவர் ஆத்ம சாந்தியின் பொருட்டு இயற்றுகிறார், (துளஸியாகிய நான் இயற்றுகிறேன்) என்கிறார்.

# ஸ்ரீ வால்மீகி வரலாறு

ஆதிகவி என்றும், கவிகானன கோகிலம் என்றும் அனைவராலும் போற்றிப் புகழப்படும் மாமுனிவர், முற்றும் துறந்த பற்றற்ற துறவி ஸ்ரீ வால்மீகியைப் பற்றித் தெரியாதவர்களோ அல்லது அவரது இராமாயணத்தைப் பற்றிக் கேள்விப்படாதவர்களோ இந்திய இலக்கிய உலகில் இருக்க முடியாது. ஏன், உலக இலக்கியத்திலேயே முதன்மை ஸ்தானம் வகிக்கும் ஹோமர், வர்ஜில், டான்டே முதலிய அமர இலக்கியக் கர்த்தாக்களுடன் சம ஆசனத்தில் விளங்கும் இம்மகாநுபாவராகிய மகா கவியைப் பற்றி மேனாட்டார் கூட அறியாமல் இருக்க முடியாது. இவரால் இயற்றப்பட்ட இந்திய இதிகாசம், இராமாயணம் என்னும் பெயர் பெற்ற அமர கிரந்தம் உண்மையிலேயே உலக இலக்கியத்தில் ஒரு விலை மதிக்க முடியாத மாணிக்கம். ஆழங் காணமுடியாத அற்புத நவரச ரத்நாகரம். இதன் மாண்பை வகுத்திட வல்லவர் யாரே?

இப்பேர்ப்பட்ட மேன்மை வாய்ந்த கவிகுலச் சக்ரவர்த்தியைப் பற்றி, அவரது ஜீவிய சரித்திரம், வாழ்க்கை விவரங்களைப் பற்றி, ஒன்றுமே கூறுவதற்கில்லை என மிகுந்த வருத்தத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது, சரித்திர வரம்புக்குட்பட்ட காலத்தில் வாழ்ந்த கவிகளாகிய கம்பரையும் துளஸியையும் பற்றியே அதிகம் அறிய வழி இல்லையே; பின், சரித்திர வரம்பிற்கப்பாற்பட்ட காலம் எனும் திரைக்குப்பின் மறைந்து நிற்கும் ஸ்ரீ வால்மீகியின் வாழ்க்கை வரலாற்றை எப்படி உள்ளது உள்ளபடி உணர்ந்துரைப்பது? அஸாத்யம் அல்லவா.

ஜீவிய சரித்திரம், இலக்கியச் சரித்திரம், பாஷைச் சரித்திரம் முதலியன எழுதும் சரித்திராசார்யர்கள்

கூறுவது போல் அந்தரங்க சாட்சியம் (நூலின் கதைப் போக்கிலேயே கிடைக்கும் குறிப்புக்கள்) பகிரங்க சாட்சியம் (பிறரால் எழுதப்பட்ட சரித்திரம், மேற்கோள், குறிப்பு முதலியன) இவ்விரண்டு முக்கிய ஆதார ஆராய்ச்சி முறைகளைக் கையாண்டு, வால்மீகி முனிவரின் வாழ்க்கையை ஆராய்ந்து பார்க்கலாம் என்றாலோ அதற்கும் வழி இல்லை. ஏன் என்றால் கவிகளின் சொந்த வாழ்க்கையைப் பற்றித் தக்க ஆதாரங்களுடன் ஜீவிய சரித்திரம் எழுதும் பழக்கம் நம் நாட்டாரிடம் கிடையாது, ஆதலால் பகிரங்க சாட்சியத்துக்கு இடமே இல்லை. மிச்சமுள்ள தான அந்தரங்க சாட்சியத்துக்கும் ஏறக்குறைய இதே கதிதான். ஆனால் இராமாயண ஆரம்பத்தில் ஆங்காங்கு கொஞ்சம் கொஞ்சம் அந்தரங்க சாட்சியத்துக்கு வேண்டிய அறிகுறிகளான குறிப்புக்கள் கிடைக்கின்றன. ஸ்ரீ வால்மீகி இராமாயணத் தொடக்கத்தில், தாம் இந் நூலில் எழுத நேர்ந்தது எப்படி என்றும், அதற்குக் காரண பூதமாக இருந்த சம்பவம் என்ன என்று மட்டும் விளக்குகிறார். ஆனால் இதிலிருந்து இவரது கவிதா சக்தி வெளிப்பட்ட விதம் எப்படி என்றுதான் அறியமுடிகிறதே தவிர இவரைப் பற்றி வேறொன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. தன்னடக்கத்துக்கு உறைவிடமல்லவோ அக் காலப் புலவர்கள் !! ஆகவே, மறுபடியும் நாம் கர்ணபரம்பரைக் கதையின் உதவியை நாடவேண்டி இருக்கிறது.

## வால்மீகி

கர்ணபரம்பரைக் கதை கூறும் வால்மீகி வரலாறு கீழ்க் கண்டவாறு :—

ஸ்ரீ வால்மீகி துறவியாகுமுன் கிருஹஸ்தாஸ்ரமத்தில் இருந்தவர். இவர் வேடுவத் தொழில் புரிந்து வந்தார்;

அதாவது பட்சி, மிருகங்களை வேட்டையாடி ஜீவனம் செய்து வந்தார். ஒரு சமயம் இவர் வேட்டையாடிக் கொண்டிருக்கும்போது பிரும்ம ஞானிகளான சப்தரிஷி கள் என்னும் பெரியோர்கள் அந்த மார்க்கமாக வந்தார் கள். வேடராகிய வால்மீகியின் அம்பு பட்டுத் துடிக்கும் பட்சி, மிருகங்களைக் கண்டார்கள். ஜீவகாருண்யத்தினால் பச்சாதாபம் மேலிட்ட அம்முனிவர்கள், முரட்டுத் தொழி லில் ஈடுபட்ட வேடனுக்கு அஹிம்ஸா நெறியை ஆனமட்டும் உபதேசித்தார்கள். ஆனால் வேடன் காதில் அவ்வறவுரை ஏறவே இல்லை. கடைசியில் முனிவர்கள் வேடனை நல்வழிப்படுத்தவும், புத்திபுகட்டவும் எண்ணி ஒரு யுக்தி செய்தனர். அதாவது :—

முனிவர் :— வேடா. கொலை செய்வது பாபம். ஒரு ஜீவனையும் வதைக்கக் கூடாது. அப்பா, நீ ஏன் இத்தொழிலைச் செய்கிறாய் ?

வேடன் :— "என் பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றத் தான்".

முனிவர் :— "சரி. அதற்காக நீ ஏன் கொலைத் தொழில் செய்யவேண்டும் ?"

வேடன் :— ஏன் என்றால் எனக்கு வேறு ஒரு தொழிலும் தெரியாது".

முனிவர் ;— 'காரணம் எதுவாயிருப்பினும் வதை செய் வது பாபம். மனைவி மக்களின் பொருட்டு ஜீவ ஹிம்சை செய்வதாகச் சொல்லுகிறாயே, உன் தொழிலின் வரும்படியைப் பகிர்ந்து கொள்ளும் உன் உறவினர் உன் பாப-புண்

ணியத்தையும் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்வார்களா?''

வேடன் ;— ''நிச்சயமாக முன் வருவார்கள்''.

முனிவர் :— அப்படி என்ருல் வீடு சென்று கேட்டுவா. இதுவரை நீ பாபம் புரிந்து வந்ததாகவும், இன்று முதல் புண்ணியம் புரியப் போவதாகவும் சொல்லு. இதுவரை நீ செய்துவந்த பாபமெல்லாம் வீட்டாரை உத்தேசித்துத்தான். ஆதலால் அவர்களும் உன் பாபத்தைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று சொல்லி அவர்கள் சம்மதியைப் பெற்றுவா''

என்று அனுப்பினுர்கள்.

வேடன் விரைந்து சென்ருன்; திரும்பி வந்தான். ''பெரியவர்களே, நான் அவர்களுக்குச் சம்பாதித்துப் போடவேண்டியது என் கடமையாம். அதைப் பகிர்ந்து கொள்வது அவர்கள் உரிமையாம். என் புண்ணியத்தை மட்டும்தான் அவர்கள் ஏற்றுக் கொள்வார்களாம். பாபம் முழுவதும் நான்தான் செய்தேனும். அவர்களுக்கு அதில் துளியும் சம்பந்த மில்லையாம், ஆதலால் என் பாபத்தை நானே தான் சுமக்க வேண்டுமாம்'' என்ருன் வஞ்சனை அறியாத வேடன். இதைக் கேட்ட முனிவர்கள் வேடனின் அறியாமையைக் கண்டிரங்கி அவனுக்கு நீதி புகட்டினுர்கள். உலகின் சுயநலத் தன்மையை உணர்த்தினுர்கள். பிறவி எடுத்ததன் பலன் மோட்சம் அடைதல் என்னும் தத்துவத்தை எடுத்துரைத்தார்கள். தாரக மந்திரத்தை உபதேசித்தார்கள். ''ராம ராம'' என்று ஜபம் செய்து கொண்டே இருந்த இடத்தை விட்டு எழுந்திருக்காது

அவர்கள் திரும்பி வரும் வரை இருக்கும்படிச் சொன்னார்கள். வேடன் வாயில் "ராம" என்ற வார்த்தை நுழையவில்லை. ஆதலால் ரிஷிகள் எதிரே நின்ற ஒரு மரா மரத்தைச் சுட்டிக் காட்டி இதன் பெயர் என்ன ?" என்று கேட்டார்கள். "மரா" என்று தடங்காமல் பதில் அளித்தான் வேடன். அப்படியானால் தாங்கள் திரும்பி வரும் வரை அந்த மரத்தின் பெயரையே திருப்பித் திருப்பிச் சொல்லி ஜபித்துக்கொண்டிருக்கும்படிச் சொல்லிவிட்டு சப்த ரிஷிகள் போய்விட்டனர்.

"மரா, மரா, மரா" என்று இராம நாமத்தைத் தலைகீழாக ஜபித்துக்கொண்டே வேடன் அங்கேயே உட்கார்ந்துவிட்டான், வெகுகாலம் கடந்து சென்றது பசி, தாகம், குளிர், பனி, வெயில் ஒன்றும் இலக்ஷியமில்லை வேடனுக்கு. "மரா, மரா" ஜபம் ஒன்றுதான் குறி. பல ஆண்டுகள் கடந்தன. ரிஷிகள் திரும்பி வரவில்லை, வேடனும் எழுந்திருக்கவில்லை.

பாபத்திலிருந்து விடுபட வேண்டும் என்னும் எண்ணம் தீவிரமாக இருந்ததாலும், ரிஷிகள் வார்த்தை மேல் உள்ள ஆழ்ந்த நம்பிக்கையாலும் "இருந்த இடம் செல்லரித்திடவும் ஆண்டு எழுந்திராது" உலகை மறந்து "மரா, மரா" தியானத்திலேயே ஆழ்ந்திருந்தான் வேடன். நாளடைவில் தவம் புரியும் வேடனின் உடல் மேல் பாம்பு புற்றுக் கட்டத் தொடங்கியது. அப்போதும் வேடன் எழுந்திருக்கவில்லை. பாம்புப் புற்று அவன் உடல் முழுவதையும் மூடி நிரந்தரமாக நிலைத்து நின்றுவிட்டது. அப்போதும் அவன் தியானம் கலையவில்லை. இவ்விதம் பல்லாயிரம் வருடங்கள் சென்றபின் ஸப்தரிஷிகள் திரும்பி வந்தனர். பழைய மரா மரத்தின் பக்கத்தில் ஓர் பிரும்மாண்டமான பாம்புப் புற்றைக் கண்டனர். பழைய ஞாபகம் வந்தது முனிவர்

களுக்கு, உற்றுக் கவனித்தனர். புற்றுக்குள்ளிருந்து ''மரா, மரா'' என்ற தொனி வந்த வண்ணம் இருந்தது. ஞான திருஷ்டியினுல் நடந்ததை உணர்ந்து கொண்ட ரிஷிகள் புற்றைக் கலேத்துப் பக்தியே உருவாய்த் தியானத்தில் இருக்கும் வேடத்தவசியைக் கண்டனர். தியானத்தை நிறுத்தி கண் விழிக்கும்படி எழுப்பினர். வேடத்துறவி விழித்தெழுந்தார். வீழ்ந்தார் குருவாகிய முனிவர்களின் பாதத்தில். வேடசீடரின் பக்தி, உறுதி, தியானம், நம்பிக்கை இவைகளேக் கண்டு பேரானந்தம் அடைந்த முனி புங்கவர்கள், தங்கள் உத்தம சிஷ்யனுக்குப் பக்குவம் வந்துவிட்டதை அறிந்து ஞானேபதேசம் செய்தனர். பாபம் பஸ்மம் ஆகிவிடவே பிரும்ம ஞானம் உள்ளங்கை நெல்லிக் கனி என விளங்கியது வேடத்தவசிக்கு. அஹிம்சா தத்துவம் பிரகாசித்தது. ஞான ஒளி பிறந்தது.

இப்படி ஞானம் பெற்ற வேடசிரோமணிதான் வால்மீகி மகா முனிவர் ஆம்; ''வால்மீகம்'' என்ருல் வடமொழியில் ''பாம்புப்புற்று'' என்று பொருள். பாம்புப்புற்று உடலே மூடத் தவம் செய்ததால் இப் பெயர் நிலேத்துவிட்டது. உண்மைப் பெயர் மறந்து, மறைந்து. 'வால்மீகி'' பாம்புப் புற்றிலிருந்து வெளிப் பட்டவர்'' என்றச் சிறப்புப்பெயர் ஜகப்பிரசித்தமாகி விட்டது. வேடத் துறவி வால்மீகி மாமுனிவராகி விட்டார். மேற்கூறிய கதையிலும் வால்மீகி எங்கு பிறந்து வளர்ந்தார், அவரது சொந்தப்பெயர் என்ன, பிறந்த ஊர் எது? தாய் தந்தை யார்? அவர் என்ன ஜாதி அல்லது குலத்தைச் சேர்ந்தவர்? அவருக்கு மனேவி இருந்தாளா? குழந்தைகள் உண்டா? எத்தனே நாட்கள் இல்லறத்திலிருந்தார்? என்பவை போன்ற சர்வ சாதாரணக் கேள்விகளுக்குப் பதில் கிடையாது. பதில் ஆராய எவ்வித ஆதாரமும் கிடையாது.

பாமர வேடர் ஒருவர் பக்த வால்மீகர் ஆக மாறினூர் என்பதைத் தவிர வேறென்றும் அறிய இயலவில்லை இக்கதையின் மூலம். வேடத்தொழில் தானே செய்து வந்தார்: அப்படியென்றல் அவர் பிறப்பில் வேடுவர் இல்லையா? தெரியாது. சிலர் இவரைப் பிராம்மண விதவை ஒருத்திக்குப் பிறந்தவர் என்றும் தாயினுல் ஆற்றில் விடப்பட்டு ஒரு வேடனுல் எடுத்து வளர்க்கப் பட்டார் என்றும் கூறி இவருக்குச் ஜாதி கற்பிக்க முயல்கிறார்கள். ஆனால் இக்கூற்றுக்கு ஆதாரம் கிடையாது. அதுவுமல்லாமல், இதே கதை (கட்டுக் கதை) கபீர்தாஸர் விஷயத்திலும் இன்னும் சில பெரி யோர்கள், புலவர்கள் விஷயத்திலும் கூறப்படுவதால் இது வெறும் கட்டுக்கதை என்றே தோன்றுகிறது.

உத்தர ராம சரித்திரத்தில் பவபூதி கூறுகிறார்:

"குணு: பூஜாஸ்தானம்

குணிஷு நசலிங்கம் நசவய:

அதாவது "குணம் எங்கு இருக்கிறதோ அங்கு பூஜை செய்யவேண்டும். குணசீலர்களுக்குப் பால் பேதமோ வயது பேதமோ கிடையவே கிடையாது." (குணசாலிகளின் வயதோ; பாலோ, கேள்வியில்லை: குணம்தான் முக்கியம்)

உலக இலக்கியத்துக்கே பொதுவான ஸ்ரீ வால் மீகிக்கு ஜாதி, மத, தேச, காலக் கட்டுப்பாடுகள் ஏது? அதனுல் தானே என்னமோ அவரது காவியத்தையும் நாமத்தையும் தவிர மற்றவை ஒன்றும் நமக்குப் புலப் பட வழியில்லாமல் போயிற்று.

# வால்மீகி இராமாயணத்தின் சிறப்பு

"கூஜந்தம் ராம ராமேதி மதுரம் மதுராக்ஷரம்
ஆருஹ்ய கவிதாசாகாம் வந்தே வால்மீகி கோகிலம்"

"கவிதை என்னும் மரக்கிளையில் ஏறி "ராம ராம" என்னும் இனிய சொற்களை இனிமையாகக் கூவுகின்ற வால்மீகி என்ற கவிக்குயிலை வணங்குகின்றேன்."

"வால்மீகேர் முனி ஸிம்ஹஸ்ய கவிதா வன சாரிண:
ஸ்ருண்வன் ராம கதா நாதம் கோநயாதி பராம்கதிம்"

"கவிதை என்னும் காட்டில் சஞ்சரிக்கின்ற வால்மீகி முனி என்னும் ஸிம்மத்தினுடைய (முனிவர்களுள் ஸிம் ஹமாகிய) இராம கதை என்னும் கர்ஜனையைச் செவி யுற்ற எவன்தான் மோக்ஷம் அடையாமலிருப்பான்? (கட்டாயம் அடைவான்)"

"வால்மீகி கிரிஸம்பூதா ராம ஸாகர காமினீ
புனாது புவனம் புண்யா ராமாயண மகா நதீ"

"வால்மீகி என்னும் மலையில் உற்பத்தியானதும், இராமன் என்னும் சமுத்திரத்தில் கலப்பதும், ஸ்ரீ ராமா யணம் என்னும் பெயர் கொண்டதுமான புனித நதி யானது இவ்வுலகைத் தூய்மைப் படுத்தட்டும்."

"ஸ்லோக ஸார ஸமாகீர்ணம்
ஸர்க்க கல்லோல ஸங்குலம்
காண்டக்ராஹ மஹாமீனம்
வந்தே ராமாயணார்ணவம்"

"செய்யுள் நயம் என்னும் ஸாரத்தால் நிரம்பிய தும், ஸர்க்கங்கள் என்னும் அலைகளினால் கொந்தளிப் பதும், காண்டங்கள் என்னும் திமிங்கிலங்களும், முதலை

களும் வாழ்வதுமான இராமாயணம் என்னும் கடலை நான் வணங்குகிறேன்.''

ஸ்ரீமத் இராமாயணம் என்னும் நூல் ஓர் ரமணீய ரத்னா கரம். உண்ண உண்ணத் தெவிட்டாத தெள்ளமுது; திகட்டாத தேன் பாகு; தேடக் கிடைக்காத திரவியம்; அழியாத சொத்து; குறையாத செல்வம்; அணையாத ஜோதி; அமர தீபம்; ஆனந்த வெள்ளம். வடமொழி என்று பிரசித்தி பெற்ற ஸம்ஸ்கிருதப் பாஷையில் இயற்றப்பட்ட இந்நூலுக்கு ஸ்ரீ வால்மீகி இராமாயணம் என்று பெயர். இதை எழுதியவர் ''பிராசேதஸர்'' அதாவது ''வருண பகவானின் புத்திரர்'' என்று கொண்டாடப்படும் வால்மீகி மாமுனிவர்.

ஸம்ஸ்க்ருதக் காவியங்களுள் மிகப் பழமையானது இந்த இராமாயணமே. வேதாகம நூல்களைத் தவிர வேறு எந்த வடமொழி கிரந்தமும் காலத்தினால் இதைவிட முந்தியது அல்ல. வடமொழி இலக்கிய உலகில் ஆதி காவியம் இராமாயணம்; ஆதி கவி வால்மீகி. இதற்கு முந்தி ஏதேனும் காவியம் இருந்திருக்கலாம். ஆனால் இன்றுவரை அப்படி ஒன்றும் இருந்ததாகத் தெரியவரவில்லை; கிடைக்கவுமில்லை. வால்மீகிதான் வடமொழி வாங்மய காவிய உலகிற்கு வழிகாட்டி. இவரே ஸம்ஸ்க்ருத ஸாஹித்தியத்தின் தந்தை, பிரபந்தக் காவியம் (ஆங்கிலத்தில் ''எபிக்'') இயற்றிய முதல் ஸம்ஸ்க்ருத மகா கவி இவர்தான். வால்மீகியின் அடிச்சுவட்டைத் தான் மற்றவர்கள் அதாவது பின்னால் வந்த கவிகள் பின்பற்றி இருக்கிறார்கள்.

வால்மீகி இராமாயணத்தில் அமைந்திருக்கும் சொற்சுவை, பொருட்சுவை, நகைச்சுவை, நவரசச்சுவைகளை வர்ணிக்க மனித பாஷைக்கு சக்தி போதாது. வாய்ப்

பேச்சின் மூலமோ, எழுத்தின் மூலமோ அதன் எழிலை விவரிக்க முடியாது. படித்துப் படித்து அநுபவிக்கவேண்டும்.

''நவில்தொறும் நவில்தொறும் நூல் நயம்போல'' என்கிறார் வள்ளுவர்.

'க்ஷணே க்ஷணேயந்நவதாம் உபைதி

ததேவ ரூபம் ரமணீயதாயா''
என்கிறார் மகாகவி மாகன்.

''நிமிஷத்துக்கு நிமிஷம் எது புதுப்புதுச்சுவையுடன் தோன்றுகிறதோ அதுதான் ரமணீயத்தன்மையின் லட்சணம் (ரூபம்).''

ஸ்ரீ இராமாயண நூல் கதை சொல்கிறது; கவிதை புனைகிறது; நீதி புகட்டுகிறது; நெறி காட்டுகிறது; நேர்மை யூட்டுகிறது; நன்மை விளக்குகிறது; தீமை விலக்குகிறது; தெய்வத் தன்மையைத் துலக்குகிறது.

கற்பு, கடமை, கருணை சகோதர வாஞ்சை, பித்ரு வாத்சல்யம், புத்ரப்ரேமை, வீரம், தீரம், அரசியல் முறை, அரசியல் சூழ்ச்சி, சமூக நெறி, சமூகக்கொடுமை, அறம், மறம், அன்பு, தியாகம் முதலிய சகல மனித இயல்புக் குரிய குணங்களையும், குற்றங்களையும் வெகு அருமையாகச் சித்திரிக்கிறது இராமாயணம். சுகம்-துக்கம், விருப்பு-வெறுப்பு, ஞானம்-அஞ்ஞானம், சோர்வு-சுறுசுறுப்பு தர்மம்-அதர்மம், முதலிய வாழ்க்கையின் இரட்டை நிலைகளைச் சித்தரிப்பதில் இராமாயணத்துக்கு ஈடு ஜோடு கிடையாது. மொத்தத்தில் இராமாயணம் படம் பிடித்துக் காட்டாத மனித உணர்ச்சியே இல்லை எனலாம். மனித இயல்புக்குரிய, ஏன் தெய்வீக இயல்புக்குரிய, உணர்ச்சி

களின் எல்லையை எட்டிப்பிடித்துவிட்டது இக்காவியம். தெய்வீகத் தன்மையின் சிகரத்தைத் தொட்டுவிட்டது இத்தொல் கிரந்தம் மனிதனும் தெய்வமாவான் தன் உத்தம குணத்தாலும் உன்னத ஒழுக்கத்தாலும் என்னும் உயரிய உண்மைத் தத்துவத்தை எப்படி உணர்த்துகிறது இந்நூல்! உலக இலக்கியப் பூங்காவிலே என்றென்றும் வாடாத சுகந்த வஸந்த மல்லிகை வால்மீகி இராமாயணம். வற்றாத அமுதக்கடல்; வளம் குன்றாத வைரச் சுரங்கம். ஆம்; வால்மீகி இராமாயணம் மனித குலத்துக்கே ஓர் வரப் பிரஸாதம் தான்.

## வால்மீகி இராமாயணத்தின் பாஷை

கீர்வாணவாணி என்றும் தேவபாஷை என்றும் புகழ் பெற்ற வடமொழி ஒரு மகா சமுத்திரம். இது முதலில் இரு பெரும் பிரிவுகள் உடையது. ஒன்று வைதீக பாஷை; மற்றொன்று லௌகீக பாஷை வடமொழி எப்பொழுதும் இலக்கிய பாஷையாகவே இருந்து வந்திருக்கிறது. இது எப்போதாவது பொதுமக்களால் பேசப்படும் பாஷையாக இருந்ததா என்பது பெரும் ஆராய்ச்சிக்குரிய விஷயம். இது நிற்க; வைதிக பாஷை என்பது நான்கு வேதங்களிலும், ஆரண்யகங்களிலும், பிராம்மணங்களிலும் உபநிஷத்துக்களிலும் ரிஷிபுங்கவர்களாலும் மந்த்ரத்ரஷ்டர்களாலும் (மந்திரத்துக்குரிய ஆசிரியர் அல்லது தொகுத்தவர்களாலும்) கையாளப்பட்டுள்ள விசேஷ பாஷை. இதன் வியாகரணமும் வைதிக வியாகரணம் (ஆங்கிலத்தில் வேதிக் க்ராமர்) எனப்படும். இதில் சொற்களின் ஸ்வரம் (ஆங்கிலத்தில் ஸௌண்ட்ஸ்) அதாவது உதாத்தம் அநுதாத்தம், ஸ்வரிதம், ப்லுதம் (மேல் ஸ்தாயி, கீழ்ஸ்தாயி மத்திம ஸ்தாயி, நீண்ட ஸ்தாயி, 3 மாத்திரை கால அளவு முதலியன) என்பன மிக முக்கியமான அம்சம். இந்த

ஸ்வர அம்சம் ஒரு தனி விசேஷம் வைதிக பாஷை வியாகரணத்தில்.

லௌகிக பாஷை என்பதுதான் சாதாரணமாக நாம் ஸம்ஸ்கிருதம் என்று கூறுகின்ற இலக்கியப் பாஷை. இதைத் தற்காலத்தில் ஸ்ரேண்ய-ஸம்ஸ்க்ருதம் (ஆங்கிலத்தில் க்ளாஸிகல் ஸான்ஸ்க்ருட்) என்று குறிப்பிடுகிறார்கள். இது காவிய, நாடக அலங்காரங்களிலும், சங்கீத சில்ப, நாட்டிய, வைத்ய, ஜ்யோதிஷாதி சாஸ்திரங்களிலும், தர்க்கம், மீமாம்ஸை முதலிய தர்சன க்ரந்தங்களிலும் கையாளப்பட்டுள்ளது. இதன் வியாகரணம் தனி. இது பாணினி முனிவரால் வகுக்கப்பட்டது. ஸ்வரக்ரமத்துடன் கூடிய வைதிக வியாகரணம் கடினமானது. முறைப்படி தக்க குருவிடம் வெகுகாலம் அத்யயனம் செய்தால் ஒழிய அதை அப்யஸிக்க முடியாது. லௌகிக வியாகரணமும் ஸ்ரம ஸாத்யமானதுதான். இருப்பினும் விடாமுயற்சியும் உழைப்பும் இருந்தால் கற்றுக்கொள்ளலாம். கடினம் சுலபமாகும்.

ஸம்ஸ்கிருத பாஷை தேவநாகரி லிபியில் எழுதப்படுகிறது. வைதிக ஸம்ஸ்க்கிருதத்துக்கும் லௌகிக ஸம்ஸ்க்ருதத்திற்கும் உள்ள வித்தியாசம் சங்ககால தமிழிற்கும் தற்காலத் தமிழிற்கும் உள்ள வித்தியாசம் போன்றது.

வால்மீகி தன் இராமாயணத்தில் உபயோகித்திருப்பது லௌகிக ஸம்ஸ்கிருதம்.

## வால்மீகி இராமாயணத்தின் நடை

வால்மீகி இராமாயணத்தின் நடை குற்றாலத்தின் பால்அருவி போன்றது தெள்ளத் தெளிந்த, உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும், எளிய நடை, குளுமையும் தெளி

வும், எளிமையும் குமிழியிட்டோடும் கோமள நடை. மிருது ளமாயும், நளினமாயும், லலிதமாயும், கொஞ்சிக்குலாவும் மனோகரமான மணிநடை, மந்தகாஸம் புரியும் சந்திர நிலவு போல் தன் வயப்படுத்தும் வ சீ க ர ந டை, அரித்துவாரத்தில் அரித்தோடும் சுத்த கங்கா பிரவாகத் தின் ஜிலு ஜிலுப்பையும் ஸ்படிகத்தன்மையையும் வால்மீகி இராமாயணத்தின் நடையில் காணலாம். இதன் நடை ஸரளமானது; மதுரமானது; வழவழப்பான பளிங்குத் தரையில் வெல்வெட்டு மெத்தையில் கால்வைப்பதுபோல் மெத்தென்றிருக்கும் மென்மையுடையது வால்மீகி இராமா யணம் படிப்பவர் மனதுக்கு.

துள்ளியோடும் மான் குட்டி போலும், கொஞ்சிப் பேசும் கிளிப்பிள்ளை போலும், அசைந்தாடும் நீலமயில் போலும், ஆடி நடக்கும் அன்னம் போலும், பொங்கித் ததும்பும் புதுநிலவு போலும், பூத்துக் குலுங்கும் பொற் கொடி போலும், வர்ண ஜாலம் தவழும் வானவில் போலும், வைரம் பதித்த பசும்பொன் போலும், முத்துடன் கோத்த ரத்தினம் போலவும்பூரணவனப்புடன் திகழ்கிறது வால்மீகி இராமாயணத்தின் வளமிகு இலக்கிய நடை. ஐம்புலன் களுக்கும் மகிழ்ச்சி அளிக்கக்கூடிய அற்புத நடை, இதயத் தை மட்டுமின்றி ஆத்மாவையும் குளிர்விக்கும் ஆனந்த நடை, வர்ணனை அபாரம். கதைப் போக்கோ கருணரஸத் தில் மிதப்பது. கேட்பானேன்? ஆதலால் விறு விறுப்பும். நயமும், லயமும் ஒருங்கே கலந்து மிளிர்கின்றன. நடன மிடும் பசுங்குழந்தை கண்ணபிரானை நினைத்தால் என்ன மாதுர்யம் மனத்தில் தோன்றுகிறதோ அதே மாதுர்யம் இக்காவியத்தில் நிரம்பித் ததும்புகிறது. இனிமை, எளிமை, தண்மை, இம் மூன்றும் போட்டியிட்டுக் கொண்டு ஒன்றை ஒன்று முந்துவதால் இதன் மேன்மை இன்னும் அதிகமாகப் பிரகாசிக்கின்றது. மொத்தத்தில் வால்மீகியின் கவிதா

நடைக்கு ஈடாக எதையாவது சொல்ல முடியுமென்றால் அது பாரதத்திலும், பாகவதத்திலும் வியாஸர் கையாண்டிருக்கும் நடை ஒன்று தான்.

''மது க்ஷீர த்ராக்ஷா மதுரிம துரீணா: பணிதய:''

''தேன், பால், திராக்ஷையையும் சுவையில் தோற்கடிக்கும் சொற்கள்'' என்கிறார் சங்கரர் ஸௌந்தர்ய லஹரியில் கவிகளின் வாக்கைப்பற்றிக் குறிப்பிடுகையில்.

அதுவுமல்லாமல், ''பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப்'' பாடப்பட்டுள்ள இக்காவியத்துக்கு ஒப்புவமை ஏது? வால்மீகியே சொல்வதுபோல்,

''ககனம் ககனாகாரம்
ஸாகர: ஸாகரோபம:''

''ஆகாயத்துக்குவமை ஆகாயந்தான், கடலுக்குவமை கடல் தான்'' அதேபோல் இராமயணத்துக்குவமை இராமாயணமே.''

''என்னாய், என்னாய்
என்னின் அல்லால்
ஏழையேன் என் சொல்லி
ஏத்துகேனே;''

## வால்மீகி இராமாயணத்தின் பெயர்

### ''ஸீதாயாஸ் சரிதம் மஹத்''

இராமாயணத்தின் மகிமைக்குக் காரணம் ஸீதா தேவிதான். இராமபிரானின் அறமும், இரகு குலத்தின் சிறப்பும் ஒருபுறம் இருக்க, ஜனக ராஜகுமாரி வைதேகி

யின் கற்பின் சிறப்பை, பெண்மையின் திண்மையைத் தான் இராமாயணம் சிறப்பாக எடுத்துரைக்கிறது, இதற்குச் சான்று ஸ்ரீ வால்மீகியின் வாக்கே ;

"வேதோப பிரும்ஹணார்த்தாய
தௌ அக்ராஹயத ப்ரபு;
காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்னம்
ஸீதாயாஸ் சரிதம் மஹத்
பௌலஸ்த்ய வதம் இத்யேவ சகார சரிதவ்ரத;"

"வேதப் பொருளை விளக்குவதற்காக மேதாவிகளாகிய லவ-குசர்களுக்குத் தன் காவியத்தை வால்மீகி கற்பித்தார்"

"இராமாயணம் (இராமனின் யாத்திரை) என்றும், ஸீதா தேவியின் மகா சரித்திரம் என்றும் பௌலஸ்த்ய வதம் (ராவண வதம்) என்றும் தனது முழு காவியத்திற்கும் பெயரிட்டார் வால்மீகி"

என்று பால காண்டத்தில் நாலாவது சர்க்கத்தில் காவிய கர்த்தாவாகிய ஸ்ரீ வால்மீகியே கூறுவதால் சந்தேகத்துக்கே இடமில்லை.

## வால்மீகி இராமாயணத்தின் அமைப்பு

ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம் ஏழு காண்டங்களால் அமைந்தது. அவையாவன :—

பால காண்டம், அயோத்யா காண்டம், ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், உத்தர காண்டம்.

| | |
|---|---|
| பால காண்டத்தில் :— | தசரத குமாரர்களின் பிறப்பு, வளர்ப்பு, கல்வி, விவாகம் வர்ணிக்கப்படுகின்றன. |
| அயோத்யா காண்டத்தில் :— | யுவராஜ்ய பட்டாபிஷேக ஏற்பாடு கைகேயி சூழ்ச்சி, இராம வன வாஸம், தசரதர் மரணம், இராமர் பரதர் சந்திப்பு, பாதுகா பட்டா பிஷேகம். |
| ஆரண்ய காண்டத்தில் :— | இராம-ஸீதா-லட்சுமணர் வன வாஸ வாழ்க்கை, விராத-கரதூஷணாதி வதம். முனிவர்கள் முறையீடு. சூர்பனகா கர்வ பங்கம், ஸீதா ஹரணம், ஜடாயு மரணம். |
| கிஷ்கிந்தா காண்டத்தில் :— | இராம-சுக்ரீவர் நட்பு, வாலி வதம், சுக்ரீவ பட்டாபிஷேகம், ஸீதையைத் தேடுதல். |
| சுந்தர காண்டத்தில் :- | ஹனுமார் லங்கையைத்தாண்டல் ஸீதையைக் கண்டு கணையாழியைத் தரல், தூது பேசல், திரும்புதல். |
| யுத்த காண்டத்தில் :- | யுத்தம், இராவணாதி — ராட்சஸ வதம், இராமர் வனவாஸ முடிவு, ஸீதா அக்கினிப்பிரவேசம், நாடு திரும்புதல், பட்டாபிஷேகம். |

உத்தர காண்டத்தில்:- ஸீதை அபவாதம், ஸீதாத்யாகம், லவ - குசர் பிறப்பு, வளர்ப்பு, ராவணுதி-ராட்சதர் கதை அஸ்வ மேத யாகம், லவ-குசர் யுத்தம் இராமாயண கானம் ஸீதாவரவு, பூமி பிரவேசம், லவ-குசர் விவாகம், பட்டாபிஷேகம், துர்வாசர் சாபம், இராம—லட்சுமண-பரத-சத்ருக்குனர் சரயூ நதியில் மூழ்குதல், முடிவு.

ஒவ்வொரு காண்டமும் பற்பல சர்க்கங்கள் கொண்டது. ஒவ்வொரு சர்க்கமும் நூற்றுக் கணக்கான ஸ்லோகங்கள் கொண்டது.

பற்பல வகைப்பட்ட அருமையான சந்தங்களை ஸ்ரீ வால்மீகி திறமையாகக் கையாண்டிருப்பினும், இராமாயண காவியம் முழுதும் அநுஷ்டுப் சந்தஸ் (குறள் போல் ஈரடியால் அமைந்த செய்யுள்) தான் பிரதானமாக உபயோகிக்கப்பட்டுள்ளது.

## அநுஷ்டுப் சந்தஸின் அற்புத வரலாறு

வால்மீகி முனிவர்தான் லௌகிக அநுஷ்டுப் சந்தஸின் தந்தை இவருக்கு முன்ஞல் வேதங்களில் அநுஷ்டுப் சந்தஸ் உபயோகிக்கப்பட்டுள்ளதாயினும், முதன் முதலாக, எழுத்து நியதியுடனும், குறில், நெடில், வியவஸ்தையுடனும், சீர், தளை, அடி, நிறுத்தல் நியமனத்துடனும் ஒரே சீராக, அழகிய முறையில் அநுஷ்டுப் சந்தஸைத் திறம்படக் கையாண்ட கலைஞர் வால்மீகி தான் ஆதலால்தான் இவரைஅநுஷ்டுப் சந்தஸின் பிதா என்று அழைக்கின்ருேம். இவருக்குப் பின்ஞல் வந்த கவிகள் இத்துறையில் இவர் காட்டிய வழியில் சென்ருர்கள்.

## அநுஷ்டுப் சந்தஸ் பிறந்த விதமும், இராமாயணம் ஏற்பட்ட வரலாறும்

ஆதி கவி வால்மீகியினுல் இயற்றப்பட்ட ஆதி காவியம் இராமாயணம். ''சதுர் விம்சதி ஸாஹஸ்ரீ'' (24000 ஸ்லோகங்கள் கொண்ட கிரந்தம்) என்று சிறப்புப் பெயர் கொண்டது. காயத்ரீ மந்திரத்தில் மொத்தம் 24 எழுத்துக்கள் உள்ளன. ஒரு எழுத்துக்கு ஓர் ஆயிரம் சுலோகமாக மொத்தம் 24000 சுலோகங்கள் உள்ளன இராமாயயணத்தில் என்கின்றனர் அறிஞர். ஒவ்வொரு ஆயிரமாவது (ஓராயிரம் சுலோகம் முடிந்து அடுத்த சுலோகம் ஆரம்பிக்கையில்) சுலோகம் முடிந்து அடுத்த சுலோகாரம்பத்தின் முதல் எழுத்து காயத்ரீ மந்திரத்தின் எழுத்தாகவே அமைந்துள்ளது :—

''தத் ஸவிதுர் வரேண்யம்''

என்ருரம்பிக்கும் காயத்ரீ மந்திரத்தின் முதல் எழுத்து ''த'', இராமாயணத்தின் முதல் சுலோகத்தின் முதல் எழுத்தும் ''த'' தான்.

''தபஸ் வாத்யாய நிரதம்''

ஆதலால் இந்த மந்திரத்தின் எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட 24 சுலோகங்களை மட்டும் வரிசையாகப் பொறுக்கி எடுத்து அமைத்து, ''காயத்ரீ இராமாயணம்'' என்று பெயர் கொடுத்துள்ளனர் பெரியோர். இச் சிறு இராமாயணமும் மிகப் பிரசித்தி பெற்றது.

தான் இராமாயண காவியத்தை இயற்ற நேர்ந்தது எப்படி என்னும் ரஸமான சம்பவத்தை, இராமாயண ஆரம்பத்தில் வெகு அருமையாக எடுத்துரைக்கிருர்

ஸ்ரீ வால்மீகி. இராமாயணத்தின் முதல் முதல் சர்க்கம் வால்மீகியின் கேள்விக்கு நாரத மகரிஷி கூறிய பதிலாகிய "ஸம்க்ஷேப இராமாயணம்" (இராமாயணச் சுருக்கம்) என்பது. "காயத்ரீ இராமாயணத்தைப்" போலவே "ஸம்க்ஷேப இராமாயணமும்" சிறிது நேரத்தில் முழுதும் தனியே வாசிப்பதற்கும், பூஜிப்பதற்கும், நேசிப்பதற்கும் ஏற்றதாக அமைந்துள்ளது. பாராயண பராயணர்களுக்கு இவை மிகவும் உபயோகமானவை. இராமாயண காதை முழுவதையும் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதால் இந்த ரத்தினச் சுருக்கமாகிய ஸம்க்ஷேப இராமாயணம் அத்யந்த ப்ரக்யாதி பெற்றுள்ளது. இரண்டாவது சர்க்கத்தில்தான் ஸ்ரீ வால்மீகி தான் இராமாயணம் எழுத நேர்ந்த காரணத்தையும், சோகம் ஸ்லோகமாக மாறிய விந்தையையும் விவரிக்கிறூர்.

வால்மீகி கூறும் விநோத சம்பவம் கீழ்க்கண்டவாறு;-

"நாரத மகரிஷியின் சொல்லைக்கேட்டு மகிழ்ந்த வித்வான் வால்மீகி தன் சிஷ்யர்களுடன் கூட அம் மாமுனியைப் பூசித்து உபசரித்தார். பின்னர் நாரதரும் விடை பெற்றுச் சென்ருர். அதன் பிறகு கங்கைக்குச் சமீபத்தில் உள்ள தமசா என்னும் நதிக்கரையை ஸ்ரீ வால்மீகி அடைந்தார். தமசையின் கரையில் நின்று கொண்டிருக்கும் தன் சிஷ்யனை நோக்கி, தெள்ளத் தெளிந்த ஆற்று நீரின் தன்மையையும் நோக்கி வால்மீகி சொல்லலானுர் ;-
அப்பா, பாரத்வாஜா (சிஷ்யன் பெயர்) சேறில்லாமல் தெளிந்திருக்கும் நதியைப் பார், சற்ஜனர்களின் இதயம் போல் மனேகரமாகவும், நிர்மலமாகவும் இருக்கும் தண்ணீரைப்பார். குழந்தாய், குடத்தைக் கீழே வை, எனது மரவுரியைக் கொடு; தமசையின் புண்ய தீர்த்தத்தில் இங்கேயே நீராடுகிறேன்."

குருவின் சொற்படி குடத்தைக் கீழே வைத்தான் சிஷ்யன்.

சிஷ்யன் கையிலிருந்த மரவுரியை வாங்கிக்கொண்டு முனிவர் அப்பெரியக் காட்டைச் சுற்றிப் பார்க்கலானுர். அப்போது பக்கத்தில் அன்புடன் விளையாடிக்கொண்டிருக்கும் க்ரெளஞ்ச பட்சிகளின் ஜோடியைக் கண்டார். அப்பட்சிகளின் இனிய நாதத்தையும் கேட்டார். அவர் அப்படிப் பார்த்துக்கொண்டே யிருக்கையில், கொடுந்தொழிலன் ஆன வேடன் ஒருவன் ஆண் பறவையை அடித்து வீழ்த்தினுன். இரத்த வெள்ளத்தில் தோய்ந்து பூமியில் புரளும் ஆண் பறவையைக் கண்ட பெண்பறவை கேட்போர் மனம் உருகும்படி அரற்றத் தொடங்கியது. எப்போதும் கூடவே யிருந்ததும் செங்கொண்டையை உடையதுமான கூட்டாளியைப் பிரிந்து பெண்பட்சி கதறியது. இக்காட்சியைக் கண்ணுற்ற வால்மீகியின் மனம் இரக்கத்தினுல் கனிந்தது. இரக்கமேலீட்டால் புலம்பும் பெண் பட்சியைக் கண்டு வேடன் மேல் வெகுண்ட முனிவர்,

''மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வம்
அகம: ஸாஸ்வதீ ஸமா;
யத் க்ரெளஞ்ச மிதுனுத் ஏகம்
அவதீ; காம மோஹிதம்''

''ஏ வேடா, நீ உலகில் நீண்ட ஆயுள் பெற்று வாழாமல் போகக் கடவாயாக, அன்பினுல் பிணைப்புண்டிருந்த க்ரெளஞ்ச ஜோடிகளில் ஒன்றைக் கொன்ருயல்லவா? அதனுல்,'' என்று மொழிந்தார். இவ்விதம் சொன்ன பிறகு முனிவர் மனதில் விசனம் உண்டாகிவிட்டது. ஒரு பட்சியின் மேல் இரக்கம் கொண்டு மனிதனைச் சபித்துவிட்டேனே என்று தன்னைத் தானே நொந்து கொண்டார்.

"அடி, சீர். தளை அமைந்து லயமும் பண்ணும் ஒருங்கே அமைந்து வெளிப்பட்ட இவ்வாக்கியம் ஸ்லோகம் ஆகவே இருக்கட்டும். சாபமாகவேண்டாம்," என்ருர் கருணை வள்ளல் வால்மீகி. "அப்படியே, ஆகுக" என்று ஆமோதித்தான் சிஷ்யன்.

நீராடிவிட்டுத் திரும்புகையில் திரும்பத் திரும்ப "மா நிஷாத" என்ற அடி மனக்கண்முன் தாண்டவமாடி ஒலித்தது. அதையே சிந்தித்த வண்ணம் ஆஸ்ரமம் வந்துசேர்ந்தார் முனிவர். பிறகு குருவும், சிஷ்யனும் அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தனர். அச்சமயம் நான்முகப் பிரமன் அவரைக் காண நேரில் வந்தார். ஸ்வயம்பூவைக் கண்ட வால்மீகி கைகூப்பி நமஸ்கரித்து உபசரிததார்.

லோக பிதாமகர் ஆஸனத்தில் அமர்ந்ததும் அவர் அனுமதியின் பேரில் பக்கத்தில் அமர்ந்த வால்மீகி அனுவஸ்யமாக வேடனைத் திட்டிவிட்டேனே என்ற மனோவேதனையால் துடித்துக்கொண்டேயிருந்தார். இதைக் கண்ட பிரமன் புன்சிரிப்புடன் :—

"முனிபுங்கவரே, நீர் இயற்றியது ஸ்லோகம் தான். சிந்திக்கவேண்டாம். எனது கட்டளையின் பேரில்தான் கலைவாணி தங்கள் நாக்கில் உதித்தாள். மகரிஷியே, ஸ்ரீராமன் சரித்திரத்தை இயற்றுவீராக. நாரதர் கூறிய வரலாற்றை ஆதாரமாகக் கொண்டு இராம-சீதா-லட்சுமணர் முதலியோரின் சரிதத்தை அந்தரங்கத்திலும் பகிரங்கத்திலும் நடந்தது நடந்தபடி எழுதுவீராக. உமக்குத் தெரியாதனவெல்லாம் எனது அருளால் தானே விளங்கும். இக்காவியத்தில் எந்த ஒரு இடத்திலாவது உமது வாக்கு பொய் ஆகாது. புனித மயமாகிய இராம காதை

யை இயற்றுவீர், பூமியில் மலைகளும் நதிகளும் உள்ளளவும் உமது இராமாயணம் விளங்கும். உலகில் இராமாயணம் விளங்கும் வரை நீர் எனது லோகத்தில் வசிப்பீர்.'' என்று கூறி மறைந்து விட்டார். இதைக் கேட்ட முனிவரும் சிஷ்யர்களும் ஆச்சரியக் கடலில் மூழ்கினர். சீடர்களோ நான்கு பாதங்களோடும் எழுத்தின் சம எண்ணிக்கை நியதியோடும் கூடின ''மா நிஷாத'' என்னும் ஸ்லோகத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிச் சொல்லி அனுபவித்தார்கள் அதைக் கேட்டதும், ''இவ்விதமாகவே இராமாயணம் முழுவதும் அனுஷ்டுப் சந்தஸால் இயற்றுவோம்'' என்றொரு அற்புத எண்ணம் தோன்றிற்று ஸ்ரீ வால்மீகிக்கு. அவ்வாறே அழகிய இராம காதையை அவர் இயற்றினார்.

அவரால் இயற்றப்பட்ட அதி மனோகரமான ரகுவர சரிதம் என்னும் இராவண வத காவியத்தை அனைவரும் அன்புடன் கேட்பீர்களாக— என்று முடிகிறது இரண்டாம் சர்க்கம். இம்முடிவில்தான் தொடங்குகிறது இராமாயண நூலுக்கு ஆரம்பமாகிய, முகவுரை போன்ற பொருளடக்கம். மேற் சொன்ன சம்பவத்திலிருந்து என்ன விளங்குகிறது என்றால் உயர்ந்த கொள்கைகளும் கோட்பாடும் கொண்ட நெஞ்சத்தின் புனித உணர்ச்சிதான் கவிதையின் பிறப்பிடம், மூளையும் பாண்டித்தியமும் மட்டும் இருந்தால் போதாது. அது வறண்ட பாடலாகவே முடியும். அதில் விஷயங்கள் இருந்தாலும் சுவை இருக்காது. சிறந்த மூளையுடன் உயர்ந்த இதயமும் வேண்டியது அவசியம் உன்னத கவிதைக்கு. ''பக்தியில்லாத வறண்ட ஞானத்தினால் பயனில்லை'' என்பது நம் முன்னோர்களின் அனுபவ சித்தாந்தமான ஏகோபித்த கொள்கை. ''சங்கீத ஞானமு பக்திவினா'' என்று பறை சாற்றுகிறார் பக்த சிகாமணி தியாகய்யா. இதயத்தின் ஆழத்தில் இருந்து எழும்பும் உணர்ச்சிதான் உயர்ந்த கவிதையாக உருப்பெறும்.

பண்பட்ட உள்ளத்தில் பிரதிபலிக்கும் உணர்ச்சிதான் உண்மைக் கவிதையாகும். அதுவரை வெளிப்படாமலிருந்த கவிதா சக்தி பறவையின் துயரைக்கண்டு உருகிய, வெடித்தெழுந்த, இதய தாபத்தின் மூலம் பொங்கித் ததும்பிப் புறப்பட்டு விட்டது தம் கவிதா சக்தியைத் தானே கண்டு ஆச்சரியமடைந்தார் ஸ்ரீ வால்மீகி. வாழ்க்கையில் சிறு சிறு சம்பவங்களே பெரும் நிகழ்ச்சிகளுக்குத் தூண்டுகோலாக அமைகின்றன. உள்ளூர இருந்த கவிதைத்திறன் வெள்ளமாகப் புறப்பட்டு விட்டது, துள்ளி எழுந்த உள்ளக் கிளர்ச்சியின் வாயிலாக! உணர்ச்சிதான் கவிதா தேவியின் மணியாசனம்.

துளஸிதாஸர் மனைவியும், ஏகம்பவாணன் மனைவியும், வரதுங்கராம பாண்டியன் மனைவியும் பாடவில்லையா திடீரென்று? பக்த மணிகள் மீராவும், ஆண்டாளும் உணர்ச்சிக் கடல்கள் அன்றோ! விசால இதயம் சாகரம் போன்றது

கவி இரவீந்திரநாத் டாகூர் சிறுவராக இருக்கையில் ஒரு பொம்மைச் சிங்கத்தை அடித்துவிட்டு

"Lionie, Lionie, off your head,
Lionie, Lionie, now you are dead!"

என்று பாடினாராம். கவியின் மழலை மொழி கவிதையாகவே அமைந்து விட்டது.

கவியரசி சரோஜினி தேவி இளஞ்சிறுமியாக இருக்கையில் ஒரு நாள் கணிதத்துக்குச் சரியான விடை வராமல் திண்டாடிக் கொண்டிருந்தாராம். அப்போது (ஆங்கிலத்தில் "இன்ஸ்டெட் ஆப் தி ஸம், எ ஹோல் போஎம் கேம் இன்டு மை மைன்ட்" என்று அவரே தன அனுபவத்தைக் கூறுகிறார்; ஆதலால் கவிதைககுப் பிறப்பிடம் உணர்ச்சி என்பது உலகமறிந்த அனுபவம. இவ்வனுபவம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதத்தில் ஏற்படுகிறது.

ஒரு காலத்தில் தானே வேடத்தொழில் செய்து வந்த வால்மீகி பிற்காலத்தில் ஒரு வேடனின் கொலைத் தொழிலைக் கண்டு பொறுக்காது சபித்தார் என்றால் மனித இதயம் நல்லுணர்ச்சியின் மூலம் எவ்வளவு தெய்வத்தன்மை அடைகிறது என்பது நன்கு புலனாகிறது அல்லவா? நிற்க,

அநுஷ்டுப் சந்தஸ், ஆரணியத்தில் அன்றில் பறவையின் அலற்றலில் உற்பத்தியாகி, வால்மீகியின் சோகத்தில் உருப்பெற்று ஸ்லோகமாகி விட்டது. இப்படி அற்புதமாக உற்பவித்த சந்தத்தையே இராமாயணத்தில் முக்கியமாகக் கையாண்டுள்ளார் வால்மீகி.

இச்சந்தஸின் வடிவம் மனனம் செய்யவும் ஏற்றதாக, எளிதில் அப்யஸிக்கக் கூடியதாய் அமைந்துள்ளது. ஆதலால் ஸம்ஸ்கிருத காவிய உலகில் அநுஷ்டுப் சந்தஸிற்கு தனி மகிமை.

## இராமாயண காவியம் ஒரு இதிகாசம்

''மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வம் அகம:
சாஸ்வதீ ஸமா;
யத் க்ரௌஞ்ச மிதுன தேகம் அவதீ;
காம மோகிதம்''

"ஹே, லட்சுமீ நாயகா; உலகில் நீ என்றென்றும் நீடூழி வாழ்வாயாக, ஏன் என்றால், காம வெறியில் கட்டுண்ட, இராவணன்–மண்டோதரி என்னும் க்ரௌஞ்ச பட்சி ஜோடியில் ஒருவனான இராவணனைக் கொன்றாயல்லவா?'' என்ற மங்கள ஸ்லோகம் தான் இராமாயணத்துக்கு ஆதாரம். சிலேடை அலங்காரத்தின் மூலம் இச் சுலோகத்துக்கு இருவித பொருள் ஏற்படுகிறது. ஒன்று வேடனுக்குச் சாபம். மற்றொன்று இராமனுக்கு வாழ்த்து. இச் சிலேடையினால் தான் சோகம் சுலோகமாக மாறியது.

இலக்கிய உலகில் மிகவும் மகிமை வாய்ந்த இராமாயணம் மற்ற சாதாரண காவியங்களைப் போன்றதல்ல. இது ஒரு காவிய ரூபமான இதிகாசம். அதாவது, தேச சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்ட ஓர் மகா காவியம். இதில் அக்காலத்திய பாரத தேச நிலைமை, சமூக நிலைமை, அரசியல் நிலைமை. பொருளாதார நிலைமை, மக்களின் மனப்பான்மை, ஆத்மீகத் துறையில் அவர்கள் அடைந்திருந்த முன்னேற்றம், நீதி பரிபாலனம், முதலிய அரும் பெரும் விஷயங்கள் பரந்து விரிந்து கிடக்கின்றன. சரியான முறையில் ஆராய்ச்சி செய்தால் இராமாயண காலத்தில் நம் நாட்டு மக்கள் எப்படி வாழ்ந்தனர், எவ்விதம் இருந்தனர் என்று நன்கு அறிந்து கொள்ளலாம்.

இராமாயணத்தைப் போன்ற மற்றொரு பெரும் இதிகாச காவியம் மகாபாரதம். இவ்விரண்டு காவியங்கள் மட்டுமே, இந்திய இலக்கிய உலகில் இதிகாசம் என்னும் சிறப்புப் பெயரால் பிரசித்தி பெற்றுள்ளவை. இவைகளின் மூலம் பழைய பாரத நாட்டின் பற்பல விஷயங்களை நாம் மிக நன்கு உணர்ந்து கொள்ள முடிகிறது. ஆங்கில முறையில் ஐரோப்பிய மனோபாவத்தில் எழுதப்படும் தற்கால தேச சரித்திரங்களைப் போல இந்த இந்திய இதிகாசங்கள் எழுதப்படவில்லை. ஆயினும் இவை நம் நாட்டுச் சரித்திரப் பண்பை அற்புதமாகச் சித்தரிப்பதால் இவை நமக்கு விலை மதிப்பில்லாத அரிய பொக்கிஷங்களாக விளங்குகின்றன.

தற்கால சரித்திரங்களின் மூலம் தேதிகளும், இராஜ வம்ச யுத்தங்களும், ஒப்பந்தங்களும், உடன்படிக்கைகளுமே நம் மூளைக்குள் திணிக்கப்படுகின்றன. அக்கால மக்களின் வாழ்க்கை நிலை, சமூக நிலை, அரசியல் நிலை முதலியவற்றைப் பற்றிய அரும் பெரும் விவரங்களைத்

தற்கால, மேனாட்டு முறையைத் தழுவி எழுதப்படும் சரித்திரங்கள் கூறுவதில்லை. ஹெச். ஜி, வெல்ஸின் ''உலக சரித்திரம்'' (ஆங்கிலத்தில் வோர்ல்ட் ஹிஸ்டரி) இதற்கோர் விதி விலக்கு. ஆங்கில பாஷையில் ஆங்கிலேயரால் சொந்தமாக எழுதப்பட்டுள்ளதாலேயே அது இவ்வளவு சிறப்பாக அமைந்துள்ளது. நிற்க,

இந்திய முறையில் இந்தியர்களால் இயற்றப்பட்டுள்ள இதிஹாஸங்களாகிய இராமாயணமும், பாரதமும் யுத்தங்களையும், நூல்களையும், கொலைகளையும் மட்டும் வர்ணிப்பதோடு நின்றுவிடாமல் அக்காலப் பொதுமக்களின் அன்றாட வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அக்காலத்திய சமூக வாழ்வையும், சமூக நெறிக் கோட்பாடுகளையும், சமூக மனப்பான்மையையும், அரசியல் குறிக்கோள்களையும் உள்ளங்கை நெல்லிக் கனி என எடுத்துக் காட்டுகின்றன. அரசர்களையும், அரசியலையும், அரச வாழ்வையும் அளவுக்கு மீறி வர்ணனை செய்வதோடு மட்டும் நின்றுவிடாமல் தேசிய வாழ்வையும், தேச நிலைமையையும் தேசத்தின் ஏகோபித்த பலம், பலஹீனம், விருப்பு வெறுப்பு, எழுச்சி, உயர்வு, வீழ்ச்சி முதலிய இயற்கை நியதிகளாகிய இரட்டை நிலைகளையும் முறைப்படி விளக்குகின்றன; உணர்த்துகின்றன. மனித சமூகத்தின் வாழ்க்கை முறையை விவரிப்பதிலும், மனித உள்ளத்தின் உணர்ச்சிகளை உள்ளவாறு உரைப்பதிலும் இவை ஈடிணையற்றுத் திகழ்கின்றன. ஆதலால் இந்த இதிகாசங்கள் நமது நாட்டின் இரு கண்மணிகளுக்கு ஒப்பானவை.

காலத்தினால் முற்பட்டதாகிய இராமாயணம் காவியம் என்ற முறையிலும் சரி, இதிகாஸம் என்ற முறையிலும் சரி, தலை சிறந்து விளங்குகிறது. இப்படிப்பட்டதோர் செல்வக்களஞ்சியமாகிய இலக்கிய ரத்தினத்தை என்

றென்றும் அழியாதவாறு நமக்கருளிச் செய்த ஸ்ரீ வால்மீகி யை எவ்வளவு போற்றினுலும் தகும். அவரது மேதா விலாசத்தையும், மேம்பட்ட பண்பாட்டையும், மேன்மைக் குணத்தையும் கண்டு அவர் திருவடிகளில் வணங்குவதைத் தவிர, அவரது காவியத்தைப் படித்து ரசிப்பதைத் தவிர. நாம் அவருக்கு வேறு எவ்விதத்தில் மரியாதை செலுத்த முடியும் ?

"செயற்கரிய செய்வர் பெரியர்"

## ஸ்ரீ வால்மீகி இராமாயண அரங்கேற்றம்

ஸ்ரீ வால்மீகி முனிவர் தனது இராமாயணத்தை இராமரது அஸ்வமேத யாகசாலையில் தமது அருமந்த சீடர்கள் லவ-குசர்களைக் கொண்டு கானம் செய்வித்தார் என்பது ஜகப் பிரசித்தமானது. இச் சம்பவம் தான் வால்மீகி இராமாயண அரங்கேற்றம். சகல கலை வல்லு னர்களும், பாஷா ஞானத்திற் சிறந்த பண்டிதர்களும், யாப்பிலக்கண சிரோமணிகளும், காப்பிய இலக்கண நிபுணர்களும், கான சிகாமணிகளும், நடன-நாட்டிய-நாடக மணிகளும், சாஸ்திர விற்பன்னர்களும், தர்ம ஸாஸ்திர வித்வான்கரும், வித்யைக் கடலைக் கரைகண்ட வர்களும், பிரும்ம ஞானிகளும், ஆயிரக்கணக்காக குழுமி யிருந்த அஸ்வமேத யாக மண்டபத்தில், யாழை மீட்டிய வண்ணம், இனிய, தெளிந்த, கம்பீரமான, கவர்ச்சி மிக்க குரலில், முனிவேடம் பூண்ட இளைஞர்களான இராம, குமாரர்கள் இராமாயணத்தை ஒரு நாளைக்கு 20 சர்க்கங் களாகப் பாடினுர்கள். இத்தனை வகை சகலகலா வல்லபர் களும், சிரக்கம்பமும், கரகோஷமும் செய்து கொண்டாடி மெய்ம்மறந்து, ஆனந்த பரவசர்கள் ஆனுர்கள் என்ருல், இராமாயண காவியத்தின் சிறப்பைப்பற்றி அதிகம்,

விவரிப்பானேன்! பட்டாபிஷேகம் வரைப் பாடி முடிந்ததும் உண்மை உணர்ந்த இராமர் தம் குமாரர்களை வால்மீகி முனிவரின் சொற்படி அனைவரின் முன்னிலையிலும் ஏற்றுக் கொண்டார். ஆனால் ஸீதா தேவியோ இராமர் மறுபடி தன்னைச் சோதனை செய்துக் காட்டித் தன் கற்பின் புனிதத் தன்மையை நிரூபிக்கச் சொன்ன சொற்களின் கொடுமையையும், கடுமையையும் தாங்க மாட்டாதவளாய்

''இராமரைத் தவிர வேறு யாரையும் கனவிலேயும் கற்பனையிலேனும் நினைத்திருப்பேனாயின்,

'மனதாலோ, வாக்காலோ, காயத்தாலோ தூய்மை இழந்திருப்பேன் ஆயின் நரகம் கிட்டுவதாக;

''ததோ மே மாதவி தேவி
விவரம் தாதும் அர்ஹஸி''

''அப்படி இல்லாமல் நான் தூய்மை உடையவள்; மாசற்றவள்; கற்புள்ளவள்; உத்தமி என்பது சத்தியமானால் ஏ!பூமி தேவி, படீரென்று வெடித்து எனக்கு வழிவிடுவாய்'' எனக் கடும் சபதம் செய்து கற்பரசியின் கற்புக்கனலின் புனிதத்தன்மைக்குச் சாட்சியாக திடீரென்று வெடித்து வாய்பிளந்த பூமிக்குள் பிரவேசித்து விடுகிறாள். இராமர். இதைப் பொறுக்க முடியாதவராய் பூமியையே அழிக்க முற்படுகிறார். இந்தச் சந்தர்ப்பத்தில் பிரும்ம தேவர் மறுபடித் தோன்றி இராமரிடம் வந்து அவர் அவதாரத் தன்மையை விளக்கி இராமாயணத்தின் சிறப்பைக் கூறி, உத்தர காண்டத்தைப் பொறுமையுடன் கேட்கும்படி வேண்டிக்கொள்கிறார்.

இராமர் பிரும்மாவின் வேண்டுகோளுக்கிணங்கி உத்தர இராமாயணத்தையும், பவிஷிய காண்டம் (வருங் காலத்தைச் சொல்வது) உள்பட கேட்டு முடிக்கிறார் என்று வால்மீகி இராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது.

கம்பர், துளஸி இராமாயண அரங்கேற்றங்களை விட வால்மீகி இராமாயண அரங்கேற்றம் மிகவும் ருசிகரமான சம்பவங்கள் வாய்ந்தது. இதில் வால்மீகரின் வெற்றியும் அடங்கியுள்ளது.

ஸீதா தேவியையும், லவ-குசர்களையும் உலகமறிய இராமரிடம் ஒப்புவித்து விடவேண்டும் என்பதே வால்மீகி முனிவரின் வாழ்க்கை லட்சியம்; இதுவே அவரது காவிய லட்சியமும் ஆகும். அதற்காகவே அவர் லவ-குசர்களுக்கு இராமாயணம் கற்பித்தார். அவரது லட்சியமும் கை கூடியது. உலகம் பிரமிக்கத் தக்க வகையில் நிறை வேறியது. ஆனால் ஸீதா தேவியின் பூமிப் பிரவேசம் வால்மீகரே எதிர்பார்த்ததல்ல ஏன்? ஸ்ரீராமர் கூட இதை எதிர்பார்க்கவில்லை. நிற்க,

காவியங்களுள் எல்லாவிதத்திலும் இராமாயணம் சிறப்புப் பெற்று இருப்பது போலவே அரங்கேற்ற விஷயத் திலும் தனிச் சிறப்பும், மேன்மையும் பெற்று விளங்குகிறது.

## முப்பெரும் இராம காவியங்கள்

கம்பர், துளஸி, வால்மீகி என்ற மூன்று மாபெரும் கவி அரசர்களால் வேவ்வேறு காலங்களில், வெவ்வேறு பாஷைகளில் இயற்றப்பட்ட இராமாயணம் என்னும் காவியம் இந்திய நாட்டின் இணையற்ற செல்வமாகும். தமிழ் ஹிந்தி ஸம்ஸ்கிருதம் என்னும் மூன்று முக்கிய பாஷைகளில் முறையே கம்பர், துளஸி, வால்மீகி என்னும் கவி மன்னர்களால் எழுதப்பட்டுள்ள இம் முப்பெரும் காவியங்கள் முச்சுடர்களுக்கு ஒப்பானவை இயற்கையில் ஜோதி வீசும் வால்மீகி இராமாயணம் சூரியன் போலவும் கற்புக்கனல் வீசும் கம்ப இராமாயணம். சூரியனின் தத்து வத்தைப் பெற்ற அக்னி போலவும், பக்தி நிலா வீசும் துளஸி இராமாயணம் சூரியனின் ஒளியைப் பெற்று குளிர் நிலவு

பொழியும் சந்திரன் போலவும் சுடர்விட்டு மிளிர்கின்றன என்றால் மிகையாகாது. இந்த உவமையை இன்னும் சற்றுப் பெரிதாக்கினால் மற்ற இந்திய பாஷைகளில் எழுதப்பட்டுள்ள இராமாயணங்களை, மின்னும் தாரகைகளுக்கு ஒப்பிடலாம்.

இந்திய இலக்கிய உலகில் இராமாயணத்துக்கு உள்ள சிறப்பும் செல்வாக்கும் வேறு எந்தக் காவியத்துக்கும் கிடையாது எனத் துணிந்து சொல்லலாம். இந்திய கலாச்சாரப் பண்பாட்டின் சிகரம் இராமாயணம். அதனால்தான் இந்தியரின் இதயத்தில் அழியாத இடம் பெற்று விட்டது இவ்வறக் காப்பியம்.

இராமாயணம் என்னும் இணையற்ற அன்பு-அழகு-அறக் கோயிலை நிர்மாணித்த சிற்பிகள் கம்பர், துளஸி, வால்மீகி என்னும் மூவரும் பாரத நாட்டை மூன்று புறமும் சூழ்ந்து நிற்கும் முப்பெருங் கடல்களுக்கு ஒப்பாவர். வால்மீகி எனும் இந்து மகா சமுத்திரத்தைக் கம்பர் எனும் கடலும் துளஸி எனும் கடலும் பின்னிப் பிணைந்து இரண்டறக் கலந்து நிற்கின்றன. இம் மூன்றும் ஒன்று சேர்ந்து இந்திய இலக்கியம் என்னும் நாட்டைச் சூழ்ந்து வனப்புறச் செய்கின்றன. இராமாயண காவிய எழில் இமயகிரி கிரீடம் போல் கம்பீரமாக வானளாவ நிற்கிறது.

இத்தகைய சீரும் சிறப்பும் பேரும் பெருமையும் வாய்ந்த கம்பர், துளஸி, வால்மீகி என்ற கவிஞர்களின் கவித் திறனையும், கலைத் திறனையும் ஒன்றுடன் ஒன்று ஒப்பு நோக்கி ஆராய இச்சௌந்தரியக் கோயிலின் உள்ளே புகுவோம்.

முதன் முதலில் ஆதார நூலாகிய வால்மீகி இராமாயணத்தை அப்படியே விட்டு விட்டு, வழி நூல்களாகிய கம்ப இராமாயணத்தையும், துளஸி இராமாயணத்தையும் ஒப்பு நோக்கி இரண்டுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளைப் பொதுவாக அறிவோம்; பின்னர் விவரமாக ஆராய்வோம்.

## கம்ப ராமாயணமும் துளஸி ராமாயணமும்.

கம்பருக்குத் தாய்மொழி தமிழ்; துளஸிதாசருக்கு ஹிந்தி. ஆனால் இருவரும் தத்தமது தாய்மொழியிலேயே இராமாயணத்தை இயற்றினார்கள். கம்பர் காலத்தால் முந்தியவர்; துளஸி பிந்தியவர். கம்பர் முஸ்லிம் ஆதிக்கம் வளராத தென்னிந்தியாவில் வாழ்ந்தவர்; துளஸியோ முஸ்லிம் தொடர்பு வேரூன்றிய வட இந்தியாவில் வாழ்ந்தவர். கம்பர் கவிஞர்; துளஸி முனிவர். கம்பர் சைவ வைஷ்ணவ பேதம் அதிகம் வளராத காலத்தில் வாழ்ந்தவர்; துளஸியோ அப் பேதம் மனிதருள்ளங்களைச் சீர் குலைத்த காலத்தில் வாழ்ந்தவர். ஆகவே காலத்தின் குணாதிசயங்களை இருவரது காவியங்களிலும் காணலாம்.

கம்பர் வடமொழியில் பரிச்சயம் இல்லாதவர், ஆகவே, அவர் வால்மீகி இராமாயணத்தைப் பிறரைக் கொண்டு வாசிக்கக் கேட்டு அதை அப்படியே படம் பிடித்ததுபோலத் தன் மனத்தில் பதித்துக் கொண்டு, தனது கவிதா-மேதையினால் அற்புதமாக சிற்சில இடங்களில் ஆதார நூலையும் அழகில் மிஞ்சும்படியாக, அமர காப்பியம் செய்து முடித்தார். ஆதலால், கம்பர் கதைப் போக்கில் வால்மீகியின் கதைக்கு அதிகம் முரண்பாடோ மாறுதலோ இல்லை.

சிற்சில சந்தர்ப்பங்களில் மட்டும் கதா-பாத்திரங்களின் குண மேன்மையை அப்பழுக்கில்லாத தெய்வீகம் வாய்ந்ததாகக் காட்டுவதற்காக சின்னஞ் சிறு மாறுதல்கள் செய்திருக்கிறார். உதாரணமாக, இராவணன் ஸீதையைக் கையால் தொடவில்லை; இளவல் அமைத்த பர்ணசாலையோடு பூமி மண்ணையும் சேர்த்துக், "கீண்டு கொண்டெழுந்தனன் கீழோன்" என்கிறார் கம்பர். ஆனால் வால்மீகியோ, "கழுத்தில் ஒரு கையும் கால்களில் ஒரு கையும் கொடுத்து அனாயாஸமாகத் தூக்கினான் இராவணன் ஸீதா தேவியை; அப்போது அவனிடமிருந்து விடுபடத் துடித்த தேவி கார்மேகத்தின் நடுவில் மின்னல் துள்ளுவதுபோல் துள்ளினாள்" என்கிறார்.

இந்த வித்தியாசம் ஏன் என்றால் வால்மீகியின் கதா நாயகன் ஆன இராமன் "மகாபுருஷன்; வீரன்; தீரன்; குணசாலி; ஆனால் மனிதன்; புனிதம் நிறைந்த மனிதன்." அதேபோலத்தான் அவருடைய ஒவ்வொரு விசேஷ கதா பாத்திரங்களும் புனிதத் தன்மை நிறைந்த மனிதர்கள் அல்லது மனிதத் தன்மை நிறைந்த புனிதர்கள். ஆதலால் மனித வாழ்க்கையின் இயற்கை வரம்புக்கு உட்பட்டவர்கள் ஆனால் பின்னால் வந்த கம்பருக்கோ இராமன் தெய்வம்; பரம்பொருள்; அவன் "அனந்தல் நீங்கிய அண்ணல்; இவள் கமலச் செல்வியே" ஆகையால் அந்த தெய்வீகத் தன்மைக்குக் குறைவராதபடி, சிற்சில சமயங்களில், மனித வாழ்க்கையின் இயற்கை நியதியை மீறியும் சம்பவங்கள் நடக்கலாம், நடக்கும். வால்மீகியின் இராமன் மகா புருடன்; உத்தம புருடன். கம்பரின் இராமன் அவதார புருஷன்; தெய்வீக புருஷன்; வால்மீகியின் இராமன், "மர்யாதா புருஷோத்தமன் ராஜாராமன்; ஸீதா ராமன்;" கம்பரின் இராமனோ "மாநிலம் புரக்க வந்த மகா

விஷ்ணு''. ஆகவே, இவர்கள் கதைப் போக்கில் சிறிது மாறுபாடு காணப்படுகிறது. ஆனால் இது மூலத்துக்கு முரண்பட்டதல்ல; மனப்பான்மையில், பொருளைச் சீர்தூக்கி நோக்கும் தன்மையில் வேறுபாடு அவ்வளவுதான். ஆகவே கம்பர் தன் இராமாயணத்தை முற்றிலும் வால்மீகியை ஆதாரமாகக் கொண்டே தழுவி எழுதினார். தன் நூலின் காண்டங்களையும், வால்மீகி போலவே ஏழாக வகுத்து, பெயரும் அப்படியே வைத்து, 12,000 செய்யுட்களாகச் செய்து முடித்தார்

''வாங்கரு பாதநான்கும் வகுத்த வால்மீகி என்பான்''
எனவும்

''பாற்கடல் புக்க பூசை நக்குபு புக்கென''

''மூங்கையான் பேசலுற்றான்'' எனவும்,

ஆரம்பத்தில் கம்பர் தொடங்குவதிலிருந்து அவர், வால்மீகியிடமும் அவர் நூலிடமும் கொண்டுள்ள மதிப்பும் மரியாதையும் வெளியாகின்றன.

## துளஸி

ஆனால் துளஸிதாஸரோ வடமொழியில் மகா பண்டிதர். இராமாயணக் கடலின் கரை கண்ட மேதாவி. வடமொழி இலக்கியத்தில் வல்லவர். ஆதலால் அவர் கவிகளுக்கே உரித்தான சுதந்திரத்துடன்,

''நாநா புராண நிகமாகம ஸம்மதம் யத்

ராமாயணே நிகதிதம் க்வசிதன்யதோபி''
என்று தொடங்குகிறார்.

அதாவது பற்பல புராணங்களிலும், வேதங்களிலும், தர்ம சாஸ்திரங்களிலும், சொல்லப்பட்டதற்கு இணங்கவும் இராமாயணம் இன்னம் மற்ற நூல்களிலிருந்தும் எடுத்து 'இயற்றுகிறேன்'' என்று கூறுகின்ருர். ஆதலால், இவர் இராமாயணக் கதைப் போக்குக்கு ஆதாரம் இராமாயணம் மட்டும் அல்ல; வேறு பல நூல்கள். இவர் கையாளும் உப கதைகளும் பல்வேறு நூல்களிலிநந்து தொகுக்கப் பட்டவை. உதாரணமாக ஜய-விஜயர் சாபம் இராமாவ தாரத்துக்கும் இராம-ராவண யுத்தத்துக்கும் காரணம். இந்தக்கதை பாகவதத்தில் இருக்கிறது விஸ்வமோகினியை விஷ்ணு மணந்ததால் கோபம் கொண்டு நாரதர் விஷ்ணு வை சபித்தல்; இது மற்ரெரு நூலில் இருந்து. பார்வதி அதாவது ஸதீதேவி ஸீதா வேஷம் பூண்டு இராமனைப் பரீக்ஷிக்க வந்ததால் ஸதீ-வியோகம். இக்கதையும் பாக வதத்தில் இருந்து எடுத்தது. இதை இராமனுடன் பிணைத்தது துளஸியின் கற்பனு சக்தி. பிரதாபபானுவின் கதை, வேதவதி கதை, பார்வதி-பரமேஸ்வர விவாகம், காக-புசுண்டி கதை இவ்விதமாகப் பல நூல்களிலிருந்தும் எடுத்துக் கோத்திருக்கிருர், துளஸி.

துளஸியின் இராம பக்தி ஜகப் பிரசித்தி பெற்றது. இவருக்கு இராமன் சுவாமி, யஜமானன்; இவர் சேவகன், வேலையாள், இராமன் ஆண்டவன்; இவர் அடிமை, இராமன் பரமாத்மா; இவர் ஜீவாத்மா, இராமன் ராஜா; இவர் பிரஜை. இராமன் தந்தை; இவர் புதல்வன். துளஸி யின் தெய்வீக இராமன், மனுஷ வாழ்க்கையை நடத்திக் காட்ட வந்தவன். தனது தெய்வத் தன்மையால் மனிதத் தன்மையைப் புனிதப்படுத்தியவன். மற்றப் பாத்திரங் களான ஸீதா, பரதன், இலட்சுமணன் முதலியோரும்

அப்படியே. ஆகவே இராமனது ஒவ்வொரு சொல்லிலும் செயலிலும் ஒரு தனி அர்த்தம் தொனிக்கும். அதாவது இராமர் சர்வமும் உணர்ந்து கொண்டே நடக்கிறார். ஸீதா-ஹரணத்துக்கு முன் நிஜஸீதா நெருப்பில் போய்விட, மாயா ஸீதா மானிட வடிவில் நிற்கிறாள். அக்கினிப் பிரவேசத்தின் போதுதான் நிஜ-ஸீதா வெளிவருகிறாள். இது அத்யாத்ம இராமாயணத்தின் அத்யற்புத கற்பனை, இதை துளஸி கையாண்டுள்ளார். இவ்விதமாகப் பல மலர்களைக் கோத்து மாலை கட்டியிருக்கிறார். இவர் சொந்தக் கற்பனைகளும் அருமை, உதாரணமாக:

ஜனகர் சபையில் சிவதனுஸ் முறிந்து விழுந்த சத்தம் கேட்டவுடனே கோடாலியும் கையுமாகப் பரசுராமர் ஆவேசத்துடன் வருகிறார். இங்கு சுடச் சுடத் திருப்பிக் கொடுக்கும் இளைஞன் இலட்சுமணனும், அடக்கமே உருவாய் நிற்கும் இராமனும், அகங்காரமே உருவாய் கர்ஜிக்கும் பரசுராமரும் அவர்களது சுவை மிகுந்த சம்பாஷணையும் துளஸியின் அபூர்வ சிருஷ்டி. சாதாரணமாக ஸீதா கல்யாணமாகி அனைவரும் அயோத்தி திரும்பி வரும் வழியில் பரசுராமர் எதிரே வருகிறார். இக்கட்டத்தில் கதையின் வேகத்தை அதிகமாக்கத் துளஸி அவரை வில் முறிந்த உடனேயே வரச் செய்கிறார். இதேபோல் அசோகவனத்தில் ஸீதை கூந்தலை முறுக்கி மரத்தில் மாட்டித் தற்கொலை செய்துகொள்ள முயற்சிக்கவில்லை. "அசோக மரமே, அக்கினியைச் சொரியேன்; நான் வெந்து சாம்பலாகிறேன்" என்று புலம்புகிறாள். இதுதான் சமயம் என்று மரத்தில் ஒளிந்திருந்த அநுமான் இராமன் கணையாழியைக்

கீழே நழுவவிடுகிறுன். அதை நெருப்புத் துண்டம் என எண்ணி ஸீதா கையில் எடுக்கிறுள். அதில் இராமன் பெயர் பொறித்திருப்பது கண்டு வியந்து கீழும் மேலும் பார்க்கிறுள். அநுமான் கீழே குதிக்கிறுன். இதுவும் துளஸியின் அபாரக் கற்பனையே.

துளஸியும் தன் நூலை ஏழு காண்டங்களாகத் தான் வகுத்திருக்கிறுர். ஆனுல் யுத்த காண்டத்தின் பெயரை மட்டும் இலங்கா காண்டம் என்று மாற்றி இருக்கிறுர். மற்றவை வால்மீகி இராமாயணத்தைப் போலவே உள்ளன.

உத்தரகாண்ட முடிவு, காக-புசுண்டி-ஸம்வாதம் எனும் அருமையான பக்தி-ஞான காண்டமாக அமைந்திருக்கிறது. இராமர் தன் தம்பிமார்களுக்கு ஞானம் போதிக்கிறுர். இந்த இடங்களிலெல்லாம் துளஸி வால்மீகரை நிச்சயம் வென்று வெற்றி கண்டுவிட்டார். வால்மீகியின் உத்தரகாண்டம் மொத்தத்தில் ''சப்'' பென்றிருக்கிறது.கம்பரோ உத்தர காண்டம் எழுதாமல் விட்டுவிட்டார். ஆனுல் துளஸியின் உத்தர காண்டம் வெகு அருமையாக அமைந்துள்ளது.

## கம்பரின் கவிதையும், துளஸியின் கவிதையும்

கவி மன்னர் கம்பரின் கவிதை சொற்சுவை பொருட்சுவை செறிந்ததோர் சிறந்த காவியம் மட்டும் அல்ல. அது நவ-ரஸ-பாவங்களும் பொருந்திய ஒரு இனிய, இணையற்ற நாடகமும் ஆகும். அதாவது நாடகப் பண்பு நிறைந்த இலக்கியம்.

வாழ்க்கையின் நுட்பங்களை, சிக்கலானப் பிரச்சினை களை, எக்கச்சக்கமான நிலைமைகளை, விளக்குகையில் கம்பர் ஓர் கவியாக மட்டுமிராமல் கைதேர்ந்த நாடகா சிரியர் ஆகவும் திகழ்கிறார். உதாரணமாக,

அசோகவனத்தில் ஸீதா தேவி தன் நீண்ட, கரிய கூந்தலை மரக்கிளையில் முறுக்கிக் கழுத்தில் இறுக்கிக் கொண்டு தற்கொலை செய்து கொள்ளப் போகிறாள். இதை சிம்சுபா மரத்தில் ஒளிந்திருக்கும் அனுமார் பார்க் கிறார். அப்போது என்ன நடக்கிறது?

"ராஜா தசரதோ நாம

ரத குஞ்சர வாஜிமான்"

என்று ஆதியிலிருந்து சுருக்கமாக இராமர் கதையை ஹநுமார் இனிய குரலில் கூற ஆரம்பித்ததாக வால்மீ கர் வர்ணிக்கிறார்.

ஆனால் கம்பரோ இதைச் சற்று மாற்றி

"கண்டனன் ஹநுமனும் கருத்தும் எண்ணுவான்;
கொண்டனன் துணுக்கம்; மெய் தீண்டக்கூசுவான்
அண்டர் நாயகன் அருள் தூதன் யான் எனத்
தொண்டை வாய் மயிலினைத் தொழுது தோன் றினன்."

அநுமாருக்குத் தர்ம சங்கடமான நிலைமை; ஸீதை இராமபத்தினி இறக்கும் தறுவாயிலிருக்கிறாள். அவளை ஹநுமார் காப்பாற்ற வேண்டும். விநாடி நேரங்கூடத் தாமதிக்கலாகாது. இல்லையேல் சர்வநாசம் சம்பவிக்கும். ஆனால் கற்பரசியாகிய அவளைக் கையினால் தொட முடியாது. ஆகவே ஆஞ்சநேயர் திடுக்கிடுகிறார். வழி என்ன? தொடவும் கூடாது; உயிர் போவதன் முன் தடுக்கவும் வேண்டும். எப்படி? இங்குதான் கம்பரின் கற்பனை அற்புத சாதனை செய்து காட்டுகிறது. "தேவர் நாயகன் இராமன் அருளிய தூதன் நான்" எனக் கூறிய வண்ணம், கூப்பிய கைகளுடன் ஸீதையின் முன், "ஆதலால் இறத்தலே அறத்தின் ஆறு" எனத் துணிந்து "போதுலாம் மாதவிப் பொதும்பரில்" பின்னலை முறுக்கி மாட்டித் தற்கொலையில் ஈடுபட்டு நிற்கும் ஸீதையின் முன் ஹநுமார் திடீரென்று தோன்றுகிறார். கோவைப்பழம் போல் சிவந்த உதடுகளும், மயில் போன்ற சாயலும் கொண்ட ஸீதை இராம-நாமம் காதில் விழ ஹநுமான் அஞ்சலித்து எதிரே தோன்றச் செயலற்று நின்று விடுகிறாள். தற்கொலையும் தடுக்கப்பட்டு விடுகிறது; தர்மமும் காப்பாற்றப்படுகிறது. மனோ-தத்துவத்தை இதைவிட அழகாகக் கையாள முடியுமா? நாடக-பாவ-ரசம் அமுதம் எனச் சுவை ததும்பிப் படிப்போரைப் பரவசப் படுத்து கிறது இவ்வித இடங்களில். இம்மாதிரியான நாடக-பாவம் கம்பராமாயணத்தில் ஆங்காங்கு நிறைந்து கிடக்கிறது. ஆகவே கம்பர் நாடகாசிரியக் கவிஞர் என்றால் மிகையாகாது.

சம்பாஷணை நயமும், பாவ ரஸமும், கதைப் போக்கின் தெளிவும், கற்பனையின் உயர்வும், சம்பவங்களின் விறுவிறுப்பும், நடையின் ஜிலுஜிலுப்பும், கதா-பாத்திரங்களின் சிறப்பும் எல்லாவற்றுக்கும் மேலாக கவியின் உல

கியல் அறிவும் படித்து அனுபவித்து ரசிப்பவர்களுக்கே தெரியவரும். கம்பராமாயணம் ஓர் கவிதைக் கடல். அதில் பலவித நவமணிகளும் ஏராளமாகக் குவிந்து கிடக்கின்றன. அதன் ஆழத்தில் புகுந்து "முத்துக் குளிப்பவர்"களுக்கே அவை கிட்டக் கூடியவை. கம்பரின் கவிதை நயத்தை மொழிபெயர்க்க முடியாது; தழுவவும் முடியாது; திருடவும் முடியாது. அதன் வனப்பு அதற்கே உரித்தானதோர் தனிச் சிறப்பு.

கம்ப இராமாயணம் விருத்தங்களில் அமைக்கப்பட்டுள்ளது. பற்பல வித சந்தங்களும் அணியலங்காரங்களும் அதை அழகுக்கழகு செய்கின்றன.

துளஸியின் இராமாயணமோ கம்பராமாயணத்தைப் போன்றதோர் நாடக-பாவக் களஞ்சியம் அல்ல. ஆனால் பக்திக் களஞ்சியம்; தத்துவக் களஞ்சியம். கதையைக் கோர்வையாகச் சுவை குன்றாமல் சொல்லுவதில் வல்லவர் துளஸி. இவரை ஓர் சிறந்த சிறுகதை ஆசிரியர் எனலாம். இரத்தினச் சுருக்கமாகச் சொல்லுவதில் தீரர். அவரது கவிதை நயம் ஆறு ருதுக்களின் மலர்களும் ஒருங்கே பூத்து வாடாது விளங்கும் தெய்வீகப் பூங்கா. அறுசுவை உண்டியும் உண்ணத் திகட்டாது உவந்தளிக்கும் திவ்ய விருந்து; நவ-ரசக்கனிகளும் பழுத்த பக்திப் பெருந் தோட்டம். உருவில் கம்ப இராமாயணத்தை விடச் சிறியதாயினும் கீர்த்தியில் பெரிது. சிவ-பக்தியும் ராம பக்தியும், நவதா-பக்தியும் (ஒன்பது வித) நிறைந்து கலந்த மங்களத் திரிவேணி. சகுணப் பிரும்மமும் நிர்குணப் பிரும்மமும் சேர்ந்து காட்சியளிக்கும் சங்கர-நாராயண மூர்த்தி ஞானமும பக்தியும் கர்மமும் யோகமும் இரண்டறக் கலந்து விளங்கும் அர்த்தநாரீசுவர ரூபம். கலையும் பண்பும் கலந்து ஜொலிக்கும் கங்கா-சாகர-ஸங்கமம். ஒளியும் ஒலியும் ஒன்று சேர்ந்த உத்தம ரூபம்.

## கம்பரும் துளஸியும்

நடை, பொருள், பாவம். அலங்காரம், வேதாந்தம் ஞானம், பக்தி, உலகியல் அறிவு இவை அனைத்தும் ஈடிணை யற்றுச் சிறந்து விளங்கும் இனிய இந்திய ஹிந்தி கிரந்தம் ஆகிய ''ஸ்ரீ ராம சரித மானஸ்'' ஒவ்வொரு காண்டத்தின் ஆரம்பத்திலும் ஒன்றிரண்டு அல்லது ஒன்றிரண்டிற்கு மேற்பட்ட சம்ஸ்கிருத ஸ்லோகங்களுடன் தொடங்கு கிறது. இச் சுலோகங்கள் கடவுள் வணக்கமாக அமைந் தவை.

கம்ப இராமாயணமும் ஒவ்வொரு காண்டத்தின் ஆரம்பத்திலும் கடவுள் வணக்கப் பாக்களுடன் தான் தொடங்குகிறது.

ஆனால் வால்மீகி இராமாயணமோ ஒவ்வொரு காண் டாரம்பத்திலும், முதல் காண்டத்தின் இறுதியில் கதை விட்ட இடத்திலிருந்து நேரடியாகத் தொடங்கிவிடுகிறது. கிரந்தாரம்பத்திலும் வால்மீகி இராமாயணம் நேரே கதை யைத் தொடங்கி விடுகிறது. இப்படித் தொடங்குவது சம்ஸ்க்ருத இலக்கிய உலகின் ஒரு தனிச் சிறப்பு. இந்த முறைக்கு ''வஸ்து நிர்த்தேசம்'' என்று பெயர். ''ஆசீர் வஸ்து நமஸ்க்ரியா வாபி தன்முகம்'' என்பது பிரசித்திப் பெற்ற சம்ஸ்க்ருத வழக்கு. அதாவது ''கடவுள் வாழ்த்து, கடவுள் வணக்கம் அல்லது நேரடியாகக் கதைத் தொடக் கம் என்னும் இம் மூன்றினுள் ஏதாவது ஒன்றுடன் காவி யம் ஆரம்பிக்கப்படவேண்டும்'' என்பது இலக்கிய மரபு.

கவிகுல சூடாமணியாகிய காளிதாஸரும் தமது ஒப்புயர்வற்ற மகாகாவியமாகிய ''குமார சம்பவ''த் தையும் கண்ட காவியமாகிய ''மேக தூத''த்தையும் வால் மீகரைப் போல ''வஸ்து நிர்த்தேச''மாகத் தான் ஆரம்பிக் கிறார்.

கம்பரும் துளஸியும் கடவுள் வணக்கத்துடன் ஆரம்பிக்கிறார்கள்.

வால்மீகி இராமாயணத்தில் பலவித சந்தங்கள் கையாளப்பட்டிருப்பினும்முக்கியமானது ''அனுஷ்டுப் சந்தஸ்''

அதேபோல், கம்பராமாயணத்தில் பற்பல சந்தங்கள் வெகு திறமையாக நயம்படப் பிரயோகிக்கப்பட்டிருப்பினும் முக்கியமானது விருத்தம்.

அதேபோல துளஸி இராமாயணத்தில் மிக முக்கியமான ஆதார ரூபமான சந்தங்கள் இரண்டு, இவை ''தோஹா'', ''சௌபாயி'' எனப்படும். ஹிந்தி இலக்கிய உலகில் அதிகப் பிராதான்யம் பெற்றுள்ள 'தோஹா'' என்னும் சந்தமானது தமிழ்க் குறள் போல .இரண்டடிகளால் அமைந்தது. 'சௌபாயீ'' என்பது நான்கு அடிகளால் அமைந்தது.

''தோஹாவின்'' அடிகளின் கடைசியில் எதுகை அமைந்திருக்கும். அவ்வாறே ''சௌபாயீ''யின் நான்கு அடிகளின் கடைசியில் எதுகை அமைந்திருக்கும். இதை ஹிந்தியில் ''துக்,'' என்பார்கள். ஆதலால் இவ்விதம் அடியின் கடைசியில் எதுகை அமைந்திருக்கும் பாடல்களை ''துகாந்த கவிதா'' என்றும் அவ்விதம் எதுகை அமையாதவைகளை ''அதுகாந்த கவிதா'' என்றும் கூறுவது வழக்கம். துகாந்த கவிதா இயற்றுவதில் துளஸி மகா சூரர்.

''சௌபாயீ''யின் நான்கடிகளுள் முன்னிரண்டு அடிகளிலும்; ஒரு எதுகை; பின்னிரண்டு அடிகளிலும் ஒரு எதுகை என்ற முறையிலும் ''துக்'' அமைந்திருக்கலாம். அல்லது நான்கடிகளிலும் சேர்த்து ஒரே ''துக்'' ஆகவும் அமைந்திருக்கலாம். துளஸி தம் இராமாயணத்தில் இவ்

விருவித முறைகளையும் வெகு இலாகவமாக லலிதமாகக் கையாண்டிருக்கிறார்.

உதாரணம் : **சௌபாயீ**

கங்கன் கிங்கினி நூபுர் துனி ஸுனி
கஹத் லக2ன் ஸன் ராம் ஹ்ருத்ய கு3னி
மானஹு மதன் துந்துபீ தீ3னி
மனஸா விஸ்வ விஜய் கர்லீனி

இது ஸீதையைப் பூந்தோட்டத்தில் கௌரீ கோயிலருகில் சந்தித்த ராமர் லட்சுமணனிடம் கூறுவது. இதன் பொருள் கங்கணம், கிண்கிணீ பாதச் சிலம்பு இவைகளின் "கலீர் கலீர்" என்ற தொனியைக் கேட்ட இராமர் லட்சுமணனைப் பார்த்து, "லட்சுமணா, உலகை ஜயித்த மன்மதன் வெற்றி முரசறைவது போன்ற இவ்வொலியைக் கேள்" என்றார் என்பதாம்.

மேற்படி "சௌபாயீயில்" முன்னிரண்டு அடிகளில் "ஸுனி" "குனி" என்ற ஓர் எதுகையும் பின்னிரண்டு அடிகளில் "தீனி" "லீனி" என்ற ஓர் எதுகையும் அமைந்துள்ளன.

அப்படி இல்லாமல் நான்கடிகளிலும் ஒரே எதுகையாக வரும் ஒரு "சௌபாயீ"யைப் பார்ப்போம்.

## சௌபாயீ

ஸாதர் கஹஹிம்ஸுனஹிப் பு3த்4 தாஹீ
மதுகர் ஸரிஸ ஸந்த் குணக் ராஹீ
ஜதபி கவித்த ரஸ் ஏகஹு நாஹிம்
ராம் ப்ரதாப் ப்ரகட் யஹ் மாஹீம்,

இதன் பொருள் ''அன்புடன் நான் சொல்வதை அறிஞர்கள் ஆதரவுடன் கேட்கவேண்டும். தேன் வண்டைப் போல் பெரியோர்கள் நல்லதையே ஏற்றுக் கொள்வார்கள். என்னிடம் எவ்விதக் கவித்திறனும் கிடையாது. இருப்பினும் இராமரது பிரபாவத்தினுல் வெளியிடப்படுகிறது அவர் கதை என்பதாம்.

இந்தச் ''சௌபாயி''யில் ''தாஹீ' க்ராஹீ, நாஹீம், மாஹீம், என்ற நான்கு சொற்களும் சேர்ந்து ஒரே எதுகையாக அமைந்துள்ளது. இவ்விதம் துளஸீ இராமாயணத்தில் மொத்தம் 500 ''சௌபாயீ''கள் இருக்கின்றன. ''ஸத் பஞ்ச் சௌபாயீ மனேஹர்'' என்று நூலின் முடிவில் துளஸியே கூறுகிருர்.

பொதுவாக, நான்கு ''சௌபாயீ''களுக்கு மத்தியில் ஒரு ''தோஹா'' வரும்படி அமைத்திருக்கிருர் துளஸி தன் நூலை. சிற்சில இடங்களில் ஆறு, ஏழு அல்லது எட்டு சௌபாயீகளுக்குப் பிறகு ஒரு தோஹா வீதமும் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த அற்புத அமைப்பினுல் தங்கத்துடன் இழைத்த ரத்னம் போலச் சுடர் விடுகிறது ஒவ்வொரு ''தோஹா''வும்.

## தோஹா

உதித் உதய் கிரி மஞ்ச் பர், ரகுவர பால பதங்க்
விகஸே ஸ்ந்த் ஸரோஜ் ஸப், ஹர்ஷே லோசன் ப்ருங்க்

இதன் பொருள் :-

ரங்க மஞ்சம் என்னும் உதயகிரியில் ரகுவரன் என்னும் பால சூரியன் உதித்தான்; ஸற்ஜனர்கள் என்னும் தாமரைகள் மலர்ந்தன; கண்கள் என்னும் கருவண்டுகள் களித்தன.

இராமன் சிவ தனுஸை எடுக்க யாகமேடை மேல் ஏறு கிற சந்தர்ப்பத்தில் இப் ப்ரக்யாதி பெற்ற "தோஹா" வருகிறது. இதில் "பதங்க்" என்னும் பதமும் 'ப்ருங்க்' என்னும் பதமும் சேர்ந்து ஒரு "துக்" ஆகிறது.

இவ்விதமாக, "தோஹா, சௌபாயீ" என்னும் அழகிய சந்தங்களால் எழுதப்பட்டுள்ளது துளஸி இராமா யணம் என்னும் இலக்கிய மாளிகை. இதில் மற்றும் பல "ஸோரடா", "ஸவையா", "ஹரிகீதிகா", "பிரமாணிகா" "மோதியதாம்" முதலிய அரும் பெரும் சந்தங்களும் சொற் சுவை, பொருட்சுவை பொங்கித் ததும்பும் வண் ணம் கையாளப்பட்டுள்ளன. இச் சந்தங்களின் ஓசை இன்பமோ அளவிடலரிது. துளஸி இராமாயணத்தின் மூர்த்தி சிறிது; கீர்த்தி பெரிது. "கடுகைத் துளைத் தேழ் கடலைப் புகுத்தி" விட்டார் துளஸி தன் இராமாயணத்தில். அட்சர லட்சம் பெறும்படியாக ஒவ்வொரு பாடலும் அமைந்துள்ளது. கருத்தழகும், சொல்லழகும், கவிதைய ழகும் சேர்ந்து படிப்போர் மனதைப் பரவசமாக்குகிறது.

"அநிர் வசனீயம் பிரேம ஸ்வரூபம்"
"பக்திரேவ கரீயஸீ, பக்திரேவ கரீயஸீ"

என்று நாரதர் பக்தி ஸூத்ரத்தில் கூறுவதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது துளஸி இராமாயணம். ஸங்கீத ஸாஹித்ய ஸார்வ பௌமர் மகான் தியாகய் யாவின் கீர்த்தனைகள் போல் துளஸியின் பாடல்களில் தொட்ட தொட்ட இடமெல்லாம் ராம-பக்திப்பெருவள்ளம் கரை புரண்டு ஓடுகிறது. அதனாலேயே காவியத்தின் இயற்கை இனிமை பன்மடங்காகிறது.

கலைக்களஞ்சியமாய்த் திகழும் இராம சரித மானஸ்

இரத்தினச் சுருக்கமாக அமைந்துள்ளது. சிறிய வடிவில் பெரிய செல்வம்.

"வால்மீகி துளஸி ப4யோ"

என்று நாபாதாஸரால் புகழப்பட்ட துளஸி கம்பரைப் போல் ராஜ ஸபையில் வீற்றிருக்கவில்லை. ஆயினும் அரசர்களால் வணங்கப்பட்டார். அதற்குக் காரணம் அவரது அமர க்ரந்தம் இராமாயணமே.

இந்நூலின் பெருமையை உள்ளபடி உணர்ந்ததாலேயே சங்கராச்சாரியாருக்குச் சமமாக, ஸம்ஸ்க்ருதத்தில் கவிபாடும் வல்லமையுள்ள மகான் மதுஸூதன ஸரஸ்வதி எனும் பெரியார்.

ஆனந்த கானனே ஹ்யஸ்மின்
ஜங்கமஸ் துளஸீதரு:
கவிதா மஞ்சரீபாதி
ராமப்ரமர பூஷிதா

அதாவது :- "இந்த ஆனந்தம் என்னும் காட்டில் துளஸி என்னும் உயிருள்ள மரம், கவிதைக் கொடி பூத்துக் குலுங்க அதில் இராமரெனும் கருவண்டு அலங்கரித்து விளங்குகிறது" என்று மதிப்புரை அளித்தார்.

## சிறுகதை ஆசிரியர் துளஸி

வால்மீகர் சரித்திராசிரியர்: கம்பர் நாடக ஆசிரியர்; துளஸியோ சிறுகதை ஆசிரியர். ஆம்: அதிலும் மனித உணர்ச்சிகளை நான்கே பக்கத்தில் நாஸூக்காக விளக்கிக் கொட்டும் சிறுகதை மன்னன், பிரஞ்சுப் பேராசிரியர் கீடி மாபஸாந்த் போன்றவர் துளஸி. இரண்டொரு வார்த்தைகளில் இப் பிரபஞ்சத்தையே அடக்கும் வல்லமை

பெற்றவர். கதையைக் கோர்வையாக அமைத்துச் சுவை படச் சொல்லுவதில் நிபுணர், பிறவிக்கதாசிரியர்.

:"டெக்னிக்" என்று ஆங்கிலத்தில் சொல்லுகிறோமே அந்த இலக்கிய-இலக்கண சாஸ்திரீயக் கட்டுக் கோப்பு துளஸியிடம் அபாரம். கம்பரைப் போல் நாடக பாவ நடையில் கைதேர்ந்தவர் அல்ல; ஆயினும்தனது அப்பழுக் கற்ற வேலைப்பாட்டின் திறத்தினால் அற்புத சிற்பியாகத் துளஸி விளங்குகிறார்.

நீண்ட நெடுஞ் சந்தங்களும்,குறுகிய சிறுசந்தங்களும், துளஸியிடம் கை கட்டி வாய் புதைத்து நின்று அவரிட்ட பணியை ஏற்று இனிதே நிறைவேற்றுகின்றன. உயர்ந்த சைத்ரீகன் ஒருவன் தன் தூரிகையினால் பலகையில் இங்கு மங்கும் ஒரு கோடு இழுத்து நம் கண் முன் இயற்கைக் காட்சிகளையும், செயற்கைக் காட்சிகளையும் தத்ரூபமாகக் காட்டுவது போலவும், சிறந்த சங்கீத ஞானமுள்ள பாடகன் ஒருவன் ஒரே மூர்ச்சனையில் ராகச் சாயையைப் பொழிந்து நம் கண் முன்னே அந்த ராகத்தை நடனமிடச் செய்வது போலவும். கைதேர்ந்த சிற்பி ஒருவன் உளியின் செதுக் கலினால் கருங்கல்லில் உயிரையே பெய்து நம் முன் நிறுத் துவது போலவும் துளஸி தன் ஜீவனுள்ள சொற்களின் மூலம் அபாரப் புரட்சி செய்து அமர உலகத்தையே பூமிக்கு இழுத்து வருகிறார்.

குரு வணக்கத்தில் ஆரம்பித்து அவையடக்கம், முன் னுரை, இராமாவதாரக் காரணக் கதைகள், காரண விளக் கம் இவைகளுக்குப் பிறகு தொடங்குகிறது ஸ்ரீராம ஜன னம். இந்த இராமாயணத்தைப் பார்வதி தேவிக்குப் பரமேசுவரன் சொன்னதாகவும், பரமேசுவரன் சொற்படி புசுண்டி எனும் காகமுனி கருடனுக்குச் சொன்னதாக

வும், அதை யாக்ஞவல்கியர் பரத்வாஜ முனிவருக்குச் சொல்வதாகவும் புராண ரீதியில் அமைந்துள்ளது கதையின் வரலாறு.

ஆங்காங்கே, வரும் ஸம்வாதங்களும் சம்பாஷணைகளும் பாவம் நிறைந்து. ரஸம் மிகுந்து படிப்போர்க்கு ஆனந்தத்தை ஊட்டுகின்றன. ஸம்வாதம் எழுதுவதில் துளஸிக்கு நிகர் துளஸிதான். இவ்விடங்களில் அவரது சொல்வன்மை,

"சொல்லுக சொல்லைப்பிறிதோர் சொல் அச் சொல்லை
வெல்லும் சொல் இன்மை அறிந்து"

என்னும் குறளுக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது. சிறுகதை ஆசிரியரின் எழுத்து வன்மை சம்பாஷணை எழுதுவதில் தானே இருக்கிறது? இதில் துளஸி அனைவரையும் மிஞ்சிவிட்டார்.

குண சித்திரம் புனைவதிலும்; பாத்திரங்களின் குணாதிசயங்களை விளக்குவதிலும் துளஸியின் எழுத்து வன்மையும், சொல் வன்மையும், கற்பனைத் திறனும் ஒன்றுடன் ஒன்று போட்டியிட்டு ஒன்றை யொன்று மிஞ்சுகின்றன. சம்பவங்களின் தன்மையையும் நிகழ்ச்சிகளின் நுட்பங்களையும் தெள்ளத் தெளிய விளக்குவதில் துளஸிக்கு நிகர் துளஸிதான்; சம்பவங்களின் விறுவிறுப்பும், சம்பாஷணையின் துடிதுடிப்பும், படிப்போர் கண்முன் பலகாலத்துக்கு முன் நடந்தவைகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. துளஸியின் ஸம்வாதங்களைப் படித்தால் "யார் கொலிச் சொல்லின் செல்வன்" என்றே வியக்கத் தோன்றுகிறது. உதாரணமாக ஓரிரண்டிடங்களைப் பார்ப்போம் :—

சிவதநுஸை ராமன் ஜனகசபையில் முறித்துவிட்டான். ஸீதையின் ஜய மாலையையும் அணிந்துவிட்டான். தோல்வியுற்ற பொருமை கொண்ட அரசர்கள் ஆர்ப் பாட்டம் செய்து ஆர்ப்பரிக்கின்றார்கள். அந்த அமர்க்கள மான தருணத்தில்.

"தேஹி அவஸர் ஸுனி சிவதநு ப4ங்கா3
ஆயஹு பிருகு-குல-கமல-பதங்கா"

அதாவது, "சிவன் வில் முறிந்ததைக் கேள்விப்பட்டு, பிருகு குலம் என்னும் தாமரை மலருக்குச் சூரியனாக விளங்கும் பரசுராமர் விரைந்து வருகிறார்."

பரசுராமரின் வருகையைத் துளஸி வர்ணிப்பதைப் பாருங்கள்.

## சௌபாயி

"கௌ3ர் ஸரீர் பூ4தி ப4ல் ப்4ராஜா
பா4ல் விசால் த்ரிபுண்ட்ர விராஜா
ஸீஸ் ஜடா ஸஸிவதன் ஸுஹாவா
ரிஸ் வஸ்க சுக2 அருண் ஹோய்ஆவா
ப்ருகுடீ2 குடில் நயன் ரிஸ் ராதே,
ஸஹஜஹும் சித்வத் மனஹும் ரிஸாதே,
விருஷப்4கந்த்4, உர்பா3ஹு விசாலா
சாரு ஜனேஉ மால் ம்ருக் சா2லா
கடி1 முனிவஸன், தூன் து2யி பா3ந்தே4
த4நு சர் கர், குடாரு கல் காந்தே4"

## தோஹா

சாந்த் வேஷ், கர்னீ கடின், வர்ணி ந ஜாய் ஸருப்
த4ரி முனி தநு ஜனுவீர் ரஸு ஆயஹு ஜஹம்
ஸப் 3 பூ4ப்

அதாவது :-

“வெண்ணிற மேனியில் வீபூதி விளங்க
கண்ணிய நெற்றியில் கருவம் இலங்க
புண்ணிய முகமும் ஜடையும் துலங்க
அண்ணலின் கோபம் சிவந்து ஜொலிக்க
காளை திமில் போல் கண்கவர் தோள்களும்
ஆளை வெருட்டும் அகன்ற மார்பும்
நீளத் தொங்கும் கைகளும் திகழத்
தோளில் புரளும் பூணூல், மான் தோல்
இடுப்பில் மரவுரி இனிதாய் அசைய
தொடுக்கும் உயரிய அம்பருத் தூணியும்
நொடிப் பொழுதி லுயிர்குடிக்கும் வில்லும்
மிடுக்குடன் பின்புறம் திடுக்கிடச் செய்ய
அடிக்கும் அம்பும் கைகளில்மிளிர
நடுக்கம் கொளச்செய் கோடரி தோளில்
இடுக்கியே வந்தார் அரசர்கள் நடுவில்
பார்க்கச் சாந்தராம் பார்க்கவ சிங்கம்
தோற்கா வலிவுடன் தோன்றும் முனிவர்
யார்க்கும் அஞ்சாப் போர்த்தொழில் வீரமே
மூர்த்தீ கரித்து வருவது போல
கீர்த்தி கொள் பரசுராமரும் வந்தார்!”

முனிவர் வருகைதான் எவ்வளவு அருமை! இவரைக் கண்டதும் அனைவரும் எழுந்தனர், வணங்கினர். ஜனகர், ஸிதா, விசுவாமித்ரர், இராம-லட்சுமணர் அனைவரும் வணங்கினார்கள். மதன மோஹனனான இராமனது ஸௌந்தர்ய வடிவைக் கண்டு சற்றுத் திகைத்தார் பரசுராமர். பிறகு ஜனகரைப் பார்த்து “ஏன் இங்கு இவ்வளவு மாபெரும் கூட்டம் குழுமி யிருக்கிறது?” என்று கேட்டார்.

ஜனகர் காரணத்தை விவரிக்கவே வந்தது ஆபத்து. கீழே விழுந்து ஒடிந்து கிடந்த சிவவில்லேயும் பார்த்து விட்டார். அவ்வளவுதான் !

மகா ஆக்ரோஷத்துடன் கேட்கிருர் ஹே, ஜனகா, எந்த அறிவிலி (ஜடம்) இந்த வில்லே முறித்தது ? ஏ முட்டாள் ! ஒடித்தது யார் என்று சொல் ! இல்லேயேல் உன் அரசாட்சியையே ஒழித்துக் கட்டிவிடுவேன்.''

இவர் வருவதற்கு முன் ஆர்ப்பரித்த அரசர்கள் இப்போது பதிலே பேசவில்லே. துஷ்ட ராஜர்களுக்கு உள்ளூர மகிழ்ச்சி. ''நன்ருக வேண்டும்'' என்ற உணர்ச்சி. தேவர்கள், முனிவர்கள், மனிதர்கள், நாகர்கள் அனேவரும் நடுங்க ஆரம்பித்தனர். சீதையின் தாய் வேறு ஒரு பக்கம் வருந்த ஆரம்பித்துவிட்டாள். பிருகுபதியின் குணுதிசயத்தைக் கேள்வியுற்ற சீதைக்கு ஒரு கணம் கழிவது ஓர் யுகம்போல் தோன்றியது.

அனேவரும் திகில் கொண்டு நடுங்குவது கண்டு இரகு ராமன் பயமோ வருத்தமோ துளியும் இன்றிக் கம்பீரமாக, ஆனல் வணக்கத்துடன் பேச ஆரம்பித்தான் :—

''பெரியவரே, சிவ தனுசை ஒடித்தவன் தங்கள் அடியார்களில் ஒருவனுகிய அடியேன்தான். ஏன் ? உங்களுக்கு என்ன வேண்டும் ? சொல்லுங்கள்.''

ப.ரா :— ''ஓகோ, இதுதான் அடியாரின் இலட்சண மோ ! எதிரி செய்யும் செய்கையைச் செய்து யுத்தப் பிரகடனம் செய்துவிட்டு அடியாளு ? இரகுராமா, கேள். யார் ஒருவன் இந்தச் சிவவில்லே முறித்தானே அவன் என் தந்தையின் கழுத்தை முறித்த கார்த்தவீரியார்ச்சுனனுக்குச் சமமான வைரியாவான் எனக்கு. ஆதலால் மரியாதை

யுடன் மன்னிப்புக் கேள். இல்லையெனில் அரச குலத்தில் பிறந்த அனைவரையும் கொன்றுவிடுவேன்.''

இதைக் கேட்ட அரசர்கள், ''ஐயோ, அழிந்தோம் பூண்டோடு'' என்று எண்ணலானார்கள்.

இளவல் இலட்சுமணனே இளநகை பூத்தான். முனிவரை மட்டம் தட்டும் நோக்கத்துடன் இலட்சுமணன்:- ஹும், குழந்தைப் பருவத்தில் இது மாதிரி எத்தனை எத்தனையோ விற்கள் ஒடித்திருக்கிறோம் அப்போ தெல்லாம் இப்படிப்பட்ட கோபம் கண்டதில்லை. சுவாமி, இந்த வில்லின்மேல் மட்டும் ஏன் உங்களுக்கு இத்தனை மோகம்?''

இதைக் கேட்டு ரௌத்ராகாரம் கொண்ட பரசுராமர் :—

''ஏ, அரசச் சிறுவா, உனக்கு முடிவுகாலம் வந்துவிட்டது. அதுதான் நீ இப்படிப் பேசுகிறாய் ; என் கரத்திலிருக்கும் வைஷ்ணவ தனுசுக்குச் சமமானது சிவ-தனுஸ் என்பதை இவ்வுலகில் அறியாதவர் உண்டா ?''

ஏளனச் சிரிப்புடன் இலட்சுமணன் :— ''பெரியவரே, நான் எல்லா வில்லும் ஒரே மாதிரிதான் என்றல்லவா நினைத்திருந்தேன்; ஆமாம் உளுத்துப்போன இந்தச் சொத்தை வில்லை ஒடித்துவிட்டதால் என்ன மோசம் வந்துவிட்டதாம்;'' என்று கேட்டுவிட்டு இளவல் இராமனைக் கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டே :-

''இரகுபதி தொட்டவுடன் 'பட்' என்று முறிந்து விட்டது பட்டுப்போன அந்த வில். அண்ணாமேல் குற்றமென்ன ? ஏன் இவ்வளவு கோபம் ?'' என்றான்.

இதைக் கேட்டு அடங்காச் சீற்றம் கொண்ட பரசுராமர் தோளில் விளங்கும் கோடரியைப் பார்த்த வண்ணமே :—

"அடே துஷ்டா, என் வல்லமை உனக்குத் தெரியாது. நீ பச்சைக் குழந்தை ; உன்னைக் கொல்லக் கூடாது என்று நினைத்தேன். அதனால் உனக்குத் திமிர் அதிகரித்து விட்டது. நீ என்னை முட்டாள் என்று எண்ணி விட்டாய். நான் நைஷ்டிக-பிரும்மச்சாரி என்பதும், அரசகுலத்தையே வேரறுக்கப் பிறந்தவன் என்பதும் உலகம் நன்கறிந்த உண்மை. நான் யார் தெரியுமா உனக்கு ? என் புஜ-பல—பராக்ரமத்தினால் இப்பூமியையே குருவுக்கு வித்யா தக்ஷிணையாக அளித்தவன். கார்த்த வீரியார்ச்சுனனின் ஆயிரம் கரங்களையும் துண்டித்தவன். என் கோடரியைப் பார்த்தாயா, அரசிளங்குமரா ? உன் பெற்றோரைத் துக்கத்தில் ஆழ்த்திவிடாதே. இளைஞனே, எனது கோடரி கர்ப்பத்தில் இருக்கும் கருவைக் கூடச் சிதைக்கும் சக்தி வாய்ந்தது."

இலட்சுமணன் (சிரித்தவண்ணம்) "ஆஹா, முனிபுங்கவரே, உமக்குத் தாம் பெரிய சூராதி சூரன் என்று எண்ணம்போலும் ! திரும்பத் திரும்ப என்னிடம் கோடரியைக் காட்டுகிறீரே ? மலையை ஊதிப் பறக்க வைத்து விடலாம் என்று விருப்பமோ ? இங்கு ஒருவரும் பயந்தாங்கொள்ளிப் பூஷணிக்காயில்லை. சுட்டு விரலைக் காட்டுவதற்கு முன் பயந்து இறந்து விழும் தொடை நடுங்கி அல்ல இங்கு யாரும்! உமது வில்லையும் அம்பையும் கோடரியையும் பார்த்துவிட்டு நான் என்னவோ என்று எண்ணினேன்! பூணூல் அணிந்த அந்தணர், பிருகு குலத்தில் உதித்தவர் என்று இதுவரை பொறுத்தேன். பிராமணர், தேவர், பக்தர், பசு, ஸ்திரீ, இவர்களை இரகு

வம்சத்தவர் துன்புறுத்துவதில்லை. அதனால் என்கோபத்தை அடக்கிக்கொண்டு நீர் சொன்னதையெல்லாம் பொறுமை யுடன் சகித்தேன். உம்மைக் கொன்றாலோ பாபம்; தோற்றாலோ அபகீர்த்தி. ஆகையினால் நீர் கோடரியால் அடியும். நான் உன் திருவடிகளில் வணங்குகிறேன்!

கோடி குலிஸ் ஸம் வசன் தும்ஹாரா ;
வ்யர்த்த2 த4ரஹு த4நு பா3ன் குடாரா''

'உம் பேச்சுதான் கோடி வஜ்ராயுதத்துக்குச் சமானமான தாக இருக்கிறதே? பின் கோடரியும் வில்லும் அம்பும் வீணில் ஏன் சுமக்கிறீர்."

இதைக் கேட்டுக் கோடரியைப் பரசுராமர் ஓங்க இராமன் இடைமறிக்க, விசுவாமித்திரர் குறுக்கிட, இவ்வித மாக நீண்டுகொண்டே போகிறது இந்த இரசமான சம்வாதம்.

சம்பாஷணையின் நயம் குன்றாமல் கதைப்போக்குச் சற்றும் தடைப்படாமல் படிக்கச் சலிப்புத் தட்டாமல், விறுவிறுப்புக் கொஞ்சமும் குறையாமல் ஆடி மாதக் காவிரிப் பெருக்குப்போல் கங்கு கரையின்றி ஓடுகிறது, கவிதை வெள்ளம். அத்துடன் ஓடுகிறது வாசகர்களின் உள்ளம்.

இதேபோல் அங்கத ராவண சம்வாதமும் வெகு அற்புதமாக சொற்றிறனின் வன்மை விளங்க, கதா பாத்திரங்களின் தன்மை துலங்க இயற்றப்பட்டுள்ளது.

உயர்ந்தரக நகைச்சுவை ஆங்காங்கே குமிழியிட்டுக் கொந்தளித்துத் ததும்புகிறது. மொத்தத்தில் இவ்வளவு பெரிய கதையை பிரும்மாண்டமான சரிதத்தை இவ்வளவு சிறிய அளவில், ஆனால் அவ்வளவு அழகாக, கற்பனை

விளங்க எப்படித்தான் இயற்றினுர் துளசி என்று வியக்காமல் இருக்க முடிவதில்லை.

"பாரீ பவஸாகர் உதார்தோ கௌன் பார்
ஜோபை யஹ் ராமாயன் துளஸீ ந காவ்தோ"

-வேணீ கவீ

பொருள்: துளஸீ இந்த ராமாயணத்தை இப்படிப் பாடியிராவிடில் இந்தப் பயங்கரப் பிறவிக்கடலில் இருந்து நம்மைக் கரை யேற்றுவது யார் ?

## பால காண்டம்

### கடவுள் வணக்கம்

கம்பர்

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட் டுடையார் அவர்
தலைவ ரன்னவர்க்கே சரண், நாங்களே.

நாடிய பொருள் கைகூடும்; ஞானமும் புகழுமுண்டாம்;
வீடியல் வலியதாக்கும்; வேரியங் கமலை நோக்கும்;
நீடியவரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை
சூடிய சிலையிராமன் ருேள்வலி கூறுவோர்க்கே.

ஆரே ணயு மொன்று சொல்லத் தொடங்கிலங்குன்
பேரே வரும்: என்ன பேறுபெற்றேன்; பெருநான் மறையின்
வேரே; மிதிலையின் மின்ருெடும் போய் வெய்ய கானடைந்த

காரே; கடல் கொளுந்தச் சிலேவாங்கிய காகுத்
தனே;

அஞ்சிலே ஒன்று பெற்ருன் அஞ்சிலே ஒன்றைத்
தாவி

அஞ்சிலே ஒன்ருருக ஆரியர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற வணங்கைக்கண் டயலா
ரூரில்

அஞ்சிலே ஒன்றை வைத்தான வனம் மையளித்துக்
காப்பான்,.

கடவுள் வணக்கம்
துளஸி

வர்ணுனும் அர்த்த ஸங்கானும்
ரஸானும் சந்தஸாமபி
மங்களானுஞ்ச கர்த்தா ரௌ
வந்தே வாணீ விநாயகௌ!!

பவானி--சங்கரௌ வந்தே
ஸ்ரத்தா விஸ்வாஸ ரூபிணௌ
யாப்யாம் வினு ந பச் யந்தி
ஸித்தா: ஸ்வாந்தஸ்த மீஸ்வரம்! !

வந்தே போத மயம் நித்யம்
குரும் சங்கர ரூபிணம்
யம் ஆஸ்ரிதோ ஹி வக்ரோபி
சந்த்ர : ஸர்வத்ர வந்த்யதே

ஸீதாராம குணக் ராம
புண்யாரண்ய விஹாரிணௌ
வந்தே விசுத்த விஞ்ஞானௌ
கவீஸ்வர கபீஸ்வரௌ

உத்பவஸ்திதி ஸம்ஹார காரிணீம்
க்லேச ஹாரிணீம்
ஸர்வஸ்ரேயஸ்கரீம் ஸீதாம்
நதோஹம் ராம வல்லபாம்

யன்மாயா வசவர்த்தி விஸ்வமகிலம்
பிரும்மாதி தேவா : ஸுரா;
யத் ஸத்வாத் அம்ருஷைவ பாதிஸகலம்
ரஜ்ஜௌ யதா ஹோர் ப்ரம :
யத் பாதப்ல வமேகமேவ ஹி பவாம்
போதேதி தீர்ஷாவதாம்
வந்தேஹம் தம் அஸேஷ காரண பரம்
ராமாக்யமீசம் ஹரிம்.

## வஸ்து நிர்தேசம்
## வால்மீகி

தபஸ் வாத்யாய நிரதம்
தபஸ்வீ வாக்விதாம் வரம்
நாரதம் பரிபப்ரச்ச
வால்மீகிர் முனிபுங்கவம்.

கோங்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே
குணவான் கஸ்ச வீர்யவான்
தர்மஞ்ஸ்ச க்ருதஞுஸ்ச
ஸத்ய வாக்யோ த்ருட வ்ரத :

சாரித்ரேணச கோ யுக்த :
ஸர்வபூதேஷு கோ ஹித :
வித்வான் க : க : ஸமர்த்தஸ்ச
கஸ்சைக ப்ரிய தர்சன :

ஆத்மவான் கோ ஜிதக்ரோதோ
த்யுதிமான் கோனஸூயக:
கஸ்ய பிப்யதி தேவாஸ்ச
ஜாத ரோஷஸ்ய ஸம்யுகே

ஏததிச்சாம்யஹம் ஸ்ரோதும்
பரம் கௌதூஹலம் ஹி மே
மஹர்ஷே த்வம் ஸமர்த்தோஸி
ஞாதுமேவம் விதம் நரம்

ஸ்ருத்வா சைதத்ரிலோகஞோ
வால்மீகேர் நாரதோ வச:
ஸ்ருயதாமிதி சாமந்த்ர்ய
ப்ருஹ்ருஷ்டோ வாக்யமப்ரவீத்

காவியத் தொடக்கத்தில், பால-காண்டம் ஆரம்பிக்குமுன், பரம் பொருளாய் விளங்கும் பகவானை, யாவற்றையும் ஊடுருவிக் கடந்து நிற்கும் கடவுளை, எங்கும் நிறைந்து நிற்கும் எம்பெருமானை, எல்லாம் வல்ல இறைவனை, வியாபகனுகிய விஷ்ணுவை பரஞ்சுடராகிய பற்பநாபனை, பராபரனுகிய புருஷோத்தமனை, மனமார வணங்கி வாயாரத் துதிக்கின்றனர் தென்னுட்டுக் கவியரசராகிய கம்பரும் வடநாட்டு வாகீசராகிய துளஸிதாஸரும். காவியாரம்பத்தில் கடவுளை வணங்க வேண்டும் என்னும் சீரிய கொள்கையைக் கடைப்பிடிக்கின்றனர் கவிமணிகள் இருவரும்.

வால்மீகியோ வடமொழி இலக்கிய மரபின்படி நேரடியாகக் கதையைத் தொடங்கி பின் வருவோர்க்கெல்லாம் வழி காட்டுகிருர்.

# கம்ப இராமாயணத்தின் கடவுள் வணக்கத்தின் பொருள்

"உலகம் யாவையும், அண்டபிண்ட சராசரம் அனைத்தையும் உண்டாக்கி, நிலைநிறுத்தி, அழித்து, மறைத்து, அருளி ஐந்தொழில் புரிந்து இடைவிடாது விளையாடும் இறைவன் எவனோ அவனே எங்கள் தலைவன். அவனுக்கே நாங்கள் ஆட்பட்டுள்ளோம்."

"நீண்ட பிரும்மாண்டமான, அரக்கன் இராவணனின் மூல பலச் சைன்யத்தை வேரறுத்து, வெற்றி கொண்டு வாகைமாலை யணிந்த இராமபிரானது திண்டோள் வலிமையைக் கூறுவார்க்கு நினைத்த பொருள் கைகூடும்; அறிவும், புகழும் வளரும். முக்தி நிச்சயம்; செல்வம் பெருகும்."

"நான்கு வேதங்களாகிய தரும விருட்சத்துக்கு வேர் போன்ற திருமாலே, மிதிலை நகர் மின் கொடியாளோடு கானல் வீசும் கானகம் சென்ற கார்மேகமே, கடல் வற்றும் படி வில் வளைத்த வித்தகா, யாரையாவது ஏதாவது சொல்ல வாயெடுத்தால் வாயில் உன் பெயரே வருகிறது : நான் என்ன பாக்கியம் செய்தேன் ஸ்ரீராமா" ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய காற்றினால் பெறப்பட்ட மல்லன் எவனோ, ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான தண்ணீர் நிலையைத் தாவியவன் எவனோ, ஐம்பெரும் பூதங்களில்ஒன்றாகிய வானவீதிவழியாக இராமன் பொருட்டுச் சென்றவன் எவனோ, ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய பூமிதேவியின் மகளைக் கண்டு பேசி, எதிரியின் நகரில் ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய தீயை வைத்தவன் எவனோ அவன்(அந்த மாருதி)நமக்கருள் புரிந்து நம்மைக் காப்பாற்றுவான்.

# துளஸி இராமாயணம் கடவுள் வணக்கப் பொருள்

“பொருள் பொதிந்த சொற்களையும், எழுத்துக்களையும், நவரஸங்களையும், பற்பல சந்தங்களையும், சகல நன்மைகளையும் சிருஷ்டி செய்யும் கர்த்தாக்களாகிய வாணியையும் விநாயகரையும் வணங்குகிறேன்.”

“சிரத்தையும் நம்பிக்கையுமே உருக் கொண்டவர்களும், எவர்கள் இல்லாவிடில் இதய நடுவில் விளங்கும் இறைவனைக் கடும் தவசிகளும் அறிந்து கொள்ள முடியாதோ, அவ்வித வல்லமை பொருந்தியவர்களுமான பவானியையும் பசுபதியையும் நான் வணங்குகிறேன்.”

அறிவே உருவானவரும், குருபரன் வடிவெடுத்தவருமான சங்கரனை, எவரை அடைந்ததால் கோணலான பிறை மதியும் உலகில் வணங்கப்படுகிறதோ அவ்வித அண்டினோரைக் கௌரவிக்கும் மகிமை பெற்ற பரம சிவனை வணங்குகின்றேன்.”

“ஸீதா--இராமர்களின் குண கணங்கள் என்னும் புனித கானனத்தில் ஸதா உலாவுபவர்களும் பழுத்த அறிஞர்களுமான ‘கவிகளுக்கு’ நாயகர் வால்மீகரையும் ‘கபிகளுக்கு’ (குரங்கு) நாயகர் அனுமாரையும் வணங்குகிறேன்.”

“படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலைச் செய்பவளும், துக்கம் துடைப்பவளும், ராமனது பிரிய மனைவியும் ஆகிய ஸீதையை வணங்குகிறேன்.”

''பிரும்மா முதலிய தேவர்களும் எவனுடைய மாயைக்கு வசப்பட்டவர்களோ, எவனுடைய சைதன் யத்திறுல் உண்மையில் ஜடமாகிய இப்பிரபஞ்சம் கயிற் றில் பாம்புத் தோற்றம் உண்டாவது போல் உண்மைத் தோற்றத்தை அளித்து மயக்குகிறதோ, இப்பிறவிக் கடலைக் கடப்பதற்கு, எவனுடைய திருவடிகளே தெப்பக் கட்டை களாக உதவுகின்றனவோ அப்படிப் பட்ட சகல காரணனுகிய நாரணனை இராமன் என்று பெயர் பூண்ட ஹரியை வணங்குகிறேன்.

## வால்மீகி இராமாயணம் வஸ்து நிர்த்தேசப் பொருள்

''தவத்திலும் கல்வி ஆராய்ச்சியிலும் தேர்ந்தவரும், நாவன்மை பெற்றவருமான நாரதரை வால்மீகி கேட்க லுற்றூர்.

''முனிவரே, தற்காலத்தில், இன்றைய உலகத்தில் நற்குணத்தில் சிறந்து விளங்கும் மனிதன் யார்? வீரத் தில் நிகரற்ற மானிடன் யார்? அறத்தில் வல்லவன் யார்? செய்ந்நன்றி யறிந்த நன்மகன் யார்? சத்திய ஸந்தன் யார்? அழியா மன உறுதியும், தளரா நோன் பும் பூண்டவன் யார்?''

''ஒழுக்கத்தில் உயர்ந்த உத்தமன் யார்? உயிர்ப் பிராணிகளிடத்தில் அன்பு பூண்டவன் யார்? அறிவாளி யார்? கெட்டிக்காரன் யார்? கண்ணுக் கினியவன் யார்?''

''தன்னடக்கமுள்ளவன் யார்? சினத்தை வென்ற வன் யார்? ஒளி நிறைந்தவன் யார்? பொறுமையற்ற

வன் யார்? கோபம் வந்தால் சகல உலகும் நடுங்கும் படியான சக்தி பெற்றவன் யார்?''

''இவைகளுக்குப் பதில் சொல்லும். இப்படிப்பட்ட ஒரு மனிதனை ஆய்ந்தறிந்து சொல்ல வல்லவர் நீர் ஒருவர்தான். எனக்கு இப்படிப்பட்ட ஒரு நரன் யாராவது உண்டா என்று அறிந்து கொள்ள மிகவும் ஆவலாயிருக்கிறது.

''முக்காலமும் உணர்ந்த ஞானியாகிய நாரதர் வால்மீகியின் கேள்வியைக் கேட்டு மகிழ்ச்சியுற்றவராய், ''கேளுங்கள்; சொல்லுகிறேன்'' என்று சொல்லத் தொடங்கினர்.

இவ்விதம் ஆரம்பமாகின்றன இம் முப்பெரும் இராம காவியங்கள்.

பால காண்ட ஆரம்பத்தில் கடவுள் வணக்கத்துக்குப் பிறகு கம்பர் தமிழிலக்கிய மரபின்படி ''ஆற்றுப் படலம்'' தொடங்குகிறர். இப் படலத்தில் அயோத்தி மாநகருக்கு அணிகலனக விளங்கா நிற்கும் ஸரயூ நதியையும், அதன் வனப்பையும் வளத்தையும் சிறப்பையும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தெள்ளிய பாடல்களில் வர்ணிக்கிறர்.

கடவுள் வணக்கத்தை வடமொழியில் பாதியும் ..அவதி. (அயோத்யா) மொழியில் பாதியுமாக இயற்றிய பின் துளஸிதாசர் குரு வணக்கம் செய்கிறர். அதன் பின் அவை அடக்கம் ஆரம்பிக்கிறர். அதில் நல்லாருக்கும் பொல்லாருக்கும் உள்ள ஏற்றத் தாழ்வுகளையும் அவர்களால் உலகுக்கு ஏற்படும் பெருமை சிறுமைகளையும் உயர்ந்த ரக நகைச்சுவை ததும்பும் நடையில் விளக்கி

விட்டு ராம நாம மகிமையைச் சொல்லத் தொடங்குகிறுர்.
இங்கு துளஸியின் பக்தி பாவம் கரை கடந்து பொங்கு
கிறது. ஸாக்ஷாத் ராமபிரானை விட ராம நாமம் மகிமை
வாய்ந்தது என்று பரிபூரண பக்தியுடன் பறை சாற்றுகிறுர்.
ஆன்ஞேர்களாகிய சான்ஞேர்களின் நட்பையும், பண்பை
யும் ராம நாம பிரபாவத்தையும் இலக்கிய வழக்கில்
பிரஸித்தி பெற்ற ஒவ்வொரு உயர்ந்த உவமைப் பொருளுட
னும் ஒப்பிட்டு விட்டுக் கடைசியில் ,,மும்மலம் போக்கும்
திரி வேணி ராம நாமம்'' என்று அழகிய உருவக அணி
(ருபகாலங்காரம்) மூலம் முத்தாய்ப்பு வைக்கிறுர். வால்
மீகியோ''தமஸாம் தமஸாம் நிஹந்த்ரீம்,, ''அஞ்ஞான
த்தை அழிக்கும் வல்லமை பெற்ற தமஸா'' என்று புகழ்
பெற்ற தமஸை நதிக்கரையில் நடந்த ஸம்பவத்தைக் கூறக்
தொடங்குகிறுர்.

ஆக இம் மூன்று அற்புத ராம காவியங்களும்
''ஸரயூ, திரிவேணி, தமஸா'' என்னும் மூன்று புண்ணிய
நதிகளின் புகழ்ச்சி பெருக்குடன் தொடங்குகின்றன. ஆம்;
இத் தெய்வீக நதிகளின் தெளிவு, கம்பீரம், அழகு,ஆற்றல்,
நடையும் கொண்ட முப்பெரும் காவியங்களின் கவிதை
வெள்ளமும் புரண்டு திரண்டோடிப் பொழிகின்றன,
வாசகர்களின் ரஸிகத் தன்மை நிறைந்த உள்ளம் என்னும்
உயரிய பூமியில்.

காவியாரம்பத்தில் கதை தொடங்குமுன், கம்பர்,
துளஸி, வால்மீகி மூவரும் நதி வர்ணனை செய்திருப்பது ஓர்
அற்புத நிகழ்ச்சியே. கம்பர் ஓர் படலம் முழுவதும், துளஸி
ஒன்றிரண்டு பக்கம், வால்மீகி ஒன்றிரண்டு ஸ்லோகங்
களில் மட்டும் நதியைத் துதிக்கின்றனர் தொடக்கத்தில்.

## கம்பராமாயண ஆற்றுப் படலம்

சூரியனின் வெப்பத்தைத் தணிக்க விருப்பங்கொண்டு ஆகாயத்தில் பரந்து. விரிந்து, கருங்கடல் போல் இருண்டு திரண்டு நிற்கும் நீருண்ட மேகத்தின் நிலைமையையும்;

கீழே"சடசட" வெனக் கொட்டும் வெண்ணிற மேகத் தாரைகள், உள்ளமுவந்து தன்னிடமுள்ள உடைமையை எல்லாம் பிறர்க்கு அள்ளி அள்ளிக் கொடுக்கும் வள்ளல் களைப்போலப் பொழியும் அழகையும் மநு நெறி முறை திறம்பாத அரசனின் (தசரதனின்) புகழைப் போலவும் ஞானிகளாகிய வேத-வித்துக்களின் கையில் கொடுத்த தானத்தைப் போலவும், தழைத்து நின்ற கரை புரண்டு ஓடும் வெள்ளத்தின் தன்மையையும்;

நவமணிகள், பொன், மயிற்பீலி, யானைத் தந்தம், ஆபரணம், சந்தனக்கட்டை, ஆரம், அகில் முதலிய அருமைப் பொருள்களைத் தன்னுடன் கொண்டோடுவதால் வாணிபம் செய்யும் வணிகர்களைப் போல ஆறு தோன்றும் தோற்றத்தையும்;

பூக்கள் நிரம்பி, பலவித தாதுக்கள் (மகரந்தப்பொடி; மகரந்தம்) பொருந்தி ஆனை மதச் சேற்றுடன் அளாவி செம் பொன்னுடன் சேர்ந்து பற்பல வண்ணங் கொண்டு வான வில்லைப் போல் தண்ணீர் விளங்கும் வனப்பை யும்;

தேனீக்களும் வண்டுகளும் மொய்த்து, மதம் பிடித்து, வெறி கொண்டு பாய்தலால் கட்குடியர்களைப் போலவும், ஆரவார சத்தத்துடன் கொந்தளித்து வருவதால் நான்கு வகைச் சேனையுடன் கடலரசனுடன் போர் புரியப் போவது போலவும் தோன்றும் ஸரயூவின் பல நாடகத் தோற்றங்களையும்;

''மலை எடுத்து மரங்கள் முறித்து மா(டு)
இலை முதற் பொருள் யாவையும் ஏந்தி''

வரும் கம்பீரத்தையும் கம்பர் ஒருவரால் தான் இப்படி வர்ணிக்க முடியும்.

''நீறணிந்த'' ''பம்பி மேகம் பரந்தது பானுவால்'' என்று படிக்கத் தொடங்கி விட்டால், ஆற்றுப்படலம் முடியும் வரை நம்மை நாமே மறந்து அக்காலத்திய ஸரயூ நதிக்கரையில் உலாவத் தொடங்கி விடுகிறோம். ஸரயூவின் ''சீதார்புனலில்'' குடைந்து குடைந்தாடுவது போன்ற ஓர் இன்ப உணர்ச்சியைக் குளுமையை அனுபவிக்கிறோம் இப்பாடல்களில். ஆற்று வெள்ளம் பற்பல தோற்றங் கொண்டு நடனமிடுதலை அப்படியே பாடல்களில் படம்பிடித்து விட்டார் கம்பர். பாடல்களைத் திரும்ப திரும்பப் படித்துப் பார்த்தால் உண்மை விளங்கும். இங்கு ஸரயூவின் பிரவாகமா, கம்பரின் கவிதை நயமா, எது ஓசை இன்பத்தில் உயர்ந்தது என்று தெரியாமல் திணறுகிறோம்.

## ஸரயூ செல்வம்

கொடி போன்ற இளந் தேகமுடைய பெண்களால் (குறத்தி) இடிக்கப்பட்ட வாசனைப் பொடி, கலவைச் சாந்து குங்குமம், ஏலம். சந்தனம் சிந்தூரம், பச்சிலை மரம், வெண்ணெய் மரம், தேன், அகில் ,முதலிய பொருள்களின் நறுமணம், ஸரயூ வெள்ளப் பெருக்கில் எப்போதும் கமழ்கிறது.

ஆரவாரம் செய்து ஆர்ப்பரிக்கிறது பிரவாகம், அரசர் படையைப் போல. வேடர் ஊர்களில் திடும் பிரவேசம் செய்கிறது.

உறைந்த தயிரும், பாலும், வெண்ணெயும், நெய்யும், வாரி உண்டு, மருத மரத்தை வீழ்த்தி, பெண்களின் ஆடைகளைக் கவர்ந்தோடிய பாம்புத்தலை மேலே நடமிடும் கண்ணனைப் போலவே லீலை செய்கிறது ஸரயூ.

சப்தித்துக் கொண்டு எத்திக்கும் சென்று, உழவர் கைதூக்கி வாழ்த்த மத ஜலம் பொங்க வண்டுகள் சூழ அலைகளாகிற துதிக்கையை வீசி வரும் ஸரயூ மத்தகஜம் போல மருத நிலத்தில் பாய்கிறது.

தன்வெள்ளப் பெருக்கின் வேகத்தால் முல்லை (காடு) நிலத்தைக் குறிஞ்சி (மலை) நிலமாகவும், மருத (வயல், சமவெளி) நிலத்தை முல்லையாகவும், நெய்தல் (கடற்கரை) பிரதேசத்தை மருதமாகவும் மாற்றி அமைத்துக்கொண்டு ஒடும் ஸரயூ ஒன்றை மற்றொன்ருக மாற்றி நிலை தடுமாறச் செய்வதால் எல்லாவற்றையும் தலைகீழாக மாற்றும் வல்லமை பெற்ற வினைப்பயன் (விதி, Destiny) போலச் செல்லுகிறது.

„செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்றதன்றே''

என்ற ஒரே வரியில் கம்பரது உலகியல் அறிவு எப்படிச் சுடர் விடுகிறது.;

''யாராலும் தடை செய்ய முடியாத நடை, தடுக்க முடியாத ஓட்டம்'' என்பதை எவ்வளவு நளினமாகக் கூறுகிருர்;

''பொன்னு முத்தொரு திரையின் வீசி'' வரும் ஸரயூவின் எழில்தான் என்னே ;

கல்லிடைப் பிறந்து போந்து

கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைகளாலு மியம்பரும்
பொருளீ தென்னத்
தொல்லையின் ஒன்றேயாகித் துறைதொறும்
பரந்த சூழ்ச்சிப்
பல் பெருஞ்சமயம் சொல்லும்
பொருளும் போற் பரந்ததன்றே''

''இமய மலையிற் பிறந்து கடலிற் கடைசியில் கலக்கும் ஆற்று வெள்ளம் கணக்கற்ற மறை நூல்களாலும் ''இது தான்'' என வரை யறுத்துக் கூற முடியாதபடி ஆதியில் ஒன்றேயாகி அண்ட பகிரண்டமெல்லாம் ஊடுருவி நிற்கும் பற்பல மதங்களும் பற்பல வகையில் விளக்கம் கூறும் பரம் பொருளைப் போலப் பரந்து விரிந்து ஓடியது.''

தாதுகு சோலை தோறும் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணற்
றடங்கள்தோறும்
மாதவி வேலிப்பூக வனந்தொறும் வயல்கடோறும்
ஓதிய உடம்புதோறும் உயிரென உலாய
தன்றே.''

நறுமணம் வீசும் மகரந்தப் பொடி கீழ் சிந்தும் பூஞ் சோலைகளிலும், சண்பகமலர்க காடுகளிலும், பூமொட்ட விழ்ந்து மலரும் தடாகங்களிலும் புதிய வெண் மணல் கரை களிலும், குருக்கத்திப் புதர்களிலும் பாக்கு மரக் காடு களிலும் வயல் வெளிகளிலும் ஸரயூ ஆறு ஒவ்வொரு உடம்பிலும் உலாவும் உயிரைப்போல் உலாவியது.''

''கல்லிடை'' 'தாதுகு'' என்னும் இக் கடைசி இரண்டு பாடல்களும் இப்படலத்துக்கே ஓர் மணிமகுடம் போல் அமைந்துள்ளன இவ்விரண்டு பாடல்களிலும் ஒவ்வொன்

றின் கடைசி அடியும் பொருட் சுவை நிரம்பிப் பொலி கிறது. இவைகளில் சொட்டும் வேதாந்தப் பாவமும் இயற்கையின் பொலிவும் கம்பரின் அற்புத மேதைக்கு எடுத்துக்காட்டு. ஆற்று நீர் துள்ளிப் பாய்வது போலவே பாய்கிறது கவிதை நயம் இப் பாடல்களில். உவமைகளின் அழகு உள்ளத்தை அள்ளுகிறது.

## துளஸி ராமாயணம்

### ஸத்ஜன-திரிவேணி மகிமை

### சௌபாயி

முத் மங்கள் மய் ஸந்த் ஸமாஜூ
ஜோ ஜக் ஜங்கம தீரத் ராஜூ
ராம பக்தி ஜஹம் ஸுரஸரி தாரா
ஸர்ஸயி பிரும்ம விசார் பிரசாரா
விதி நிஷேத மய் கலிமல் மர்னீ
கர்ம கதா ரவி நந்தனி வர்னீ

ஹரிஹர கதா விராஜதி வேனீ
ஸுனத் ஸகல் முத் மங்கள் தேனீ
படு பிஸ்வாஸ் அசல் நிஜ் தர்மா
தீர்த்த ராஜ் ஸமாஜ் ஸுகர்மா
ஸப்ஹி ஸுலப் ஸப் தின் ஸப் தேஸா
ஸேவத் ஸாதர் ஸமன் கலேஸா
அகத் அலௌகிக் தீரத்த ராஊ
தேய் ஸத்ய பல் பிரகட் ப்ரபாவூ

## தோஹா

ஸுனி ஸமுஜஹிம் ஜன் முதித் மன்
மஜ்ஜ ஹிம் அதி அநுராக்
ஸஹஹிம் சாரி பல் அசத் தநு
ஸாது ஸமாஜ் பிரயாக்

## சௌபாயி

மஜ்ஜன் பல் பேகிய் தத் காலா
காக் ஹோஹிம் பிக் பகவு மராலா
ஸுனி ஆசரஜ் கரை ஜனி கோயீ
ஸத் ஸங்கதி மஹிமா நஹிம் கோயீ

இதற்குப் பொருள் பின்வருமாறு :—

"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
சீருயர் நன்னெறி தெய்வக் காதலே !!
பேரும் புகழும் வீடு மளிக்கும்
சீரியர் நட்பே சிறந்த பிரயாகை ;
கோசலை புதல்வன், மைதிலி கேள்வன்
தூசறு ராகவன் பக்தியே கங்கை ;
பரம்பொருள் உணர்வே பாயும் தண்ணீர் ;
அருமறை அறிவே அலையெழில் கண்டீர் ;
செய்யத் தக்கது : செயத் தகாதது எனும்
செயல் திறன் பிரிவே யமுனை ஆறு ;
அரி அரன் கதையே அம் திரிவேணி;
இருவினை மாய்க்கும் அரும் பெரும் வேணி;
பெருமை அளிக்கும் பீடுயர் வேணி;
சிறுமை துடைக்கும் தெய்வீக வேணி;

அட்சய வடமே அறநெறி அன்பு;
    நிச்சய ஞானம் நின்மல ஸ்ஞனம்;
யார்க்கும் எவர்க்கும் எளிதில் கிட்டும்
    பார்க்குள் யாராயினும் பரநிலை எட்டும்;
இத்திரிவேணியில் இறங்கி முழுகுவோர்
    அக்கணம் அறம், பொருள், இன்பம், வீடெய்துவர்.

முழுக்கின் பலம் முழுதுரைக்கப் போமோ?
    அழுக்கைப் போக்கும்: அமைதி யளிக்கும்;
காக்கையைக் குயிலாய்க் கடிதினில் மாற்றும்;
    கொக்கை அன்னமாய் அக்கணம் மாற்றும்;
கேட்டிதை மாந்தர்காள். வியப்படையாதீர்;
    நாட்டினில் நல்லோர் நட்பெனும் சங்கமம்
வேட்டதைக் கேட்டதை விரைந்து வழங்கும் :
    ஏட்டினில் அதன் புகழ் அடக்கப் போமோ?
பாட்டினில் இதன் புகழ் பரவப் போமோ ?

ராம—பக்தியும், அறமும், நல்வினையும் (நம் இதயமும், நல்லறிவும், நற் செய்கையும்) சேர்ந்து கலக்குமிடம் ஆன்ருேர் நட்பெனும் பிரயாகை என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகிருர் துளசி.

"பிநு ஸத்ஸங்க் விவேக் நஹோயி
    ராம் க்ருபாவிநு ஸுலப் ந ஸோயி"
"நல்லோர் சேர்க்கை இல்லாவிட்டால்
    எல்லாம் விளக்கும் விவேகம் இல்லை
வல்லான் இராமன் கருணை இன்றேல்
    நல்லோர் நட்பும் இல்லை இலலை :

என்று ராமனின் கிருபை இருந்தால்தான் பெரியோர் ஸஹவாஸம் கிட்டும். அதன் மூலம் மெய்யறிவு கிட்டும் என்று ஆங்காங்கு அடித்தடித்து உணர்த்துகின்ருர் அறியா மக்களுக்கு. ''அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்'' அவனைக் காண்பதெப்படி? கம்பர் ஸரயூ நதியை மனங் குளிர, வாய் குளிர வர்ணிப்பதுபோல் துளஸி நிஜப்பிரயாகையையோ அல்லது திரிவேணியையோஇங்கு வர்ணிக்க வில்லை. ஸத் ஸங்கதியின் (நல்லோர் நட்பு) மகிமையைச் சொல்லப் புகுந்த கவி அலங்கார நடையில் அதைத் திரிவேணி ஸங்கமத்துடன் ஒப்பிடுகிருர். அவ்வளவுதான். ஆனுல் இந்த உருவக அணி (ரூபகாலங்காரம், வெறும் வரட்டு அலங்காரமாக மட்டும் இராமல் தத்ரூபமாக திரிவேணியை, இயற்கையாக வர்ணிப்பது போலவே அமைந்து விட்டது. இம்முறையில் பொருட் செறிவும், பொருட் சுவையும், சொற்சுவையும் மிஞ்சி மிளிர்கின்றன. இது துளசியின் கவிதா சக்திக்கும் கற்பனு மேதைக்கும் ஓர் உதாரணம்.

## வால்மீகி ராமாயணம்

### தமஸா

தமஸை (அஞ்ஞானம், இருள்) போக்கும் தமஸையை, வால்மீகி, சுருக்கமாக, ஆனுல் இயற்கை அழகு பொங்கித் ததும்ப, ஒரே ஸ்லோகத்தில் வர்ணித்து விடுகிருர்.

அகர்தமம் இதம் தீர்த்தம் பரத்வாஜ நிசாமய
"ரமணீயம் பிரஸன்னும்பு ஸந்மநுஷ்ய மனோதயா

'' பரத்வாஜா, சேறில்லாமல் தெள்ளத் தெளிந்து நிற்கும், ஸத்ஜனர்களின் மனம்போல் பிரஸன்னமாகவும் ரமணீயமாகவும் இருக்கும் இந் நதியைப் பார்.''

"ரமணீயம் பிரஸன்னும்பு ஸங்மநுஷ்ய மனோயதா"
என்ற ஒரே வரியில் கவிதையின் அழகு முழுவதையும் பொழிந்து தள்ளிவிட்டார் வால்மீகி. சேறில்லாத தெளிந்த தண்ணீர் ஓடும் ஆறு, கள்ளமற்ற விசால உள்ளம்! என்ன அற்புதமான உவமை! "ரமணீயம் ,பிரஸன்னும்பு" என்னும் இரு சொற்களிலும்தான் எத்தனை அர்த்த புஷ்டி ; எவ்வளவு ஆழ்ந்த பாவம்:

இதே கருத்தைக் கம்பரும் வெளியிடுகிறார். ஆனால் அதில் இவ்வளவு அருமை, இயற்கைப் பொலிவு, சொட்ட வில்லை. ஆரணிய காண்டத்தில்.

"சான்றோர் கவியெனக் கிடந்த
கோதாவரியினை வீரர் கண்டார்"

என்று சான்றோர் கவிதையை நதிக்குவமை கூறுகிறார் கம்பர்.

இவ்விதம் மூவரும் நதியையே வர்ணனை—விஷய மாக உவமைப் பொருளாக எடுத்துக்கொண்டாலும், ஒவ்வொருவரும். தங்களுக்கே உரிய சிறப்பான தனிமுறை யில், வேறு வேறு விதத்தில், தங்கள் தங்கள் நடைக்கேற்ப வர்ணிக்கின்றனர்.

கம்பரது ஸரயூ கண் முன் நடனமாடுகிறாள்; துளஸி யின் திரிவேணி மும்மலத்தையும், இருவினையையும் பிறப் பிறப்பையும் போக்குகிறாள். வால்மீகரின் தமஸா "வா, வா, அறிவுச்சுடர் பெறு" எனத் தன் வனப்பு மிக்க கை களை நீட்டி அன்புடன் அழைக்கிறாள்,

"நவில்தொறும் நவில்தொறும் நூல்நயம் போலப்
பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு"

என்பது வள்ளுவர் வாக்கு. இக்குறளின் கடைசி அடியைத் தானே துளஸி விளக்குகிருர். வால்மீகர் சித்தரிக்கிருர் ரத்தினச் சுருக்கமாக, நம் தமிழ் முனிவரோ சுருங்கச் சொல்லி விளங்க வைத்துவிட்டார். இவ்விரண்டு மா பெரும் தத்துவங்களேயும், (நவில்தொறும் நூல்நயத்தை யும், பயில்தொறும் பண்புடையாளர்கள் தொடர்பையும்) இம்மூவரின் காப்பியங்களிலும் காணலாம்.

"சான்ருேர் கவி"யன்ருே;

## கம்ப இராமாயணம்

### நாட்டுப் படலம்

"வாங்கரு பாதநான்கும் வகுத்த வான்மீகி என்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு நறவமாந்தி
மூங்கையான் பேசலுற்ருன் என்னயான் மொழிய
லுற்றேன்,"

"ஆறு"கூறிய பின் "நாடு" கூறத்தொடங்குகிருர் கம்பநாடர். இப்படலத்தில் கோசல நாட்டு வளப்பத்தை வெகு அழகாக வர்ணிக்கிருர்.

"வரம்புகளில் எல்லாம் முத்துக்கள்; மடைகளில் எல்லாம் சங்குகள்; நதிக்கரைகளில் எல்லாம் செம்பொன்; எருமை படியும் குட்டைகளில் எல்லாம் கழுநீர் மலர்க் காடுகள்; பரம்படித்த இடங்களில் எல்லாம் பவளம்; நெற்பயிர்ப் பரப்புக்களில் எல்லாம் அன்னப் பறவைகள்; பக்கக் கரம்பு நிலங்களில் எல்லாம் செந்தேன்; அழகிய பூஞ்சோலைகளில் எல்லாம் களிமிகு வண்டுக்கூட்டங்கள்."

## அருமையான ஆரம்பம்

"வரம்பெலாம் முத்தம்" என்று தொடங்கும் இப் பாடல் நாவிற்கு நளினமாகவும், நடையில் லலிதமாகவும், பொருளில் ரம்மியமாகவும், வர்ணனையில் மனோகரமாக வும் அமைந்துள்ளது. நாட்டின் வளமையின் செழுமையை இப்பாடல் அள்ளி அள்ளி வீசுகிறது. "எலாம்" என்னும் சின்னஞ்சிறு சொல் திரும்பத் திரும்ப வருவதால் ஒரு தனிச் சிறப்பு எய்திவிட்டது. இப்படலத்தில் இப்படி ஒரே சொல்லை ஒரே பாட்டில் பலமுறை இனிமையாகப் பிரயோ கிக்கும் முறை அடிக்கடி கையாளப்படுகிறது. இது கம்பரின் நடைச் சிறப்பு.

"நதி நீர் பாய்கின்ற ஓசை; உழவர் ஆலையாடும் ஓசை; ஆலைக் கருப்பஞ்சாறு பாய்ந்து வெளிவருகின்ற ஓசை; நீர்க்கரைகளில் சங்குகளின் வாய்கள் பொங்கும் ஓசை; எருதுகள் ஒன்றையொன்று தாக்கும் ஓசை; எருமைகள் தண்ணீரில் விழுகின்ற ஓசை; எல்லாம் கலந்து ஒரே ஓசைமயமாக ஒலிக்கின்றது;"

ஓசையில் தான் எத்தனை வகை; ஆனால் எவ்வளவு தத்ரூபமான சித்திரம்! ஒலி நிபுணர்களும் கூட இங்கு கம்பரிடம் தோற்க வேண்டியதுதான்.

கோசலை நாடு மிக காரிய மும்முரம் (busy) ஆக இருப்பதை "ஆறுபாயரவம்" என்னும் பாடல் நன்கு சித் தரிக்கிறது. வேலை மும்முரத்தில் இருக்கும் நாட்டின் ஆரவாரத்தை (hustle-bustle) பாட்டின் நடையிலேயே காண்கிறோம். பெரிய பெரிய பட்டணங்களிலும் நகரங் களிலும் நாம் தினசரி காணும் காட்சி (கேட்கும் சத்த-ஜாலம்) தானே இது.

## பாடல்

தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கம் தாங்கக்

கொண்டல்கள் முழவினேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்

தெண்டிரை எழினிகாட்டத் தேம்பிழி மகரயாழின்

வண்டுக ளினிதுபாட மருதம் வீற்றிருக்கு மாதோ.

இப்பாடல் அதி அற்புதமானதோர் கம்ப சித்திரம். கம்பரின் கவிதை நயமாகிய கற்பனு தேவி மேதா விலாசம் விளங்க இப்பாடலில் கொலு வீற்றிருக்கிருள் என்ருல் மிகையாகாது. கம்பரின் கவிதைத் தெய்வம் களி நடன மிடுகிருள் இங்கு. சொற் சுவை, பொருட்சுவை, சந்தம், நடை யாவும் உவமை யழகின் சிகரத்தைத் தொட்டு விட்டன. பாருங்கள் :-

## பொருள்

"சோலைகளாகிய ஆடரங்குகளில் மயில்களாகிய நாட்டியப் பெண்கள் நடிக்க, செந்தாமரைக் கொடிகளாகிய கன்னிகள் மலர்களாகிய தீபங்களை ஏந்த, மேகங்கள் ஆகிய முரசங்கள் ஒலிக்க; கருங் குவளைகளாகிய அணங்குகள் தங்கள் இதழாகிய நீலக் கண்களை விழித்து நோக்க, அலைகளாகிய தூயவெள்ளித்திரை காட்டப்பட, மகரயாழின் இனிய நாதம் போல் வண்டுகளாகிற இசை வல்லார் கானம் பொழிய, மருதநிலமாகிய அரசன் அரசிருப்பான்.

இதைவிட அழகில் மிஞ்சிய வர்ணனை வேறு உண்டா? உருவக அணிக்கு (ருபகாலங்காரம்) ஓர் அணி போல் ஜொலிக்கிறது, பாடல் நயம்; ஒவ்வொரு ஒவ்வொரு

அடியிலும் அருமையான உவமையை உள்ளடக்கிய உருவகம்; ஒவ்வொரு ஒவ்வொரு உருவகத்திலும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் புதுமை; ஒவ்வொரு ஒவ்வொரு புதுமையிலும் திகழும் இயற்கையின் பழமை: இதுதான் கம்பர் கவி நயத்தின் அருமை;

நல்ல கவிதைக்கு அடையாளம் வற்றாத வனப்பு. "A thing of beauty is a joy for ever". "நவம் நவம் ப்ரீதி ரஹோ கரோதி" "பார்க்க பார்க்கப் புதுமை அளிக்கிறது;" என்கிறார் மகாகவி கண்ணன் வடிவை.

கவிதையின் வடிவும் அப்படித்தான்.

"தாமரையில் நித்திய வாசம் புரிவது வண்டுகளும் லட்சுமி தேவியும், விலைமாதர் கண்களும் மன்மத பாணங்களும் நித்திய வாசம் புரிவது காமுகரிடத்தில், முத்துக்களும் பவளங்களும் நித்தியவாசம் புரிவது பெருமேகங்களிடம் (மேகம் காரணம் ஆதலால்), பெரிய அற நூல்களும் சத்தியமும் நித்திய வாசம் புரிவது குடிகளின் நாவில்."

## அடுத்த பாடல் அமைதிக் களஞ்சியம்

நீரிடை உறங்கும் சங்க நிழலிடை உறங்கு மேதி

தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யாள்

தூரிடை உறங்குமாமை துறையிடை உறங்குமிப்பி

போரிடை உறங்கு மன்னம் பொழிலிடை யுறங்குந் தோகை.

நாட்டு வளப்பத்தை நயம்படக் கூறுவதோடு இப் பாடலில் தவழும் ''சாந்தி பாவம்'' மிகவும் அழகியது. பாடலே சாந்த ஸாகரம் ஆக அமைந்துள்ளது.

''நீரிடை உறங்கும் சங்கம்'' எனும் பாடல் செழுமை கொந்தளிக்கும் ஊரில் அமைதி, ஆனந்தம் நிலவும் அமைதி, அரசாளுவதை அழகாக அழகுற எடுத்துரைக் கிறது. அழகு, செழுமை, அமைதி மூன்றும் பாட்டின் போக்கிலேயே மிளிர்கின்றன.

பொருள் :- நீரில் நிம்மதியாக இன்புறுவன சங்கு கள், மர நிழலில் நிம்மதியாக இன்புறுவன எருமைகள்: பூமாலைகளில் இன்புறுவன வண்டுகள், தாமரை மலரில் இன்புறுவாள் திருமகள், கரையிலுள்ள மர வேர்களில் இன்புறுவன ஆமைகள், நீர்த்துறைகளில் இன்புறுவன முத்துச் சிப்பிகள், நெற்போர்களில் இன்புறுவன அன்னப் பறவைகள், பூஞ்சோலைகளில் இன்புறுவன தோகை மயில்கள்

''உறங்கும்'' என்னும் வார்த்தை ஒன்றைக் கொண்டு மகேந்திர ஜாலம் செய்து காட்டுகிறார் கவி. ''தூங்கும், வாழும், மகிழ்ந்து உலவும், திகழும், கிடக்கும்,'' என்னும் பல பொருள்கள் தருகின்றது இந்த ஒரே ஒரு வினைச் சொல். அதுவுமன்றி குடிகள் மட்டுமல்ல பொருள்கள், பட்சிகள், விலங்குகள்கூட, பிறர் தலையீடு இல்லாமல், அவரவர் தங்கள் 'தங்கள் காரியத்தில் ஈடுபட்டு இன்புற்றி ருக்கும் அற்புத நிலைமையைச் சித்தரிக்கிறது, இப்பாடல்.

''தண்டலை மயில்களாட'' ''நீரிடை'' என்னும் இரண்டு பாடல்களும் கற்பனை தேவிக்கும் இயற்கை அன்னைக்கும் கவி அளித்துள்ள அழியாத மங்காத மணி யாரங்களாகும்.

"கலப்பைகள் உழுதலால் மேலே கிளம்பி எழுந்த பொன்னும், வெண் சங்குகள் ஈன்ற முத்தும், பரம்படித்த நிலங்களில் பிரகாசிக்கின்ற இரத்தினக் கூட்டமும், நெல்லும், பசுந்தோகையுள்ள கரும்பும், கருவண்டும், உழத்தியருடைய முகங்களும், மலர்களும், கோசலை நாட்டில், எப்போதும் கண்மலர்ந்து விளங்கும்."

"பாணர்கள் எழுப்பும் இனிய யாழோசையும், தேனுண்டு களிகொண்ட தாளவாத்திய நிபுணர்கள் எழுப்பும் லய ஓசையும் கலந்தொலிக்க, இவ்விரண்டுடனும் ஒன்று கலந்து இடை இடையே மதுரமாக ஒலிக்கும் சங்கீதமானது, வெள்ளிபோல் வெண்ணிற முடைய உப்பரிகைகளில் மேல் மாடங்களில், ஒளி விடும் பசும் பொன் கட்டில்களில், உறங்கும் கருவிழி, மயிலியல் மாதரைத் துயில் எழுப்பும்."

என்ன செல்வச் சிறப்பு! மக்களிடையே எவ்வளவு எக்களிப்பு! என்ன அமைதியான ஆனந்த வாழ்க்கை. கண்ணுக்கும் மனதிற்கும் ஒருங்கே இன்பமளிக்கும் காட்சிகள். அது மட்டுமா? அக் கோசலை நாட்டில்.

ஆலைக்கரும்பின் இனிய சாறும், தலையரிந்த பாளைகளில் உண்டாகும் சுவை மிக்க கள்ளும், சோலைக்கனிகளின் தேனும், தேன் அடையிலிருந்து ஒழுங்காக ஒழுகி வரும் செந்தேனும், பூமாலைகள் சிந்திய பூந்தேனும் அளவு கடந்தோடி (ஆற்றின் மூலம்) கப்பல்கள உலவும் கடலில் கொண்டு மடுக்க அவற்றை உண்டு மீன்களெல்லாம் களிக்கும்."

## தேன் வகையும் கள் வகையும் எத்தனை

"பண்ணொளி போல் இன்சொல் பேசும் உழத்தியருடைய அகன்று நீண்ட கண்களையும், கைகளையும், கால்

களையும், முகங்களையும், வாய்களையும், ஒக்கும் நீலோற்பலம், செந்தாமரை, செவ்வல்லி இவைகளைத் தவிர வேறு களைகள் இல்லாமையால் கள் ஒழுகும் கடைவாயுடைய உழவர்கள் வேலை செய்யாது உலாவிக் கொண்டே நிற்பார்கள். மனைவியரின் அவயவங்களை ஒக்கின்ற பூக்களைக் களைய மனமில்லாதவர்களாய் அவைகளைப் பார்த்து ரசித்துக் கொண்டே நிற்பார்கள்; சிறியோருக்கு (குளத்தில்) மாதர் உறவு கிடைத்தால் (புஷ்பருபமாகவேனும்) அதைத் தவற விடுவார்களா''?

"பெண்கள் பால் வைத்த நேயம் பிழைப்பரோ
சிறியோர் பெற்ருல்''

என்ற வரியில் கம்பரது உலகியலறிவும் நகைச் சுவை மனப்பான்மையும் நன்கு திகழ்கின்றன. ''புதிய நீரில் குடைந்தாடும் கோசல நாட்டு மாதர்களின் கூந்தலிற் சூடிய மலர் மண மும் கஸ்தூரி களப மணமும் கருங்கடல் அலைகளில் கமழும் என்ருல் தேனையொத்த சொல்லும் கோவையொத்த வாயும் கொண்ட, வாள் போன்ற கடைக்கண் வெட்டினுல் ஆடவர் ஆர்வமுறும்படி நோக்குகின்ற அணங்குகளின் எண்ணிக்கையை இயம்ப முடியுமோ''?

''புதுப்புனல்'' என்று தொடங்கும் இப்பாடல் கற்பனை அழகுடன் அதிசயோக்தி (Hyperbole) மிகுந்தது. கருங்கடலின் புலால் நாற்றத்தைப் போக்கிப் பூவும் கஸ்தூரியும் கம கம வென்று கமழும்படி செய்து விடுகிறதாம் அந்நாட்டு மாதர்கள் குளித்த நீரில் பரிமளிக்கும் குழல் மணம்; அப்படி என்ருல் மாதர்களின் தொகை எத்தனையோ!

நைடதத்தை நினைப்பூட்டுகிறது இப்பாடல் நயம். நிடத நாட்டுப் பெண்கள் ஸ்நானம் செய்தபின் கூந்தலைக் காய வைக்கும் அகிற்புகை தான் ஆகாயத்தில் மேலே சென்று குளிர்ந்து, 'திரண்டு மேகமாகி மழையாகப் பொழிகிறது என்கிறார் நைடத-ஆசிரியர். அதையும் மிஞ்சி விட்டார் இங்கு கம்பர். அகிற் புகை மேகமாவது ஒரு வேளை சாத்தியமாகலாம் (புகை மேகமாவது இயற்கையே).

"தூமஜ்யோதிஸ் ஸலிலமருதாம் ஸந்நிபாத; க்வமேக;" என்கிறான் கவிகுல சூடாமணி காளிதாஸன் மேக ஸந்தேஸத்தில். ஆனால் கருங்கடல் கமழுமா? கமழும். கம்பர் கவிதையில்;

அடுத்த பாடலின் அழகைப் பாருங்கள்; மணத்தையும் தான்;

வெண்டளக் கலவைச் சேறும்
  குங்கும விரைமென் சாந்தும்
குண்டலக் கோலமைந்தர்
  குடைந்த நீர்க் கொள்ளைச் சாற்றில்
தண்டலைப் பரப்பும் சாலி
  வேலியும் தழீஇய வைப்பும்
வண்டலிட்டோடு மண்ணும்
  மதுகர மொய்க்கு மாதோ!

"வெள்ளிய பச்சைக் கற்பூரம் கலந்த வெண் சந்தனமும் குங்குமப்பூ கலந்த மிருதுள சீதள செஞ் சந்தனமும். பரிமளிக்கும், குண்டலமணிந்த அழகிய கோசலை நாட்டு ஆடவர் குடைந்தாடிய நீரின் மிகுதியை (கொள்ளையை) க் கூறப்போனால் சோலைகளிலும், செஞ்சாலி வேலிகளிலும்,

கரம்பு நிலங்களிலும், வண்டலிட்டு ஓடுகின்ற (வளப்பம் மிகுந்த) மண்ணிலும் வண்டுகள் ஓயாது ஒழியாது மொய்த்துக்கொண்டே இருக்கும் என்றுதான் சொல்ல வேண்டும்.''

அதாவது வண்டுகள் வாசனையை நாடும். ஆடவர் ஆடிய சுகந்த சந்தனம் கமழும் ஆற்று நீர் பாயுமிடமெல்லாம் வண்டுகள் மொய்க்கும் என்றால் வாசனைப் பூச்சுக்களின் அளவையும் அதை அணிந்த ஆடவரின் தொகையையும் நீங்களே கணக்கிட்டுக் கொள்ளுங்கள் என்கிறார் கம்பர். இப்படி வாசகரைத் திணறடித்து வம்புக் கிழுப்பதில் கம்பருக்கு அபரிமிதமான ஆனந்தம். கவிதை படிக்கையில் கணக்கல்லவா போடச் சொல்லுகிறார் நம்மை;

''சேலுண்ட ஒண் கணாரிற்
றிரிகின்ற செங்காலன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி
கன்றுள்ளி கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரை தாராட்டும் பண்ணை.''

இயற்கையும் கற்பனையும் ''சேலுண்ட'' என்ற பாட

லில் கொஞ்சி விளையாடுகின்றன. "ஸ்வபாவோக்தி" அலங்காரம் (இயற்கையில் உள்ளதை அப்படியே வர்ணித்தல்) துள்ளித் திகழ்கிறது.

"வயல்களில், சேல் மீன் போன்று ஒளிரும் கண்களை யுடைய மாதர்களைப்போல் அழகிய நடையுடன் உலாவு கின்ற சிவந்த கால்களையுடைய அன்னங்கள் பெருமை பொருந்திய தாமரை மலர்களாகிய மென் படுக்கையில் இளங்குஞ்சுகளைக் கண் வளர்த்தின. அக் குஞ்சுகள், காலில் சேறு படிந்துள்ள எருமைகள் ஊரில் விட்டுவந்த கன்றுகளை நினைந்து அன்பு மிகுதியால் மடியிலுள்ள பாலைச் சோரவிட, அப்பாலை உண்டு உறங்குகின்றன. பச்சைத் தவளைகள் அவைகளைத் தாலாட்டுகின்றன."

தொட்டிலில் குழந்தை தூங்கக் காரிகைமார் தாலாட்டும் காட்சி கண்முன் தோன்றுகிறது இப்பாடலைப் படிக்கையில். சிவந்த தாமரை மலரில் வெண்குஞ்சுகள் தூங்கப் பச்சைத் தவளைகள் தாலாட்டுகின்றன. என்ன அழகிய நிறச்சேர்க்கை! தவளைகள் துள்ளித் துள்ளிக் குதித்து தாமரைத் தொட்டிலை ஆட்டுகின்றன. தங்கள் ஓயாத சத்தத்தினால் தாலாட்டுப் பாடுகின்றன. ஸ்வபாவோக்தி யும் ருபகமும் ஒன்றை ஒன்று வென்று நிற்கின்றன. "நளினப் பள்ளி" "மழலைப் பிள்ளை" என்னும் இரு சொற் களும் வெகு அற்புதமாக அமைந்துள்ளன. "சேலுண்ட ஒண்கணாரிற் றிரிகின்ற செங்காலன்னம்" என்று உவமை யைத் திருப்பியமைத்திருக்கும் அழகு (அன்ன நடை மாதர் என்று சொல்வது மரபு) மேலும் வாசகரின் நெஞ்சை அள்ளுகிறது. பார்வதிதேவியின் நடையழகைக் கற்றுக் கொள்ள விரும்பித்தான் இமயமலையில் அன்னங்கள் நிரந்தரம் வாழுகின்றனவாம். "அவைகளுக்குப் பாடம்

கற்பிக்கத்தான் உன் பாதச் சிலம்புகள் 'கலீர், கலீர்' என்று ஒலிக்கின்றன'' என்கிருர் சங்கராச்சாரியார் ஸௌந்தர்யலஹரியில். அங்கு அவரும் உவமையை (உபமானத்தை உபமேயமாகவும், உபமேயத்தை உபமான மாகவும்) மாற்றி அலங்காரத்துக்கு அலங்காரம் செய் கிருர். கம்பரும் இங்கு அவ்விதமே செய்கிருர். பெரி யோர் கருத்து மாறுபடாது என்பது பழமொழி. (Great minds think alike) இந்த வடமொழி, தென்மொழி கவி யரசர்களின் கற்பனே, கவிதைகூட அல்லவா மாறுபடாது, ஒரே மாதிரி தொனியுடன், அணியுடன் ஜொலிக்கிறது;

'செங்காலன்னம்' 'பச்சைத்தேரை' என்னும் அழகிய சொற்கள் என்னென்ன ஜால வித்தை காட்டுகின்றன, ''பச்சை'' ''பண்ணே'' ''தேரை'' ''தாலாட்டும்'' என்பவை களில் உள்ள பிராசமும், மோனேயும் பிரயாசை இன்றி அனுயாஸமாகத் துள்ளி வந்து விழுகின்றன.

இளங் குழவிகள் பாலுண்பதும், உண்டபின் கண் வளருவதும், தாலாட்டுப் பாடுவதும், எவ்வளவு நளினமாக இயற்கையாகக் கூறப்படுகிறது. கோமள தவள அன்னக் குஞ்சும், பரிமள சீதள தாமரைப் பள்ளியும், பச்சைத் தேரையும், பசும்பண்ணேயும் தங்கள் இயற்கைப் பொலி விஞல் கற்பனேயின் அழகுக்கு அழகு செய்கின்றன. மிருதுள—நளின-—பரிமள—-கோமள—-கவிதை என்று கூறலாம் இப்பாடலே.

''பூஞ்சோலேகளில் பூங்குயில்கள் புதுமணம் புணர் கின்றன; பூங் கொம்புகளில் ஆடும் பொன் மயில்கள் அவ்வரங்குக்கு அழகு செய்கின்றன; அரச அன்னங்கள்

தாமரை மலர்ப் பள்ளியில் இருந்து துயில் எழ. கரு வண்டு கள் திருப்பள்ளியெழுச்சி பாடுகின்றன.''

குமார ஸம்பவ காவியத்தில் கவிமன்னன் காளிதாசன் இயற்கையையும் செயற்கையையும் மாற்றி மாற்றி எப்படித் தனது அபூர்வ மேதையினால் அமர சித்திரமாகத் தீட்டுகிறானோ அப்படியே கம்பரும் இயற்கை செயற்கை சேர்க்கை வர்ணனை மூலம் அற்புத காவிய மாளிகை, கவிதைக் கோயில் எழுப்புகிறார்.

## நாட்டுப் படலம்

அழகிய கோசலை நாட்டில்,

''பொருத்தமான மாதர்களுடன் மணம் புரிகின்றவர் களும் பருந்தும் நிழலும் போலப் பிரிக்க முடியாத இலக் கணம் அமைந்த இசைச் சுவையை நுகர்வாரும்; தேவா முதத்தினுமினிய நல்ல நூல்களைக் கேட்டு இன்புறுவாரும் விருந்தினரின் முகம் பார்த்து அன்ன விழா அணி செய் வாரும்;''

''சிவந்த கொண்டையும், கோபம் கொண்ட மனமும், முள்ளாயுதமும் கொண்டு ஒன்றை ஒன்று அடித்துத் தாக்கும் வீராவேசமுடைய சேவல்களைச் சண்டையிடச் செய்து கண்டு களிப்பவர்களும்;''

''பெண் எருமைகள் பெற்ற செங்கண் கடாக்கள், இடி குரலுடன், கடும் சீற்றத்துடன், இருளே இருண்டு வடிவாகி ஒன்றை ஒன்று தாக்குகிறதோ என்று ஐயுறும்படி சண்டை யிட, அதைப் பார்த்து மகிழ்ந்து தமது மலர் சூடிய முடியி லுள்ள வண்டுகள் ஒலிக்கும்படி, மேக மண்டலம் வரை கேட்கும்படி கை கொட்டி ஆரவாரம் செய்வோரும்;''

''முள் பொகுட்டையுடைய தாமரைகளின் வெண் முளைகள் ஒடியவும், முத்தும், பொன்னும் தள்ளப்படவும், இரத்தினங்கள், இங்குமங்கும் சிதறவும். சலஞ்சலம் என்னும் சங்குகள் முழங்கவும், படைச்சால்களில் மீன்கள் துள்ளித் துடிக்கவும், ஆமைகள் தங்கள் உடம்பையும் தலையையும் சுருக்கிக் கொள்ளவும் வரால் மீன்கள் மதகு களுக்குள்ளே ஒளித்துக்கொள்ளும் படியாகவும், உழுகின்ற கடாமாடுகளை அதட்டுகின்ற உழவர்களும்;''

''முக்கனிகள், பல்வகைப் பருப்புகள், அவைகளை அமிழ்த்த விடுகின்ற நெய், செக்கச் சிவந்த ஆடைத்தயிர், உயர்ந்த கற்கண்டு, சர்க்கரை இவை கலந்த அறுசுவை உண்டியை, தாமும் தம் விருந்தும், தம் சுற்றத்தாரும் சூழ இருந்து. அமுத உணவு அருந்தும் அந்தணர்களின் வீடு களின் ஆனந்த ஆரவாரமும்'' நிறைந்து மாந்தர் குதூகலத் துடன் 'கலகல'வென்று விளங்குவதைக் காணலாம்.

''மநு நெறிமுறை வழுவாது ஆறிலொரு கடமை வாங்கி அவாநீக்கி, சினமொழிந்து அரசன் (தசரதன்) அரசாட்சி செய்ய பூதேவி தன் பாரத்தை நீக்கி இளைப் பாறுவது போலத் தோன்றும் வர்த்தகக் கப்பல்கள் பொற்

கட்டிகளைக் கொண்டுவந்து சொரிந்துவிட்டுத் தங்கள் நீண்ட முதுகை நெளித்துக் கொள்ளும்.''

''நெல்லரிச் சுமைகளை குவித்து ஆகாயத்தை அளாவும் படி போர் கட்டுவார்கள்; அவைகளில் அடையாளம் குறிப் பார்கள்; அப்போர்களில் இருந்து நெல்லைச் சரித்து எடுத்து அம்பாரம் செய்வார்கள்; எளியவர்களுக்குக் கொடுத்தபின் மிகுதியான நெல்லை, விருந்தளித்துத் தாமும் உணபதற் காகத் தம் வீடுகளில் கொண்டுபோய்ச் சேர்க்கும் பொருட்டு, வண்டிகளில் நிரப்பி, போகும் பாதை புதையும் படியாகவும் பூமாதேவி நெளியும் படியாகவும் (அவ்வளவு பாரம்;) வண்டிகளை ஓட்டுவார்கள்.''

மேற்கண்ட ''எறிதரு மரியின் சும்மை'' என்று தொடங்கும் பாடலில் காணும் தானிய வளமை (அதுவும் நெல்) அப்படியும் ஒருகாலம் பாரத நாட்டில் இருந்ததா என்று நம்மைத் திகைக்கச் செய்கிறது.

''கதிர் விடு வயல்களில் உள்ள பயிர்ப் பொருள்களை யும், வாசனை வீசு பூஞ்சோலைகளில் உள்ள பூ, விதை' தேன் ஆகிய பூம் பொருள்களையும், முதிர்ந்த பல்வகை மரங்களின் பழம், பட்டை, இலை, வஜ்ரம் முதலிய அரும் பொருள்களையும், பருப்பு வகைகளையும், முல்லை நிலத்தில் உள்ள பதிகள் பதிக்கப்பட்ட கொடிகளில் வளர் காய்கறிப் பொருள்களையும் பூமியில் குழிகளில் வளரும் பூஷணி முதலிய குழிப்பொருள்களையும், பூமிக்கடியில் வளரும் கிழங்கு வகைப் பொருள்களையும் அழகிய மலர்களிலிருந்து தேனிக்கள் தேன் சேகரிப்பதுபோல் உழவர்கள் திரட்டிக் குவிப்பார்கள்.

தன வகை, தான்ய வகை, கனி வகை, காய் வகை, முதலிய எண்ணிறந்த, இன்றியமையாத, அரிய பொருள் களைக் குப்பல் குப்பலாகக் குவிக்கும் கோசல நாட்டு உழ வர்களின் ஊக்கம், உற்சாகம், செயல், திறன், தொழில் திறமை யாவும் நிச்சயம் நம்மைப் பிரமிப்படையச் செய் கின்றன. தன் தொழிலைச் செவ்வனே, செய்வன திருந்தச் செய்யும் அவர்கள் நாட்டில் பஞ்சம் பஞ்சாய்ப் பறக்காதா? தற்கால பாரதம் வெட்கித்தலைகுனிய வேண்டிய படிப்பினை செறிந்த பாடல்:

பாடலைப் படித்துப் பாருங்கள்;—

''கதிர் விடு வயலினுள்ள
கடிகமழ் பொழிலினுள்ள;
முதிர் பல மரத்தினுள்ள;
முதிரைகள் புறவினுள்ள
பதிபடு கொடியினுள்ள;
படிவளர் குழியினுள்ள;
மதுவன மலரிற் கொள்ளும்
வண்டென மள்ளர் கொள்வார்.

''உள்ள, உள்ள'' என்னும் சொல்லின் வன்மையினால் இல்லை, இல்லை, இனி நான் இங்கு இல்லவே இல்லை என்று ஓடுகிறது இல்லாமை: ''ஆண் வண்டுகள் இள நங்கைய ரின் தாமரை மலர் போன்ற ஒளி பொருந்திய முகத்தில் உள்ள மை விழிகளை அழகிய கருநிறப் பெண் வண்டுகள் எனக்கருதி ஆசை கொண்டு மருத நிலத்திலேயே தங்கி இருந்தன''

கருவண்டு போன்ற விழிகள், தாமரை போன்ற முகம் என்பதை எவ்வளவு சாதுரியமாகக் கூறுகிறார்.

"கன்றுகளை நினைந்து நினைந்து கார்மேகம் போன்ற கரும் எருமைகள் பாலைச் சொரிய, அப்பாலின் இடைவிடாத தாரைகளால் நெற்பயிர்கள் தழைத்து வளரும்"

நிச்சயம் நாம் பொறாமைப் படவேண்டிய காட்சி'. பாலூற்றி நெல் வளர்ந்தால்,

'சமையல் அறைகளிலிருந்துபெரிய பெரியஉலைகளின் கழுநீர் வெளியேற, அம் மாவெள்ளம் பாய்ந்தோடி குளங்களிலும், பூஞ்சோலைகளிலும், கமுகந்தோட்டங்களிலும் புகுந்து நட்டிருக்கின்ற செந்நெல் நாற்றுக்களை வளர்ப்பிக்கும்.'

இது அதற்குமேல்; வெண்கழுநீர் பாய்ந்தோடிச் செந்நெல் நாற்று பசும் கழனியில் வளரும் காட்சிக் காணக் கிடைக்குமா?

"சேவல்களும், பெட்டைகளும் குப்பை மேட்டைக் கிளற, அதில் சிந்திக்கிடக்கும் செம் மாணிக்கங்கள் "பப்பள பளபள" வெனப் பிரகாசிக்க, அவற்றை மின் மினிப் பூச்சி என எண்ணித் தூக்கணாங்குருவிகள் தங்கள் கூடுகளில் கொண்டுபோய் வைத்துக்கொள்ளும்."

இதற்கு என்ன சொல்வது?

"குப்பை கொலோ முத்தும்." என்று துரியோதனன் கூறுவதாகப் பாஞ்சாலி சபதத்தில் பாரதியார் வர்ணிக்கிறார். இங்கோ "குப்பையே மாணிக்கம்" (குப்பையில் அல்ல) என்கிறார் கம்பர்.

மாணிக்கத்தின் மதிப்புத் தெரியாமலா குப்பையில் விட்டெறிந்து விட்டார்கள்? அல்லவே அல்ல, அவ்வளவு செல்வ மிகுதி: மிச்சம்.

''மலய கிரிகீ பீலனி சந்தன் தேத் ஜலாய்''

''மலயமலை வேடுவச்சி சந்தனக் கட்டையை அடுப்பெரிப்பாள்'' என்பது ஹிந்திப் பழமொழி. மலயமலை யில் சந்தனம் மிகுதி. அதனால், கட்டையெலாம் சந்தன மாகவே இருந்தால் அவள்தான் என்ன செய்வாள் பாவம்:

அதுவுமின்றி பறவைகளின் இயற்கை குணத்தை எவ் வளவு அருமையாக வெளியிடுகிறார் கவி. கோழி சீத்தல், தூக்கணாங்குருவி தீபத்துக்காக மின்மினிப் பூச்சியைத்தன் கூட்டில் ஒட்டவைத்தல் இரண்டும் உண்மை: இயற்கை குணம். இது சாதாரணமாக யாருக்கும் தெரியும். ஆனால் அதை அழகு ததும்ப வெளியிடும், சாதுரியம் கம்பர் போன்ற கவிகளுக்குத்தான் உண்டு.

''தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆய மங்கைய ரங்கை வருந்துவார்.''

சின்னஞ் சிறு பாடலில் இன்னமுதம் பொழிகிறார் கவி. தயிர் கடையும் காட்சி. நம்மில் அநேகமாக எல்லாருக்கும் தெரியும். ஆனால்

''வெண் தயிர்த்தாழிகளில் மத்துக்களின் ஓசை விட்டு விட்டுத்துள்ளி ஒலிக்கவும், வெண்சங்குவளையல்கள் 'கணீர் கணீர்' என்று சப்திக்கவும். மெல்லிய, நுட்பமான இடை முன்னால் போய்ப் போய் வளையவும், இடையப்பெண்கள் தங்கள் அகங்கை வருந்த, சிவக்கச் சிவக்கத் தயிர் கடை வார்கள்'' என்பதில்தான் என்ன இனிமை, மாதுர்யம் சொட்டுகிறது.

பாகவதத்தில் வியாஸரும், கிருஷ்ணகர்ணாமிருதத்தில் லீலாசுகரும் இவ்விதமே ஆய மாதர் தயிர் கடைதலை வர்ணிக்கின்றனர். அந்த மாதுர்யமும் மனமோகன காம்பீர்யத்தைப் பொழியும் இயற்கைப் பொலிவும் இப்பாடலில் ததும்புகிறது. தயிர் கடையும் காட்சி தத்ரூபமாகக் கண்முன் தோன்றுகிறது. கயிறு இங்கும் அங்கும் இழுக்கப்பட, இனிய 'சலசல' நாதத்துடன் மத்து சுழல, வெண்ணை மேலே திரண்டெழுவதை மனக்கண்முன் காண்கிறோம்,

ஒவ்வொரு அடியிலும் உயர்ந்த வர்ணனை, ஒவ்வொரு சொல்லிலும் குமிழி விட்டெழும் எழில், கடைசிவரியில், வனப்புக் களஞ்சியமாக "அங்கை வருந்துவார்'' என்ற பொருத்தமான முத்தாய்ப்பு. இவை யாவும் கம்பரின் மேதா விலாசம் அளிக்கும் விருந்து. இப்பாடலைத்திரும்பத் திரும்பப் பாடினால், மத்தொலி' துள்ளுவது, போன்ற ஓசை இன்பத்தைக் கேட்கிறோம்.

Sound echoing sense (onamatopoeia) ''அர்த்த பாவத்துக்கேற்ற ஓசையின்பம்'', என்பது கம்பரிடம் ஒரு தனி அலங்காரமாக இராமல் பாடல் நயத்திலேயே ஊடுருவிப் பரிமளிக்கிறது. பாவத்துக்கேற்ற சத்தம், சத்தத்துக்கேற்ற ஓசை, ஓசைக்கேற்ற சொல்லோவியம் கம்பரிடம் அபரிமிதம்.

தமிழ்மொழிக்கே இது ஒரு அரிய சக்தி, தமிழ் இலக்கியம் ஓசை இன்பத்துக்குப் பெயர் பெற்றது.

> ''தூங்கக் காண்பது மாம்பழக் கொத்து
> சுழலக் காண்பது பூந்தயிர் மத்து''

என்பது ஓர் தமிழ்ப்பாடல்

இதில் மத்து சுழன்று சுழன்று கடைவது போன்ற

சுழற்சி மனத்தை வசீகரிக்கிறது. பாடல் நயமும், தமிழ் நயமும் சேர்ந்து நம்மை மயக்குகின்றன.

## நாட்டுப்படலம்

"கள்ளங்கபடற்ற கருவிழிகளையுடைய நெய்தல் நிலச் சிறுமியர்களால் நறுக்கிய பாக்குடன் கலந்து கிடக்கும் பொருள்களைப் பெண்மக்கள் கொழிக்க, அப்படிக் கொழித்துத்தள்ளப்பட்டவைகளைக் கொண்டு தமது வீட்டு முற்றத்தில் சிற்றில் கட்டி விளையாடப்பட்டுச் சிதறிக்கிடக்கும் முத்துக்கள்"

பாக்கைக் கொழித்தெடுக்க, கலந்து கிடக்கும் முத்து கொழித்துக் குப்பையாகவே எறியப்படும், அதைக் கொண்டு குழந்தைகள் வீடு கட்டி விளையாடிச் சிதறவிடுவார்கள்: என்ன செல்வ மிகுதி!

"குப்பை கொலோ முத்தும்; என்று அதிசயக்கேள்வி கேட்கிறார் பாரதியார். 'ஆமாம். குப்பைதான் முத்து: கோசலை நாட்டில்" என்கிறார் கம்பர்.

நம் நாட்டுத்தாராட்டுப் பாடலில்:—

"ஆரார் என்கிற கண்ணுட்குத் தாயார் எங்கு
போனாளோ?
சங்கு சலிக்கச் சல்லடைக்குப் போனாளோ?
முத்துக் கொழிக்க முறம் தேடப் போனாளோ?

என்று அருமையான இரண்டடிகள் வரும். குழவியின் தாய் முத்துத்தான் கொழிப்பாள்; அவ்வளவு செல்வச் சீமாட்டி என்பது வெளிப்படை, ஆனால் கம்பரது காவிய மங்கையர்கள் முத்தைக் கொழித்து எடுத்துக் கொள்ள

மாட்டார்கள்: ஒதுக்கித் தள்ளி விடுவார்கள்: சிறுமியர் கல், புளியங்கொட்டை, கட்டை வீடு கட்ட மாட்டார்கள்; முத்து வீடுகட்டி விளையாடுவார்கள்:

குருவிக்கும் கோழிக்கும் மாணிக்கமும் குழந்தையற்கு முத்தும் குப்பையில் கொள்ளை கொள்ளையாகக் கிடைக்கும் இக் கோசலை நாட்டுச் செல்வச் சிறப்பை என்னென்பது!

"மென்மையான பெண் செம்மறியாடுகள் பெற்ற ஆட்டுக் கடாக்கள் வரி செறிந்த கொம்புகளும் வலிமை நிறைந்த தலையும் வ்ாய்க்கப் பெற்றனவாய், இடி இடிப்பது போல் ஒன்றை ஒன்று தாக்கி முட்டும் சத்தத்தால் அதிர்ச் சியுற்று, கர்ப்பம் கொண்டு மலை முடியில் படிந்து நிற்கும் நீருண்ட மேகங்கள் பயத்தினுல் வாயைத் திறந்து மின்னலைக்காட்டும்.

கர்ப்பிணிகள் திடீரென்று ஒலிக்கும்சத்தத்தால் திடுக் கிடுவது சகஜம். மேகம் பொழியும் போதுதான் சாதாரண மாக மின்னும். நீருண்ட மேகம் சூல் முதிருமளவும் மலை மேல் படிந்து இருந்து முதிர்ந்த பின் வானிலேறி மழை பெய்தல் இயல்பு. பயந்தவர் திடுக்கிட்டு வாயைத் திறப்ப தும் சகஜம். இம்மூன்றையும் சேர்த்து ஜால வித்தை காட் டுகிறுர் கவி. "துருவை மென்பிணை" என்ற பாடலில்.

ஆட்டுக்கடாக்கள் முட்டிச் சண்டையிட, சூல் கொண்டுள்ள மேகம்அதிர்ச்சியுற்று, காலமில்லாக் காலத் தில் வாயைத் திறந்து மின்னும்.

"உருமிடித் தெனதாக் குறுமெல் லொலீ
வெருவி மால்வரைச் சூன்மழை மின்னுமே"

கடைசி வரி அட்சர லட்சம் பெறும்;

"திணைச் சிலம்புவ தீஞ்சொ லிளங்கிளி;

நனைச் சிலம்புவ நாகிளவண்டு; பூம்
புனைச் சிலம்புவ புள்ளினம்; வள்ளியோர்
மனைச் சிலம்புவ மங்கல வள்ளையே:''

தினைப்புனங்களில் ஒலிப்பன மதுரமான சொற்களை யுடைய இளங்கிளிகள்; பூ அரும்புகளில் ஒலிப்பன மிக்க இளமையுடைய கருவண்டுகள்; பூம் பொய்கைகளில் ஒலிப்பன பறவைகள். கொடையாளிகளின் வீடுகளில் ஒலிப்பன மங்களகரமானஉலக்கைப் பாடல்கள்''

இப்பாடலின் அழகுக்கு உவமை இப்பாடல்தான்: தினைப்புனம், பூ, மொட்டு, பூம் பொய்கை இவைகளில் முறையே கிளி, வண்டு. புள் ஒலிப்பது இயற்கையின் இனிய சங்கீதம். வள்ளல்களின் வீடுகளில் மங்கல வள்ளை (பரிமளப்பொடி முதலியன இடிக்கையில் பெண்கள் பாடும் பாட்டு) ஒலிப்பது செயற்கைக்கீதம். இப்பாடலின் இனிமைக்கோர் இனிமை தருவது இக் கடைசி அடி.

வள்ளல்களின் வீடுகளில்தான் உலக்கைச் சத்தம் ஓயாமல் கேட்கும் என்பதை எவ்வளவு மனோகரமாகக் கூறுகிறார், கொடுப்பதே தொழிலாகவுடையவர்கள் வீட்டில் இடிப்பதே தொழிலாக இருப்பார்கள்: என்ன அருமையான பாவம்: நயம்படக் கூறுவதில் நிபுணர் நம் கவி.

''கன்றுகளையுடைய பெண் யானைகளை விட்டுப்பிரித்து ஆண் யானைக் கூட்டங்களை வன்மையான இரும்புச் சங்கிலிகளில் அகப்படச் செய்கின்ற, காட்டாற்று வெள்ளம் சூழ்ந்த குன்றுகளைத் தமது அரசாக வுடைய குறிஞ்சிநில (மலைப் பிரதேசம்) ஜனங்களின் ''கலகல'' சத்தமானது' இனிய மடவன்னங்களுடன் கூடிக் குலாவும்ஆண் அன்னங்களைப் பிரித்துவிடும்.

மலை ஜாதியார் பெண் யானைகளைப் விட்டுப் பிரித்து ஆண் யானைகளைக் குழிக்குள் வீழ்த்துவார்கள். அவர்கள் போடும் சத்தம் பயமுறுத்தி அன்ன ஜோடிகளைப் பிரித்து விடும்,

வேண்டுமென்றே யானைகளைப் பிரிப்பார்கள்: அன்னங்கள் பயந்து பிரிந்துவிடும், பயங்கரமும், பாதகமும் வீரமும் நிறைந்த செய்கை.

காட்டானைகளைப் பிடிக்கும் துணிவுள்ள அஞ்சா நெஞ்சினர் வாழும் மலைப் பிரதேசம் என்பது தாத்பர்யம்.

"வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி
துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி
புள்ளி கொள்வன பொன்விரி புன்னைகள்
பள்ளி கொள்வன பங்கயத்தன்னமே"

அழகை அள்ளி அள்ளி வீசும் அற்புதமான பாடல், இப்பாடலில் கவிதை நயமா, சொல்நயமா, பொருள் நயமா எது உயர்ந்தது எதைப் புகழ்வது என்று தெரியாமல் திணறுகிறோம். இயற்கையின் எழிலைப் பாட்டின் நயம் வென்று நிற்கிறது: எதுகையும், மோனையும் ஓசையும் ஒன்றையொன்று மிஞ்சிநிற்கின்றன பாருங்கள்.

கிழங்குகளைத் தோண்டி எடுப்பவர்களால் மாணிக்கங்கள் கொள்ளப்படுகின்றன; தூங்கும் மாங்கனிகள் ரசத் துளிகளைக் கொண்டிருப்பன: பொன்போலப் பூம்பொடி (மகரந்தம்) விரிந்த புன்னை மலர்கள் புள்ளிகளைக் கொண்டிருப்பன. தாமரை மலர்களில் அன்னங்கள் பள்ளிகொண்டிருப்பன"

இது காவியமா ஓவியமா? கவிதையா சிற்பமா?

செய்யுளா ஸங்கீதமா? இவை எல்லாவற்றின் கலையழகையும் அலையலையாகத் துள்ளிப் பாயக் காண்கிறோம் இங்கே.

''கொள்வன: கொள்வன'' என்ற சின்னஞ்சிறு சொல்லினால் வாசகர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டுவிட்டார் கம்பர்.

''தூங்கிய மாங்கனி'' என்ற இனிய பதச் சேர்க்கை ரஸகுண்டு போல், சுவைமிகுந்து மரத்தில்தொங்கும் மாம் பழத்தை எவ்வளவு ருசியுடன் நம் மனக் கண்முன் கொண்டு வருகிறது.

மஞ்சள் மகரந்தம் மலரும் புன்னைப்பூ ''பொன்விரி புன்னை'' புள்ளி புள்ளியாக இருக்கும்; எவ்வளவு நுண்ணிய நோக்கு: நூதன வாக்கு. கடைசி வரி உண்மையில் நமக்கு மயக்கம் தந்து தூக்கம் வருவிக்கிறது. அவ்வளவு அழகு செறிந்த அடி; துள்ளித் துள்ளி வரும் பாடலின் வேகம் இங்கு பதவிசாகப் பள்ளிகொள்கிறது. இதுதான் கலையின் திறமை. முதல் மூன்று அடிகளும் வேகமாக வந்து கடைசி அடி நிதானமாக நிற்கிறது. ''பங்கயத் தன்னமே'' என்ற ''ஏ'' காரத்தில் கலையின் திறமை முழுதும் திரண்டு திகழ்கிறது என்றால் மிகையாகாது.

''உழத்தியர் பாடுகின்ற குரவைப்பாட்டுகள் கொன்றைக் குழல்களையும் வேய்ங்குழல்களையும் உடைய இடையர்களுடைய முற்றத்தில் இருக்கின்ற பசுங் கன்றுகளைத் தூங்கப் பண்ணும்: நெய்தல் நிலப்பெண்கள் பாடுகின்ற ''செவ்வழி'' என்ற பண் (காலைப்பாட்டு) சிறு கதிர்களை தினைப்புனக் காவலிற் கட்டை உடைத்து நிற்கும்''

புல்லாங்குழல் இசையை வெல்லும் உழத்தியர் பாட்டி ஞல் இடையர்கள் வீட்டுக் கன்றுக்குட்டிகள் தூங்கி விழும். நெய்தல்நில மங்கையர்பாட்டிஞல் தினைப்புனம் காவல் செய்பவர் தன் தொழிலை விட்டு இசைச் சுவை யில் மெய்மறந்து நிற்பர்; அவ்வளவு இனிமை'.

''மூங்கில்கள் காற்றிஞல் மோதப்படுவதால் அகன்ற பெரிய மலைகளில் இருக்கும் தேனடைகள் கிழிந்து அவை களில் இருந்து பச்சைப் பாம்பு தொங்குவதுபோலப் பசுந் தேன் தாரைதாரையாக ஒழுகும். அவ்வொழுக்குசெங்கழு நீர் மலரும் குளங்களின் மதகுகளின் வழியாகப்பாயும். அப்படிப் பாயும் தேனையே காற்றிஞல் ஆட்டப்பட்ட சேப்ப மடல்கள் தம்மேல் மோத மோத, சுரி வளைச் சங்கு கள் மேய்ந்து நிற்கும்:''

''சேம்பு கால் பொர'' என்னும் பாடலில் இயற்கைக் கற்பனை வெகு இனிமையாக அமைந்துள்ளது:—

சுரி முகத்தையுடைய சங்குகள் பசுந்தேனையே தங்கள் வாய்களில் நிரப்பி நிற்கும். எந்தப் பசுந்தேனை? செங்கழு நீர் பூத்துச் சொரியும் குளங்களின் மதகுகளின் வழியாகப் பாய்ந்தோடிவரும் பசுந்தேன், எங்கிருந்து பாயுந்தேன்? அகன்ற, உயர்ந்த பெரிய மலைகளில் இருந்து. எப்படிப் பாய்கிறது? பச்சைப்பாம்பு தொங்குவதுபோல். ஏன் அப் படிப் பாய்கிறது? மூங்கில் காடுகளைக் காற்று அசைக் கிறது. மூங்கில்களின் நுனிகள் தேனடைகளைப் பொத்து விடுகின்றன. அதஞல்.

''காம்புகால் பொரக்கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப்பாய் பசுந்தேறலே''

கோசலை நாட்டுச் சுரி வளைச் சங்குகளின் உணவு பசும் மலைத் தேன்தான். மற்ருேருணவை அவை உண்ணு.

இங்கு எல்லாம் இயற்கை யன்னையின் இயற்கையான செய்கைதான், இவ்வளவு இனிமை சொட்டச் சொட்டத் திகழ்கிறது.

மூங்கிற் காடுகள், மலைகள், தேனடைகள், குளங்கள், செங்கழுநீர்ப்பூக்கள் சுரி வளைச் சங்குகள், சேப்ப மடல் கள்-அவ்வளவு அதிகம் கோசலை நாட்டில்.

இயற்கையை எப்படி எப்படி எல்லாம் படம் பிடிக் கிறார் கவி: மலையுச்சியில் தேன் கூடுகளில் இருக்கும் தேன் குளக்கரையில் உள்ள வெண்சங்குகளின் வாய்க ளில் வந்து விழுகிறது. அருமையான விருந்து: அழகிய விருந்தாளி.

பெருந்தடங் கட்பிறை நுதலார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே:

"மிகப் பெரிய கண்களும், பிறைபோன்ற நெற்றியும் உடைய மாதர்களுக்கெல்லாம், கல்விச்செல்வமும், பொருட் செல்வமும், சிறந்து மலர்ந்து இருத்தலால், வறுமையால் வாடி தம்மை நாடி வந்தவர்களுக்குக் கேட்ட தைக் கொடுத்தலும், தினந் தோறும் விருந்தோம்பலும் அல்லாமல் வேறு தொழில் ஏது?

அருமையான படிப்பினை புகட்டும் பாடல்:

'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளு த்தி'' விட்டார்கள், கோசலை நாட்டார். கோசலை நாட்டு மாதர் அழகும், இளமையும், செல்வமும் மட்டுமா உடை யவர்களாக விருந்தார்கள்? இல்லவே இல்லை. "கல்வி

யறிவும் பூத்து இருந்தது. அவர்களிடம் அரைகுறைக் கல்வியல்ல; அகம்பாவக் கல்வியல்ல; வயிற்றுப் பிழைப்புக் கல்வியல்ல; விவாகக் கல்வியும் அல்ல; பரிபூரண பகுத் தறிவு நிறைந்த கல்வி, பண்பட்ட கல்வி பூத்து விளங்கியது ஏன் எனில்

A little Knowledge is a dangerous thing
(A. Pope)

"Learning without thought is mere waste,
And thought without learning is dangerous.
(Confucius)

என்பது அவர்களுக்குத் தெரியும். ஆதலால் கல்வி மலர்ந்து விளங்கும்படி படித்திருந்தார்கள் மாதர்கள். அதனால் இல் லற வாழ்க்கை நரகமாக மாறிவிடவில்லை; இனிமையும் இன்பமும் அறமும் செறிந்த சுவர்க்கமாகவே மிளிர்கிறது.

Cultured, well educated and
Kind hearted ladies, indeed!

செல்வமும் கல்வியும் சேர்ந்து இருந்ததால், பண்பும் அருளும் இயற்கையிலேயே பொலிந்தன. அறம்வளர்ந்தது

"பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்" என்ற அடியில் விளங்கும் உலகியலறிவின் ஆழத்துக்கு எதுவுமே ஈடாகாது.

வீடுகளில் கல்வி செறிந்த செல்வ மகளிர் "இல்லை யென்றோருக்கு" அள்ளி அள்ளிக் கொடுத்து இல்லையென்ற கொடுமை நாட்டில் இல்லையாகச் செய்து விட்டார்கள் ஆங்காங்கு மலிந்து கிடக்கும் சத்திரங்களிலும். சாவடி களிலுமோ? அந்தக் காட்சியையும் காண்போம்.

"பிறைமுகம் போல் வளைந்த பெரிய பெரிய அரிவாள் மணையினால் துண்டிக்கப்பட்ட கறி காய்த் திரள்களும் பருப்பு மலைகளும். வெண்முத்துப் போன்ற அரிசிக் குவியல்களும் எப்போதும்நிறைந்துகுவிந்து கிடந்தன அன்னச் சத்திரங்களில்

"பிறை முகத்தலைப் பெட்பின் இரும்பு போழ்
குறை கறித்திரள் குப்பை பருப்பொடு
நிறை வெண்முத் தினிறத் தரிசிக்குவை
நிறைவ கொட்பின வூட்டிடந் தோறலாம்:

தற்காலம் காணக்கிடைக்காத காட்சி

கரி நிறத்துருக் கொண்ட கல்லைப் புசிக்கும் நாம் "நிறைவெண் முத்தினிறத் தரிசிக்குவையை (குவையா? ஒரு மணியை:) நேரில் எங்கு காணப் போகிறோம்,

இவ்வித இடங்களில் கவி வேண்டுமேன்றே இக்கால பாரதத்தை எள்ளி நகையாடுகிறாரோ என்று தோன்றுகிறது. உண்மையில் அப்படி அல்ல. ஆயினும் வர்ணனையின் சிறப்பும் வஸ்துக்களின் நிறைவும் அவ்வளவு தத்ரூபமாக நம் கண்முன் தோன்றி, நம்மையறியாமல் இக் காலத்தையும் அக்காலத்தையும் ஒப்பிட்டு நோக்கச் செய்கின்றன. கவியின் திறமைக்கு இதுவும் ஒரு சான்று.

அடுத்த பாடலில் அடுக்குகிறார் பாருங்கள்;—

"கலஞ்சுரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ்சுரக்கும் நிறைவள நன்மணி
பிலஞ்சுரக்கும் பெறுதற்கரிய தங்
குலஞ்சுரக்கும். ஒழுக்கம் குடிக்கெலாம்

அந்நாட்டுக் குடிமக்களுக்குக் கப்பல்கள் கணக்கற்ற திரவியங்களைச் சுரக்கும். எடுக்க எடுக்க அளித்துக்

கொண்டே இருக்கும். பல தேசங்களில் இருந்து கொண்டு வந்து சொரியும். பூமி நிறைந்த வளப்பத்தை அளித்துக் கொண்டே இருக்கும். கனிச்சுரங்கங்கள் நல்ல விலையு யர்ந்த இரத்தினங்களை அள்ள அள்ள அளித்துக் கொண் டே இருக்கும். பெறுதற்கு அருமையாகிய தமது குடிப் பிறப்பு நல்லொழுக்கத்தை இடைவிடாது சுரக்கும்.

கப்பல்கள் திரவியம் சொரிய, பூமி செழுமையைச் சொரிய சுரங்கங்கள் நவமணிகளைச் சொரிய இவ்வளவு செல்வமிருந்தும் தீயவழிச் செல்லாது மக்கள் நன்னெறி யில் நின்று நல்லொழுக்கத்தை நாடுவார்கள் என்பது குறிப்பு.

"சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச் சொல்"
—நாலடியார்

கோசல நாட்டுக் குடிமக்கள் கல்வி, செல்வம், அழகு இளமை, வீரம், அறம் இவைகளில் மட்டுமல்ல; ஒழுக்கத் திலும் உயர்ந்திருந்தார்கள்.

"ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்
ஓதலிற் சிறந்தன்றே ஒழுக்கமுடைமை"
—(முதுமொழிக்காஞ்சி)

"மக்களுக்கு கல்வியைக் காட்டிலும் ஒழுக்கமே சிறந் தது"

நம் முன்னாள் ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத் இதையே தான் வற்புறுத்திக் கூறுகிறார்.

"Character building was and should be the ideal goal of education"

''கல்வியின் நோக்கம், உயர்ந்த லட்சியம் ஒழுக்க முடைமையாகச் செய்ய வேண்டியது அவசியம்''

முன்னாள் ஜனாதிபதி

கல்வி ஒழுக்கத்தை வளர்க்க வேண்டும். இல்லையேல் அது கல்வியாகாது.

கல்வியிற் கரைகடந்த கம்பர் ஒழுக்கமுடைமையை எவ்வளவு மதிக்கிறார் என்பது,

''குலஞ்சுரக்கு மொழுக்கம் குடிக்கெலாம்''
என்னும் வரியில் நன்கு புலனாகிறது.

கம்பர் கருத்தின் மணிமகுடமாக அமைந்துள்ளது இக்கடைசி வரி.

நற்குடிப் பிறப்பு பெறற்கரும் பேறு. அதிலும் ஒழுக்க முடைமை.

''கற்கக் கசடறக்கற்பவை; கற்ற பின்
நிற்க அதற்குத்தக''

என்கிறார் தெய்வப் புலமை திருவள்ளுவனார். நற்குணம், நற்செய்கை, நன்னடத்தை, நல்லொழுக்கம் வாய்ந்த குடிமக்களைக் கொண்ட கோசல அரசு (வல்லரசல்ல) என்பதில் சந்தேகம் என்ன?

''சுரக்கும்'' என்னும் ஒரு சொல்லைப் பல முறை பிரயோகித்துத் தன் தனி நடையின் வனப்பை விளக்குகிறார் கவி. ''சுரக்கும்'' கறக்கும், பெய்து தரும், இடைவிடாது 'பொழியும், எடுக்க எடுக்க வளரும், அள்ள அள்ளக் குறையாது, ஊற்றுப் போல ஊறும் என்னும் இத்துணைப் பொருள்களையும் ஒருமிக்க அளிக்கிறது இச்சிறு

சொல். பொருத்தமான பாவம் நிறைந்த சொற்களைப் பொறுக்குவதில் கம்பர் நிகரற்றவர். அதை இணைப்பதிலோ அற்புத மேதாவி; அபார சிற்பி.

"கூற்ற மில்லையோர்" என்று தொடங்கும் அடுத்த பாடலில் இருந்து "நாடு கூறிஞ நகரங் கூறுவாம்" என்று முடியும் கடைசிப் பாடல் வரை, இனி வரும் பாடல்கள் அழகு, உவமை, ஓசை, சொல், பொருள், பாவம், சந்தம் எல்லாவற்றிலும் உயர்ந்து ஒன்றையொன்று கவிதை எழிலில் மிஞ்சி நிற்கின்றன. இவைகளில் எந்த ஒரு பாடலை விட்டு விட்டாலும இப் படலத்தின் அழகும் சுவையும் குன்றிப் போய்விடும். இயற்கை செயற்கை இரண்டையும் தனக்கே உரிய பாணியில், ஓசை இன்பம் சொட்டச் சொட்ட வெளியிடும் இச் இச் சுவைவததும்பும் பாடல்களின் தன்மைகளைப் பின்னர் காண்போம்.

நீல நெடுமால் பிறக்கும் பேறு பெற்ற, ஸரயூ நதி பாயும் கோசல நாட்டின் சுபிட்சத்தை, செழுமையை, வளமையைப் பார்த்தோம். இனி அந்நாட்டு மக்களின் பண்பை, தன்மையைப் பார்ப்போம்.

## நாட்டுப் படலம்

கூற்ற மில்லையோர் குற்ற மில்லாமையால்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் செய்கையால்
ஆற்ற னல்லற மல்லதி லாமையால்
ஏற்ற மல்ல திழிதக வில்லையே.

கோசல நாட்டில் கூற்றம் (யமன், சாவு) கிடையாது. ஏன்? உயிர்கள் குற்றம் செய்யாமையால். கூற்றம் என்னும் தண்டனை கிடையாது மக்கள் மனதில் நல்லெண்ணமே நிறைந்திருந்தமையால். சீற்றம், சினம் கிடையாது. அறநெறியிலேயே குடிமக்கள் தமது ஆற்றல்,

செயல், திறன் முழுவதையும் செலவிடுதலால் மேன்மை யைத் தவிர இழிவு என்பதே அங்கு கிடையாது.

''ஏற்றமல்ல திழிதக வில்லையே''

எனும் அடி கோசல மக்களின் பண்பாட்டின் சிகர மாக அமைந்துள்ளது. இங்கு,

''இன்பமே எந்நாளும் துன்பமில்லை''

என்னும் நாவுக்கரசர் வாக்கு ஞாபகத்துக்கு வருகிறது எந்நாளும் இன்பமே என்கிறார் அப்பர். எல்லாம் மேன் மையே என்கிறார் கம்பர்.

இங்கு இந்த ''ஏ'' காரம் எவ்வளவு பாவத்துடன் எப்பேர்ப்பட்ட பொருளை உணர்த்தி நிற்கின்றது.

குற்றமற்ற செயல், நல்லெண்ணம் நிறைந்த சிந்தை அறநெறி, ஆற்றல் இவைகளைக் கொண்ட மக்கள் மேன் மக்களே என்பதில் ஐயமென்ன? இப்படிப்பட்டவர்களுக்கு ஏற்றமல்லது இழிதகவு எப்படி ஏற்படும்?

அறக் கடவுள் அவதரிக்க வேண்டிய நிலமல்லவா? அதற்குத் தகுந்த பண்பாடு;

மேன்மை செல்வத்திலோ செருக்கிலோ ஆடை ஆபரணத்திலோ அலங்கார ஆடம்பரத்திலோ இல்லை. குணத்தின் மேன்மைதான் மேன்மையே தவிர பணப் பெருக்கம் அல்ல. சிந்தையின் நிறைவுதான் சிறந்த செல்வம்.

''மா குரு தன-ஜன-யௌவன கர்வம்
ஹரதி நிமேஷாத் கால: ஸர்வம்''

என்கிறார் சங்கராச்சாரியார்.

மணிமுடி தரித்த மன்னுதி மன்னர்களை விட ஜடை முடி தரித்த இராமபிரானுக்குத்தான் சிறப்பு அதிகம், ஏன்? அது குணத்தின் மேன்மை. நடத்தையின் சிறப்பு. ஒழுக் கத்தின் உயர்வு. பண்பாட்டின் தன்மை. அவன் பிறந்த நாட்டில்.

ஏற்ற மல்ல திழிதக வில்லையே;

கோசல நாட்டுக் குடிமக்கள் சட்ட திட்டங்களை, நீதி நெறி முறைகளைக் கடக்காதவர்கள். ஒழுக்கமும் கட்டுப் பாடும் மிகவும் உடையவர்கள்; வரம்பு கடவாத வாழ்க்கை முறை வகுத்து வரிசையுடன் வாழ்பவர்கள்; உயிரை விட்டாலும் விடுவார்களேயன்றி மரியாதை வரம்பு தாண்ட மாட்டார்கள். மரியாதை புருஷோத்தமனின் நாட்டு மக்களல்லவா? அப்படி ஏதாவது ஒரு பொருள் முறை திறம்பி நெறிதவறி நடக்குமாயின் அது ஒன்றே ஒன்றுதான். அதுதான் ஆறு; ஆறுநெறி (நன்னெறி, நேர்வழி) கடந்து பாய்கிறதாம்;

அந்நாட்டில் நெறி கடந்துள்ளது ஆறு ஒன்றுதான்: அதே போல் இன்னம் சில இழிதொழில் உடையன :—

நெறி கடந்து பரந்தன நீத்தமே
குறி யழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயு மருங்குலே
வெறி யவும்மவர் மென் மலர்க்கூந்தலே.

நெறி கடந்து பரந்து செல்வன நதிகள்;

குறி (குங்குமப் பூச்சு அடையாளம்) அழிந்து நிற்பன மாதர்களின் தோள்களே. தேய்ந்து மெலிந்துள்ளன மாதராரின் சிற்றிடைகளே. வெறிகொண்டன அவர்களது மலரணிந்த கூந்தலே.

இவைகளைத் தவிர, நெறி தவறினவர்களோ, குறியழிந் தவர்களோ, மெலிவடைந்தவர்களோ, வெறியர்களோ கோசல நாட்டில் கிடையாது என்பது குறிப்பு.

இப் பாட்டில் பொதிந்துள்ள அழகிய, அருமையான கருத்து மநுமுறை கண்ட வாசகத்தில் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளின் வசன நடையில் எவ்வளவு இனிமையாக வெளியாகிறது என்று பாருங்கள். அதை கீழே அப்படியே தருகிறோம் :—

''அவரது ஒப்புயர்விலா அரசாட்சியிலே, பூவே பறிபடுவது; புனலே சிறைபடுவது; காற்றே அலை படுவது; கல்லே கடினமுடையது; மாவே வடுபடுவது; வாழையே குலைபடுவது; வண்டே மதுவுண்பது; பந்தே அடிபடுவது, பரியே கட்டுண்பது; நெல்லே குத்துண்பது; நெற்கதிரே போர்படுவது; வயலே வளைபடுவது; மாதர் இடையே குறைபடுவது; தரித்திரமே தரித்திரப்படுவது, துக்கமே துக்கப்படுவது பொய்யே பொய்படுவது;இவையல்லாமல்;

பொருள் பறிக்கப்படுவோரும், சிறைச்சாலையில் வைக்கப்படுவோரும், பகைவரால் அலைக்கப்படுவோரும், கடின மனமுள்ளவர்களும், வடுப்படுவோரும், குலைபடு வோரும், மது உண்போரும், குத்துண்போரும், போரிற்படுவோரும், கட்டுண்போரும், வளைபடுவோரும், குறைபடுவோரும் தரித்திரப்படுபவர்களும், துக்கப்படு வோரும், பொய்படுவோரும் வேறே இல்லாமையால் அந்நாட்டில் மேன்மையே விளங்கி இருந்தது.

''ஏற்றமல்ல திழிதக வில்லையே''
மேன்மையே விளங்கி இருந்தது.

கம்பர் கவிதையில் அடக்கிய கருத்துக்கு உரை நடை யில் என்ன அழகான விளக்கம்; கம்பர் கருத்தும் வள்ள

லார் கருத்தும் எப்படி ஒரேவிதமாக அமைந்துள்ளன என்று ஒப்புநோக்கும் போது இரண்டுக்குமுள்ள ஒற்றுமை வியப்பையளிக்கிறது.

கம்பரைப் பார்த்து வள்ளலார் காபி அடிக்கவில்லை; மொழி பெயர்க்கவில்லை; தழுவவும் இல்லை. ஆயினும் எவ்வளவு அருமையாக இருவர் கருத்தும் ஒன்று படுகிறது பெரியோர் வாக்கிலுள்ள தனிச் சிறப்பு அதுதான்.

அதிலும் "கூற்றமில்லை" என்று தொடங்கும் பாடலில் கம்பர், "ஏற்ற மல்ல திழிதக வில்லையே" என்ற ஒரே வரியில் நம்மை மயங்கச் செய்கிறார் எனின் சுவாமிகள். "அந்நாட்டில் மேன்மையே விளங்கி இருந்தது" என்ற ஒரே வாக்கியத்தால் நம்மை ஆச்சர்யக் கடலில் ஆழ்த்துகிறார்.

இவ்விரு வரிகளிலும் மிளிரும் கருத்து ஒற்றுமையும் பொருள் மேன்மையும் தான் நம் வியப்புக்குக் காரணம்.

அயோத்தியை வர்ணிக்கும் கம்பர் கவிதைக்குத் திருவாரூரை வர்ணிக்கும் வள்ளலார் உரை நடையில் விளக்கம் காணப்படுகிறது; பாடலுக்கு அப்படியே விளக்கம் எழுதியது போல் தோற்றமளிக்கிறது. ஆயினும் இரண்டிற்கும் துளியும் சம்பந்தமில்லை. கதைப் போக்கு, பொருள். நடை, விஷயம் யாவும் வெவ்வேறு, இருந்த போதிலும் உண்மையை விளக்குவதில், கருத்தை வெளியிடுவதில் இருவருக்குமுள்ள திறமை ஒற்றுமை நமக்கு வியப்புத் தருகிறது.

நன்னெறியில் நின்று வாழும் சொன்னம் பொழி கோசல நாட்டுக் குடிமக்களின் தன்மை இவ்வாறாக, அந்

நாட்டுப் புகையின் தன்மையைப் பார்ப்போம். புகையா? ஆம்; கம்பர் கூறுவதைக் காது கொடுத்துக் கேளுங்கள்:—

அகிலிடும் புகை யட்டிலிடும் புகை
நகலினாலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி முழங்கின வெங்கணும்.

அகிற் புகையும், சமையலறைப் புகையும், கரும்பாலைகளின் இனிய புகையும், நான்மறை வேள்வியின் தெய்வீக பூம் புகையும் கலந்து, மேகம் போலப் பரந்து, பலர் கண்ணுக்கும் தோன்றின.

பார்த்தீர்களா; எவ்வளவு வகை புகை? நறும்புகை பூம்புகை; புகையின் குணத்தையும், மணத்தையும், பரிமாணத்தையும் கூட இவ்வளவு நுண்ணிய நோக்குடனும் நூதன வாக்குடனும் திறம்பட வர்ணிக்கும் இக் கவியின் மேதையை என்னவென்பது;

ஆலைப் புகை நறும் புகை, அதாவது மணக்கின்ற' வாசனையுள்ள புகை, கருப்பஞ் சாறு காய்ச்சப்படுதலால் நறுமணம்.

நான்மறை வேள்விப் புகை பூம்புகை;

புண்ணியப் புகை, அதாவது காளிதாஸன் கூறுவது போல் ‘‘ஆசார தூம:’’ ஆஹுதி செய்யப்பட்ட அக்கினியிலிருந்து எழுவதால் பவித்ரமானது.

அகிற் புகையோ கந்தம் கமழும்; சமயற் புகையும் நன் மணம் வீசும். இவை யாவும் ஒன்ருகக் கலந்து மேகம் போலப் பரந்து படரும்.

இனிவரும் பாடல்கள் சந்தத்தில் இனியனவாய், ஓசை இன்பத்தில் 'உயர்ந்தனவாய், உட் செறி பொருளிற் சிறந் தனவாய் படிப்போருக்கும் கேட்போருக்கும் ஒருங்கே காதுக்கும் மனத்துக்கும் களியுவகை ஊட்டுகின்றன.

அம்பு நாட்டாழ் வானடி பணியு மாதித்தன்
கம்ப நாட்டாழ்வான் கவி

களியுவகை ஊட்டுவதில் ஆச்சரியமென்ன?

இயல்புடை பெயர்வன மயின் மணியிழையின்
வெயில் புடைபெயர்வன முலையவர் குழல்போற்
புயல்புடை பெயர்வன பொழிலவர் விழிபோற்
கயல்புடை பெயர்வன கடி கமழ் கழனி

இப்பாடலில் எழிலுடைய மங்கையரின் அழகுடன் இயற்கையின் வனப்பை எவ்வளவு அருமையாக ஒப்பிடு கிறார் கவி. கடைசி வரியில் கிண்கிணி நாதம் போல் ஒலிக்கும் ஓசை இன்பத்தையும் நடையழகையும் கவனி யுங்கள்.

## பொருள்

அழகு விளங்கும் பருவமங்கையரது சாயலைப்போல மயில்கள் பூஞ்சோலையில் இங்குமங்கும் சஞ்சரிப்பன; அவர்கள் அணிந்திருக்கும் ரத்னாபரணங்களின் ஒளிபோல் வெயிலின் ஒளி அச்சோலைகளில் ஜொலித்து நிற்கும்; அவர்களது கூந்தலைப்போல மேகங்கள் அங்குமிங்கும் தவழ்ந்து விளையாடும்; அவர்களின் விழிபோல் சேல் மீன்கள் வயல் ஓரங்களில் துள்ளித் துள்ளித் திரியும்.

மயில் போன்ற சாயலும், வெயில் ஒளிபோன்ற நகைகளும் மேகம் போன்ற அளகபாரமும், சேல்மீன்

போன்ற விழிகளும் உடையவர்கள் அந்நாட்டுப் பெண்கள் என்று கூறுவதற்குப் பதிலாகச் சாதுர்யம் மிக்க கவி இவ்விதம் வர்ணிக்கிறார்.

கயல் மீன் கழனிகளில் துள்ளுவதை எவ்வளவு இனிமையாக வெளியிடுகிறார்.

"காமர் கயல் புரள" என்னும் நளவெண்பாவின் பா இங்கு ஞாபகத்துக்கு வருகிறது.

"கயற்கண்ணி" அதாவது 'மீனாக்ஷி' என்பது பெண்களின் கண்களுக்குக் கவிஞர் கூறும் விளக்கம்.

கண்களின் சுழற்சிக்கு மீன்களின் துள்ளல் உவமை.

இடையிற மகளிர்கள் எறி புனல் மறுக
குடைபவர் துவரிதழ் அலர்வன குமுதம்
மடைபெயரனமென மட நடையளகக்
கடைசியர் முகமென மலர்வன கமலம்.

சிற்றிடை ஒடிய ஒடிய, அலை வீசும் ஆற்று நீர் கலங்கக் கலங்கக் குடைந்து நீராடும் மாதர்களுடைய பவளம் போன்ற வாய்கள் போலச் செவ்வல்லி (குமுதம்) மலர்கள் மலர்கின்றன. மடைகளில் சஞ்சரிக்கின்ற அன்னங்கள் போன்ற மடப்ப நடையையும், கருங்கூந்தலையுமுடைய உழத்தியரது முகம் போலச் செந்தாமரைப் பூச்கள் மலர்கின்றன.

அழகிகளின் வாய்போலக் குமுதமும், முகம் போலத் தாமரையும் மலர்கின்றன.

குமுதம் போன்ற செவ்வாயும், தாமரை போன்ற திருமுகமும் உடையவர்கள் மாதர்கள் என்பது பொருள்.

இப்பாடலில் இயற்கை வனப்பு ஈடற்ற அழகுடன் திகழ்கிறது.

"புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்"
என்றும்

"வரம் பலவும் தந்தருளும் தெய்வமுகத் தாமரை
யும்" என்றும்

கந்தர் கலிவெண்பாவில் க்டவுள் கந்தனை வர்ணிக்கும் குமர குருபரரின் வாக்கு வண்மையில் கம்பரின் கற்பனைத் திறனும் வர்ணனை எழிலும் விளங்குகிறது என்ருல் மிகை யாகாம்.

விதியினை நகுவன அயில் விழி பிடியின்
கதியினை நகுவன வவர் நடை கமலப்
பொதியினை நகுவன புணர்முலை கலைவாழ்
மதியினை நகுவன வனிதையர் வதனம்.

மாதராரின் வேல் போன்ற விழிகள் முனிவர்களின் நியமத்தைப் பழிப்பன; அவர்களின் நெருங்கிய தனங் கள் தாமரை அரும்புகளைப் பழிப்பன; அவர்களின் முகங் கள் கலை நிறைந்த பூர்ண சந்திரனைப் பழிப்பன;

முனிவருக்கும் மோகமளிக்கும் வேல்விழிகள்; பெண் யானையை ஜயித்த கம்பீர நடை; தாமரை மொட்டு போன்ற தனங்கள்; சந்திர பிம்பத்தையும் எழிலால் பழிக் கும் முகம்; இவைகளையுடையவர் இந்நாட்டு மகளிர் என்பது பாவம்.

பகலினொடிகலுவ படர் மணி மடவார்
நகிலினொடிகலுவ களிவளரிளநீர்
துகிலினொடிகலுவ சுதைபுரை நுரைக்கார்
முகிலினொடிகலுவ கடிமண முரசம்

எவ்விடத்திலும் படர்ந்து கிடக்கின்ற நவமணிகளின் ஒளிகள் சூர்யகாந்தியோடு போட்டியிடுகின்றன; குளிர்ச்சி பொருந்திய இளநீர்கள் மாதர்களின் மார்பகத்துடன் போட்டியிடுகின்றன; வெண்ணிறத்தால் அமுதத்துக்கொப்பான நீர் நுரைகள் மடவார்களின் ஆடையோடு போட்டி இடுகின்றன; புதுமையாகிய கலியாண பேரிகைகள் கருமேகங்களோடு போட்டியிடுகின்றன.

சூரியனின் ஒளியைப் பழிக்கும் நவமணிகளும் இளநீர்க் குலையைப் பழிக்கும் பெண்மை அழகுவாய்ந்த மாதரசிகளும், அமுதத்தை ஜயிக்கும் நீர் நுரைகளும், நீர் நுரைகளை வெல்லும் துல்லிய, மெல்லிய ஆடையணிந்த மகளிரும், கருமாமுகிலை முழக்கத்தால் தோற்கடிக்கும் திருமண முரசு ஒலிகளும் செறிந்தது அந்நாடு என்பது வெளிப்படை.

காரொடு நிகர்வன கடி பொழில் கழனிப்
போரொடு நிகர்வன புணர்முலை யணைசூழ்
நீரொடு நிகர்வன நிறை கடனிதிசால்
ஊரொடு நிகர்வன விமைய வருலகம்

மணமிகு பூஞ்சோலைகள், கருமேகங்களை ஒத்திருப்பன; மகளிர் மார்பகம் வயல்களிலுள்ள நெற்போர்களை ஒத்திருப்பன; நிறைந்த கடல்கள் களரதளால் சூழப்பட்ட நீர்நிலைகளை ஒத்திருப்பன; தேவர்களுடைய உலகங்கள் திரவிய அழகு மிகுந்த கோசல நாட்டு ஊர்களை ஒத்திருப்பன,

மேகத்தை அளாவும் பொழில்களும் நிறைகடலை நிகர்த்த நீர் நிலைகளும் இந்திர பட்டணம் போன்ற ஊர்களும் நிறைந்தது கோசல நாடு.

இப்பாடல்களில் கற்பனை அழகு அதிகமா, ஓசை இன்பம் அதிகமா, உட்செறி பொருள் அதிகமா, உவமை யின் உயர்வு அதிகமா, கருத்தின் தெளிவு அதிகமா என்று சொல்வது சற்றுக் கடினமே. கவியின் கவிதை வெள்ளம் கடல் மடை திறந்ததுபோல் கங்கு கரையின்றி பொங்கிப் பாய்கின்றது.

உவமையின் அழகும் வர்ணனையின் வனப்பும் கற்பனை யின் கவினும், இயற்கையின் எழிலும், நடையின் இன்ப ஒளியும், இவையூடே மிளிரும் செய்யுள் நயத்தின் வேலைப் பாடும் படிக்கப் படிக்கத் திகட்டா.

"சொன்னாலும் வாய் மணக்கும், தொட்டாலும் கை மணக்கும்" கவிகள் இவை.

"பார்த்தாலும், படித்தாலும், படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும் இத்தனைக்கும் தித்திக்கும் இனித்த சுவைக் கரும்பே" என அழைத்தல் சாலப் பொருந்தும், நவில் தொறும் நவில் தொறும் நா தித்திக்கும் இப்பாடல்கள் மந்த மாருதம் போலும்; மணம் கமழ் இளவேனில் போலும், முத்துச்சுடரென்ன வெண்ணிலவு போலும் கம்பீர ஒலிமிகு கடல் அலை போலும், ஒளிவிடு வைரச் சுரங்கம் போலும், உண்ண உண்ணத் தெவிட்டாத் தெள்ளமுது போலும், கங்கை இன்நீர் போலும், கற்றோர் பெற்றி போலும், இமயத்தின் உயர்வு போலும், படிப் போர் மனதைப் பரவசப் படுத்துகின்றன. இவைகளில் கொந்தளிக்கும் கொழுத்த தமிழின் செழுமை பாரத நாட் டின் வற்றாத வளமைக்கும் ஒப்பாகும், "சல சல" என ஒலி நீரருவி போல் துள்ளிப் பாய்ந்து வரும் சத்தத்தின் தனி நடை கவிச் சக்கரவர்த்தி மட்டுமல்ல இதை இயற்றிய மேதை; தமிழ் மொழிக்கே தனி அரசன் எனக் கூறுகின்றது.

திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார் என்பது போல கம்பர் கவிதையில் இன்பம் காணுதார் எங்கும் இன்பம் காணமாட்டார் என்று துணிந்து கூறலாம். இயற்கை வர்ணனைக்கு வால்மீகரும் காளிதாஸரும் வடமொழியில் பெயர் பெற்றவர்கள், நிகரற்றவர்கள். தமிழ்மொழியில் கம்பரைப்போல் இயற்கையை இவ்வளவு இனிமையாகக் கையாண்டுள்ள மற்றொரு மகாகவி உண்டா என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். செந்தமிழில் சீரிய கருத்துடன், தூய்மையும், எளிமையும் சொட்டும்படித் திகழும் கம்பரின் பாடல்கள்.

"ககனம் ககனுகாரம்: ஸாகரஸ் ஸாகரோபம;" என விளங்குகின்றன.

காம்பீர்யமும் கருத்துச் செறிவும், எளிமையும், இனிமையும், கொழுமையும், செழுமையும், அறிவும், அழகும், அருளும், அன்பும், பக்தியும், ஞானமும், சொற் சுவையும், பொருட்சுவையும் ஒன்றை ஒன்று மிஞ்சும்படி திகழும் கம்பரின் பாடல்கள் தமிழின் அழியாத செல்வம்; தமிழ் மொழியின் பெறற்கரும் பேறு.

நென்மலையல்லன நிறை வரு தரளம்
சொன்மலையல்லன தொடு கடலமிர்தம்
நன்மலையல்லன நதி தரு நிதியம்
பொன்மலையல்லன மணி படு புளினம்

இவை வரிசை வரிசையான முத்துக் குவியல்கள் அல்ல, நெற்போர்கள்; இவை தோண்டப்பட்ட பாற் கடலமுதமல்ல, உழத்தியரின் சொற்களின் மிகுதி; இவை நல்ல மலைகளல்ல, நதிகளால் தரப்பட்ட திரவியக் குவியல் கள்; இவை பொன் மலைகள் அல்ல, மணிகள் நிறைந்த மணற்குன்றுகள்.

அல்லது

நெற்போர்கள் இல்லாத இடங்களில் நிறைந்த முத்து குவியல்கள் இருக்கின்றன ; சொல்லப்பட்ட அந்த முத்துக் குவியல்கள் இல்லாத இடங்களில் தோண்டப்பட்ட கடலில் உண்டாகிய உப்புக் குவியல்கள் இருக்கின்றன. நல்ல அந்த உப்புக் குவியல்கள் இல்லாத இடங்களில் மணிகள் பொருந்திய மணற் குன்றுகள் இருக்கின்றன.

அல்லது

இவை நெற் போர்களல்ல, முத்துக் குவியல்கள். இவை மாதர் சொல் மிகுதியல்ல, அமுதம். இவை நல்ல மலைகள் அல்ல, நதிகள் தந்த திரவியம். இவை மணற் குன்றுகள், அல்ல பொன் மலைகள், என இவ்வரும் பாடலுக்கு மூன்று வகையாகப் பொருள் கூறலாம். எங்கு பார்த்தாலும் நல்ல, சிறந்த பொருள்கள் நிரம்பிக் கிடக்கும் கோசல நாட்டுச் செல்வத்தையும் சிறப்பையும் கூறுகிறது இப்பாடல்.

"இது அல்ல அது" என்று சமத்காரமாகக் கூறுவதற்கு அலங்காரத்தில் "அபஹ்நுதி" (மறைத்துக் கூறல்) என்று பெயர். அந்த அலங்காரம் இங்கு வெகு அழகாக கையாளப்பட்டுள்ளது. பாட்டைப் பாடிப் பார்த்தால் அதன் இனிமை பன்மடங்கு அதிகரிப்பது தெரியவரும்.

பந்தினை யிளையவர் பயிலிடம் மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்.

இளம் மங்கையர்கள் பந்தாடுமிடங்கள் சந்தனச்சோலைகள் அல்ல, சண்பகச் சோலைகளாம். மயில் வாகனத்தை

நடத்தும் சுப்ரமணியனை ஒத்த இளைஞர்கள் வேத முதலிய கலைகளை ஆராய்கின்ற கல்விச்சாலைகள் (கழகம்) நந்தன வனங்களல்ல; தேன் பரந்த முல்லைவனமாம்.

மங்கையர்கள் பந்தாடுமிடங்கள் சந்தன வனங்களே யானாலும் அவர்களது மேனி நிறத்தினாலும், மூச்சின் பரிமளத்தினாலும், பந்தடித்தலால் வண்டுகள் மொய்க்கா மையினாலும் (சண்பகத்தை வண்டுகள் நாடா) சண்பக வனமாகும்.

கலை தெரி இளைஞர்கள் பிரும்மச்சாரிகள் ஆதலால் அவர்கள் கலை பயிலும்போது பற்கள் முல்லை அரும்புபோல் பிரகாசித்தலாலும் வேதம் ஓதும் ஓசை வண்டிசை போல் இருத்தலாலும் முல்லை வனமாகும்.

இளம் மங்கையர்கள் பந்து பயிலும் இடம் சந்தன வனமேயல்ல, சண்பக வனம்தான். கந்தனை யனையவர் கலைதெரி கழகம் நந்தன வனமேயல்ல, நறைவிரி புறவம் (முல்லை வனம்) தான் என்றும் பொருள் கொள்ளலாம்.

இப்பாடலில் சண்பக மணமும், சந்தன மணமும், முல்லை நறுமணமும் கலந்து கமழ்கின்றன. மாதர் பந்தாடும் காட்சியும், இளைஞர்கள் கலை பயிலும் காட்சியும் கண்முன் தாண்டவமாடுகின்றன. இளமையும் எழிலும் வாய்ந்த இளைஞர்களும், சிறுமிகளும் ஊக்கத்தோடும் உற்சாகத் தோடும் படித்தலும், விளையாடுதலும், படக்காட்சிபோல் பாட்டில் பிரதிபலிக்கின்றன.

ஒவ்வொரு சிறு சொல்லும் பாவம் சொட்ட சொட்டப் பரிமளிக்கிறது. ''மயிலூர் கந்தனை யனையவர்'' என்னும் உவமை கண்முன் கடப்பந்தாரணி சிவகுமாரனை, வெற்றி வேல் முருகனைக் கொண்டு வந்து நிறுத்துகிறது. குகனைப்

போன்ற வாலிபர்கள் என்னும் போதே ஆற்றல், ஆண்மை அஞ்சாமை, இளமை, எழில், வெற்றி யாவும் வரிசை வரிசையாகத் தோற்றமளிக்கின்றன.

வால்மீகரும் காளிதாஸனும் அடிக்கடி ''குமார கல்பம்'' (குமரக் கடவுள் போன்ற) என்று குகனை இளைஞர்களுக்கு ஒப்பிடுவது வழக்கம். இங்கு கம்பரும் அதே உவமையைக் கையாண்டிருப்பது அதி அற்புதமாக இருக்கிறது. அதிலும் வடமொழியில் பரிசயமில்லா நம் கவி தன் சொந்தக் கற்பனைத் திறனால் இவ்வுவமையைச் சித்தரித்திருப்பது இன்னும் அருமை. பெரியவர்கள் கருத்து ஒற்றுமைக்கு இதுவும் ஒரு சான்று.

கந்தன் பிரும்மசரியத்துக்குப் பெயர் பெற்றவன் (வள்ளி தெய்வயானை கதை பின்னால் வந்தது).

பிரணவப் பொருளைத் தந்தைக்கு எடுத்துரைத்த வித்தகன். அப்படி ஒழுக்கத்துக்கும், வித்தைக்கும் எடுத்துக் காட்டாக விளங்கும் கந்தக் கடவுளை ஒரு நாட்டின் இளைஞர்களுக்கு கலைதெரி வாலிபர்களுக்கு உவமையாகக் கூறுவது சாலப் பொருந்தும். ''கழகம்'' என்ற ஓர் அருமையான சொல்லையும் அழகுபெறப் பதித்து விட்டார் கவி. கல்விச் சாலை என்பதற்கு என்ன அழகிய சின்னஞ்சிறு சொல்;

இப்பாடலை எத்தனை முறை படித்தாலும் தெவிட்டாது.

பிராசமும், மோனையும், எதுகையும் வாசகர் மனத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன. ஓசை இன்பமோ சொல்லும் தரமல்ல. மொத்தத்தில் இப்பாடல் ஒரு மங்கா மணி விளக்கு. தூண்டா ஜோதி. கருத்தின் அழகோ கடலினும் பெரிது.

கோகில நவில்வன விளையவர் குதலைப்
பாகியல் கிளவிகளவர் பயினடமே
கேகய நவில்வன கிளரிள வளையின்
நாகுக ளுமிழ்வன நகைபுரை தரளம்.

மாதர்களின் இனிய மழலைச் சொல்லாகிய வாசகங்களை குயில்கள் கற்றுக்கொள்வன. அவர்கள் ஆடிப் பழகுகின்ற நடனத்தையே மயில்கள் கற்றுக்கொள்வன. இளம் பெண் சங்குகள் அவர்களது வெண்பற்களையொத்த முத்துக்களை ஈன்று சொரிவன.

மாதர்களின் குதலையைக் குயில்களும் ஆடலை மயில்களும் பழகும். பற்களுடன் போட்டியிட்டு சங்குகள் முத்துக்களைச் சொரியும். இப்பாடலில் உபமானப் பொருளை உபமேயமாகவும் உபமேயப் பொருளை உபமானமாகவும் சாதுரியமாக மாற்றி வர்ணிக்கிறார் கவி.

கள் விலைஞர்களின் வீட்டில் பழம் கள் நிறைந்து இருக்கும். அக் கள்ளை உண்டு களிக்கும் மள்ளர்களின் வீடுகள் உழுதொழில்களால் நிறைந்திருக்கும். இசைவாணர்களின் வீடுகள் வீணைகளால் நிறைந்திருக்கும். இளைஞர்களின் வீடுகள் திருமண வாத்ய ஓசைகளால் நிரம்பி இருக்கும்.

கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன வுறையுறு மமுதம்
காதைகள் சொரிவன செவிநுகர் கவிகள்

பூமாலைகள் குளிர்ந்த இளந் தேனைப் பொழிவன; கப்பல்கள் பெருரத்தினங்களையும் பொன் மணிகளையும் பொழி

வன; குளிர்காற்றுகள் மழைத்திவலையாகிய அமுதத்தைக் கொண்டு வந்து பொழிவன; சரித்திரங்களாகிற பூங் கொத்துக்கள் செவிகளாகிற வாய்களால் உண்ணப்படுகிற கவிதையமுதத்தைப் பொழிவன.

இடங்கொள் சாயல்கண் டிளைஞர் சிந்தைபோல்
தடங்கொள் சோலைவாய் மலர்பெய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை மடந்தை மாரொடும்
தொடர்ந்து போவன தோகை மஞ்ஞைகள்.

பெருமைகொண்ட வனப்பின் சாயலைக் காணுமிடத்து வாலிபர்களின் மனம் அதைத் தொடர்வதுபோல் விசால மான சோலைகளில் மலரணிந்த நீண்ட கூந்தலையும் முத்தா ரம் ரத்ன ஹாரம் அணிந்த மார்பகத்தையுடைய பெண் மணிகளை கலாப மயில்கள் பின்தொடர்ந்து செல்லும்.

அழகிய சாயலைக் கண்டால் ஆடவர் மயங்குவர். அவர் சிந்தை அதையே விடாது தொடரும். அதேபோல பூஞ்சோலைகளில் உலாவும் இளம் பெண்களை தோகை மயில்கள் விடாது பின்தொடர்ந்து சுற்றும். சாயலுக்கு மயிலை உவமை கூறுவது இலக்கிய மரபு. அம்மயில்களே பின்தொடரும்படியான அழகிகள் கோசல நாட்டு மடந்தையர் என்பது குறிப்பு.

"................................ மடந்தை மாரொடும்
தொடர்ந்து போவன தோகை மஞ்ஞைகள்"
என்னும் வரியில் கற்பனை அழகு பரிமளம் வீசுகிறது.

வண்மையில்லையோர் வறுமையின்மையால்
திண்மையில்லைநேர் செறுநரின்மையால்
உண்மையில்லை பொய்யுரையிலாமையால்
வெண்மையில்லைபல் கேள்விமேவலால்.

துளியும் ஏழ்மை இல்லாமையால் கொடை என்பதே இல்லை; எதிரிகளேயில்லாமையால் வல்லமையில்லை; பொய்யேயில்லாமையால் மெய் என்பது இல்லை; படிப் பின்மை என்பதே இல்லாமையால் அறியாமை என்பதும் இல்லை.

வறுமையே நாட்டில் இல்லாவிட்டால் பிச்சை வாங்கு வார் யார்? அதனால் கொடையில்லை; எதிர்த்துப் போரி டும் வைரிகளே இல்லாவிட்டால் வல்லமையை வெளியிடு வது எப்படி? அதனால் ஆற்றலுக்கு வேலை இல்லை; படிப்பு மக்களிடையே இல்லாவிட்டால் அல்லவா அறியாமை உயிர் வாழமுடியும்? ஆதலால் அதற்கும் அங்கு இட மில்லை; பொய்யே இல்லாத இடத்தில் மெய் என்று பிரிப்பது எதை? சாதுரியமான வர்ணனைக்கு, சமத்கார மான கற்பனையுடன் வெளியிடும் திறமைக்கு இப்பாடல் ஓர் அரிய சான்று.

வறுமையோ, வைரியோ, பொய்யோ, அறியாமை யோ. அக்கோசல நாட்டில் கிடையாது என்பது குறிப்பு.

வால்மீகரும் கோசல நாட்டை இதேபாணியில்தான் வர்ணிக்கிறார். அதைப் பின்னால் பார்ப்போம்.

எள்ளும் தினையும் சோளமும் சாமையும் கொள்ளும் கொள்ளை கொள்ளையாக ஏற்றிவரும் வண்டிகளும் உப்பளத்திலிருந்து உப்பை ஏற்றிக் குப்பல் குப்பலாக குவிக்கும் வண்டிகளும் ஏராளமாக வந்து வந்து நிறை வதினால் பொருள்கள் ஒன்றுடன் ஒன்று கலந்து இவை இன்னவை என்று பிரித்துணர முடியாமல் மயக்கம் தரும்; அவ்வளவு பொருள் மிகுதி;

ஜீவர்கள் தாம் செய்யும் வினைக்குத் தக்கப்படி நால் வகைக் கதியில் மாறி மாறிப் பிறப்பதுபோல், சர்க்கரையும் தேனும், இனிய வெல்லப் பாகும், ஆயர்பாடியில் உண்டா கும் தயிரும், கள்ளும் இடம் மாறும். இன்ன இடத்துக்கு இன்ன பொருள் என்று இல்லாமல் மாறிப்போகும்.

வாய்ப்பாட்டும் வேய்ங்குழல் பாட்டும் தனித் தனியே முழங்கும் சத்தம் பெருகுகிற வீதிகளில் நதியும் நதியும் வந்து கலந்ததுபோல திருவிழாக் கூட்டமும், திருமணக் கூட்டமும் ஒன்றோடொன்று கலக்கும்.

நித்திய கல்யாணம் நிறைந்த நாடு.

மூக்கினில் தாக்குண்டு சப்திக்கும் சங்கோசையும், கோலால் தாக்குண்டு சப்திக்கும் பறை (தம்பட்டம்) ஓசையும், வார்க்கட்டினால் தாக்குண்டு சப்திக்கும் மத்தள ஓசையும் மள்ளர்கள் வாயினால் ஒலிக்கும் ஆரவாரத்தில் அடங்கிவிடும்.

சங்கும், பறையும், மத்தளமும் கூட ஓசை அடங்கும்படி ஆரவாரிப்பார்கள் மள்ளர்கள்.

தாலியைம்படை தழுவுமார்பிடை
  மாலைவாயமு தொழுகுமக்களைப்
பாலினூட்டுவார் செங்கைப்பங்கயம்
  வால்நிலாவுறக் குவிவமானுமே.

ஐம்படை ஆரமணிந்த பஞ்சாயுதங்கள் சங்கு, சக்கரம் தண்டு, வில், வாள் உருவில் செய்யப்பட்டிருக்கும் ஆரம்! மார்பையுடைய, அமுதவாய் எச்சில் ஒழுகும் குழந்தை களுக்கு பாலூட்டும் மாதர்களுடைய சிவந்த கைகள் வெண்ணிலாத் தோன்றும்போது குவியும் தாமரை மலர் களைப்போல விளங்கும்.

குழந்தைகளுக்குப் பாலூட்டும்போது விரல்கள் குவிந்து கூடுவதால் தாய்மார்களின் கைகள் மாலையில் குவியும் கமல மலர்கள் போலத் தோன்றுகின்றன.

விரிந்தால் பூத்த தாமரை, குவிந்தால் கூம்பிய தாமரை, இதில் ''மாலைவாயமு தொழுகுமக்கள்'' என்று குழந்தைத் தன்மையின் இயற்கை இனிமையையும், ''செங்கைக் பங்கயம்'' என்று உள்ளங்கையின் மென்மை, சிவப்பு முதலிய தன்மைகளையும் வெளியிடுவது வெகு பொருத்தமாக அமைந்துள்ளது.

பொற்பினின்றன பொலிவுபொய்யிலா
  நிற்பினின்றன நீதிமாதரார்
அற்பினின்றன அறங்களன்னவர்
  கற்பினின்றன காலமாரியே

ஆடவரின் குண நலத்தால் கீர்த்தி நிலைபெற்றிருந்தது; நாணயம் பொருந்திய மாந்தரின் நடத்தையினல் நீதி நிலை பெற்றிருந்தது; மாதராரின் அன்பினல் அறம் நிலை பெற்றிருந்தது; அவர்களது கற்பினல் காலமழைநிலை பெற்றிருந்தது

மாந்தரின் நற்குணத்தினல் கீர்த்தியும், நாணயத்தினல் நீதியும், மாதரின் அன்பினல் அறமும், கற்பின் மேன்மையினல் காலமாரியும் முறை தவருது தழைத்தோங்கின.

சோலைமாநிலங் துருவியாவரே
  வேலைகண்டுதா மீளவல்லவர்
சாலும்வார்புனற் சரயுவும்பல
  காலினேடியுங் கண்டதில்லையே.

சோலைகள் சூழ்ந்த. பெருமை பொருந்திய அக்கோசல நாட்டின் எல்லையைத்தேடித் துருவிக் கண்டு மீண்டும் வந்து சொல்ல வல்லவர் யார்? (யாருமில்லை) பெருநீரை யுடைய சரயு நதியும் பல கால்களால் கிளைகளாக) ஓடிச் சென்றும் அதன் எல்லையைக் கண்டதில்லை.

எல்லை காண இயலா தேசம் கோசல தேசம். இரண்டு கால்களுள்ள உயர்திணைப் பொருள்களாலும், பலகால் களுள்ள அஃறிணைப் பொருள்களாலும் காணக்கூடாத எல்லையையுடையது கோசல நாடு.

வீடுசேரநீர் வேலைகான் மடுத்
 தூடுபேரினும் உலைவிலாநலம்
கூடுகோசலம் என்னும்கோதிலா
 நாடுகூறிறு நகரம்கூறுவாம்.

பிரளய கால சமுத்திரங்கள் நிலை பெயர்ந்து சண்ட மாருதத்தால் மோதப்பட்டு நான்கு புறமும் வந்து மூடிக் கொண்டாலும் அழியாத, கெடுதல் இல்லாத. நலம் மிகுந்த குற்றமற்ற கோசலம் என்கிற நாட்டு வளப்பத்தைக் கூறினோம்; நகர் வர்ணனை இனிக் கூறுவோம்.

இதுவரை கம்பர் கோசல நாட்டைப் பார்த்தோம். இனி துளஸிதாசரின் கோசலத்தைப் பார்ப்போம். பின் வால்மீகர் கோசலத்துடன் ஒப்பு நோக்குவோம்.

## துளஸியின் கோசலம்

ஸ்ரீ துளஸிதாஸர் கோசல நாட்டை வர்ணிக்கத் தொடங்குமுன் பரம பாவனியாகிய ஸரயூ நதியைத் துதிக்கிறார் :—

## தோஹா

மஜ்ஜஹிம் ஸஜ்ஜன் ப்ருந்த பஹூ பாவன் ஸரஜூ நீர்
ஜபஹிம் ராம் தரி த்யான் உர் ஸுந்தர் ஸ்யாம ஸரீர்

## சௌபாயி

தரஸ் பரஸ் மஜ்ஜன் அரு பாணு
ஹர்யீ பாப் கஹ் வேத் புராணு
நதீ புனீத் அமித் மஹிமா அதி
கஹி ந ஸகயீ ஸாரதா விமல மதி
ராம் தாமதா புரீ ஸுஹாவனி
லோக் ஸமஸ்த் விதித் அதி பாவனி
சாரி கானி ஜக் ஜீவ் அபாரா
அவத் தஜே தநு நஹிம் ஸன்ஸாரா
ஸப் விதி புரீ மாணுஹர் ஜானீ
ஸகல் ஸித்தி ப்ரத் மங்கள கானீ

## மொழி பெயர்ப்பு

சுந்தரனைச் சியாமளனைச் சுரலோகநாயகனைச்
சிந்தைதனில் நினைத்து செய்கையெலாம் மறந்து
சந்ததமும் சரயுஎனும் நதிநீரில் மூழ்குவார்
அந்தமிகு ஆன்றோர்கள் சான்றோர்கள் அன்புடனே
உலகம் விளக்கவரும் உத்தமியாம் ஸரயுதனைத்
தலைவணங்கி மூழ்கிடினும் தரிசனம் செய்திடினும்
உலைவிலா அன்புடனே ஒருக்கால்கை தொட்டிடினும்
நிலைநில்லாப் பாபம்எனப் பறைசாற்றும் வேதங்கள்.
இன்னதியின் உன்னதியை என்னால் சொலப்போமோ
அன்னைகலை வாணிதன் மதிமயங்கி நிற்பாள்
மன்னவனும் மாதவனின் மாலோகம் ஈந்துவிடும்

தன்மையுடையதிந்த ஸரயு எனும் தண்ணதியும்
என்ன பிறவி எடுத்தவர்களா யிடினும்
அன்னை அயோத்திநகர் இறந்தால் பிறவி பெறார்.
எல்லா விதத்தாலும் எழில் மிகுந்த திந்நகரம்.
சொல்லால் விளக்கரிய ஜோதி மணிநகரம்
எல்லார்க்கும் நன்மை தரும் எம்பிரான் மாநகரம்;
எல்லா வரமளிக்கும் செல்வத் திருநகரம்,

இதன் பிறகு ஸ்ரீ துளஸி, தான் ராம-சரித-மானஸ எழுத நேர்ந்த விதத்தையும் அக் கதையின் மகிமையையும், வர்ணித்து விட்டு மேலும் தொடருகிறார்.

## சௌபாயி

சலீ ஸுபக் கவிதா ஸரிதா ஸோ
ராம் விமல் ஜஸ் ஜல பரிதா ஸோ
ஸரஜூ நாம் ஸுமங்கள் மூலா
லோக் வேத் மத் மஞ்ஜுள கூலா
நதி புனீத் ஸுமானஸ நந்தினி
கலி மல த்ருண தரு மூல நிகந்தினி

## மொழி பெயர்ப்பு

எழில்மிகு கவிதை இன்நதி போல
அழகன் ராமன் அழியாப் புகழ்போல்
பொழியும் நீர்ப்பொலி பூம்பொழில் ஸரயூ;
எழுமையும் நன்மை பொழிபொன் ஸரயூ;
அழியா வேதத் தரும் பொருள் விளக்கும்
வழி வழி பாரதர் வணங்கித் துதிக்கும்
பழியறியா உயர் பாரதர் பணியும்
பொழில்வளர் இருகரைப் புண்ணிய ஸரயூ

சுழிபுனல் குமிழ்விடு சுந்தர ஸரயூ;
நினைபவர் மனமலர் குளிரச் செய்யும்
தனிமரம், புல், வேர் தகர்த்து எறியும்
பிணிநிறை கலியுகப் பீடை ஒழிக்கும்
அணிமிகு ஸரயூ; அயோத்திமா நிதியம்.

## தோஹா

ஸ்ரோதா த்ரிவித் ஸமாஜ் புர் கிராம் நகர் துஹூம் கூல்
ஸந்த் ஸபா அநுபம் அவத் ஸகல ஸுமங்கள் மூல்

## சௌபாயி

ராம பக்தி ஸுர் ஸரிதஹி ஜாயீ
மிலீ ஸுகீரதி ஸரஜு ஸுஹாயீ
ஸாநுஜ் ராம் ஸமர் ஜஸு பாவன்
மில மஹாநது ஸோன் ஸுஹாவன்
ஜுக் பிச் பக்தி தேவ் துனி தாரா
ஸோஹதி ஸஹித் ஸுபிரதி பிசாரா
த்ரிவித் தாப் த்ராஸக் திமுஹானீ
ராம் ஸரூப் ஸிந்து ஸமுஹானீ
மானஸ் மூல் மிலீ ஸுர் ஸரிஹி
ஸுனத் ஸுஜன் மன் பாவன் கரிஹீ

## மொழி பெயர்ப்பு

மூவகை ஸ்ரோதா எனப்படும் பிரிவே
இருகரை மருவும் புரி, நகர், கிராமம்;
யாவு மளிக்கும் ஆன்றோர் குழுவே
சோபை மிகுந்த அயோத்தியா பட்டினம்;
ராம பக்தியே ரமணிய கங்கை
சீர்மலி கீர்த்தியே ஸரயூ நதிகாண்;
கார்முகில் ராமன் மின்னொளி இளவல்

ஆறுடன் கூடும் மகாநதி. சோணை;
பக்தியே கங்கை; விரக்தியே தண்ணீர்
முததுயர் நீக்கும் மும்முகத்துவாரம்
அத்திரு நதியின் அழகிய ஸங்கமம்;
கடலுடன் கலத்தலே ராம — ஸாயுஜ்யம்;
திடமுட னறிவீர் உலகத் தீரே;
மானஸ மூலத் துண்மை யுணர்வார்
பாவன மாவார் பரமனையடைவார்;

ஸ்ரீ துளஸிதாஸர் இராமாயணக்கதையின் சாரத்தை யே நதி ரூபமாக வர்ணிக்கிறார். அதில் வரும் ஒவவொரு முக்கிய சம்பவத்தையும் துறை படிக்கட்டு, ஜலம், பிரவாகம் (Current) குமிழி, சுழல், அலை, தன்மை, இனிமை என்று இவ்விதம் புதுமையாக உவமைமேல் உவமையாக அடுக்கிக் கொண்டே போகிறார்.

## இராமாயண மகா நதி

### சௌபாயி

மானஸ் மூல் மிலீ ஸுர ஸரிஹீ
ஸுனத் ஸுஜன் மன் பாவன் கரிஹீ
பிச் பிச் கதா விசித்ர விபாகா
ஜனு ஸரி தீர் தீர் பன்பாரே
உமா மஹேஸ் விவாஹ் பராதீ
தே ஜல சர் அகணித் பஹு பாந்தி
ரகுவர் ஜன்ம அனந்த பதாயீ
பவர் தரங்க் மனோஹரதாயீ

### தோஹா

பால சரித் சஹு பந்து கே வனஜ் விபுல் பஹு ரங்க்
ந்ருப் ரானீ சரிஜன் ஸுகிருத் மதுகர் வாரி—விஹங்க

## மொழி பெயர்ப்பு

மானஸரோவர மடுவில் உதிக்கும்
ஞான - கங்கை மனத் தூய்மையளிக்கும் ;
தானதன் பெயரைக் கேட்டிடுமளவில்
ஞானமும் தூய்மையும் எய்துவர் மனிதர் :
இடை இடை சுடர்விடு பற்பல கதைகள்
தடம்வளர் காடுகள் சோலைகள் கண்டீர் :
சடைமுடி யண்ணல் உமைதிருமணமே
இடைவளர் பலப்பல நீர்நிலைப் பறவைகள் :
அற்புதன் ரகுவரன் அருந்தவப் பிறப்பே
பற்பல ஒளிவிடு அலைநீர் அறிவீர் :
இப்படி என்று இயம்புதற் கியலா
அப்பன் பிறவி அலைநீர் இனிமை.
நான்கு சகோதரர் நற்சிசு லீலை
பூங்கவி புகழ் திரு புண்ணிய லீலை
வீங்கெழில் தூங்கிடு நதியினில் பூத்த
ஓங்கிய ஆம்பல், உற்பலம், கமலம் ;
பாங்குள அரசியர், தசரதன் வண்டு
தாங்கிடு பரிஜனம் தண்ணீர்ப் பறவைகள்.

## சௌபாயீ

ஸீய் ஸ்வயம்வர் கதா ஸுஹாயீ
ஸரித் ஸுஹாவனி ஸோ சவி சாயீ
நதீ நால் படு பிரஸ்ன அனேகா
கேவட் குஸல் உதர் ஸவிவேகா
ஸுனி அநுகதன் பரஸ்பர் ஹோயீ
பதிக் ஸமாஜ் ஸோஹ் ஸரி ஸோயீ
கோர் தார் பிருகு தாத் ரிஸானீ

காட் ஸுபத்த ராம லரவானீ
ஸாநுஜ் ராம விவாஹ் உசாஹு
ஸோ ஸுப் உமக் ஸுகத் ஸப் காஹு
கஹத் ஸுனத் ஹர்ஷஹிம் புலகாஹிம்
தே ஸுகிருத மன் முதித் நஹா ஹிம்
ராம திலக் ஹித் மங்கள் ஸாஜா
பர்வ ஜோக் ஜநு ஜுரே ஸமாஜா
காயீ குமதி கேகயீ கேரீ
பரீ ஜாஸு பல் விபத்தி கனேரி

## தோஹா

ஸமன் அமித் உத்பாத் ஸப் ஸப் டுரத் சரித் ஜப் ஜாக்
கலி அக் கல் அவகுன் கதன் தே ஜல மல் பக் காக்

## மொழி பெயர்ப்பு

பாமா மைதிலி ஜானகி அம்பிகை
சியா மாங்கன் மகிழ்தேவி வைதேஹி
பூமா துதவிய புண்ணியக் கன்னிகை
தேமொழி தெய்வ நலந்திகழ் நாயகி
தாமோதரன் மனையாட்டி பிராட்டி தன்
சீர்மிகு ஸ்வயம்வரம் எனும் திருவினையே
ராமாயணம் எனும் ரமணிய நதியாம் :
பலவித பிரச்னை நதிதவழ் படகுகள் ;
நலமிகு குகன்கதை நல்ல விவேகம் ;
பலவகை உபகதை பிரயாணிகள் குழு
ஜலமிசை சென்றிடு யாத்ரிகர் கூட்டம.
பிருகுபதி கோபம் பயங்கர வேகம் ;
ரகுபதி வாக்கு ரஞ்சகப் படித்துறை ;
ராகவர் நால்வரின் நற்றிரு மணமே

பூதலர் போற்றிடும் எழில்பொழி நதிநடை :
காதை படித்து மகிழ் கனவான்கள்
சீதப் புனலிடை திளே அதி புண்ணியர்
யௌவராஜ்ய பட்டாபிஷேக விளே
பருவகாலம் திகழ் பார்புகழ் மேளா :
கைகேயி வஞ்சனே கால்இழு படுசுழல்
வெய்ய விபத்து; விபரீத வித்து ;
அய்யன் பரதன் ஆற்றிய நோன்பே
செய்வினே வேகம் மாற்றிடு மருந்து
பல்வினேக் களஞ்சியம் கவியின் வர்ணனே ;
நல்லவர் அல்லவர் கயமை உரைத்தல் ;
என்னும் இவையே இன்நதி வளரும்
நல்லவை நடுவில் நாளும் இருக்கும்
பொல்லாக் கொக்கு ; போக்கிரிக் காக்கை

## சௌபாயீ

கீரிதி ஸரித் சஹூம் ரிது ரூரி
மைய் ஸுஹாவனி பாவனி பூரி
ஹிம ஹிம சைல ஸுதா சிவ் ப்யாஹு
சிசிர ஸுகத ப்ரபு ஜன்ம உசாஹு
பர்னப் ராம் விவாஹ் ஸமாஜு
ஸோ முத மங்கள மய் ரிது ராஜு
க்ரீஷ்ம் துஸஹ் ராம வன கவனூ
பந்த் கதா கர் ஆதப் பவனூ
வர்ஷா கோர் நிஸாசர் ராரீ
ஸுரகுல ஸாலி ஸுமங்கள் காரீ
ராம ராக் ஜுக் வின படாயீ
விஸத் ஸுகத் ஸோயி ஸரத் ஸுஹாயீ
ஸதீ சிரோமணி ஸிய் குண் காதா

ஸோய் குன் அமல் அநூபம பாதா
பரத் ஸுபாஉ ஸுஸீதல தாரீ
ஸதா ஏக்ரஸ் பரணி ந ஜாயீ

## தோஹா

அவலோகனி போலனி மிலனி ப்ரீதி பரஸ்பர் ஹாஸ்
பாயப் பலி சஹு பந்து கீ ஜல மாதுரீ ஸுபாஸ்

## மொழி பெயர்ப்பு

கீர்த்தி என்பதே அறுவகை ருதுவாம்
தீர்த்தமூர்த்தியாம் தெய்விக வடிவாம்
பனிமலை மகள் மணம் பனிபொழி காலம்
கனிவாய் ராமன் ஜனனம் குளிர் ஆம் :
இனியன் ராகவன் திருமணம் வஸந்தம்
புனிதன் வனம்செலல் பொசுக்கிடு கோடை
வனவாழ்க்கைக் கதை வாட்டிடு காற்று :
அரக்கர்கள் ஆணவம் அடைமழைகாலம்
ஸுரகுல காரியப் பயிர்வளம் மேகம் :
ராம ராஜ்யமே ரம்ய சரத்ருது
கோமகள் ஸீதை குணகணம் நதிவழி
போம் வழிக்கான புண்ணிய மார்க்கம்.
என்றும் மாரு, எதிலும் அழியா
அன்றும், இன்றும் அதே சுவையுள்ள
குன்று மணித்தோள் குமரன் பரதன்
வென்றிகொள் விற்கர வேந்தன் இளவல்
நின்று விளக்கிய தன்மை நீர்த்தண்மை :
பார்த்தல், பேசல், பழகல், சிரித்தல்,
ஈர்த்தல், இணைதல், இருத்தல், கலத்தல்,
நோற்றல் முதலிய ராகவர் செய்கை

கீர்த்திகொள் நால்வரின் அன்புச் சேர்க்கை
தீர்த்தத் தன்மை; திவ்வியப் பான்மை;
தன்குணம் மாருத் தண்ணீர் வளமை
மன்னுயிர் புரக்கும் நீரின் மேன்மை
இன்பம் பயக்கும் இன்நீர் மகிமை
துன்பம் துடைக்கும் நதிநீர்ப் பெருமை
அன்பு, அறம் வளர் ஆற்று நீர்ச் செழுமை
இன்னதென் றியம்பற் கரிதாம் இனிமை.

இத்துடன் நிறுத்தவில்லை ஸ்ரீதுளஸிதாஸர். இன்னும் மேலே தொடங்குகிருர் இதே நடையில் பாருங்கள்.

ஆரதி விநய தீனதா மோரி
லகுதா லலித் ஸுபாரிந தோரி
அத்புத் ஸலில் ஸுனத் குன்காரீ
ஆஸ் பியாஸ் மனேமல ஹாரீ
ராம ஸுப்ரேமஹி போஷத் பானீ
ஹரத் ஸகல் கலி கலுஷ் கலானீ
பல் ஸரம் ஸோஷக் தோஷக் தோஷா
ஸமன் துரித்துத் தாரித் தோஷா
காம கோஹ் மத் மோஹ் நஸாவன்
விமல் விவேக் விராக் படாவன்
ஸாதர் மஜ்ஜன் பான் கியே தேம்
மிடஹிம் பாப் பரிதாப் ஹியே தேம்.

## மொழி பெயர்ப்பு

என் சிறு பொன் மொழி இன் நீர் எளிமை
பொன்னரங்கன் புகழ் புகல்வது குளுமை
இன்னதன்மையாம் இனிய தண்ணீரே;
வன்மை கொள் ஆசா — தாகம் தீர்க்கும்

தென்னரங்கன் கழல் திவ்ய பக்தியே
புன்கலி செய் பல கொடுமையழிக்கும்
பிறவிப் புன்மையகற்றிடு நன்னீர்
இறப்பின் முக்தி யளித்திடு நன்னீர்
தரித்திர வன்மை தவிர்த்திடு நன்னீர்
துரிதம், துக்கம் துடைத்திடு தூயநீர்
காம மழித்திடு கமனியத் தண்ணீர்
கோப மொழித்திடு கோமளத் தண்ணீர்
மோகம் விலக்கிடு மோகனத் தண்ணீர்
பூமியில் திமிர், வெறி போக்கிடு தண்ணீர்
நாம தூய்மை கொள் நளினத் தண்ணீர்
சேமம் அளித்திடு இராமாயண நீர்
ஞான விவேகம் நயந்திடு நறு நீர்
மோன விரக்தியில் மூழ்க்கிடு முதுநீர்
தியான சக்தியளி தாயகத்திரு நீர்
கானமும் கவிதையும் பொழி எழில் மிகுநீர்
ஈனமகற்றிதிகாசக் குளிர் நீர்
ஊன மொழித்திடு உத்தமத்து நீர்
வானவர் போற்றிடு வால்மீகி — கிரி நீா
ஆன இன் நீரை அன்புடனருந்தின்
மானம் பெருகும், மங்களம் உயரும்
நாறு பாபமும் தாபமும் உருகும்
ஏனைய குறைகள் எல்லாம் கருகும்
தேன் என இனிக்கும் தூய்மையளிக்கும்
ஊன் உயிர் சிறக்கும் உவகை தளிர்க்கும்
ஞானத் தண்ணீர் பானம் பண்ணீர்
ஊன் உடல் எடுத்த உலகத்தீரே.

## சௌபாயி

ஜின்ஹ் யஹ் வாரிந மானஸ் தோயே

தே காயர் கலிகால் பிகோயே
த்ருஷித் நிரகி ரவிகர் பல் — வாரீ
பிரிஹஹிம் ம்ருக் ஜிமி ஜீவ் துகாரி

## தோஹா

மதி அநுஹாரி ஸுபாரிகுன் கனி மன் அன்ஹ் வாயீ
ஸுமரி பவானி ஸங்கர் ஹி கஹ் கவி கதா ஸுஹாயீ

## மொழி பெயர்ப்பு

இவ்வித மானஸ நன்னீர் மூழ்கார்
எவ்வகைப்பயனும் இலாதார் மூடர்
கானல் நீரைக்கண்டு மயங்கும்
மான் எனப் பிறவி மயக்கில் வீழ்வார்
என் சிறு புன்மதிக் கெட்டிய வரையில்
இந்நீர் மகிமை எடுத்துரைத்தேன்
அந்நீர் மூழ்கி அகமும் குளிர்ந்தேன்
சொன்னேன் மன்னவன் காதையின் தன்மை
என்னே ; இனியவன் இரு கழலிறைஞ்சி
பொன்னஞ்சடையான் பூங்குழல் போற்றி
மின்னேரிடையாள் மேனை புதல்வி
தன்னேரில்லாச் சங்கரன் மனைவி
பொன்னே அனையாள் பூரணி ; காரணி
அன்னை பவானி அம்பிகை பார்வதி
அன்னவள் அம்புயச் சேவடி போற்றி
மனுகுல இராமன் திருக்கதை சொல்வேன் :

இவ்விதமாக, இராமாயண மகிமையை வர்ணனை செய்து முடிக்கிறார் கவிபுங்கவர் துளஸி. அதன்பிறகு பிரயாகையில் வாசம் செய்யும் பரத்துவாஜ முனிவரைப் பற்றியும், அவரைக் கும்பமேளா ஸமயத்தில் காண வந்த

யாக்ஞ வல்கியரைப்பற்றியும், அவ்விருவருக்கும் நடந்த இராமாயணபரமான ஸம்வாதத்தைப்பற்றியும் கூறத் தொடங்குகிறார்.

பரத்வாஜ முனிவர் ஸ்ரீராமரைப் பற்றிக் கூறும்படி கேட்க யாக்ஞவல்க்கியர் சொல்லத் தொடங்குகிறார், இவ் விதமாக அமைந்துள்ளது கதைப் போக்கு.

இங்கு கம்பரைப் போலவோ வால்மீகியைப் போல வோ கவி தானாகவே நேரிடக் கதை சொல்ல வில்லை. ஸம்ஸ்கிருத புராண மரபின்படி தான் காவியமாக இயற் றும் கதையை முன்னால் ஒரு பெரியவர் மற்றொருவருக்குச் சொன்னதாக, ஸம்பாஷண - ஸம்வாத ரூபமாக அமைத் திருக்கிறார்.

## துளஸி இராமாயண அமைப்பு

முதன் முதலில், கைலாஸ பர்வதத்தில், பரமேசுவரன் பார்வதிக்கு இராமாயணம் சொல்கிறார். பிறகு பிரயாகையில், யாஞ்ஞவல்க்கியர் பாரத்வாஜருக்குச் சொல்கிறார்.

அதன் பிறகு

காக புஸுண்டி, உத்திர திக்கில் உள்ள நீலகிரி மலையில், கருடாழ்வாருக்கு இராமாயணம் கூறுகிறார்.

முதலில் பரமேசுரன் தான் அகத்தியரிடம் கேட்ட இராமாயணத்தைப் பார்வதிக்குச் சொல்ல, அதை யாஞ்ஞ வல்க்கியர் பரத்வாஜருக்குச் சொல்ல ஆரம்பிக்கிறார். ஆக

அகத்தியர் - பரமேசுவரனுக்கும்,
பரமேசுவரன் - பார்வதிக்கும்,
யாஞ்ஞுவல்க்கியர் - பரத்வாஜருக்கும்,
காக புஸுண்டி - கருடனுக்கும்

சொன்ன புனிதக் கதை இராமாயணம். அதைத் துளஸி யாகிய கவி, வாசகர்களாகிய நமக்குச் சொல்கிருர் என்று இத்தொடர்பை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும் இதைத் துளஸியே ஆங்காங்கே ஞாபகமூட்டுகிருர். இது நிற்க.

## கம்பர் - துளஸி கோசலம்

இதுவரை கூறி வந்த படி, கம்பர் கோசலம் கல்வி, செல்வம், ஒழுக்கம், குணநலன், செங்கோன்மை, வண்மை முதலிய அரும் பெரும் குணங்களுக்குச் களஞ்சியமாகவும் துளஸி – கோசலம் புக்தி, முக்தி, ருத்தி, ஸித்தி, சக்தி ஆகியவைகளுக்கு அழியா இருப்பிடமாகவும் திகழ் கின்றன.

கம்பர் கோசலம் போகவதி நாட்டையும், அமராவதி யையும் அளகாபுரியையும் வனப்பால், சிறப்பால், செழிப் பால், செல்வத்தால், தோற்றுவித்துக் கம்பீரமாக விளங்கு கிறது. துளஸியின் கோசலமோ வைகுண்டத்தையும், கைலாசத்தையும், சத்தியலோகத்தையும், தனது, தூய் மையால், வாய்மையால், நேர்மையால், சீர்மையால் ஜயித்துத் தெய்வீகம் பொங்க விளங்குகிறது. ஒன்று வைபவ நிலயம் : மற்ருென்று வைராக்கிய சாந்தி நிலயம் ஒன்று ஐசுவரிய ஸௌந்தர்யம், மற்ருென்று ஈசுவர (திவ்விய) ஸௌந்தர்யம். முந்தியது ஸகல ஸௌபாக்கி யத்தையும் பொழியும் காமதேனு ; நினைத்ததெல்லாம் தரும் கற்பகத் தரு ; விரும்பியதை விரைந்தளிக்கும் சிந்தாமணி ; ஐம்புலன்களும் ஆனந்திக்கும் நந்தவனம் ; பிந்தியது பிறப் பிறப்பறுக்கும் புண்ணிய நதி ; புனிதம் பொங்கும் பூரண நதி; மோட்சசாம்ராஜ்யமளிக்கும் மோனச்சுரங்கம் ஒன்று போகக் கடல். மற்ருென்று யோகக்கடல், ஒன்று இம்மை இன்பம் யாவும் பொழியும்; மற்ருென்று மறுமைப் பேரின்பம் மாருது வழங்கும், ஒன்று கானக் கடல் : மற்ருென்று ஞானக்கடல். ஒன்று கற்பனு

கந்தர்வலோகம்; மற்றொன்று பக்தி முக்தி சாம்ராஜ்ய லட்சுமி. ஒன்று ஆனந்த மின்னல் (ஒளி); மற்றொன்று அமைதிக்கனல். ஒன்று அனுபவப் புயல்; மற்றொன்று அடக்கக் கடல். ஒன்று சந்தோஷ சிகரம்; மற்றொன்று சாந்த மதியம். ஒன்று கண்ணுக்கும், காதுக்கும் மனதுக்கும், கற்பனைக்கும் இனிய விருந்து; மற்றொன்று இதயத்துக்கும, வாழ்க்கைக்கும், ஆதமாவுக்கும், அந்தக்கரணத்துக்கும் திவ்விய சாந்தமளிக்கும் தேவாமுதம். ஒன்று ஆனந்தக் குளிர்ச்சி; மற்றொன்று ஆன்ம - மலர்ச்சி. ஆக,

கம்பரும் - துளஸியும் கோசல நாட்டைத் தங்களுக்கே உரிய அரிய, தனிப்பாணியில் படம் பிடித்துக்காட்டுகிறார்கள். இனி ஆதி கவி வால்மீகர் எவ்வாறு கோசல வள நாட்டை வர்ணிக்கிறார் என்று கவனிப்போம். கம்பர் நாட்டுப் படலம் வேறு; நகரப் படலம் வேறு; ஆனால் வால்மீகரோ ஒன்றாகவே பாவித்து வர்ணிக்கிறார்கள். அதாவது கோசல நாட்டை சுருக்கமாக கூறி அந்நாட்டின் தலைநகரான அயோத்தியை வர்ணிக்கிறார்.

## வால்மீகி கோசலம்

முதன் முதலில் ஸம்க்ஷேப இராமாயணம் இரண்டாவது சர்க்கத்தில் கிரௌஞ்ச பட்சி ஸம்பவம், மூன்றும் ஸர்க்கத்தில் இராமாயண சம்பவச் சுருக்கம். நான்காவது சர்க்கத்தில் குசலவர்கள் இராமாயண கானம் செய்த பிரகாரமும் பிரபாவமும் ஆகிய இவைகளை முறையே கூறிவிட்டு, ஐந்தாவது ஸர்க்கத்தில் கோசல வர்ணனம் ஆரம்பிக்கிறார் முனிவர் வால்மீகர்.

இமௌமுனீ பார்த்திவ லட்சணான்விதௌ
குசீலவௌ சைவ மகா தபஸ்விநௌ
மமாபி தத்பூதிகரம் பிரசக்ஷதே

மகாநுபாவம் சரிதம் நிபோதத
ததஸ்து தௌ இராமவசப் பிரசோதிதௌ
அகாயதாம் மார்க்க விதானஸம்பதா
ஸசாபி இராம : பரிஷத்கத : சனைர்
புபூஷயா ஸக்தமனா பபூவ ஹ.

## ஷ சுலோகங்கட்குப் பொருள்

ராஜ லட்சணங்கள் பொருந்திய இம் முனி குமாரர்கள், தவத்துக்கும், பாண்டித்வத்துக்கும் பெயர்பெற்ற குசலவர்கள் மகாநுபாவனாகிய ஸ்ரீராமனது உதார சரித்தைப் பாடுகிறபடியினால் எனக்கும் நல்ல கௌரவம்; அதுவே நான் பெற்ற பேறு. அப்படிப்பட்ட திருக்கதையை அனைவரும் கவனமாகக் கேட்கவேண்டும்.

பிறகு இராமனால் தூண்டப்பட்ட லவ-குசர்கள் இனிய குரலுடன் சங்கீத முறையுடன் கம்பீரமாக பாடத் தொடங்கினார்கள். இராமரும் சபையில் வீற்றிருந்து ஆர்வத்துடன் கேட்கலானார் என்று முடிகிறது நாலாம் சர்க்கம்

## முக்கிய சந்தஸ் அநுஷ்டுப்

ஸர்வா பூர்வமியம் யேஷாம் ஆஸீத் க்ருத்ஸ்னா
வஸுந்தரா
பிரஜாபதிமுபாதாய ந்ருபாணாம் ஜய சாலினாம்
யேஷாம் ஸஸகரோநாம ஸாகரோ யேன கானித :
ஷஷ்டி : புத்ர ஸஹஸ்ராணி யம் யாந்தம்
பர்யவாரயன்
இக்ஷ்வாகூணாமிதம் தேஷாம் ராஞ்ஞாம் வம்சே
மகாத்மனாம்

மஹதுத்பன்னமாக்யானம் இராமாயண மிதிச்சுருதம்
ததிதம் வர்த்தயிஷ்யாமி ஸர்வம் நிகிலமாதித:
தர்ம காமார்த்த ஸஹிதம் ஸ்ரோதவ்யம் அநஸூயயா

## பொருள்

வெற்றி வீரர்களாகிய மனுகுல மன்னர்கள் ஒரு காலத்தில் இப்பூமண்டலம் முழுமையுமே ஆண்டு வந்தார்கள். அறுபதினாயிரம் புத்திரர்களால் புடைசூழப்பட்ட, சமுத்திரத்தைத் தோண்டுவித்த, ஸகர மகாராஜா, இந்த வம்சத்தில்தான் உதித்தவர் அப்படிப்பட்ட மகிமை மகாத்மாக்கள் உதித்த இந்த இக்ஷ்வாகு வம்சத்தில், இராமாயணம் என்னும் பெரும் சம்பவம் அரும் கதை நடந்தது என்பதை எல்லாரும் கேள்விப்பட்டிருக்கிறோம். அக்கதையை இப்போது முழுவதும் அடியிலிருந்து விவரமாகச் சொல்லப் போகிறேன். அறம். பொருள், இன்பம், இம்மூன்றுடனும் கூடிய இக்காதையை, வெறுப்பற்ற, அழுக்காறற்ற, நிர்மல மனத்துடன் கேட்கவேண்டும்.

## சுலோகம்

கோஸலோ நாம முதித ஸ்பீதோ ஜனபதோ மகான்
நிவிஷ்ட: ஸரயூதீரே ப்ரபூத தன-தான்யவான்.
அயோத்யா நாம நகரீ தத்ராஸீல் லோக-விஸ்ருதா
மனுநா மானவேந்த்ரேண யாபூரி நிர்மிதா ஸ்வயம்.

## பொருள்

ஸரயூ நதிக்கரையில், கோசலம் என்று பெயர் கொண்ட நீர்வளம், நிலவளம் செறிந்த. செழிப்பு மிகுந்த நாடு ஒன்று இருக்கிறது. அங்கு ஆனந்தமும் அமைதியும் நிறைந்த மக்கள் வாழ்ந்து வந்தனர்.

அக்கோசல நாட்டிற்கு, மூவுலகிலும் பிரசித்திபெற்ற அயோத்யா பட்டணம் தலைநகரம் ஆக இருந்தது. இந்த அயோத்யா - புரி மனிதர் ஏருகிய மநுவினுல், தானே நிர்மாணிக்கப்பட்டது.

## சுலோகம்

ஆயதா தச சத்வே ச யோஜனுனி மகா புரீ
ஸ்ரீ மதீ த்ரீணி விஸ்தீர்ணு ஸுவிபக்த மஹாபதா
ராஜ மார்க்கேண மஹதா ஸுவிபக்தேன சோபிதா
முக்த புஷ்பாவகீர்ணேன ஜலஸிக்தேன நித்யச:
தாம்து ராஜா தசரதோ மகான் ராஷ்ட்ர-விவர்த்தன:
புரீம் ஆவாஸயாமாஸ திவம் தேவபதிர் யதா.

## பொருள்

இவ்வயோத்தியாபுரி பன்னிரண்டு யோஜனை விஸ்தீர்ணம் உடையது. மூன்று யோஜனை விஸ்தாரமுள்ள ராஜ பாட்டையோடு கூடியது. பெரிய, அகன்ற, அழகிய நீர் தெளித்து, மலர் பரப்பி அலங்கரிக்கப்பட்ட ராஜ மார்க்கத்தினுல் விளங்குவது. இந்நகரில் தேசத்தின் நன்மையை வளர்க்கும் தசரத மகாராஜா இந்திரன் தேவ புரியில் வாழ்வதுபோல் வாழ்ந்துவந்தார்.

## அயோத்யா வர்ணனம்

கவாட தோரணவதீம் ஸுவிபக்தாந்தராபணும்
ஸர்வ யந்த்ராயுதவதீம் உபேதாம் ஸர்வ சில்பிபி:
ஸூத மாகத ஸம்பாதாம் ஸ்ரீமதீம் அதுலப்ரபாம்
உச்சாட்டாலத் வஜவதீம் சதக்னீ சத ஸங்குலாம்
வதூ நாடக ஸங்கைஸ்ச ஸம்யுக்தாம் ஸர்வத: புரீம்
உத்யானும்ரவணுேபேதாம் மஹதீம் ஸாலமேகலாம்

துர்க்க கம்பீர பரிகாம் துர்க்கா மன்யைர் துராஸதாம்
வாஜி வாரண ஸம்பூர்ணும் கோபிருஷ்ட்ரைக் கரைஸ்
ததா
ஸாமந்த ராஜ ஸங்கைஸ்ச பலி கர்மபிராவ் ருதாம்
நானா தேச நிவாஸைஸ்ச வணிக்பி ருப சோபிதாம்
ப்ராஸாதைர் ரத்ன விக்ருதை: பர்வதை ருப
சோபிதாம்
கூடாகா ரைஸ்ச ஸம்பூர்ணும் இந்த்ரஸ்யே
வாமராவதீம்
சித்ராமஷ்டா பதாகாராம் வர நாரீகணைர் யுதாம்
ஸர்வ ரத்ன ஸமாகீர்ணும் விமான கிருஹ
சோபிதாம்
க்ருஹாகாடாம் அவிச்சித்ராம் ஸமபூமௌ
நிவேசிதாம்
சாலி தண்டுல சம்பூர்ணும் இக்ஷு தண்ட
ரஸோதகாம்
துந்துபிபிர் மிருதங் கைஸ்ச வீணுபி: பணவைஸ் ததா
நாதிதாம் ப்ருச மத்யர்த்தம் பிருதிவ்யாம் தாமநுத்
தமாம்
விமானமிவஸித் தானும் தபஸாதிகதம் திவி
ஸுநிவேசித வேச்மாந்தாம் நரோத்தம ஸமாவ்ருதாம்
யேச பாணைர் நவித்யந்தி விவிக்த மபரா வரம்
சப்த வேத்யம் சவிததம லகு ஹஸ்தா: விசாரதா:
ஸிம்ஹ வ்யாக்ர வராஹாணும் மத்தானும்
நர்ததாம் வனே
ஹந்தாரோ நிசிதைர் பாணைர் பலாத் பாஹு பலை ரபி
தாத்ருசானும ஸஹஸ்ரைச் தாம் அபிபூர்ணும்
மகா ரதை:
புரீமா வாஸயாமாஸ ராஜா தசரதஸ் ததா.

## பொருள்

# அயோத்தி வர்ணனை

அந்த அயோத்யாபுரி, பெரிய பெரிய கோட்டைக் கதவுகளும் தோரணங்களும் நிறைந்துள்ளது. விசால மான கடைவீதிகளும் சகலவிதமான யந்திரங்களும் (Machines) ஆயுதங்களும் நிரம்பியது; பலவித சில்பிக ளாலும், இசைவாணர்களாலும், துதிப்பாடகர்களாலும் நிறைந்துள்ளது; ஜோதிமயமானது. செல்வக் களஞ்சிய மாய் விளங்குவது; ஏழடுக்கு உப்பரிகைகள் எங்கும் திகழ் வது; அவைகளின் உச்சியில் கொடிகள் பட்டொளி வீச விளங்குவது: நூற்றுக்கணக்கான குழல் தாழ்ப்பாள், வஜ்ராயுதம் முதலியன மின்னப்படுவது; மகளிர் நாடக சாலைகளால் எங்கும் சூழப்பட்டுள்ளது; உத்யான வனங் களும், பூஞ்சோலைகளும் மாந்தோப்புக்களும், சவுக் குவனங்களும் நிறைந்தது. யாரும் அண்ட முடியாத அகழ்கொண்டது. எதிரிகளால் கிட்ட நெருங்க முடியா தது; யானை, குதிரை ஏராளமாக உடையது; பசு, எருது; ஒட்டகம், கோவேறுகழுதை முதலியன செறிந்தது. மந்திரி, பிரதானி, அரசர்கள் குழுமியது; பூஜா திரவியங் கள், நைவேத்யான்னங்கள், அங்குமிங்கும் நிறைந்து கிடப்பது. பற்பல தேசத்து வர்த்தகர்களாலும், வாணி பர்களாலும் நிறைந்து கிடப்பது; நவரத்னம் இழைத்த மாளிகைகளும், மலைகளும் சூழ்ந்தது; ரகஸிய சாலைகள் நிரம்பியது; இந்திரனுடைய அமராவதி போன்றது; அற் புதமானது; தங்கமயமானது; எட்டுக்கால் வடிவத்தில் அமைக்கபபட்டது; அழகிய மகளிர் நிறைந்தது; சகல வித ரத்தினங்களும் குவியப்பட்டுள்ளது; விமான-வீடுகள் திகழ்வது; வீடுகளால் அடர்ந்தது, ஸம தலத்தில் சமைக்

கப்பட்டது ; சாலி, சம்பா அரிசி நிறைந்தது ; கரும்பென இனிக்கும் நீர் நிரம்பியது. துந்துபி. முரசு, மிருதங்கம், வீணை, கொம்பு முதலிய வாத்ய ஓசைகளால் எப்போதும் சப்தம் நிறைந்துள்ளது. பூமியில் ஈடிணையற்றது ; மிகச் சிறந்தது ; தவத்தினால் சித்தர்கள் அடைந்த தேவ-விமானம்போல் திகழ்வது ; நல்ல, உயர்ந்த வீடுகள் செறிந்தது ; உத்தம மனிதர்கள் நிறைந்தது.

யாராலும் ஜயிக்க முடியாதது (அயோத்யா). பாண வித்தையுள் கைதேர்ந்தவர்களும், சப்தம் வரும் திக்கு நோக்கி பாணம் குறி தவறாது விடும் வல்லுநர்களும், சிங்கம், புலி, காட்டுப்பன்றி முதலிய கர்ஜிக்கும் கொடிய காட்டு விலங்குகளைக் கொல்லும் தீர - வீர - சூர சிகாமணிகளும் பலிஷ்டர்களும், புஜ பலசாலிகளும் நிறைந்தது. ஆயிரக்கணக்கான வீரர்கள் வாழ்வது ; நித்ய கல்யாணம் நிறைந்தது ; இப்படிப்பட்ட இப்புரியில் ராஜா தசரதர் வாழ்ந்து வந்தார்.

முதல் நூலாசிரியர் வால்மீகியும், வழி நூலாசிரியர் கம்பரும் வர்ணிப்பதில் வல்லுநர்கள். இவ்விரு இணையற்ற இந்திய கவிகுல-சேகரர்களின் ஆறு, நாடு, நகர-வர்ணனை தத்ருபமாக - - வர்ணப்படக் காட்சிபோல - - வாசகர்களின் கண்முன் தாண்டவமாடுகிறது. படிக்கப் படிக்க புதுச் சுவை, புது நயம் தோன்றுகிறது.

## வால்மீகி கோசலமும் கம்பர் கோசலையும்

பாற்கடல் பள்ளி கொண்ட பங்கயக் கண்ணனின் பசும் நாபி பூத்த பதுமத்திலுதித்தவன், படைப்புக் கடவுளாகிய பிரமன். நான் மறையோனின் நற்குலத்தில் பிறந்தவர் வைவஸ்வத (சூரிய குமாரன்) மநு என்னும்

பிரஜாபதி, இந்த சூரியன் மைந்தன் மநுவை முதலரசாகக் கொண்ட, வம்ச பரம்பரைக் கீர்த்தி வாய்ந்தது வால்மீகி வர்ணிக்கும் கோசலம் என்னும் குபேர ஸம்பத்துக் கொழிக்கும் செழுமையான நாடு.

இக்ஷ்வாகு, திரிசங்கு, பிருகு, மாந்தாதா, ஸகரன்: திலீபன், பகீரதன், ககுஸ்தன், ரகு, கல்மாஷபாதன், அம்பரீஷன், நகுஷன், யயாதி, நாபாகன் முதலிய மகா பிரசித்திபெற்ற, இந்திரனும் நட்புக்கொள்ளும்படியான வல்லமை வாய்ந்த, குடிமக்களின் நலனேயே கண்ணும் கருத்துமாகக் கொண்ட, படை பலம் செறிந்த, அற முறை திறம்பாத, அரசர்களால் ஆளப்பட்டது கோசலம் என்னும் கோமள நாடு. இதற்கு அணிகலனாய் விளங்கும் தலை நகர்தான் அயோத்யா — யாராலும் ஜயிக்க ஒண்ணாதது. இப்படிப்பட்ட மகிமை வாய்ந்த தேசம்தான் வால்மீகி வர்ணிக்கும் வளமிகு கோசலம். இங்குதான் வைகுந்தபதி வந்துதித்தான்.

நீர்வளமும், நிலவளமும் நிறைந்து பார்மகள் முகமோ, திலகமோ கண்ணோ, எனப் பார்ப்போர் ஐயுறும்படி, அட்ட லக்குமிகளும் நவநிதிகளும் நித்ய வாஸம் புரியும், இயற்கையின் எழிலும் செயற்கையின் சிறப்பும் தாண்டவமாடும், தவள வண்ண மாட மாளிகை, கூட கோபுரங்கள் நிறைந்த கம்பரது கோசலை நாடோ எனில் வர்ணனைச் சிறப்பில் வால்மீகியையும் தோற்கடித்து விடுகிறது, நாட்டுப் படலத்தில் கம்பரின் கைவரிசை— அல்ல கற்பனை வரிசை முழுமையும் கண்டோம்.

பச்சைப் பண்ணைகளும், செங்காலன்னங்களும், வெண்ணன்னக் குஞ்சுகளும், பூங்குயில்களும், பைங் கிளிகளும், தோகை மயில்களும், கரு வண்டுகளும், மென் மலர்களும், நீலச் சுனைகளும், வெண் சங்கங்களும்,

பசும் நறும் தேனடைகளும், பழத் தோட்டங்களும், பூம் பொய்கைகளும், பூங்காக்களும், உயர்ந்த பொருள்களும், கல்விக் கழகங்களும், ஆடரங்குகளும், மஞ்சன சாலை களும், கடைவீதிகளும், படைவீடுகளும், திருமகள் அன்ன பெண்மணிகளும், கந்தனை யனைய காளைகளும், இளங் குழந்தைகளும் குழுமி; சந்தனமும் குங்குமமும், கஸ்தூரியும் கர்ப்பூரமும், "கம கம" வெனக் கமழும் ஸரயூ ஆறு கெழுமி, அகிற் புகை, அட்டிற் புகை சூழ, "பம்பி மேகம்" பரக்கும் ஆகாய அழகு வாய்ந்த கம்பரது கோசலையை ஒருமுறை படித்து, மனக்கண்ணால் பார்த்து, ரஸித்தவர்கள் மறுமுறை மறக்கமாட்டார்கள் என்பது திண்ணம்.

முத்தும், பவளமும், பொன்னும், மணியும் சிதறிக் கிடக்கும் சிறப்பு மிகுந்த கம்பர் கோசலை கனவிலும் தெவிட்டாத கற்பனை விருந்து; ஐம்புலன்களுக்கும் அறிவிக் கும் அயர்ச்சி தராத அரிய அமர அமுது.

கோட்டையும், கொத்தளமும், அகழியும் அரணும், தோரணமும் கொடியும் விளங்க, சந்தனம, நறுநீர், மலர் தெளிக்கப்பெற்று, சதுரங்க சேனை போகும் "கலகலப்பு" நிறைந்த விசாலமான ராஜ பாட்டையோடு கூடிய அயோத்தியைத் தலைநகராகக் கொண்ட வால்மீகியின் கோஸலமோவெனின், வரம்பு கடவாத வர்ணனைக் கடல்; உண்மைக்கு உறையுள் போன்ற உற்சாக நிலையம்; ஆனந்த ஸதனம்; அறக் களஞ்சியம்; ஆற்றல் பெட்டகம்; அறிவின் சிகரம்; செல்வமும் கல்வியும், சீரும் சிறப்பும், பேரும் புகழும், அறக் கருணையும், மறக்கருணையும், அறமும் பொருளும், இன்பமும், வீடும், இனிதே ஓங்கி வளம்பெற முறை பிறழாது, திறம் திறம்பாது, நெறி மீறாது, நிலை தவறாது, நேர்மை மாறாது நித்ய வாஸம் புரியும் பூலோக

வைகுண்டம். அரசனும், அமைச்சரும், குடிகளும், படைகளும், கோன்முறை கோணுது அறவழி வாழும் அறக் கோயில். மக்கள் மனமகிழ்ந்து வாழும் மநுமுறை வழுவாத மனங் கமழ் மலர்க்கா.

## வால்மீகியின் அயோத்தி

### வால்மீகியின் வாக்கு வன்மை

பொதுவாக, வர்ணனையிலும், வாய்மையின் வரம்பு கடவாது, தூய்மையின் தராசுமுனை துளியும்நழுவாது ஆதலால் அவரது அயோத்யாபுரியை சாதாரணமாக; இக் காலத்தில் நாம் காணும் எந்த ஒரு நாகரீக தேசத்தின் தலைநகருடனும் ஒப்பிடலாகும். நேரில் காணும் நாகரீகத் தலைநகரின் வர்ணணையின் வளமையை நாம் அப்படியே வால்மீகியில் காண்கிறோம் அதிகமோ குறைவோ வேறு ஒன்றும் வர்ணிக்கப்படவில்லை. அவரிடம் மிகைபடக் காண்பது ஒன்றே ஒன்றுதான், அதாவது அறம் அற முறை அழுத்தம் திருத்தமாக அறம் வழுவாத அரசாட்சியை அதிகம் வர்ணிக்கிறார்- அவ்வளவே. அதாவது வால்மீகியிடம், சிற்சில சந்தர்ப்பங்களில் தவிர, அதிச யோக்தி (மிகைபடக்கூறல்) என்னும் அலங்காரம் அதிகம் கிடையாது எனலாம்.

ஆனால் கற்பனைச் செல்வர் கம்பரோ அப்படி அல்ல. இவரிடம் இந்த அதிசயோக்தி அலங்காரம் படதாபாடு படுகிறது. அவரது அற்புதமேதை அதை எப்படி எல் லாம் ஆட்டிவைக்கிறது. கம்பரது வாக்கு வன்மையும் வர்ணனைத்திரனும் வானை அளாவுகின்றன; வன்கொண் டல்விட்டு மதி முட்டுகின்றன; கடலைத் துழாவுகின்றன; கதிரைப் பிடிக்கத்தாவுகின்றன; கிரியைப் பிளக்கின்றன; எரியைக் கரியாக்குகின்றன. புகையைப் பிரிக்கின்றன;

புலால் வெறியை நறுமணம் கமழச் செய்கின்றன; இல்லாததை இருப்பதுபோலவும், இருப்பதை இல்லாதது போலவும் மருளச் செய்கின்றன, மயக்குகின்றன. வசீகரித்துப் பிரமிக்கச் செய்கின்றன. உண்மையையும் இன்மையையும் மாற்றி மாற்றிப் படம் பிடித்துக் காட்டுகின்றன. இயற்கையும் செயற்கையும் சேர்ந்து ஒரே அரங்கத்தில், ஒரே அலங்காரத்தில் ஒரே பாடலில் ஒரேசமயத்தில் நடனமாட வைக்கின்றன. அதாவது சுருங்கச் சொல்லின் கம்பரிடம் உத்பிரேட்சை, அதிசயோக்தி அலங்காரம் அபரிமிதம். இதை நாம் அவரது ஆற்றுப் படலம் நாட்டுப் படலம் இரண்டிலும் நிதரிசனமாகக் கண்டோம். இனி, கம்பர்நகரப் படலத்தில் அயோத்தியை எப்படிச் சித்தரிக்கிறுர் என்று பார்ப்போம். வால்மீகி கோசலத்தைக் கொஞ்சமாகவும் அயோத்யாபுரியை அதிகமாகவும் வர்ணிக்கிறுர் ஸ்ரீ துளஸி இவ்வித வர்ணனையில் அதிகம் இறங்குவதில்லை அவர் உவமையை விட்டு உருவக அணி *(Metaphor)* பாணியை அதிகம் விரும்புபவர். இதை முதலிலேயே பார்த்தோம். அதுவும் தவிர துளஸிதாஸர் அயோத்தியாபுரியைத் தனிப்பட வர்ணிக்கவும் இல்லை. இவர் நேரே கதை–உபகதையில் இறங்கி விடுகிறுர். அதைப் பிறகு பார்ப்போம். கற்பனையரசு கம்பரோ ஒரு படலம் முழுவதும் நகர வர்ணனை அதாவது அயோத்தி வர்ணனை செய்திருக்கிறுர். வால்மீகருக்கும் இவருக்கும் என்ன ஒற்றுமை வேற்றுமை என்று இனி கவனிப்போம்.

## கம்பர்

### நகரப் படலம். அயோத்தி வர்ணனை

### அயோத்யாபுரி ; வெலற்கருவலிமிகு நகரம்

செவ்விய மதுரஞ் சேர்ந்த நற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்

வவ்விய கவிஞரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுலகத்தோரியாவரும் தவஞ் செய்
தேறுவானு தரிக்கின்ற
அவ்வுலகத் தோரிழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்திமா நகரம்.

சகலாண்ட சராசர நாயகனுகிய சர்வேசுவரன், பூவிருந்த பொன் மகளும், கடலாடை மண்மகளும், கணமும் பிரியாத காத்தல் தொழில்புரி சருமேனிக் கடவுள் பாம்பணை பள்ளிகொண்ட பரந்தாமன், பங்கயக் கண்ணன், பசுமுகில் வண்ணன், உலகளந்த உத்தமன், ஊழுழி உலவாத சத்தியன், அறக்கடவுள் அச்சுதன் அவதரித்து, அறம் வளர்த்து அரசாட்சி செய்யும் பேறு பெற்றது அணிமணி அயோத்திமா நகரம்.

கோசல வள நாட்டின் கண்ணிற் கருமணிபோல் விளங்கா நிற்கும் இப்புண்ணிய புரியை, பூரணன், புங்கவன், புருடோத்தமனின் பாததூளி தரிக்கும் புனித மாநகரை, சிறை இருந்த செல்வியின் சீலவதி ஸீதையின் செல்வத்திரு நகரை, மறை முறை வழுவாத மணியணிமா நகரை ஸரயு நதி ''சலசல''வெனப் பாயும் சனுதன நகரத்தைக், கவிகுல சக்கரவர்த்தி கம்பர் செந்தேனும் கைத்தறப்புளிக்கும் சீரிய கூரிய தீஞ்சொற் பாடல்களில் வர்ணிக்கிருர்.

வால்மீகி ஓர் தலைநகரின் தனிச் சிறப்பைப் படம் பிடித்துக் காட்டுகிருர் என்ருல் கம்பர் அதற்கும் ஒரு படிமேலே போய் தன் கற்பனைத் திறனுல் கவின் செய்து, அற்புத மேதையால் அழகு செய்து, அரிய சொற்களால் அலங்காரம் செய்து, அயோத்தியை வெலற்கரும் வித்தக புரியை ஜகஜ்ஜோதியாக விளங்கச் செய்து விடுகிருர்.

அயோத்தியை வர்ணிக்க ஆரம்பிக்கும்போதே கம்பரின் கற்பனையும் சிந்தனையும் கட்டுக்கடங்காது துள்ளிவருகின்றன; முதற் பாடலைப் பாருங்கள் :—

"செவ்விய மதுரம்" என்று தொடங்கும்போதே திவ்ய வாக்கு தேஜோமயமாகத் திகழ்கிறது.

## மேற்படி பாடலின் பொருள்

செவ்வியனவும், இனிமை பொருந்தியனவும் நற்பொருள் தருவதில் சிறந்தனவும், நுட்பமாயினவும் ஆகிய மதுரச் சொற்களைக் கவர்ந்த கவிஞர்கள் அனைவராலும், வடமொழி வல்லுனராகிய வால்மீகி முனிவராலும், புகழப்பட்டது. அளவற்ற பற்பல உலகங்களில் வாழ்கின்ற எல்லா மக்களாலும் தவம் செய்து அடைய விரும்பும் அந்த வைகுண்ட லோக வாசிகள் ஆவலுடன் இறங்கிவர (அவதரிக்க) விரும்பும் பெருமையை உடையது அயோத்தி என்னும் மாநகரம்.

செவ்விய, இனிய, பொருள் பொதிந்த, நுட்பமான, மதுர கவிதை பாடவல்ல பாவலரும், நாவலரும், புகழும் பெருமை பெற்றது அயோத்தி; வால்மீகியாலும் வர்ணிக்கப்படும் சிறப்பைப் பெற்றது. அத்துடன் மட்டும் அல்ல; எல்லா உலகத்தவரும் கடுந் தவம் செய்து அடைய விரும்புவது பரமபதமாகிய வைகுந்தம்.

அந்த ஸ்ரீவைகுந்த லோகாதிபதியே வந்து வசிக்க விரும்பினார் இந்த அயோத்தியில். வைகுந்த ராணி திருவும், அச்சுதனின் பாயலான ஆதிசேடனும், ஆயுதங்களான சங்கு சக்கரங்களுங்கூட (அனைவரும் வைகுந்தம் வாழ்பவர்கள்) இவ்வயோத்தியில் வந்து வசிக்க விருப்பம் கொண்டனர் என்றால் இந்நகரின் பெருமையை வர்ணிக்க முடியுமோ? என்ன அழகிய வர்ணனை.

யாவரும் தவம் செய்து ஏற விரும்புவது வைகுந்தம்; வைகுந்த வாசிகள் இறங்க விரும்புவது அயோத்தி.

வைகுந்த பதியே தான் வைகும்பதியைவிட்டு அயோத்தியில் அவதரிக்க விரும்பினார் என்றால் அந்நகரின் பெருமையை அளவிட முடியுமா என்பது குறிப்பு.

முதற் பாடலிலேயே தன் முழுத்திறனையும் கொட்ட முயன்று அதில் வெற்றியும் பெற்றுவிட்டார் கவிஞர். அடுத்த பாடல் அயோத்தி வர்ணனைக்கே ஓர் உயரிய அணிகலன்.

## கம்பர்

நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கள நாணோ
இலகுபூண் முலைமேலாரமோ உயிரின்
இருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ வானோர்
உலகின் மேலுலகோ ஊழியின் இறுதி
உறையுளோ யாதென வுரைப்பாம்.

## பொருள்

அந்த அயோத்திமா நகரமானது பூமிதேவியின் முகந்தானோ? அந்த முகத்தில் அணிந்த பொட்டுத்தானோ? அம் முகத்தில் விளங்கும் கண்கள்தானோ? அல்லது அம் மண்மகளின் நிறைவாகிய நித்திய மங்களமான திருமங்கல்ய சூத்ரம் (தாலிச் சரடு) தானோ? அல்லது பூமாதின் மார்பகத்தில் புரளுகின்ற முத்து வடந்தானோ? உயிரின் இருப்பிடம்தானோ? அல்லது திருமகளுக்கு இனிதாகிய

தாமரை மலர்தானே? அல்லது இறைவனது மார்பில் பிரகாசிக்கின்ற நல்ல கௌஸ்துப ரத்தினங்கள் வைக்கப் பட்டிருக்கின்ற பொன்னால் செய்யப்பட்ட பெட்டிதானோ? பிரமன் முதலிய தேவர் உலகிற்கு மேலே இருக்கின்ற உலகாகிய ஸ்ரீவைகுந்தமேதானோ? ஊழிக்காலத்தில் உயிர்கள் எல்லாம் சென்று ஒடுங்கும் இடமாகிய உலகளந்த பெருமாளின் உதரம் (வயிறு) தானோ? இவைகளுள் எது என்று சொல்வது?

ஆச்சரிய பாவத்தை இதை விட அழகாக எடுத்துரைக்க முடியுமா? நளவெண்பாவில்; -

காமர் கயல் புரளக்காவி முகை நெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழ - பூமடந்தை
தன்னாட்டம் போலும் தகைமைத்தே சாகரம்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு,

என்று நளனது நிடதபுரியை வர்ணிக்கிறார் கவி. அங்கு "பூமடந்தை தன் நாட்டம்" நிலமகளின் கண்கள் போல என்றுதான் வர்ணிக்கப்படுகிறது.

ஆனால் கம்பரோ "அதுவோ இதுவோ" என்று அழகிய அடுக்குவமைகளைக் கொட்டி ஐயத்தைக் கிளப்பி விட்டுக் கடைசியில் "எதுவோ தெரியாது" என்று கூறி "எப்படிச் சொல்லுவது" என்ற ஆச்சரியக் கேள்விக் குறியுடன் பாடலை நிறுத்தி வாசகர்களை திணற அடிக்கிறார். இப்படிக் கேள்விக் குறியுடன் உவமைமேல் உவமை அடுக்குவதில்தான் இப்பாடலின் அழகு பொங்கித் ததும்புகிறது.

முகம், திலகம், கண், மங்கள நாண், முத்தாரம், உயிர் உறைவிடம், தாமரை, ரத்தினப் பொற்பெட்டி, வைகுந்தம், திருமால் திருவயிறு ஆகிய இவைகளுள் எதுவோ அறியேன் என்கிறார்.

அதாவது ஒவ்வொரு உவமையும் ஒவ்வொரு அம்சத்தில் பொருந்தினாலும் ஒன்றும் பூர்ணமாக இல்லை என்பது குறிப்பு. அவ்வளவு உயர்ந்தது அயோத்தியின் வனப்பு.

இப்பாடலில் கவி சாதாரண உவமைப் பொருள் களையே கையாள்கிறார் என்றாலும் அவைகளுக்குத் தன் கற்பனைத் திறனால் ஓர் சிறப்பேற்றிவிடுகிறார்.

முகம், திலகம், கண், மங்கள நாண், முத்தாரம் இவை பொதுவாக மாதர்க்கு அழகும் மங்களமும் அளிப்பவை. ஆனால் இங்கு "நிலமகள்" பூமிதேவி யினுடைய என்ற சொல்லால் இப்பொருள்கள் சிறந்து விடுகின்றன. பூமி தேவமகள் ஆதலால்.

தாமரை மலரும் அப்படியே. "செந்திரு விளங்கும் செந்தாமரை" என்பதனால் சாதாரணத் தாமரைகள் அல்ல என்பது தெளிவு.

பொற்பெட்டியும் அவ்வாறே. பெட்டியோ பொன்னால் செய்யப்பட்டது. ரத்தினம் வைப்பதற்குரியது. பாற் கடல் பிறந்த கௌஸ்துப ரத்தினம் வைக்கப்படும் பொற் பெட்டி. மாதவன் மார்பில் அணியும் மணி வைக்கப்படும் பொற்பெட்டி என்பதனால் இப்பெட்டியின் பெருமை சிறந்துகொண்டே போகிறது.

வைகுந்தம், திருமால் நாபியாவும், இயற்கை யிலேயே சிறந்த பொருள்கள்.

இப்பாடலில் நிலமகள், லட்சுமி, விஷ்ணு இவர்களைக் குறிப்பிடுவது இன்னும் விசேஷமானது. பூமிதேவிக்கு உயிர் நாராயணன். ஆதலால் அவனிடமிருந்து விளங்கும் இடம் "உயிரின் இருக்கை" ஆகும். திருமகள்

எப்போதும் தாமரையில் விளங்குவது போல் இந்நகரத்திலும் விளங்குகிருள். ஆதலால் ''திருமகட்கினிய மலர்'' ஆகும். மாயோன் மார்பின் நன்மணிகள் வைத்த பொற்பெட்டி திருப்பாற்கடல். அவன் அங்கு எப்போதும் இருப்பதுபோல இந்நகரிலும் விரும்பி வசித்தலால் ''மணிகள் வைத்த பொற்பெட்டி'' ஆகும். நித்தியானந்தத்தைத் தருதலால் வைகுந்தம் ''வானேர் உலகின் மேல் உலகு'' ஆகும். கல்பகால முடிவில் உயிர்கள் எல்லாம் கடவுளின் திருவயிற்றில் அடங்கி அழிவின்றி இருப்பதுபோல் இந்நகரத்திலும் உயிர்கள் வசிப்பதால் ''ஊழியின் இறுதி உறையுள்'' ஆகும் இவற்றுள் ஒன்றைத் துணிந்து சொல்லக் கூடாமையால் ''யாதெனவுரைப்போம்'' என்று முடித்தல் சாலப் பொருந்தும்.

அயோத்தியாபுரி பூமியின் ஒரு பாகம். ஆதலால் ''நிலமகள் முகமோ'' என்று தொடங்குகிருர். முகத்துக்கு அழகு தருவது திலகம். ஆதலால் அடுத்தபடி ''திலகமோ'' என்கிருர். எல்லா அவயவங்களிலும் சிறந்தது கண்கள் ஆதலால் ''கண்ணே'' என்கிருர்.

பெண்மைக்கு நிறைவு தருவது மங்கல நாண் ஆதலால் ''நிறைநெடு மங்கல நாணே'' என்றும் அப்பெண்மைக்கு வசீகரத்தன்மையளிப்பது ஸ்தனுபரணம் ஆகிய முத்துமாலையாதலால் ''இலகுபூண் முலைமேல் ஆரமோ'' என்றும் வர்ணிக்கிருர்.

''அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பன்'' அவதரிக்க விருக்கும் அயோத்தி நகருக்கு இப்பாடல் அழியாத அலங்காரக் காணிக்கை.

## அயோத்தி வர்ணனை

### புயல்தொடு குடுமிநெடு நிலை மாடத்து நகர்

உமைக்கொரு பாகத்தொருவனு மிருவர்க்
கொருதனிக் கொழுநனு மலர்மேற்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளுமுவமை
கண்டி லரங்கது காண்பான்
அமைப்பருங் காதல் முன்பிடித்துந்த
அந்தரஞ் சந்திரா தித்தர்
இமைப்பிலர் திரிவரிது வலாலிதனுக்
கியம்பலாமேது மற்றி யாதோ !

இந்த அயோத்திக்குச் சமானமான நகரம் மூவுலகத்திலும் இல்லை. இதற்குச் சான்று வேண்டுமா? உமா காந்தனுகிய பரமேசுவரனும், ஸ்ரீதேவிக்கும், பூதேவிக்கும் நாதனுகிய திருமாலும் செந்தாமரை மலர்மேல் சிறப்புற வீற்றிருக்கும் பொறுமையே பூஷணமாகவுடைய நான் முகக் கடவுளும், இந்த அயோத்திக்கு ஒப்பான வேறொரு பட்டணத்தைக் கண்டவரில்லை. அப்படிப்பட்டதோர் நகரத்தை எப்பாடுபட்டாவது கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆசை மேலீட்டாலேயே ஆகாய மார்க்கத்தில் செங்கதிரோனும் தண்கதிரோனும் இமை கொட்டாது இன்றுவரை தேடித்திரிகின்றனர் என்றால், இன்னும் இதன் பெருமைக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

முக்கண்ணன், செந்தாமரைக்கண்ணன், மறைதந்த ஞானக்கண்ணன் (பிரமன்) ஆகிய அம்மும்மூர்த்திகளுமே அயோத்திக்கு உவமை கண்டவர் அல்லர். அப்படியிருக்க இம்மும்மூர்த்திகளுள் ஒருமூர்த்தியின் கண்ணில்தோன்றிய சூரியனும் மனதில் தோன்றிய சந்திரனும் எப்படிக் காண்பார்கள்? வீண் முயற்சிதான் என்னும் குறிப்பு தொனிக்

கிறது பாடலில். தேவாதி தேவர்களாகிய மூவர்களே காணமுடியவில்லை. எண்டிசை காவலர் எண்மருள் இருவரான சந்திராதித்தர்கள் எங்ஙனம் காண்பர் என்பது தொனி.

" இமைப்பிலர் " " திரிவர் " என்ற இரு சொற்களும் எவ்வளவு பொருத்தமாக அமைந்திருக்கின்றன.

அந்தரஞ் சந்திராதித்தர் இமைப்பிலாது திரிவது இயற்கை. ஆனல் இதை " அயோத்தியாபுரிக்கு உவமை கண்டறிய " என்று சமத்காரமாக ஸம்பந்தமில்லாத ஒன்றை ஸம்பந்தப்படுத்திக் கூறுவதால் வடமொழியிலும் ஹிந்தியிலும் இது " சம்பந்தாதிசயோத்தி " அலங்காரம் எனப்படும். தமிழில் " ஏதுதற் குறிப்பேற்ற அணி " (காரணமில்லாததைக் காரணமாகக் குறிப்பிடுதல்) என்று வழங்கும்.

தேவரும், மூவரும், யாவரும் உவமை காண ஒண்ணு மகிமையுடையது அயோத்தி என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறுர் கவி.

வால்மீகியின் வர்ணனைக்கும் கம்பரது வர்ணனைக்கும் உள்ள வேற்றுமையைக் கவனியுங்கள். முன்னவரது அயோத்தி ஆநந்தமயமானது ; பின்னவரது அயோத்தி அதிசயமயமானது.

அயின்முகக் குலிசத்தமரர் கோனகரும்
அளகை யுமின்றிவை யயனுர்
பயிலுறவுற்ற படிபெரும் பான்மை
யிப்பெருந் திருநகர் படைப்பான்
மயன்முதற் றெய்வ தச்சருந்தத்த
மனத்தொழி ழுணினர் மறந்தார்
புயனெடுங்குடுமி நெடுநிலை மாடத்தி
ந்நகர் புகலுமா றெவனே !

## மேற்படி பாடலின் பொருள்

கூர்மையான குலிசாயுதத்தைக் கையிற்கொண்ட இந்திரனது அமராவதி நகரும், குபேரனது தலைநகரான அலகாபுரியும் பிரம்மதேவன் கைத்தேர்ச்சி, பயிற்சிபெறும் பொருட்டு முதலில் நிருமிக்கப்பட்டன. பயிற்சி பெற்ற பின்னர் பிரமன் மிக்க சிறப்பையுடைய, பெரிய, அழகிய இந்த அயோத்திமா நகரைப் படைக்கலானான். மயன் முதலாகிய தேவ சில்பிகள் இந்நகரத்தின் வனப்பைக் கண்டு வெட்கங் கொண்டு, தங்கள் தங்கள் மானஸீக நிர்மாணத் தொழிலைக் கைவிட்டு விட்டார்கள் என்றால் மேகத்தை அளாவும் உயர்ந்த சிகரங்களும், நீண்ட மேல்மாடங்களும் (Balcony) உடைய உப்பரிகைகள் (ஏழடுக்கு மாளிகை) நிறைந்த இந்த அயோத்தியை எப்படி வர்ணிப்பதோ ?

## இப்பாடல் ஓர் அற்புதக் களஞ்சியம்

அழகு, செல்வம், அதிகாரம், ஆணை அனைவற்றிலும் மூவுலகப் பிரசித்தி பெற்ற "அமராவதியும்" "அலகாபுரியும்" அயோத்தியை நிருமிக்குமுன் பிரமனால் தேர்ச்சித் தேர்வின் பொருட்டுச் செய்து பார்த்துக் கொள்ளப்பட்ட பயிற்சிப் பட்டணங்கள் (Model Cities) என்றால் இவ்வயோத்தியின் சிறப்பை எப்படிக் கூறுவது என்பது குறிப்பு. அமராவதி, அலகாபுரி இரண்டையும் மிஞ்சியது அயோத்திமா நகர்.

அது மட்டுமா ? பொன்னிலங்கை என்னும் தென்னிலங்காபுரியை நிருமித்த விசுவகர்மாவும் இலங்கையை ஏளனம் செய்யும் சூரபதுமனின் மயேந்திரபுரியை நிருமித்த மயனும் — இருவரும் தேவலோகத்து —

Engineers-in-chief—மதி மயங்கி நாணி மனதினால் இந்திர, மகேந்திரபுரிகளைச் சமைக்கும் தொழிலை மறந்து நின்றுவிட்டார்கள், பிரமன் கையினால் படைத்த இந்த அயோத்தியைக்கண்டு.

இங்கு கவியே, வர்ணிக்கும் வகை தெரியாது, திண்டாடித் திணறுவதுபோல் நடித்து, அலங்காரத்துக்கு அணி செய்கிறார்.

"புயல் தொடு குடுமி நெடு நிலை மாடத்திந் நகர்" என்ன அருமையான சொற்றொடர். இவருக்கு வர்ணிக்க வகை தெரியவில்லையாம்!

"ப்ராஸாதம் அப்ரம் லிஹம்,,
"மேகத்தைத் தழுவும் மாளிகை"

என்று காளிதாசனும்

"கைலாஸ சிகரப்ரக்யை. ஆலிகந்தீம் இவாம்பரம்
பிபந்தீம் இவ சாகாசம் உச்ரிதை, பவனோத்தமை"

என்று சுந்தரகாண்டத்தில் வால்மீகியும் வர்ணிக்கிறார்கள்.

"கைலாயகிரியின் கொடுமுடிகளுக்கு ஒப்பான தவள வண்ண மாளிகைகளால் ஆகாயத்தை அப்படியே தழுவுவது போலவும், ஆகாயம் எனும் துணியில் சித்ரம் எழுதுவது போலவும் ஆகாசத்தை அருந்துவது போலவும் தோன்றுகின்றது இந்நகரம்."

லங்கா வர்ணனம் இந்த இரு கவிகுல சூடாமணி களின் பாவம் நம் கவிச் சக்கரவர்த்தியின் "புயல் தொடு குடுமிநெடு நிலை மாடத்திந் நகர்" என்னும் ஒரே தொடரில் எவ்வளவு அற்புதமாக மிளிர்கிறது; கற்பனை யுலகின் கருத்துக்களில்தான் எத்தனை ஒற்றுமை:

கம்பரின் கற்பனைத் திறனே அலாதி. ஒவ்வொரு உவமையிலும் ஒரு புது மெருகு. சாதாரண கவிஞராக இருந்தால் "அமராவதியைப்போல, அலகாபுரியைப்போல" என்றுதான் வர்ணிக்கத் தோன்றும். ஆனால்,

"அமரையும், அலகையும் பிரமன் செய்த மாடல் நகரங்கள்" என்று கூறும் கம்பரின் கூரிய கற்பனையையும் சீரிய கலைத்திறனையும் கவனியுங்கள்! கலைஞனின் தொழில் நுட்பம் கலைஞன்தானே அறிவான்! வித்வானேவ விஜானாதி வித்வஜ்ஜன பரிஸ்ரமம்! கட்டடச் சிற்பியின் தொழில் நுட்பத்தைக் கற்பனைச் சிற்பி காட்டுகிறான்! பொருத்தம் தானே!

உலக மகா அதிசயங்களில் ஒன்றாகிய தாஜ்மகாலைக் கட்டுமுன் மாடல் போட்டுப் போட்டுப் பார்த்தார்கள், சிற்பிகள். கடைசியில் தற்போதுள்ள அமைப்பில் வந்து முடிந்தது கட்டடம்.

இன்றும் தாஜ்மகாலின் முன்றிலில் அதன் ஒப்பற்ற சிகரத்தினீடற்ற மாடலைக் காணலாம். அதையும் பூமியில் அப்படியேவரைந்து காட்டியிருக்கிறார்கள்.

ஒரு பூவுலக அரசன் கட்டும் ஒரே ஒரு கட்டடத்துக்கே இப்படி மாடல் வரைந்து பார்த்தார்கள் என்றால் காத்தற் கடவுள் அரசுபுரியும் பொருட்டுப் படைத்தற் கடவுள் சமைக்கும் தலைநகருக்கு மாடல் எப்படி இருக்கவேண்டும்? அவைதான் -- அந்த மாடல்கள் -- தான் தேவேந்திரபுரியும்! குபேரபுரியும்! புரிந்ததா? அழகிய மாடல்கள்தான்! அருமையான மேதைதான் கம்பரைத்தவிர வேறு யாருக் காவது கற்பனை இப்படி ஓடுமா?

விசுவகர்மா, மயன் முதலிய தெய்வச் சிற்பிகள் அயோத்தியின் அழகைக்கண்டு தங்கள் சங்கல்ப-என்ஜினீரிங்

தொழிலை விட்டு விட்டார்கள் என்றால் அதன் சிறப்பை வர்ணிக்க முடியுமா ! கட்டாயம் முடியாது ! கம்பர் வர்ணித்த பிறகா ?

அயோத்தி வர்ணனையில் கம்பரை மிஞ்சுவதற்கில்லை. துளஸிதாஸரோ வர்ணிக்கவே இல்லை. வால்மீகியோ அளவுடன் வர்ணித்துவிட்டு மேலே போகிறார். கம்பரோ வெளுத்துக்கட்டுகிறார், தனது கை வரிசை எல்லாம் காட்டி. இங்கு அவரது கற்பனைக் குதிரை வாயுவேக மனோவேக மாகப் பறக்கிறது. தட்டுத் தடங்கல் இல்லாமல் பாய்கிறது. ஒரே ஒட்டம்தான்.

வர்ணிப்பதில் வல்லவரான கம்பருக்கு வளமிகு நகர வர்ணனம் கிடைத்துவிட்டால் சும்மா விடுவாரா ? படலம் முழுவதும் பைந்தமிழ்ச் சுவை சொட்டச் சொட்டப் பாடித் தீர்த்து விடுகிறார்.

லங்கா வர்ணனத்தில் வால்மீகியை மிஞ்சியவர் யாரும் இல்லை. அயோத்யா வர்ணனத்திலோ கம்பரை மிஞ்சியவர் கிடையாது என்னலாம்.

பாணன், காளிதாசன், பாரவி, பவபூதி, ஸ்ரீஹர்ஷர் மாகன், முதலிய வடமொழிக் கவிவாணர்கள் ஒவ்வொருவர் ஒவ்வொருவிதத்தில் வர்ணனைச் சிறப்பு மிக்கவர்கள்,

அப்படியே இளங்கோ, திருத்தக்கத் தேவர், சாத்தனார் ஒட்டக்கூத்தர் முதலிய அருந்தமிழ் கவி மன்னர்களும் தனிச் சிறப்புக் கொண்டவர்கள். ஆனால் கம்பரிடம் ஏதோ ஓர் அற்புதக் கவர்ச்சி அதிகமாகக் காண்கிறது. அது அவரது மேதையில் ஊறிவிட்ட நாடக பாவ-- இயல் எனலாம்.

புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்
என்னுமீ தருமறைப் பொருளே
மண்ணிடை யாவர் இராகவன் அன்றி

மாதவம் அறத்தொடும் வளர்த்தார்
எண்ணருங் குணத்தின் அவன்இனி திருந்திவ்
வேழுல காளிடம் என்ருல்
ஒண்ணுமோ வதனின் வேெருரு போகம்
உறைவிடம் உண்டென உரைத்தல்;

புண்ணியம் புரிந்தவர்கள் அடைவது வீடு; அதாவது மோட்ச சாம்ராஜ்யம் என்று நான்மறைகள் கூறுகின்றன. ஆனுல் இப்பூமியில் இரகு குலத்தில் பிறந்தஇராமனைத் தவிர செயற்கரும் தவத்தையும் அறத்தையும் ஒருங்கே சேர்த்து வளர்த்தவர்கள் வேறு யார்?

எண்ணற்கரிய குணநலன் மிகுந்த அந்த இறைவனுகிய இராமச்சந்திரன் விரும்பி வீற்றிருந்து அரசு புரியும் அரும் நகரம் இந்த அயோத்தி என்ருல், இதைவிட இன்ப சுகங்கள் நிறைந்த வேெருரு உலகம் ஒன்று உண்டு என்று கூறுவது பொருந்துமா? பொருந்தாது என்பது குறிப்பு.

பிறப் பிறப்புத்துன்பம் நீங்கி, அழியாத பேரின்ப வீட்டை அடைவதற்காக உலகத்தவர் முழு முதற் கடவுளாகிய முகுந்தனை நோக்கி மா தவத்தையும் அறத் தையும் செய்கின்றனர் என்பது நான்கு மறைத் தீர்ப்பு. அப்படி இருக்க அவ்வீட்டுலக நாயகனுகிய விஷ்ணுவே, அவ்வுலகினும் அயோத்திமா நகரம் இன்பம் தருவது எனக் கருதி இங்கு அவதரித்து அரசாட்சி செய்தான் என்ருல் இதுபோல இன்பம் தரும் உலகம் இன்னெென்று உண் டென்று சொல்லுதல் தகாது.

இராகவன் இனிது வீற்றிருந்து தவமும் அறமும் வளர்த்த அயோத்திமா நகருக்கு வைகுந்தமும் இணையல்ல; மோட்சமும் ஈடல்ல; என்பது கருத்து. இன்பங்களுக் கெல்லாம் இருப்பிடம் ஆகிய இறைவன் இறைவியுடன்

இனிது இலகும் இடத்தைவிட, வேறு இன்பம் பயக்கும் இடமும் ஒன்று உண்டோ? ஆனந்த நாட்டுக்கு நாயகன் அமரும் இடம் அல்லவா அயோத்தி!

அங்கும், இங்கும், எங்கும் அந்நகர் ஒக்கும் பொன்னகர் இல்லை

தங்குமா பொருளுந் தருமமுந் துணையாத்
தம்பகைப் புலன்களைத் தவிர்க்கும்
பொங்கு மாதவமும் ஞானமும் புணர்ந்தோர்
யாவர்க்கும் புகலிடமான
செங்கண், மால்பிறந் தாண்டளப் பருங்காலம்
திருவின் வீற்றிருந்தமை தெரிந்தால்
அங்கண் மாஞாலத் தந்நக ரொக்கும்
பொன்னக ரமரர் நாட்டியாதோ!

பெருமையிற் சிறந்த பொருளையும், அறத்தையும் துணையாகக் கொண்டு தம்முடைய ஐம்புலன்கள் என்னும் பகைவரை வெல்லும் பொருட்டு, உயர்ந்த தவத்தையும் ஞானத்தையும் நாடும் உத்தமர்கள் எல்லாம் சென்றடையும் இடம் ஆன, செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய நீல நெடுந்திருமால் அவதரித்து, அவ்விடத்தில், அளவிடற் கரிய காலம், அன்னை திருமகளுடன் அரசாண்டு வீற்றிருந்தது தெரிந்தால், அழகிய இடத்தையுடைய இப்பூமியில் விளங்கும் அந்த அயோத்யாநகருக்கு இணையான பிறிதொரு எழில் நிறை பொன்னகர் அமரர் உலகிலும் உண்டோ? கிடையாது.

செங்கண்மால் சிறப்புடனரசாண்ட அயோத்திக்கு உவமை இம்மண்டலத்திலும் இல்லை; அவ்விண்டலத்திலும் இல்லை. அந்நகரையொத்த வேறு பொன்னகர் அங்கும் இல்லை; இங்கும் இல்லை; எங்கும் இல்லை என்பது கவிஞர்

கருத்து. "ப்ருதிவ்யாம் தாம் அநுத்தமாம்" "பூமியில் ஈடிணையற்ற நகரம்" என்கிருர் அயோத்தியை வால்மீகி முனிவர்.

புயல் தொடு குடுமி நெடு நிலை மாடத்திந் நகருக்கு பூமியில் உவமையே கிடையாது என்று மட்டும் சொல் வதுடன் கம்பர் திருப்தியடையவில்லை. அமராவதி, அலகா புரி இவை எல்லாம் கூட ஈடல்ல என்று கூறியும் அவர் விடவில்லை. மூவுலகிலும் யாதொரு உவமையும் இல்லை என்கிருர்

"ஸ்வயம் விதாதா தபஸ: பலாஞம்
கேஞபி காமேன தபஸ் சசார"
என்கிருன் காளிதாஸன் குமார ஸம்பவத்தில்.

"சகல தவங்களுக்கும் பயனளிக்கும் நாயகஞகிய பரமேசுவரன் ஏஞே தானே தவம் புரிந்தார்! "அதேபோல பொங்கு மா தவத்துக்கும் பூரண ஞானத்துக்கும் புகலிட மாகிய புண்ணிய மூர்த்தி, புயல் வண்ணன் புகலரும் காலம் பூமாதுடன் புவியரசாண்டான் இப்புனிதத் திரு நகரில் என்ருல் இப்பொன்னகருக்கு எந்நந்நகர் ஒப்பாகும்? அம்புவியில் அதற்கு இணையில்லை; உம்பர் நாட்டிலும் உவமையே யில்லை என்று உவகையுடன் உரைக்கிருர் கம்பர் பெருமான்.

அயோத்திக்கு உவமை அயோத்திதான் அம்புயக் கண்ணன் அவதரித்து, அவர் மேல் மங்கையுடன் அறம் வளர்த்த அரிய திரு நகரம் அல்லவா? அதஞல் அயோத்திக்கு அவ்வளவு சிறப்பு.

அரைசெலாமவண அணியெலாமவண
அரும்பெறல் மணியெலாமவண

புரசை மால் களிறும் புரவியுந் தேரும்
பூதலத்தியாவையுமவண
விரசுவார் முனிவர் விண்ணவரியக்கர்
விஞ்சையர் முதலினேரெவரும்
உரைசெய்வாரானுர் ஆன போததனுக்
குவமை தான் அரிதரோ உளதோ!

அந்த அணிமாட அயோத்தி நகரில் பூதலத்தில் உள்ள அரசுகள் எல்லாம் உள்ளன; ஆபரணங்கள் எல்லாம் உள்ளன; கழுத்தில் கயிறு பூட்டிய பெரிய, பெரிய யானைகளும் குதிரைகளும் உள்ளன: தேர்கள் உள்ளன,

பூமியில் உள்ள மற்ற எல்லாப் பொருள்களும் அவ் விடத்தில் உள்ளன: முனிவர்கள், அமரர்கள், யட்சர்கள், வித்யாதரர்கள் முதலியவர்கள் அந்த அயோத்திக்கு வந்து வந்து, அதன் புகழை உரைப்பார்கள் என்ருல் அந்நகருக்கு உவமை அருமையேயன்றி வேறு கூறமுடியுமோ?

எல்லா தேசத்தரசர்களும், அமரர், இயக்கர், வித்யாதரர் முதலான பிற உலக வாசிகளும், யானை, குதிரை, தேர், அணிபணி முதலிய உயர் பொருள்களும் அயோத்தியில் நிறைந்து, குழுமி, நித்திய வாசம் புரிகின்றன. புகழ் பறை சாற்றுகின்றன என்ருல் அதற்கிணை வேறு உண்டோ?

அழகு, அருள் ஆற்றல், ஆண்மை, ஆணை, கல்வி, செல்வம், இயற்கை எழில் இவையனைத்திலும் மேம்பட்டு விளங்கும் அயோத்தி வைபவம் அதாவது பெருமையிலும் ஒப்புவமையற்று விளங்குகிறது.

எல்லா உலகத்தாராலும் கொண்டாடப்பட்டு, எல்லா அரசர்களாலும் வணங்கப்பட்டு, எல்லா உரிய, அரிய பொருள்களாலும் நிரம்பப்பட்டுத் திகழும் இந் நகருக்கு உவமை கண்டுபிடிப்பது அரிதரிது என்கிருர் கம்பர்

நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனி தவ வுயர்ந்தன பனி தோய்
மால் வரைக்குலத்தின் யாவையும் இல்லை:
ஆதலாலுவமை மற்றில்லை:
நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடும்பழகி
நுணங்கிய நுவலரும் உணர்வே
போல்வகைத்தல்லாலுயர் விளேடுயர்ந்த
தென்னலாம் பொன் மதில் நிலையே!

இந்த உயர்வு, உயர்ச்சிக்கு (பெருமை) ஒப்ப உயர்ந்து நின்றது அந்நகரைச் சூழ்ந்துள்ள பொன் மதிள்.

நான்குவகைச் சதுரமாக, சிற்பநூல் விதிமுறைப்படி, வகுத்து எழுப்பப்பட்ட இம்மதிளுக்கு உவமை, உயர்ந்து, பனிபடிந்து, கம்பீரமாக நிற்கும் பெரிய, பெரிய மலைக் குலங்களில் கூட எவையும் இல்லை. ஆதலால் இதற்கு உவமை சொல்லக்கூடிய பொருள் வேறு ஒன்றும் இல்லை. ஆயினும் நூலின் அளவு எவ்வளவோ அது வரையில் கருத்தைச் செலுத்தி, ஆராய்ந்து, உணர்ந்து, நன்கு முறைப்படி பயின்று, கூர்மை பெற்ற, சொல்லுதற்கரிய உணர்வே போல, தெள்ளத் தெளிய கற்றுணர்ந்தடங்கிய ஞானம் போல உயர்ந்து நின்றது அப் பொன் மதிள் என்று கூறுதல் பொருந்தும்.

கற்றுணர்ந்தோரது ஞான உணர்ச்சியானது தேவர் கட்கு மெட்டாத பரம்பொருளை எட்டத்தக்கது. ஆதலால் வானுறவோங்கிய மதிள் அதற்கு இணையாகும்.

அறநூல் வழிச் செல்வது ஞானம்; சிற்பநூல் வழி எழும்பியது மதிள்; கடவுளை எட்டுவது ஞானம்; வானை முட்டுவது மதிள், ஆதலால் இதன் உயர்வு அதன் உயர்ச்சிக்கு இணை.

மேவருமுணர்வு முடிவிலாமையினல்
வேதமுமொக்கும் : விண் புகலால்
தேவருமொக்கும் ; முனிவரு மொக்கும்
திண் பொறியடக்கிய செயலால்
காவலிற் கலையூர் கன்னியை ஒக்கும்
சூலத்தாற் காளியை ஒக்கும்
யாவையு மொக்கும் பெருமையால்
எய்தற் கருமையாலீசனை ஒக்கும்.

இந்த அயோத்தி மா மதிளானது அடைதற் கருமையான உணர்வு முடிவிலாத தன்மை (அவ்வளவு உயரம்) யினுல் வேதத்துக்கு இணையாகும்; ஆகாயத்தை அளாவுதலால் அமரருக்கு ஒப்பாகும். வன்மையான பொறி (ஐம்புலன்களை) இயந்திரங்களைத் தன்னுள் அடக்கிய செய்கையினுல் முனிவருக்கிணையாகும்; காவல் தொழில் புரிதலால் கலைமான் ஏறும் கன்னி துர்க்கைக்கு இணையாகும்; சூலத்தைத் தாங்கி நிற்பதால் காளிக்கு நிகராகும்.

பெருமையினுல் உலகில் உள்ள எல்லாவிதமான அரிய பொருள்களுக்கும் ஈடாகும்; கிட்ட நெருங்குவதற்கு அருமையாக இருத்தலால் இறைவனுக்கு இணையாகும்.

முடிவற்றது என்னும் உணர்வை உண்டாக்குவதால் உயர் மறைக் கிணையாகவும், விண்ணில் புகலால் விண்ணவர்க்கிணையாகவும், வன்மையான பொறிகளை வசப்

படுத்தியுள்ள வல்லமையால் துறவிக்கிணையாகவும், காவல் புரிதலால் துர்க்கைக் கிணையாகவும், சூலத்தைத் தாங்கி நிற்பதால் நீலியாகிய காளிக்கிணையாகவும், பெருமையினுல் பெற்றி வாய்ந்த பொருள்களுக்கிணை யாகவும், பக்கத்தில் நெருங்கமுடியாமையினுல் பரம் பொருளுக்கிணையாகவும், இப்பொன் மதிள் விளங்குகிறது.

ஒரு சிறந்த நகருக்கு இன்றியமையாதது மதிள். நகரின் காவலுக்கும், கட்டுக் கோப்புக்கும், கவினுக்கும், கண்ணியத்துக்கும், கலைத்திறமைக்கும், சிலைத்தொழி லுக்கும், போர்க்காலத்திலும், போரில்லாக் காலத்திலும், இன்றியமையாதது, இருப்பிடமானது மதிள்.

"கன்னி நன் மா மதிள் புடை சூழ்
கண புரத்தென் கருமணியே!" என்றும்
"இஞ்சி சூழ் தஞ்சை" என்றும்
"விண்டோய் மதிள் புடை சூழ்
விற்றுவக் கோட்டம்மா" என்றும்

பழந் தமிழ்ப் பாடல்கள் மதிளுக்கு மகிமையளிக்கின்றன. "மதிள்" இல்லாத நகருக்கு மேன்மை இல்லை என்னலாம்.

தமயந்தியின் தந்தையின் நகராகிய குண்டின புரத்தை வர்ணிக்கும்போது நளவெண்பா ஆசிரியர் :-

"இசை முகந்த வாயு மியறெரிந்த நாவுந்
திசை முகந்தாலன்ன தெருவும்—வசையிறந்த
பொன்னுடு போந்திருந்தார் போன்றதே
போர் விதர்ப்ப
நன்னுடர் கோமான் நகர்" என்கிருர்.

"பொன்னுடு போந்திருந்தாற் போன்றதே"
அது குண்டின புரி.

ஆனல் கம்பரது அயோத்திக்குத்தான் அமராவதி, (பொன்னடு) அலகாபுரி இரண்டும் மாடல் பட்டணங்கள் ஆயிற்றே! அவரது அயோத்தியின் அழகிய மதிள்தான் தன் உயரத்தினல் பொன்னட்டையே எட்டிப்பிடித்து எழும்பி நிற்கிறதே! அது மட்டுமா?

ஞான மறை, புத்தேளிர் பொன்னகரம், பொறியடக்கிய புனித முனிவர், கலையூர் காவற்கன்னி, நீலி, நெடுஞ்சூலியாகிய காளி, யாவையும் கடந்து, ஊடுருவி, உள்ளும் புறமும் நிறைந்தும் அண்டமுடியாது நிற்கும் இறைவன் இவ்வளவுக்கும் இணையாக கம்பீரமாக நிற்கிறது கம்பரது அயோத்திமா மதிள்.

இவ்வளவு உவமைகளை அடக்கியும் கவிஞர் பெருமானுக்குத் திருப்தியில்லை. ஆதலால்,

"யாவையுமொக்கும் பெருமையால்"

என்றெரு போடு போடுகிறர்.

தனது விபூதியைக் கூறிவரும் தழை, மழை வண்ணன் கடைசியில்,

யத் யத் விபூதிமத் ஸத்வம்
ஸ்ரீமத் ஊர்ஜித மேவ வா
தத்த தேவ அவகச்ச த்வம்
மம தேஜோம்ச ஸம்பவம்"

—என்கிருன் கீதையில்.

அதாவது,

எவை எவை வைபவம் (விபூதி) நிறைந்தவையோ ஆற்றல் மிகுந்தவையோ, செல்வம் நிறைந்தவையோ, உறுதி உள்ளவையோ அவை யாவும் எனது தேஜஸ் ஒளியிலிருந்து உற்பத்தியானவை என்று தெரிந்துகொள் அர்ஜுன!" என்பது கண்ணன் கூற்று.

அதேபோல "யாவையும் ஒக்கும்" என்று ஒரு சிறு வாக்கியத்தில் பெரும் பொருளை அடக்கி விடுகிறார் புலவர் பெருந்தகை.

பாகவதத்தில் ஸ்ரீ வேத வியாசர் வட மதுரை நகரை வர்ணிக்கிறார் :—

ததர்ச தாம் ஸ்பாடிக துங்க கோபுர
த்வாராம் ப்ருஹத் தேம கபாட தோரணாம்
தாம்ரார கோஷ்டாம் பரிகா துராஸதாம்
உத்யான ரம்யோப வனோப சோபிதாம்
ஸௌவர்ண ச்ருங்காடக ஹர்ம்ய நிஷ்குடை
ஸ்ரேணீ ஸபாபிர் பவனை ருபஸ்க் ருதாம்
வைடூர்ய வஜ்ராமல நீல வித்ருமைர்
முக்தா ஹரித்பிர் வலபீஷு வேதிஷு
ஜுஷ்டேஷு ஜாலா முக ரந்த்ர குட்டிமேஷ்
வாஸ்லிஷ்ட பாராவத பர்ஹி நாதிதாம்
ஸம்சிக்த ரத்யாபண மார்க்க சத்வராம்
ப்ரகீர்ண மால்யாங்குர லாஜ தண்டுலாம்.

என்று வெகு அழகாகக் கூறுகிறார்.

உயர்ந்த ஸ்படிக கோபுரத்தையும் அகன்ற கோட்டை வாயிலையும் மிகப் பெரிய தங்க மயமான கோட்டைக் கதவுகளையும் ப்ரும்மாண்டமான மதிளையும், அண்ட முடியாத அகழியையும், பூங்கா, பூஞ்சோலைகளையும் ;

தங்க மாளிகைகள், பெரிய பெரிய நாற் சந்திகள், கழகங்கள், வரிசை வரிசையாக நிற்கும் வீடுகள் ;

வைடூரியம், வஜ்ரம், நீலம், பவளம், முத்து, பச்சை இவைகளால் இழைக்கப்பட்ட சுவர்கள், மேடைகள்,

ஜன்னல்கள், பலகணிகள், புருக் கூண்டுகள் இவைகளில் விடாது இனிமையாக ஒலிக்கும் புருக்கள், மயில்கள் ;

தெளித்துக் கோலமிடப்பட்ட ராஜ பாட்டைகள், தெருக்கள், தோரணங்கள், கொடிகள், மாலைகள், கட்டப் பட்டு விளங்கும் வீதிகள் ;

இவை அனைவற்றையும் உடைய வடமதுரை நகரைக் கண்ணனும் பலதேவனும் பார்த்தார்கள் என்று முடிகிறது இவ்வழகிய வர்ணனை.

வியாசரின் வடமதுரை வர்ணனை கம்பரின் அயோத்தி வர்ணனையை அப்படியே ஒத்திருக்கிறது. இவ்விரு கவி மன்னர்களும் வேறு, வேறு மொழிகளில், வேறு, வேறு காலங்களில் தத்தமது நூல்களை இயற்றி உள்ளனர். ஆயி னும் நகர வர்ணனை இரண்டும் கருத்திலும் நடையிலும் கற்பனையிலும் அப்படியே ஒத்திருப்பது மிக அற்புதம்.

"தாம்ரார கோஷ்டாம், பரிகா துராஸதாம்"
என்கிறார் வியாஸர்.

"பிரும்மாண்டமான இரும்பு மதிள், அண்ட முடியாத அகழ்" என்று ரத்தினச் சுருக்கமாக வர்ணிக்கிறார் வியாசர். கம்பரோ மதிளுக்கே தனியாக ஒரு புகழ் மாலை பாடிவிடுகிறார்.

"எய்தற்கருமையால் ஈசனை ஒக்கும்" என்று மதி ளின் அண்டமுடியாத தன்மைக்கு இறைவனை உவமை கூறுகின்றார்.

பஞ்சி வான் மதியை யூட்டிய அனைய
  படருகிர்ப் பங்கயச் செங்கால்
வஞ்சிபோன் மருங்குல் குரும்பைபோற் கொங்கை
  வாங்கு வேய் வைத்த மென் பணைத்தோள்

அஞ்சொலார் பயிலு மயோத்தி மா நகரின்
அழகுடைத் தன்றென அறிவான்
இஞ்சி வானேங்கி இமையவ ருலகங்
காணிய எழுந்த தொத்துளதே!

கம்பரின் கற்பனைத் திறனுக்கு இப்பாடல் ஓர் அருமை யான எடுத்துக்காட்டு.

இந்தப் பொன் மதிள் ஏன் இப்படி வானையளாவி வளர்ந்து நிற்கிறது தெரியுமா? கம்பர் காரணம் கூறு கிறார் கேளுங்கள் :

செம்பஞ்சுக் குழம்பில் வானத்து மா மதியைத் தோய்த்தது போன்ற விரல் நகங்கள் விளங்கும் தாமரை மலர் போல் சிவந்த பாதங்களையுடைய, கொடி போன்ற இடை, தென்னங் குரும்பை போன்ற சொன்னமணி மார்பு; உயர்ந்து, இளமை, வாய்ந்து கொழுவிய மூங்கில் கள் போன்ற தோள்கள், இனிய மொழி இவைகளையுடைய மாதரார் வசிக்கின்ற அயோத்திமா நகரின் அழகு. அரம் பையர் வாழும் அந்த அமரர்நாட்டுக்கு உண்டா இல்லையா என்று நேரில் பார்த்து அதை அறிவதற்காகத்தான் போலும் இம் மதிள் இப்படி விண்ணை முட்டி நிற்கிறது! என்ன அழகிய கற்பனை!

" விண்டோய் மதிள் " என்பதை எவ்வளவு சாதுர்ய மாக எடுத்துரைக்கிறார்!

கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
நூனெறி நடக்கும் செவ்வையின் யார்க்கும்
நோக்கருங் காவலின் வலியின்

வேலொடு வாள்வில் பயிற்றலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு வலத்திற்
சால்புடை யுயர்விற் சக்கரம் நடத்தும்
தன்மையிற் றலைவ ரொத்துளதே!

யாருல் வெல்லற்கரும் வலியுடைய இந்நகரத்தின் மதிள் தன் நிகரில் ஆணையை உலகம் முழுவதும் செலுத்தி, எதிரிகளின் தலைகளைத் துணித்து மனுமுறை பிறழாது செங்கோல் செலுத்தி எவரும் துணிந்து நோக்கக் கூட அஞ்சும் படி கட்டுக்காவலும், வலிமையும் கொண்டு வேல், வாள், வில் முதலிய படைக்கலங்களைப் பயின்று, அரசியலின் கொடிய சூழ்ச்சியில் சிறந்து, உயர்வடைந்து, அரசாளும் தன்மையில் மேன்மை பெற்று விளங்கும் தலைவருக்கு நிகராகத் திகழ்கிறது.

இனி வரும் பாடல்கள் இனிய சந்தத்துடன் மிளிருகின்றன.

நகர மதிளின் மீது மழை பெய்கிறது. எப்படிப் பெய்கிறது தெரியுமா?

கருங் கடலின் தண்ணீரை
மேக மொண்டுகொண்டெழுந்து விண்டொடர்ந்த குன்றமென்
றுக நொந்து நின்றுதாரையம்மதிற்கண்வீசுமே;

"குளுகுளு" வெனக் காற்று வீசச் "சடபட" வென இடிஇடிக்கப் "பளபள" வென மின்னல் மின்ன "கடகட" வென மேகம் மழைபொழியும் காட்சியை இப்பாடலில் பார்க்க மட்டுமா செய்கிறோம்? இல்லை. உணர்கிறோம்; அநுபவிக்கிறோம்; ரஸிக்கிறோம். மேகக்கூட்டத்தின் கருமை அவை குன்றுபோல் விண்ணில் தொடரும் செழுமை, பொங்கிப் பொங்கிப் பொழியும் ஆண்மை, நீரின் தண்மை

இவ்வளவையும் இப்பாடல் தன் சந்த நயத்திஞல் பொழிந்து தள்ளுகிறது; அம்மதிற்கண் வீசும் மழையை வாசகர்களின் மனக் கண்முன் வீசச் செய்யும் கவியின் வல்லமையே வல்லமை ;

அடுத்த காட்சி :-

அந்த மா மதிற் புறத்தகத்தகத் தெழுந்தலர்ந்த நீள்
கந்த நாறு பங்கயத்த கான மான மாதரார்
முந்து வாண் முகங்களுக்குக் குடைந்து போன
மொய்ம் பெலாம்
வந்து போர் மலைக்க மா மதில் வளைத்தன்
மானுமே.

அந்தப் பெரிய மதிளின் வெளிப்புறத்து அகழியில் எழுந்து, மலர்ந்து, செறிந்து, மணங்கமழ்ந்து விளங்கும் செந்தாமரை மலர்க்காடானது அந்நகரத்து மானவதிகளான மாதர்களின் ஒளிபொருந்திய முகங்களுடன் போட்டியிட்டுத் தோற்றுப்போய், பிறகு தோற்றவை எல்லாம் ஒன்று சேர்ந்து வலிமை பெற்று, படையெடுத்து, அணிவகுத்து, அம்மாதர் முகங்களுடன் போர் புரிய நிற்பது போன்று தோற்றம் அளித்தன.

செந்தாமரைப் பூக்கள் அந்நகர மாதர்களின் முகங்களுடன் போர் செய்ய அம்மதிளைச் சூழ்ந்து கொண்டன போல தோன்றின.

அகழில் அம்புயங்கள் அலர்ந்திருந்தன என்பதைத் தான் எவ்வளவு ரஸனை சொட்ட சொட்டக் கூறுகிருர் கவிஞர் பெருமான் ;

தாமரைக் காடு வெட்கி உள்ளம் உடைந்துபோன வரலாறு தான் ஓசை இசையில் எப்படி வெளிப்படுகிறது ;

"உடைந்துபோன" என்ற இடம் உவமையே கூறமுடியாத ஓர் அற்புதச் சொல்லமுதம்.

"மானமாதரார்" என்ற கம்பீரச் சொற்றொடர் அரிய அழகிகளான அயோத்தி அரிவைமார் மானம் மிகுந்தவர்கள், சுயமதிப்பு நிறைந்தவர்கள் என்பதைச் சொல்லாமல் சொல்லுகிறது.

"கந்த நாறு பங்கயத்த கானம்" என்ற வரியில் கமல வனத்தின் செறிவு, மணம், நிறம், அழகு அத்தனையும் ஒருங்கே தாண்டவமாடுகின்றன.

## அயோத்திபுரி அகழ்

சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த வாரை சுற்றுமுற்று பாரெலாம்
போழ்ந்த மா கிடங்கிடைக்கிடைந்து பொங்கிடங்கர் மா
தாழ்ந்த வங்க வாரியிற்றடுப்பொணு மதத்தினல்
ஆழ்ந்த யானை மீதெழுந்தழுந்துகின்ற போலுமே!

நாஞ்சில்கள் (மதிள் உறுப்புகள்) சூழ்ந்த அம் மதிலைச் சூழ்ந்து, பூமியை அகழ்ந்து, ஆழ்ந்து நிற்கும் அகழில் முழுகி முழுகி எழுந்திருக்கும் முதலைகள், ஆழமான கப்பல்கள் செல்லும் கடலில் மதம் மிகுந்த யானைகள் அமிழ்ந்து அமிழ்ந்து எழுவன போலத் தோன்றும்.

அகழ்கடல் போல் ஆழ்ந்து, அகன்றுள்ளது; முதலைகள் முழுகுதல் யானைகள் முழுகுதல் போன்றுள்ளது.

## முதலையரக்கர்

ஈரும் வாளின் வால் விதிர்த் தெயிற்றிளம் பிறைக்
குலம்
பேர மின்னி வாய் விரித் தெதிர்ந்தகட் பிறங்குதீ
சோர வொன்றை யொன்று முன்றொடர்ந்து சீறி
டங்கர் மா
போரில் வந்து சீறுகின்ற போரரக்கர் போலுமே!

ஈர்கின்ற வாள்போல் வாலையசைத்து, இளமை பொருந்திய பிறைக் கூட்டங்கள் (பற்கள்) ஒளிவிட்டு விளங்க வாயைத் திறந்துகொண்டு, எதிர்த்த கண்களில் இருந்து விளங்கும் தீப் பொறிகள் சொரிய, ஒன்றை மற்றொன்று எதிரிட்டுத் தொடர்ந்து சீறுகின்ற முதலைகள் போர்க்களத்தில் சீறித் தாக்குகின்ற அரக்கர்கள் போலத் தோற்றமளிக்கும்.

முதலைச் சண்டையை வெகு மிடுக்காக வர்ணிக்கிறார். யுத்த வர்ணனைக்கேற்ற சப்த ஜாலம்!

அன்னம் என்னும் வெண்கொற்றக் குடைகளும், முதலைகள் என்னும் மேரு மலைபோன்ற யானைகளும், தாமரைக்கொடி விளங்கும் அலைகளாகிற குதிரைகளும், மீன்கள் என்னும் வாள்களும் வேல்களும் திகழும் அகழ் மன்னரின் சேனைக்கு நிகராகும்.

## அகழின் அமைப்பு

விளிம்புதெற்றி முற்றுவித்து வெள்ளிகட்டி யுள்ளுறப்
பளிங்கு பொற்றலத்த கட்டடுத்துறப் படுத்தலில்
தளிந்த கற்றலத் தொடச் சலத்தினைத் தனித்துறத்
தெளிந்துணர்ந்து கிற்றுமென்றல்
தேவராலுமாவதே!

வெளியில் வெள்ளியினுல் திண்ணைகள் கட்டி நிறைத்து, உள்ளே பொன் தகடு வேய்ந்து, அதன் மேல் படிகக் கற்கள் அடுத்தடுத்துப் பதிக்கப்பட்டிருத்தலால் இதுதான் தண்ணீர், இதுதான் பளிங்குக்கல் என்று பாகுபாடு பிரித்து உணர்ந்து உரைக்கும் வல்லமை தேவர்களுக்கும் கிடையாது.

வெள்ளியின் காந்தியும் படிகத்தின் காந்தியும், நீரின் தெளிவும் ஒரே வண்ணமாக ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்து பிரிக்கமுடியாது திகமும்.

அப்படிப்பட்ட அவ் அயோத்தி அகழியைச் சூழ்ந்து நின்ற மலையரண் பெரும் புறக்கடலுக்குப் புறத்தில் இருக்கும் இருள் திறன் போலவும், அம் மலையரணைச் சூழ்ந்த காட்டரண் அப்

"பொன்னின் மா மதிட்குடுத்த
நீலவாடை போலுமே!"

பொன் மதிளுக்குக் கட்டிய நீலப் பட்டாடைக்கு நிகர். கற்பனை எப்படியெல்லாம் ஓடுகிறது!

## நகர வாயில்கள்

எல்லைநின்ற வென்றியானை யென்னநின்ற
முனனமால்
ஒல்லையும்பர் நாடளந்த தாளின் மீதுயர்ந்தலால்
மல்லன்ஞாலம் யாவுநீதி மாறுரு வழககினுல்
நல்லவாறு சொல்லும்வேத நான்குமன்ன
வாயிலே!

நான்கு திசைகளிலும் நான்கு திக்கயங்கள் போலும், முற்காலத்தில் விரைவாக மேலுலகையளந்த முகுந்தனது

சேவடிபோலும் உயர்ந்து நின்றன நகரத்தின் கோட்டை வாயில்கள். வளப்பம் மிகுந்த உலகத்து மாந்தர்க்கெல் லாம் நன்னெறி (மார்க்கம், வழி) உணர்த்துதலால் நான் மறைக்கு நிகராகவும் விளங்கின.

## கலைத் திறன்

தாவில்பொற் றலத்தினற் றவத்தினோர் கடங்குதாட்
பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர்
புக்கொதுங்குமால்
ஆவியொத்த வன்புசேவல் கூவவந் தணைந்திடா
ஓவியப் புறவின் மாடிருக்கவூடு பேடையே!

தன்னுருயிர் நாயகன் ஆகிய ஆண்புறவைப் பெண் புறு கூவியழைக்கிறது. ஆனால் அந்த ஆண்புறுவோ கோபுர வாயிலில் ஓவியத்தில் தீட்டப்பட்டிருக்கும் பெட் டைப் புறவை உயிர்ப்புறு என்று எண்ணி மனைவியின் அழைத்தலை அசட்டை செய்து சித்திரப் புறவின் பக்கத்தி லேயே உட்கார்ந்திருக்கிறது.

இதைக் கண்டு பொறுக்காத நிஜப் பெண்புறு கணவ னிடம் கோபங்கொண்டு, எவ்வளவோ தவம் செய்த மகான்கள் தங்கும் பெருமையுடைய கற்பகப் பூஞ்சோலை யில் போய் ஒதுங்கி உட்கார்ந்துகொள்கிறது.

இந்த ஒரே பாடலினால் காதல், மயக்கம், ஊடல் சித்திரத்தின் மேன்மை, கற்பகச் சோலையையளாவும் கோட்டை கோபுரத்தின் உயரம், நகரத்தின் புண்ணியத் தன்மை, பிரமிக்க வைக்கும் கலைத்திறன் இத்தனையையும் ரஸமாகச் சித்தரித்துக் காட்டுகிறார் கவிஞர்.

அரசனும் மூன்று ஓவியக்காரர்களும் என்ற பெயர் பெற்ற கதை நம் அனைவருக்கும் தெரியும்.

அதில் முதலாவது ஓவியர் வரைந்த பழத்தை நிஜப் பழம் என நினைத்து கிளி கோதுகிறது.

இரண்டாமவரின் சித்திரப்பூவை வண்டு சுற்றிச்சுற்றி வருகிறது தேனுண்ண.

மூன்றுமவரது திரையை (சித்திரம்) அரசர் நிஜத் திரை என நினைத்து விலக்குகிறுர்; திரை விலகவேயில்லை; அரசருக்குக் கோபம் மூளுகிறது; பிறகு அதுதான் போட்டிக்கு வரையப்பட்டுள்ள ஓவியம் என்றுணர்கிறுர். பரிசு பெற்றவர் ஆறறிவுடைய அரசனே மயங்கும்படிப் படம் வரைந்த "திரை" சைத்ரீகர் என்கிறது கதை. சித்திரத்தின் கைத்திறனுக்கு எடுத்துக்காட்டாக இக்கதை வழங்குகிறது. இதையும் தோற்கடிக்கிறுர் கம்பர் தம் கற்பனைத் திறனுல் அயோத்தி நகர ஓவியக் கலைஞரின் சித்திரத் திறனை அளந்து.

ஆவியொத்த அன்புசேவல் கூவவந் தணைந்திடா
ஓவியப் புருவின் மாடிருக்கவூடு பேடையே!

கிட்ட இருக்கும் ஆண்புரு ஓவியப்புருவின் எழிலைக் கண்டு மயங்குகிறது; எட்ட இருக்கும் பெண்புரு இத்தகாத காதற் காட்சியைக் கண்டு கலங்குகிறது; அதோடுமட்டுமல்ல கற்பக வனத்துக்குப் போய்விடுகிறது கோபங்கொண்டு; இதில் ஓவியத்தைக்கண்டு புரு ஜோடிகள் — ஆண் - பெண் — இரண்டுமே மயங்குகின்றன. கலைத் திறனுக்கு எவ்வளவு அழகிய சான்று! இது பொய்யல்ல.

மகாபலிபுரத்துச் சிற்பங்களில் ஒரு குரங்கு மற்ருெரு குரங்குக்குப் பேன் எடுப்பதுபோல ஓர் அற்புதமான சிற்பம் இருக்கிறது. அதை எட்ட இருந்து பார்த்தால் தத்ருபம் நிஜக் குரங்கு என்றேதான் தோன்றுகிறது. கிட்ட நெருங்கிப் பார்த்தால்தான் இது சிற்பம் என்பது தெளிவாகிறது.

இத்தகைய அற்புதம் கலையுலகுக்கு அரியதல்ல ; காவிய உலகுக்கும் புதிதல்ல ; கம்பரின் கற்பனையுலகுக்கோ ? கேட்கவும் வேண்டுமா என்ன ?

## நில மடமகள் மகுடம்

கல்லடித் தடுக்கிவாய் பளிங்கரிந்து கட்டிமீ
எல்லிடப் பசும்பொன் வைத்திலங்கு
பன்மணிக்குலம்
வில்லிடக் குயிற்றிவாள் விரிக்கும் வெள்ளி மாமரம்
புல்லிடக் கிடத்தி வச்சிரத்தகால் பொருத்தியே
மரகதத் திலங்குபோதி கைத்தலத்து வச்சிரம்
புரைதபுத் தடுக்கிமீது பொன்குயிற்றி மின்குலா
நிரைமணிக் குலத்திளுளி நீள்வகுத்த வோளிமேல்
விரைவுகைத் தலத்திலுய்த்த மேதகத்தின் மீதரோ
ஏழ்பொழிற்கு மேழ்நிலத் தலஞ்சமைத்த தென்ன
நூல்
ஊழுறக் குவித்தமைத்த வும்பர்செம்பொன்
வேய்ந்துமீச்
சூழ்சுடர்ச் சிரத்துநன் மணித்தசும்பு தோன்றலால்
வாழ்நிலக் குலக்கொழுந்தை மௌலிசூட்டி
யன்னவே

நித்திய மங்களையாகிய நில மடந்தை முடியணிந்து வீற்றிருக்கிருள், எங்கு ? அயோத்தியில். எப்படி ? இதோ பாருங்கள் :-

கற்களைச் செம்மை செய்து அடித்தலத்தில் அடுக்கி, பளிங்குகளைச் சிறுக அரிந்து வாயில் வைத்துக் கட்டி, மேலே ஒளிவிடப் பசும்பொன்ஞல் சுவர் வைத்து, விளங்கும் பற்பல மணித்திரள்களை ஒளி வீசும்படி அச்சுவரின் கண் பதித்து, ஒளிக் கதிர் ஜோதி வீசும் வெள்ளியினுற் செய்யப்

பட்ட பெரும் பெரும் உத்தரங்களை (Girders) கிடத்தி, வச்சிர மணிமயமான நிலைக் கால்களை நாட்டி ;

அத்திரு நிலைக் கால்களின் மீது மரகத மணிகளால் செய்யப்பட்ட போதிகைகளை வைத்து, அவைமீது வச்சிர மணிகளைப் பழுது நீக்கி உத்தரப் பாக்களாகச் சேர்த் தடுக்கி, அவைகளின்மேல் பொான் தகடுகள் பதித்து, மின்னல் போல் ஒளிவிடும் மணித்திரள்களால் செய்யப் பட்ட, ஆளி வடிவமாக அமைத்து, வரிசை வரிசையாக நிறைத்துள்ள பெருந் தூண் வைத்த ஆதார உத்தரத்தின் மேல் பரந்த கொடுங்கைகளின்மேல் அமர்த்தப்பட்ட மஞ்சள் (கோமேதகம்) வரிச்சலின்மேலே.

மேல் ஏழு உலகத்தார்களும் உலாவுதன் பொருட்டுச் சமைக்கப் பட்டதோ என்று ஐயுறும்படி உயர்ந்து விளங்கும் ஏழு நிலைகளைக் கொண்டதும், சிற்பநூல் முறை பிறழாதபடி கட்டப் பட்டதும், உருக்கிய செம்பொன்னால் முகடு வேய்ந்து, அதன் மீது ஒளிவிடும் சிகரத்தில் மாணிக்கக் குடங்கள் (கும்பம், கலசம்) திகழுவதும் ஆன அந்த அணி மாட அயோத்தி நகரின் கோட்டை வாயில் கோபுர மானது நிலக்குலக் கொழுந்தாகிய பூமி பிராட்டியாருக்கு மணி மகுடம் சூட்டியது போலத் தோன்றுகிறது ; நீண்ட ஆனால் அழகிய வர்ணனை ;

நவமணிகளின் ஒளியும், கலைத்திறனும், கைத் திறனும் கட்டடத்திறனும் கலந்து திகழும், கற்பகப் பூஞ்சோலையை அளாவும் இப்படிப்பட்ட கோபுர வாயிலின் அழகை ஏட்டில் எழுதவும் முடியுமோ? ஏழுலக ராணி இல்லை ; இல்லை ; சக்கரவர்த்தினி தேவி நிலமடந்தையின் முடி சூட்டு விழா எவ்வளவு அருமையாக கண்முன் காட்டப் படுகிறது ; ஒளிச் சேர்க்கையின் விசித்திரம் தான் என்னே என்னே ; இந்நகரத்தை முதலில் நிலமகள் முகமோ

என்றதை யொட்டி கோபுர கும்பத்தை மகுடம் என்கிறார் கவி.

## மாளிகைப் பாற்கடல்

திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை
வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிடும் பாற்கடல் தரங்கம் போலுமே;

தண்மதியும் கரியது என்று சொல்லும்படி வெண்மை நிறம் தோன்ற சங்கு சுட்ட சுண்ணும்பு பூசப்பட்டுள்ள தவள மாளிகைகள், கடுங்காற்றடித்தலால் மேல்நோக்கி எழுந்த, பொங்கிப் பொங்கி எழும்பிவரும் பாற்கடலின் அலைகள் போல விளங்கின,

அருமையான உவமை;

## வெள்ளி மலை மேல் விரி கதிர்

புள்ளியம் புறவியை பொருந்து மாளிகை
தள்ளருந் தமனியத் தகடு வேய்ந்தன
எள்ளருங் கதிரவ னிளவெயிற் குழாம்
வெள்ளியங் கிரிமிசை விரிந்தபோலுமே;

புள்ளிகளையுடைய புறக்கள் தங்கும் இறப்புக்கள் அமைந்த மாளிகைகள்; அவைகளின் மீது பொற்றகடுகள் பதிக்கப் பெற்றுள்ளன; அவை எப்படித் திகழ்கின்றன? வெள்ளிப் பனிவரை மீது விரிகதிர் ஞாயிறு விளங்குதல் போல ஒளிவிடுகின்றன.

"இள வெயிற் குழாம்" இமய மலை மேல் விரிவது போல, என்ன பொருத்தமான கருத்து;

## வைர மாளிகைகள்

வைரநற் கான்மிசை மரகதத் துலாம்
செயரறிப் போதிகை கிடத்திச் சித்திரம்
உயிர்பெறக் குயிற்றிய வும்பர் நாட்டவர்
அயிருற விமைப்பன வளவில் கோடியே ;

வைரமணித் தூண்கள் மரகத உத்தரங்கள் ; அவை களின் இடையே கலைத்திறன் சொட்டச் சொட்ட தீட்டப் பட்டுள்ள உயிரோவியங்கள். தேவர்களும் மயங்கும் படி விளங்கும் இவ்வித வைர மாளிகைகள் அளவிட முடியாத பல.

## நீல ரத்தின மாளிகைகள்

சந்திர காந்தத் தின்றலத்த சந்தனப்
பந்திசெய் தூணின்மேற் பவளப் போதிகைச்
செந்தனி மணித்துலாம் செறிந்த திண்சுவர்
இந்திர நீலத்த வெண்ணில் கோடியே ;

சந்திர காந்தக்கல்—தளவரிசை ; சந்தனத் தூண் கள் ; பவளப் போதிகைகள் ; சிவந்த ஒப்பற்ற மாணிக்க உத்தரங்கள் ; இந்திர நீல ரத்தினச் சுவர்கள் ; இவ்வகை மாளிகைகள் எண்ணில்லாத கோடி.

## மகளிரன்ன பொன் மாளிகைகள்

பாடகக் காலடி பதுமத் தொப்பன
சேடரைத் தழீஇயன செய்ய வாயன
நாடகத் தொழிலன நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த வள விலாதன.

## மாளிகைகள்

கீழ்த்தலம் தாமரை மலர் போல்வன; விசித்திர வேலைப்பாடுடைய தூண்களையுடையன; அஸ்திவாரத்தின் ஆழத்தினால் ஆதிசேடன் முடியைத் தொடுவன; ஒழுங்கு படவமைத்த வியக்கத்தக்க உட்புறத் தொழிலையுடையன; இழை நூற் பஞ்சு போன்ற தொழில் நாணயமுள்ளன: பொன் மயம் ஆன காட்சியையுடையன. இவ்விதமாளிகைகள் எண்ணிலடங்கா.

## மகளிர் (சிலேடை)

பாடகமணிந்த காலடிகள் பதும மலர் போல்வன; பாங்கர்களிடம் அன்பு பாராட்டுவன; சிவந்த வாயையுடையன; பரதநாட்டியப் பான்மையன; நூற்கதிர் நுனி போன்ற இடையினை உடையன; பொன் வண்ணத்தன; ஆதலால் இவ்வித அம் பொன் மணி மா மாளிகைகள், அயோத்தி அணங்குகளை நிகர்த்த அழகிய ஆடகமாடங்கள் அளவிடமுடியாதன அங்கு உண்டு.

புக்கவர் கண்ணினை பொருந்துறு தொளி
 தொக்குடன் றயங்கி விண்ணவரிற் றேன்றலால்
திக்குற நினைப்பினிற் செல்லுந் தெய்வவீ
 டொக்க நின்றிமைப்பன வும்பர் நாட்டினும்

இம் மாளிகைகளைப் பார்ப்பவர்களின் கண்கள் ஒளி நிறைவினால் இமைக்காது, வியப்பினால் விரிவடைந்து நிற்கும்; ஆகவே அவர்கள் வானில் வாழும் வைகுந்தவாசிகள் (நித்தியஸூரிகள்) போல் தோன்றுவார்கள். தியானத்தினால் அடைதற்குரிய முழுமுதற் கடவுளின் அப்பரமபதத்துக்கு ஈடாகத் தோன்றும் இம் மணிமாளிகைகள் விண்ணவர் கோன் அமராவதியைக் காட்டிலும் சிறந்து ஜோதி வீசத் திகழ்கின்றன.

அரண், மதிள், அகழ், கோட்டை, கோபுரம் இவற்றை வர்ணித்த பின் நகரத்தின் வீடுகளை வர்ணிக்கிருர் கவி மன்னர். இவரது வர்ணனை இங்கு படிப்போரை மயங்கச் செய்து ஓர் மாயா உலகத்துக்கே இழுத்துச் சென்றுவிடு கிறது என்ருல் மிகையாகாது. இவரது வீடுகள் கல். மணல், கட்டை கொண்டு கட்டப்பட்டனவை யல்ல; பொன், வெள்ளி, நவமணி கொண்டு புனையப்பட்டவை ஆகும். அவை வீடல்ல; (வசிக்கும் இடம்) வீடே (மோக்ஷ சாம ராஜ்யம்) என்கிருர் இவ்விந்தைச் செயலைச் சந்தத்தில் கொட்டும் செந்தமிழ்ச் செல்வர். ஒலி, ஒளி, மணம், நிறம், கலை, திறன், நுட்பம், பொதுத்தோற்றம், சிறப்பு வேலைப்பாடு, உவமை இவைகளைப் பொருத்தமாக, பூரண மாக, பொலிவுடன், இனிமை திகழ வர்ணிப்பதில் கம்பருக்கிணை இல்லை எனின் தவருகாது.

வண்ணச் சேர்க்கையை அவர் வர்ணிக்கும் வண்ணம் தான் என்னே என்னே!

## மனிதர் நீங்கினும் மாரு அறநெறி

அணியிழை மகளிரு மலங்கல் வீரரும்
தணிவன வற நெறி தணிவிலாதன
மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது
பணிபிறி தியன்ற பாங்கு மில்லையே.

அணிபணியணிந்த அணங்குகளும் மாலை சூடிய ஆட வரும் வெளியூர் செல்லும் காலத்திலும் மாருது நடக்கும் அறத்தொழில் உடையன அயோத்திபுரி வீடுகள். நவமணி களாலும், பொன்ஞலும் அல்லது வேருெரு பொருளைக் கொண்டும் கட்டப்பட்டன அல்ல அவை.

மாளிகைகளுக்குரிய மாதர்களும் ஆடவர்களும் வெளி

யூர் யாத்திரை செய்யினும் அவர்கள் வழக்கம்போல் நடத்தும் அறங்கள் மாருமல் நடக்கும்.

அவ்வளவு கட்டுப்பாடான அறக்காதல்:

## மாளிகைகளின் மாட்சி

வானுற நிமிர்ந்தன ; வரம்பில் செல்வத்த
தானுயர் புகழ்எனத் தயங்கு சோதிய
ஊனமில் லறநெறி யுற்ற வெண்ணிலாக்
கோனிகர் குடிகள்தங் கொள்ளை சான்றன

அம் மாளிகைகள் விண்ணையளாவி நிற்பன ; அளவில்லாத செல்வத்தையுடையன : தங்களது உயர்ந்த புகழுக்கு ஒப்பாக விளங்குகின்ற ஒளிபொருந்தியன : பழுதில்லாத அறநெறி வழி நிற்பன. செல்வ மிகுதியால் சக்கரவர்த்திக்கு நிகரான அளவிலாத குடிகளால் நிறைவு பெற்றன.

## காணும் காட்சி

அருவியிற் ருழ்ந்து முத்தலங்கு தாமத்த
விரிமுகிற் குலமெனக் கொடி விராயின
பருமணிக் குவையன பசும்பொற் கோடிய,
பொருமயிற் கணத்தன மலையும் போன்றன.

அருவிகளைப் போலத் தாழ்ந்து அசையும் முத்து மாலைகளை யுடையன ; பரந்த மேகக் கூட்டம் போல் நீலத்துகிற் கொடிகளால் கலக்கப்பட்டுள்ளன; பருத்த மணிக் குவியல்கள் நிறைந்தன ; பசும்பொன் மிகுதிகளை யுடையன ; பொருந்திய மயிற் கூட்டம் போன்ற மாதர்களையுடையன ; போர் செய்வதற்குரிய கூரிய ஆயுதங்களை யுடையன ; மலையினை நிகர்த்தன.

அகிலிடு கொழும் புகையளாய் மயங்கின
முகிலொடு வேற்றுமை தெரிகலா முழுத்
துகிலொடு நெடுங் கொடிச்சூல மின்னுவ
பகலிடு மின்னணிப் பரப்புப் போன்றவே !

அகிற்கட்டைச் செழும் புகையுடன் கலந்து ஒன்ருகி, நீருண்ட மேகத்துடன் வேறுபாடு தெரியாத பெரிய துகிற் கொடியுடன் நெடிய கொடிமுனையில் உள்ள மின்னுகின்ற சூலங்கள் பகற்போதில் ஒளிவீசும் மின்னல் வரிசைப் பரப்புப் போலத் தோன்றுகின்றன.

அகிற் புகையுடன் கலந்த கொடியாடை மேகம் போன்று இருப்பதனுல் அதன் முனையில் உள்ள சூலம் பகற்காலத்து மின்னல் போன்று இருக்கின்றது என்பது இதன் கருத்து.

## கற்பகப் பூமாரி

துடியிடைப் பணைமுலைத் தோகை யன்னவர்
அடியிணைச் சிலம்பு பூண்டரற்று மாளிகைக்
கொடியிடைத் தரளவெண் கோவை சூழ்வன
கடியுடைக் கற்பகங் கான்ற மாலையே !

உடுக்கை போன்ற சிற்றிடையும் பருத்த மார்பகமும் மயில் போன்ற சாயலும் உள்ள மகளிரது இரண்டு பாதங் களிலும் சிலம்புகள் சூழ்ந்து ஒலித்துக்கொண்டிருக்கும். மாளிகைகளின் மேலே கட்டிய கொடிகளிடத்துச் சூழ்ந் தசைந்தாடும் முத்து மாலைகள் மணம் நிறைந்த கற்பக மரம் உதிர்க்கும் பூ மாலைகள் போல் ஒளிவிடும்.

பூந்துகிற் கொடிகள் வான் அளாவி அசைவதனுல் கற்பகக் காவினின்று உதிர்கின்ற மண மலர் மாலைகள்

போலக் கொடி திகழ் வெண் முத்து மாலைகள் தோற்ற மளித்தன.

## அந்தரத்து சந்திரனைத் தேய்த்த கொடிகள்

காண்வரு நெடுவரைக் கதலிக் கானம்போல்
   கோனிமிர் பதாகையின் குழாந் தழைத்தன
வாணணி மழுங்கிட மடங்கி வைகலும்
   சேண்மதி தெய்வதக் கொடிக டேய்க்கவே!

பெரிய மலையினிடத்துக் காணப்படுகின்ற வாழைக் காடுபோல் நவக்ரக மண்டலம் வரை உயர்ந்த பெருங் கொடித் திரள்கள் உராய்ந்து உராய்ந்து நாள்தோறும் தேய்ப்பதனுல்தான் ஆகாயத்தில் செல்லுகின்ற சந்திரன் ஒளி மிக மழுங்கி வளைந்து தேய்கிருன்.

சந்திரன் தேய்பிறையாவது கொடிகள் உராய்தலால். அருமையான கற்பனை!

## முத்துப் பந்தல்

பொன்றிணி மண்டப மல்ல பூத்தொடர்
   மன்றுக ளல்லன மாட மாளிகை
குன்றுக ளல்லன மணிசெய் குட்டிம
   முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே!

நகரெங்கும் பொன்னுல் அழுத்திக் கட்டிய மண்டபங் கள்; அவை அல்லாதன பொலிவு பொருந்திய மன்றங் கள்; அவை அல்லாதன மாடமாளிகைகள் ஆகிற குன்று கள்; அவை அல்லாதன நவமணி பதித்த சமதள முன்றில் கள்; அவை அல்லாதன எல்லாம் முத்துப் பந்தல்கள்தாம்: எனவே அந்நகரத்தில் வெற்றிடம் கிடையாது!

பொன் மண்டபங்கள் அல்ல; பொது மன்றங்கள் அல்ல; மாளிகை மலைகள் அல்ல; மணிமுற்றங்கள் அல்ல; முத்துப் பந்தல்கள் இவை!

## விண்ணாடு பொன் நாடான விந்தை

மின்னென விளக்கென வெயிற் பிழம்பெனத்
துன்னிய தமனியத் தொழில் தழைக்கவக்
கன்னிநன் நகர்நிழல் கதுவலால் அரோ
பொன்னுல காயதப் புலவர் வானமே!

மின்னலைப் போலவும், விளக்கைப் போலவும், வெயில் பிழம்பு போலவும், ஒளி பொருந்திய பசும் பொன்னால் செய்யப்பட்ட, வேலைப்பாடுகள் நிறைந்த, அழிவில்லாத அந்த நல்ல நகரினுடைய ஒளி விண்ணில் சென்று தாக்கு தலால் தேவர்களுறையும் அச்சுவர்க்கபூமி பொன் பூமி ஆயிற்று.

அயோத்தி நகரின் அதிசய காந்தி விண்ணாட்டைப் பொன்னாடாக்கிவிட்டது.

ராதையின் பொன்மேனியின் மஞ்சள் ஒளி பட்டு நீலக்கண்ணன் பச்சைக்கண்ணன் ஆகிவிட்டான் என்கிறார் ஹிந்தியின் பிரஸித்த கவிஞர் ஒருவர்.

மஞ்சள் வண்ணமும் நீல வண்ணமும் கலந்தால் பச்சை வண்ணம் ஆகும் என்னும் இயற்கை உண்மையை இவ்வாறு நயம்பட உரைக்கிறார் ஹிந்திக் கவிமன்னர். ஆனால் இங்கோ நீல வான் பொன் வானாகவே மாறிவிட்ட விந்தையை விரித்துரைக்கிறார் வண்டமிழ் வாணர்.

## ஒளிக்கு ஓர் ஒளி

சூரியன் உதயமாகும்போதும் அஸ்தமிக்கும்போதும்

ஒளி குறைந்தும் நடுப்பகலில் ஒளி மிகுந்தும் காணப்படுகிருன்! ஆதலால் சூரியனுக்கு இயல்பான ஒளி கிடையாது. பின் ஏது ஒளி?

... ... ... புரிசைப் பொன் மதில்

அழன்மணி திருத்திய வயோத்தி யாளுடை
நிழலெனப் பொலியு மானேமி வான்சுடர்

மாணிக்க மணிப் பொன் மதிலேயுடைய அயோத்தியாகிற அணங்கின் ஒளியினுல் அல்லவா சூரியன் விளங்குகிருன்! இல்லேயேல் அவனுக்கு ஏது ஒளி?

## கடலும் கமழும்; மழையும் கமழும்

ஆய்ந்த மேகலேயவ ரம்பொன் மாளிகை
வேய்ந்த காரகிற்புகையுண்ட மேகம் போய்த்
தோய்ந்தமா கடனறுந்தூப நாறு மேல்
பாய்ந்த தாரையினிலே பகரல் வேண்டுமோ?

மேகலேயணிந்த மகளிர் மாளிகைகளில் கூந்தலுக்கும் அணிந்த களபம் காய்வதற்கும் அகிற்புகை ஊட்டுகிருர்கள் அப் புகையை உண்ட மேகம் கடல் நீரில் முழுகக் கடல் மணக்கும் என்ருல் பெய்யும் மழை பரிமளம் கமழும் என்று கூறவா வேண்டும்?

## இசை வெள்ளம்

குழலிசை மடந்தையர் குதலே கோதையர்
மழலேயங் குழலிசை மகர யாழிசை
எழிலிசை மடந்தையர் இன் சொலின்னிசை
பழையர்-தஞ் சேரிபிற் பொருநர் பாட்டிசை

சுருண்ட கருங்குழற் காரிகையரின் குதலைப் பேச்சு புல்லாங்குழலிசைக்கு நிகராகும். நெறிந்த கூந்தற் கோதையரின் மழலைமொழி, மகர யாழ் இசைக்கு ஒப்பாகும். கட்டழகிகளான மாதர்களின் இனிய சொல் ஆகிய இசையானது கள் விலைஞருடைய சேரியில் இருக்கும் கூத்தருடைய பாடல் போலவும் விளங்கும்.

மடந்தையர் மழலை கோதையர் குதலை வனிதையர் இன்சொல், கூத்தரின் பாடல் யாவும் கலந்தொலிக்கும் அயோத்தியில் மழலை மொழி குதலை மொழி, கிள்ளை மொழி. குயில் மொழி என்று பெண்களின் சொல்லினிமையை வர்ணிப்பது கவிஞர் மரபு.

> குழலினிது யாழினிதென்பர் தம் மக்கள்
> மழலைச் சொல் கேளாதவர்

என்னும் வள்ளுவர் வாக்கு இங்கு கவனிக்கத் தக்கது. குதலை மொழியின் இனிமை குழலுக்கு இல்லை; மழலை மொழியின் மனதை மயக்கும் தன்மை மகர யாழுக்கு இல்லை. வெறிசெறிந்த போதை தரும் மாண்பு பொருநர் பாட்டிசையிலும் இல்லை என்று சொல்லாமற் சொல்கிறார் கம்பர்.

## முத்து நிலா

பந்து பயில்கின்றனர் பாவையர். அவர்கள் அணிந்தசையும் ஆபரணங்களிலிருந்து முத்துக்கள் அவிழ்ந்து சிதறுகின்றன. அவற்றைத் தாய்மார் கூட்டிக் குவிக்கின்றனர். குப்பல் குப்பலாக குப்பைக் காடாக. அக் குவியல்களோ

> சந்திரன் ஒளி கெடத்தழைப்ப தண்ணிலா

மதியின் நிலவொளியை முத்தின் மோகன நிலா வென்றுவிடுகிறது.

அப்படியெனில் சிதறும் முத்துக்கள் எவ்வளவு. அதை யணியும் ஆயிழைமார் எண்ணிக்கை எவ்வளவு. எல்லாம் கற்பனை செய்துதான் காண வேண்டும்.

பந்தாடுதல் பாரத நாட்டுப் பெண்களுக்கு இயற்கை யானதோர் விளையாட்டு

"பந்தணை மென் விரலாள்"
"பந்தார் விரலீ"

என்று பழைய இலக்கியம் வர்ணிக்கும் பந்தாடும் கட்டமே வெகு அழகாக வர்ணிக்கப்படுகிறது குற்றாலக் குறவஞ்சியில்.

"நாடகம் ஆடிய தோகை மயில் என
நல் நகர் வீதியிலே - அணி
ஆடக வல்லி வசந்த ஒய்யாரி
அடர்ந்து பந்தாடினளே"

முக்கண்ணனை மோகினி வடிவம் எடுத்து மயக்கிய செந்தாமரைக்கண்ணன் பந்தாடியே வென்றான் என்கிறது பாகவதம்.

அப்படி பாரத நாட்டுப் பண்பிலேயே ஊறிவிட்ட பந்தாட்டம் முத்து நிலாவை உற்பத்தி செய்வதில் வியப்பென்ன?

## தேய்வதும் வளர்வதும்

அரங்கிடை மடந்தைய ராடுவார் அவர்
கருங்கடைக் கண்ணயில் காமர் நெஞ்சினை

உருங்குவ மற்றவர் உயிர்க ளன்னவர்
மருங்குல்போல் தேய்வன வளர்வ தாசையே !

அரங்கிடை ஆடும் அணங்குகளின் இடைகள் வளைந்து மெலிய மெலிய, அவ்வாடலைக் கண்ணுறும் ஆடவரின் உயிரும் மெலியும்; தேயும், ஆனால் ஆசையோ வளரும் !

புதிய தேன் பொழிவன சோலைகள். மெல்ல மெல்ல நுழைவன தென்றலும் வண்டுகளும் வருந்துவன பிரிந்தவர் மனம்.

யாழின் நாதம் இன்னிசைப் பாடலின் பண்ணோடு கலந்தொலிக்கும்; வார் கட்டிய தாள-வாத்தியங்கள் முழங்கும். அப்பாடலைக் கேட்டு-

## உறங்குவன

......கண் முகிழ்த்து

உறங்குவ மகளிரோ டோதும் கிள்ளையே;
பெண்களோடு பசுங்கிளிகள் தூங்கும்;

அவ்வளவு சுவை மயக்கம் தரும் பாடல்;

“கோவிந்தக் குட்டன் குழல்கொடு ஊதினபோது” நிற்பன, பறப்பன, நடப்பன, ஊர்வன ஆகிய யாவும் திகைத்து நின்ற செய்தியை நாம் நன்கு அறிவோம்.

“பசுர் வேத்தி. சிசுர் வேத்தி.
வேத்தி கான ரஸம் பணீ”

பசுவும் சிசுவும் பாம்பும் பாட்டின் சுவையை யறிவார்கள் என்றால் பசுங்கிள்ளையும் பைங்கிளி மாதரும் உணர்ந்து, அநுபவித்து, ஆனந்தித்து மயங்கி உறங்குவதில் வியப்பில்லையல்லவா ?

## உதைபடச் சிவப்பன

குதைவரிச் சிலைநுதல் கொவ்வை வாய்ச்சியர்
 பதயுகத் தொழில்கொடு பழிப் பிலாதன
தகைமலர்த் தாமரை யன்ன தாளினுல்
 உதைபடச் சிவப்பன வுரவுத் தோள்களே ;

வளைந்த வரியுடை வில் போன்ற நெற்றியும் கோவைக் கனி வாயும் கொண்ட கோதைமார் பழிப்பற்ற, இதழ்கள் நெருங்கிய, செந்தாமரை போன்ற தமது மலர்த்தாள் களால் உதை பட்டுச் சிவப்பன ஆற்றல் மிகு கணவன் மார்களின் தோள்கள்தான் !

தாளினுல் தோளிலுதைப்பார்கள் தோகையர் ; தவறு செய்தால் தண்டனை உதைத்தல். தளிரன்ன தாமரையடி யால் தவறு செய் கணவனை உதைக்கிறுர்கள் உத்தமியர். தவறு செய்து தானே தாளில் குனிகிறுன் கணவன் ;

"லலாடே பர்த்தாரம் சரண கமலே தாடயதிதே"

"நெற்றிக் கண்ணன் நெற்றியில் நீ உன் குற்ற மற்ற பாத தாமரையால் உதைக்கும் போது மன்மதன் மன மகிழ்கிறுன் தன் கைக் கரும்பு வில் நாணை ஒலித்து" என் கிறுர் சௌந்தர்ய லஹரியில் சங்கராச்சாரியார் ஜகஜ்ஜன னியை வர்ணிக்கையில். ஆதலால் இது இயற்கையே. உத்தமியர் கால்களால் உதை படச் சிவப்பன ஊடலில் ஆடவர் தோள்கள் ;

## இமைப்பிலாதன

பொழுதுணர் வறியவப் பொருவின் மாநகர்த்
 தொழுதகை மடந்தையர் சுடர் விளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு மாசைகொல்
 எழுது சித்திரங்களும் இமைப் பிலாதவே ;

பகல் என ஒளிவிடு பன் மணி யளியுடைக் கற்புடை மடவாரின் காந்த தீபம் போன்ற மேனி வண்ணத்தைப் பார்க்கும் ஆசையோ இந்தச் சுவரில் தீட்டப் பெற்ற ஓவியங்கள் இப்படிக் கணணிமைக்காது நோக்குகின்றன;

"கங்குலும் பகல் பட வந்தான்" என்று
கம்பர் சுந்தரக்காண்டத்திலும்
"அணிகலம் பகலைச் செய்ய" என்று
சிந்தாமணியிலும்

ஆபரணங்களின் ஒளி வெயில் வீசுவது கூறப்படுகிறது ஆதலால் "பொழுதுணர்வறிய, என்கிறார். இரவா, பகலா என்று உணரமுடியாத கருத்துச் செறிந்து, கற்பனை ஒளி வீசும் சொற்றொடர்;

## தீ விளக்கமோ

தனிமலர்த் திருமகள் தயங்கு மாளிகை
இணரொளி பரப்பி நின்றிருள் துரப்பன
திணிசுடர் நெய்யுடைத் தீவிளக்கமோ
மணிவிளக் கல்லன மகளிர் மேனியே;

தாமரைத் திரு நீங்காது வாசம் செய்யும் வீடுகளில் இருட்டைப் போக்கடிப்பன நெய்ச் சுடர் விளக்குகளோ மாணிக்க தீபங்களோ அல்ல, பின் எது? மகளிர் மேனி; ரூப லாவண்யத்தின் காந்தி;

## பரத நாட்டியமும் பரி-நாட்டியமும்

பதங்களிற் றண்ணுமை பாணி பண்ணுற
விதங்களின் விதிமுறைச் சதிமிதிப்பவர்
மதங்கியர் அச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைகள் அல்லன புரவித் தார்களே;

லயமும் இசையும் ஒத்து ஒலிக்கப் பதினறு வயது மங்கையர் பரத நாட்டிய முறை வழுவாமல் ஜதி ஸ்வரம் பிடித்து (மிதித்து) ஆடுவார்கள். அபிநயம் பிடிப்பார்கள். அப்போது தாளக்கட்டுத் தவருமல் ஒலிப்பது அவர்கள் பாதத்துப் பொற்சதங்கைகள். அவை அல்லாதவை குதிரைகள் கழுத்திலணிந்த கிண்கிணி மாலைகள்.

குதிரைகள் ஜதி ஸ்வரம் பிடிப்பது போல் லயம் தவருமல் நடப்பதால் அவை கழுத்திலணிந்த கிண்கிணி மாலைகள் தாளம் தவருது ஒலிக்கும் நாட்டியப் பெண்கள் பாதச் சதங்கைகள் போல.

என்ன நுண்ணிய ஒப்பு நோக்கும் அறிவு;

## மண்டபக் களஞ்சியம்

மன்னவர் தருதிறை யளக்கு மண்டபம்
அன்னமென் னடையவ ராடு மண்டபம்
உன்னரு மருமறை யோது மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்

மறு தேயத்தரசர்கள் கொண்டு வந்து கொட்டும், கப்பமாகக் கட்டும் பொருள்களை யளக்கும் மண்டபங்கள் அன்னம் போன்று மென்னடையுடைய அணங்குகள் ஆடல் பயிலும் நடன மண்டபங்கள்; அளவிற்கரிய, நினைத்ததற்கரிய நான்மறைகள் பயிலும் வேத மண்டபங்கள்; அரிய கலைகளை ஆராய்ச்சி செய்கின்ற கல்விக் கழகங்கள் செறிந்துள்ளன.

பொருள், கலை, மறை, சாத்திரம், கல்வி என்னும் ஒவ்வொன்றையும் அளந்து ஆராயத் தனித்தனிக் கட்டடங்கள், கழகங்கள் நிறைந்துள்ளன.

## ஏங்க, ஏங்குவ

அன்னவர் கழலொடு மாறு கொள்வன
  பொன்னணித் தேரொலி புரவித்தாரொலி
இன்னகை யவர்சிலம் பேங்க ஏங்குவ
  கன்னியர் குடைதுறைக் கமலவன்னமே ;

பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தேரொலியும், குதிரைகளின் கிண்கிணி ஒலியும் அரசர்களின் வீரக் கழல் ஒலியோடு மாறு கொண்டு ஒலிப்பன. இனிய இனிய புன் சிரிப்பை யுடைய மாதர்களின் பாதச் சிலம்பு ஏங்க, புலம்ப, அது தங்கள் இனத்தின் குரல் என எண்ணி, நீராடுந்துறையில் இருக்கும் தாமரை மலரில் வாழும் அன்னப் பறவைகள் ஒலிக்கும். பதில் குரல் கொடுக்கும்.

சிலம்பின் ஒலியும் அன்னத்தின் குரல் ஒலியும் ஒன்று போல் இருக்கும் என்பது இலக்கிய மரபு. சிலம்பொலி "கல ஹம்ஸ நாதம்" என்று வடமொழியில் வழங்கப் படும். "கலீர், கலீர்" என ஒலிக்கும் பாதச் சிலம்பின் ஒலியைப் புலம்புதல், சிலம்புதல், ஏங்குதல் என்று கூறுதல் தமிழ் இலக்கிய மரபு.

" இரும்பு மனம் குழைத்தென்னை எடுத்தாண்ட
  அங்கயற்கண் எம்பிராட்டி
அரும்புமிள நகைபோற்றி ஆரணநூபுரம்
  சிலம்பும் அடிகள் போற்றி "
    என்று பரஞ்சோதியாரும்
"பாதாம்புஜம் பவது தே விஜயயாய மஞ்ஜு
  மஞ்ஜீர சிஞ்சித மனோஹரம் அம்பிகாயா:"

அம்பிகையின் அழகிய சிலம்பு புலம்பும் திருவடிகள் உனக்கு வெற்றியையளிக்கட்டும் என்று காளிதாஸரும் சிலம்பின் ஒலியை வர்ணிக்கிறார்கள்.

பாரத நாட்டுப் பண்பாட்டில் சிலம்பிற்குச் சிறப்பு அதிகம்; அதன் ஒலிக்கு இனிமை, மகிமை, பெருமை அதிகம் "சிலம்பு" என்றாலே ஒலிப்பது என்று பொருள் படும். சீதையின் பாதச் சிலம்பின் பண்பையும், கண்ணகியின் கற்புக் கனற் சிலம்பின் கண்ணியத்தையும் அறியாதார் யார்?

சிவன் செஞ்சிலம்பணிந்தே ஆடுகிறான்.
"மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவேம்"
—சேக்கிழார்.

"மஞ்ஜீர பாத யுகளாய மகேசுவராய"
—வஸிஷ்டர்

கண்ணன் சிலம்பணிந்தே குழல் ஊதுகிறான்.

பக்தமணி மீராவுக்கு கண்ணன் பாதச்சிலம்பொலியை ஒலித்து ப்ருந்தாவனத்துக்கு வழிகாட்டிய வரலாறு பிரசித்தம். கம்பருக்குக்கலைவாணி சிலம்பளித்த கதையும் பிரசித்தம்.

புரந்தரி என்னும் பக்தை பாட கண்ணன் கால்களில் சிலம்பும் சதங்கையும் அணிந்து ஆடிய செய்தியும் பிரசித்தம்.

முருகன் சிலம்பணிந்த சிங்கார வடிவேலன்.

"பச்சை மயில் வாகனமும்
பன்னிரண்டு திண்டோளும்"
கொண்டுள்ள பரமசிவபாலன்.

"தண்டைகள் கலின், கலின், கலின் எனத் திருவான" சங்கரிக்கு முத்தந்தர தளர் நடை நடந்து வருகிறன்.

"மொழிபுகழு முடைமணியும் அரைவடமும்
அடியிணையும் முத்தச் சதங்கையும்
சித்திரச் சிகண்டியும் செங்கைவேலும்"

(அருணகிரிநாதர்)

கொண்டுதான் அடியார்முன் மிடியகல நிற்கிறன்.

பரிமள ரங்கபதி முத்துச் சிலம்பணிந்தவர், கலைமகள், மலைமகள், அலைமகள் மூவரும் மணிச்சிலம்பணிந்த செல்வி கள் என்று கூறத் தேவை இல்லை ஆக தெய்வீக மணம் கமழ்வது சிலம்பு. கற்புக் கனல் ஒளிர்வது சிலம்பு, இலக்கியத்தில் மிளிர்வது சிலம்பு.

இவ்வளவு மதிப்பும் இனிமையும் பொருந்திய சிலம் பைத்தான் கம்பர் "ஏங்க" என்னும் சொல்லால் ஏற்று விக்கிறர். ஏத்துகிறர்.

ஏங்குதல் என்றல் ஒலித்தல் என்பதுதான் சாதாரணப் பொருள் ஆயினும் இங்கு அவர் அதைக் கையாளும் முறையினல் எச்சரித்தல், அறிவித்தல், அரற்றல் என்று தொனிக்கிறது.

மாதர் சிலம்புகள் ஸைரன் (Siren) ஊத, வரப் போகும் அபாயத்தை அறிந்து கத்துகின்றன கமல அன்னங்கள் என்னும் குறிப்புத் தோன்றுகிறது. ஏன்

எனில் மாதர் நீராடும் போது அன்னங்களின் அமைதி குலேவது திண்ணம். அதற்கோர் அபாய அறிவிப்பு சிலம் பொலி;

பொருத்தமான சொற்களேப் பொருள் பொதிந்து மிளிரும்படி அமைப்பதில் கம்பர் வல்லவர்.

"ஏங்க, ஏங்குவ" என்பதை நன்கு ஆராய்ந்து பார்த் தால் இவ்வுண்மை புலப்படும்.

இதுகாறும் இனிமை, சீர்மை, ஓசை நயம், சொற் சுவை, பொருட்சுவை முதலியவற்ருல் நம்மை விரைவில் மேலே போகவொட்டாமல் தன்பால் ஈர்த்து இருத்துகிறது கம்பர் கவிதை.

## மகளிர் கண்களே

இடை இடை எங்கணுங் களியருதன
  நடையின வன்னங் கணளின நீர்க்கயல்
பெடையிள வண்டுகள் பிரச மாந்திடும்
  கடகரி யல்லன மகளிர் கண்களே;

தாமரைப் பொய்கைகளில் எப்போதும் இடைவிடாது களிப்புடன் செழிப்பன கீழ்க்கண்டவை:—

மென்னடையுடை அன்னப்பறவைகள், சேல் மீன்கள், இள வண்டுகள், மத யானேகள் என்பன.

நளினம் நீங்காது களிப்பன நடையிள வன்னங்கள்,
நீர் நீங்காது களிப்பன கயல் மீன்கள்,
தாமரைத் தேன் நீங்காது களிப்பன இளம் வண்டுகள்
தண்ணீரருந்திக் களிப்பன மதயானேகள்.

இவைகளைத் தவிர எப்போதும் முப்போதும் இடைவிடாது களி நடனம் புரிவன மகளிரின் மலர்ந்த கண்களே;

மலர்ச்சியும், குளிர்ச்சியும், துடிப்பும், சொலிப்பும், மருட்சியும், இளமையும், எழிலும் பொருந்தி எப்போதும் இன்பக்கூத்து — ஆனந்த நடனம் — புரிவன அவ்வூர் மாதராரின் கண்கள்.

> "விசாலா, கல்யாணீ, ஸ்புட ருசி ரயோத்யா குவலயை;
> கிருபாதாரா தாரா கிமபி மதுரா போகவதிகா
> அவந்தீ த்ருஷ்டிஸ்தே பஹு நகர விஸ்தார விஜயா
> த்ருவம் தத்தந்நாம வ்யவஹரண யோக்யா விஜயதே"
>
> —ஸௌந்தரிய லஹரி, சங்கரர்.

## பொருள்

"தாயே, விசாலமானதும் அதாவது காதளவோடியதும், கல்யாணங்களைக் கடல் எனப் பொழிவதும், வனப்பு மிக்கதும், நீலோற்பல மலர்களால் வெல்ல முடியாததும், கருணைக்கிருப்பிடமானதும், மதுரமானதும், சகல போகங்களையும் அளிக்க வல்லதும், அனைவரையும் காப்பதுமாகிய உன் கடைக்கண் பார்வை எந்த நகரத்தின் பெயருடனும் சிறப்புடனும் போட்டியிட்டு வெல்லும் தன்மை பொருந்தி விளங்குகிறது; என்று வர்ணிக்கிறார் அன்னை பார்வதியை ஆதி சங்கரர். இது சிலேடைக்கு சிகரமாகிய ஓர் சுலோகம்.

விசாலா, அயோத்யா, தாரா, மதுரா, போகவதீ, அவந்தீ என்பன பெயரும் புகழும் படைத்த புராதன நகரங்கள். அவைகளின் பெயரையே அன்னையின் கடைக்

கண்ணுக்கு அடைமொழி யாக்கி சிறப்பினுல் பொருள் பொதிந்து திகழும்படி அற்புதமாக வர்ணிக்கிருர் அமர குருமணி சங்கரர்.

பஹு நகர விஸ்தார விஜயா

"விஸ்தார விலாஸத்தின் சிறப்பினுல் பல நகரங்களை யும் ஜயித்து விளங்குகிறது" என்ற சொற்ருெடரில் வர்ணிக்க முடியாத இன்ப மழையை இலக்கியச் சுவை யைக் கொட்டித் தீர்த்துவிடுகிருர் இந்த உலக மேதை.

கம்பர் பாடலைப் படிக்கையில் மேற்படி சங்கரர் பாடல் தானே முன் வந்து நிற்கின்றது மனக்கண்முன்.

"மகளிர் கண்களே" என்று "ஏ"காரத்தினுல் கம்பர் முத்தாய்ப்பு வைத்தால் "விஜயதே" என்று "ஏ" காரத்தினுல் கொட்டி முழக்குகிருர் சங்கரர்.

தாமரையின் வனப்பையும்; தண்ணீரின் குளிர்ச்சியை யும், கயலின் துள்ளலையும், வண்டின் நிறத்தையும், தேனின் சுவையையும், யானையின் மதத்தையும், மாதர் கண்களுக்கு உவமையாகச் சொல்லாமற் சொல்லிக் காட்டுகிருர் கம்பர்.

விசாலத் தன்மை, கல்யாணத்தன்மை, வெல்லமுடி யாமை, நீலநிறத்தன்மை, கருணை, இனிமை, செழுமை, செல்வம் சுரக்கும் தன்மை, புரக்கும் தன்மை இவ்வளவும் சேர்ந்த தாய்மையின் தூய்மை வெற்றி இத்தனையையும் சொல்லிக்காட்டியும் சொல்ல முடியாததோர் தெய்வீகச் சுவையூட்டுகிருர் சங்கரர். கண்களை வர்ணிப்பதில்தான் இக்கவிகளின் கற்பனை செய்துகாட்டும் இந்திர ஜாலம்; பிறவிக்கவிகள் என்ருல், அற்புத மேதைகள் என்ருல், அழியாச் செல்வங்கள் என்ருல் இவர்களன்ருே;

## மணங் கமழ்வன

விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ
குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ
கலக்கடைக் கணிப்பருங் கதிர் கஞறுவ
மலர்க்கடி நாறுவ மகளிர் கூந்தலே ;

தடை செய்ய முடியாத யானைகளின் மத நீர்கள் வேங்கைப் பூப்போல் மணம் வீசுவன; குல மகளிரின் வாய்கள செவ்வல்லி மலர்போல் மணப்பன ; அவர்கள் அணிந்துள்ள அணிகலன்களின் கடைப் பூட்டுகள் (இணைத்துள்ள இடம்) ஒளிக் கற்றைகள் வீசுவன. அவர்களது நீண்டிருண்ட கூந்தலோ மலர் மணம் கமழ்வன.

## அமராவதியா அளகை தோற்றதே!

கோவையிந் நகரொடெண் குறிக்க லாதவத்
தேவர்தன் நகரியைச் செப்பு கின்றதென் ?
யாவையும் வழங்கிடத் திகலி யிந்நகர்
ஆவணங் கண்டபின் னளகை தோற்றதே !

இவ்வயோத்தி ஏழு புண்ணிய புரிகளுள் ஒன்று ; எல்லாப் பொருள்களையும் இடையின்றி வாரி வழங்கும் இந்த அயோத்தி நகரின் கடைவீதியைப் பார்த்தபின் செல்வ நாயகன் குபேரனது தலைநகரான அளகாபுரியே தோற்றுவிட்டது என்றால் ஏழு புண்ணிய புரிகளுள் ஒன்றாக எண்ணப்படாத இந்திரபுரியாகிய அமராவதியை இதற்கு உவமை சொல்லத்துணியலாமா ? அசம்பாவிதமன்றோ ? அயோத்தி புண்ணியபுரி ; அமராவதி அல்ல: அளகையோ இதன் ஆவணத்துக்கே தோற்றுவிட்டது. பின் எது உவமை?

கிடையவே கிடையாது என்பது குறிப்பு.

ஆரம்பத்தில் சொன்னதை வலியுறுத்தி அழுத்தம் திருத்தமாக முத்திரை பதிக்கிறார் இங்கு கவிஞர். அயோத்தியை உண்டு பண்ணவே அமராவதியும் அளகாபுரியும் மாடல் பட்டணங்களாகப் பிரும்மதேவனால் செய்து பார்க்கப்பட்டன, என்கிறார் முதலில்.

புயல் தொடு குடுமி நெடு நிலை மாட நன்னகராகிய இப் பொன்னகர் அயோத்தி புண்ணியபுரி; புனித நகரி. பவித்ர பூமி; வைகுந்தபுரியைவிட உயர்ந்தது. ஆதலால் உவமை கிடையாது.

இந்திர புரி புண்ணியபுரி ஏழினுள் ஒன்று அல்ல.

அளகாபுரியோ ஆவணத்துக்கே தோற்றுவிட்டது!

ஆதலால் அயோத்திக்கு ஒப்பானதும், மிக்கானதும் இல்லை என்பது கம்பர் துணிபு.

அளகை வழங்குவதில் அயோத்தியுடன் போட்டியிட்டது. நேரில் அதன் கடைவீதியின் வளத்தைக் கண்ணால் கண்டதும் வெட்கித் தோற்றுவிட்டது!

"இராவணேசுவரனின் இலங்கைப் பட்டணம் சூரபதுமனின் மயேந்திரபுரிக்குச் சாக்கடை" என்று விளையாட்டாகக் கூறுவதுண்டு, இங்கோ கம்பர் இந்திரபுரி, குபேரபுரி, வைகுந்தம், பரமபதம் எதுவுமோ அயோத்திக்கு ஈடில்லை என்று ஒரே போடாகப் போடுகிறார். பின் எதுதான் ஈடு?

"அவனிமேல் இல்லை ஈடு:
அவளுக் கவளே ஜோடு"

என்பது கவிஞர் சித்தாந்தம். ரஸிகர்களாகிய நாமும் ஆமோதிக்கிறோம்.

அயோத்தி அண்ட முடியாதல்லவா ? கற்பனையால் கூடத்தான்! கம்பருக்குப் பின் !

## வீதி வனப்பு

அதிர்கழல் ஒலிப்பன அயிலி மைப்பன
கதிர்மணி யணிவெயில் கால்வ மான்மதம்
முதிர்வுறக் கமழ்வன முத்த மின்னுவ
மதுகர மிசைப்பன மைந்த ரீட்டமே!

நகரின் வீதிகளில் ஆடவர்கள் ஆங்காங்கு வருகிறார்கள் போகிறார்கள். அவர்கள் குழாத்தில் வீர கண்டைகள் ஒலிக்கும் ; வேலாயுதங்கள் ஜொலிக்கும் ; அணிகளில் பதித்த மணிகள் ஒளி வீசி வெயில் எரிக்கும் ; கஸ்தூரி கமழும்; முத்துக்கள் மின்னும்; வண்டுகள் பாடும்.

வீர கண்டையணிந்து, வேலாயுதமேந்தி, மணியணி தரித்து, கஸ்தூரி பூசி, முத்துமாலை யணிந்து, வண்டு சூழ்புது மலர்மாலை புனைந்து ஆடவர்கள் அயோத்தி வீதிகளில் திரிவார்கள் என்பதைத்தான் மேற்கண்டவாறு ரஸனைத் துலங்கக் கூறுகிறார் கவி.

## கடல் ஒலியா ஒலிக் கடலா ?

வளையொலி வயிரொலி மகர வீணையின்
கிளையொலி முழவொலி கின்னரத் தொலி
தொளையொலி பல்லியந் துவைக்கும் சும்மையின்
விளையொலி கடல்ஒலி மெலிய விம்முமே ;

சங்கோசை, கொம்போசை, வீணை நரம்போசை,

மத்தள ஓசை, கின்னர (ஓர் இசைக்கருவி) ஓசை, தாரை, சின்னம் முதலிய தொளைக் கருவியோசை, இன்னம் பற்பல இசைக்கருவிகளின் ஓசை ஒன்றுகலக்கும் ஆரவாரத்தின் ஒலி கடலோசையை அடக்கிவிடும்!

அலையலையாக நுரைத்தெழும் கடல்நீர் முத்து, இரத்தினம், பவளம், சங்குகளுடன் பொங்கிப் பொங்கிப் பொலிவது போலப் பொங்குகிறது ஓசை நயம் இப்பாடலில் எத்தனை வித இசைக் கருவிகள், ஓசைகள்! அவற்றையெல்லாம் மூன்றே வரியில் அடக்கும் இவரது திறமைதான் என்னே! நான்காவது வரியில் கடலே மெலிந்து விம்முகிறது;

தெள்ளிய நீரையுடைய மேகங்களும், அலைபாயும் ஆழியும் அஞ்சும்படி முரச-துந்துபி முழங்குகின்ற அந்த அயோத்தியில் வாழும் குடிகளில்

கள்வாரிலாமைப் பொருள் காவலுமில்லை, யாதும்
கொள்வாரிலாமைக் கொடுப்பார்களுமில்லை மாதோ!

களவு செய்வார் இல்லாமையால் ஈட்டிய பொருளுக்குக் காவல் செய்வதுமில்லை. யாதொரு பொருளையும் வறுமை மிகுதியினால் இரப்பார் இல்லாமையால் கொடுப்பவர்களுமில்லை.

களவுமில்லை: காவலுமில்லை; இரப்பதுமில்லை:
ஈவதுமில்லை

எல்லோரும் எல்லாம் நிரம்பப் பெற்றிருந்த படியால் குற்றம் செய்யும் இயல்பினர் கள்வர், கபடர், கயவர் என்பவர் கிடையாது. வறுமை என்பதே இல்லாது வளமை கொழித்தபடியால் பிச்சை எடுப்பவரும் இல்லை; அதனால் கொடுப்பவரும் இல்லை;

அந்த நிலைமையுடன் தற்கால இந்திய நகரங்களின் நிலைமையை ஒப்பு நோக்கிப் பார்த்தால்

களவு செய்யாதவரும் இல்லை ;
உளவு சொல்லாதவரும் இல்லை :
கை ஏந்தாதவரும் இல்லை ;
ஏந்தியவர்க்கு "இல்லை" என்னுதவரும் இல்லை ;

என்றுதான் பாட வேண்டியிருக்கிறது.

அயோத்தி யுகம் எங்கே? அணுகுண்டு யுகம் எங்கே?

இல்லை, இல்லை ;
கல்லாது நிற்பார் பிறரின் மையிற் கல்விமுற்ற
வல்லாரு மில்லையவை வல்லரல்லாருமில்லை
எல்லாறு மெல்லாப் பெருஞ் செல்வமு
மெய்தலாலே
இல்லாரு மில்லையுடை யார்களுமில்லை மாதோ ;

கல்வி கற்காது நிற்கும் வீணர்கள் பிறர் இல்லாமையால் கல்வி முற்றக் கற்றுக் கரை கடந்த வல்லுநர்கள் இல்லை ; ஆனல் வல்லுநர்கள் அல்லாதவர்களும் இல்லை; அந்நகரத்து மக்கள் எல்லாரும் கல்விச் செல்வம்; கேள்விச் செல்வம், பொருட் செல்வம் ஆகிய எவ்வகைப் பெருஞ்செல்வங்களையும் நிரம்பப் பெற்றிருப்பதாலே ஏழைகள் என்பாருமில்லை ; செல்வர்கள் என்பாருமில்லை.

படிக்காதவனே இல்லை; ஆதலால் படித்தவன் என்ற பாகுபாடு இல்லை. வல்லமையற்றவனே இல்லை. ஆதலால் வல்லவன் என்ற பாகுபாடு இல்லை. ஏழையே இல்லை; ஆதலால் பணக்காரன் என்ற பாகுபாடு இல்லவே இல்லை,

எல்லாரும் படிப்பாளிகள்; அறிவாளிகள், வல்லவர்கள், செல்வர்கள் என்ருல் படிப்பற்றவன், அறிவற்றவன், வல்லமையற்றவன், செல்வமற்றவன் என்று பிரிப்பது எப்படி ? பாகுபாடற்ற சமுதாயம்;

பாகுபாடற்ற சமுதாயம்;
பாரபட்சமற்ற சமூக வாழ்வு ;
உயர்ந்த அபேதவாதக் கொள்கை ;

"ஏழை என்றும் அடிமை என்றும் எவருமில்லை ஜாதியில்" என்ருர் பாரதியார்;

"எவருமில்லை அயோத்தியில்" என்கிருர் கம்பர்; வேற்றுமை மடு — பள்ளத் தாக்கு — பிளவுப் படுகுழி — இருந்தால் அல்லவோ "தனி" என்றவோர் சனி பிடித்த "வகுப்பு மலை" தோன்றும்? வேற்றுமை வேதனையும் இல்லை; பாகுபாடு செய்து ஒதுக்கும் பாதகமும் இல்லை; ஆதலால் ஒற்றுமை அரசாட்சி புரிகிறது ;

இப் பாடலில் உள்ள உயர்ந்த தத்துவத்துக்கு தமிழர் களாகிய—ஏன், இந்தியர்களாகிய நாம் — கம்பருக்கு என்றென்றும் கடமைப்பட்டுள்ளோம்.

## அறம் மலர்ந்த அருங்கனி

ஏகம் முதல் கல்வி முளைத்தெழுந் தெண்ணில்கேள்வி
ஆகம் முதற்றிண் பணைபோக்கி யருந்தவத்தின்
சாகம் தழைத்தன்பரும்பித் தருமம் மலர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலுமன்றே ;

## விந்தைக் கனி

கல்வி என்னும் ஒரு முதல் (விதை) முளைத்து எழுந்து, பல நூற் கேள்விகளாகிய பெருங் கிளைகளை மேலோங்க விடுத்து அரிய தவம் ஆகிய பசும் இலைகள் தழைத்து அன்பு என்னும் முகை (மொட்டு) யரும்பி, தருமம் என்னும் மலர் பூத்து, போகம் ஆகிய ஓர் கனி பழுத்ததுபோல விளங்குவது அயோத்தி ;

கல்வியே வேராக, கேள்வியே கிளைகள் ஆக, தவமே இலைகள் ஆக, அன்பே அரும்பாக, அறமே மலர் ஆக, போகமே (சுகாநுபூதி) கனியாகப் பழுத்து நிற்பது அயோத்தி என்னும் அருமரம் ;

இந்தப் பாடலுக்கு உவமையோ பொருளோ கூற முயல்வது பேதமைதான் ;

"அவ்வுலகத்தோர் இழிவதற்கு அருத்தி புரிகின்ற அயோத்திமா நகரம்"

"நிலமகள் முகமோ திலகமோ கண்ணே" என்று திகைக்கவைத்து. கவர்ச்சியினால் கற்பனைக் குட்படாது உயர்ந்து நிற்கும் உன்னத நகரம் கடைசியில் கம்பரது கற்பனையில் கனிந்தே விட்டது; அவரது கற்கண்டும் புளிக்கும் கற்பனைக் கயிற்றுக்குக் கட்டுப்பட்டேவிட்டது.

இப்படலத்தின் இனிய, எளிய, அரிய, பெரிய, அழகிய, பாடல்கள் எல்லாவற்றிர்கும் இக்கடைசிப் பாடல் தான் முகப்பு; நடுநாயக மணி; வைரப் பதக்கம்.

இப்பாடல் அயோத்தியாளுக்கு அழியாத அணி மகுடம், வாடாத மலர் மாலை, வனப்புக் குன்று வன்னப் பொன், திலகம் சோபை குறையாச் சூளா மணி

சொலிக்கும் சுதந்தரச் செங்கோல், ஒலிக்கும் ஒண்மணிச் சிலம்பு, மிளிரும் மேகலை, ஒளிரும் கங்கணம், சுடரும் சிங்காதனம், சொற்பதங் கடந்த அற்புத சிங்காரிக்குக் கற்பனை, விற்பன்னக் கவிஞன் கருத்து மகிழ்ந்தளித்த கற்பகப் பொற்பூ ;

இந்த அயோத்தியில் வந்து பிறக்க இருக்கிறான் அந்த வானப் பரஞ்சுடர் ;

இதற்கிடையில் தசரத அரசன் அரசு புரிவதை வால்மீகியும் கம்பரும் வர்ணிக்கிறார்கள். இக்கட்டத்தை ஏறக் குறைய இருவரும் ஒரே மாதிரிதான் சித்தரிக்கிறார்கள். ஆனால் கம்பர் நகரப் படலத்தில் வர்ணித்த அயோத்தி வர்ணனையை வால்மீகி அரசியல் சர்க்கத்துடன் இணைத்துக் கொள்கிறார். அரசாட்சி, அறநெறி, குடிமுறை, நகரச் சிறப்பு யாவையும் ஒரே சர்க்கத்தில் சேர்த்து வர்ணிக்கிறார். கம்பரைப் போல அயோத்தியாளுக்குத் தனிப் படல மாளிகை கட்டவில்லை. ரத்தினச் சுருக்கமாகக் கூறிவிடுகிறார். ஸ்ரீ துளஸி அயோத்தியின் அடி மலரைத் தொட்டு வணங்குகிறார் : அவ்வளவுதான் : பிறகு அன்னையின் ஆசியுடன் கதை - உபகதை முத்தாரம் கோக்கத் தொடங்குகிறார். இம்முத்துச் சிற்பியின் வேலைத் திறனை - ஆர அமைப்பை இனி பார்ப்போம் :

வாழ்க அயோத்தியின் புகழ் :
அயோத்தி வர்ணனை முற்றும்.

## ஸ்ரீ துளஸி கோத்த முத்தாரம்

## கதைக்கோவை

ஸ்ரீ துளஸி தாஸர் அயோத்தி அன்னையின் அடி மலரிணைகளைத் தொழுது வணங்கிவிட்டு கதை - உபகதை

சங்கிலித் தொடரை ஆரம்பித்து விடுகிறுர். இவர் புராண ரீதியில் காவியம் எழுதுகிறுர் என்று முதலிலேயே கூறி ேேனும். ஆதலால் பிரயாகையில் கும்பமேளா சமயத்தில் ஸ்ரீ பாரத்வாஜ முனிவர் கேட்ட கேள்விகளுக்கு மகாஞானி யாக்ஞ-வல்கியர் கூறும் பதில்களாக அமைந்த அற்புதக் கதைக் கோவை தொடங்குகிறது.

## முதலில் பார்வதி—பரமேசுவரர் கதை

அதாவது சீதை வேடம் பூண்டு ஸதிதேவி, மனைவி யைப் பிரிந்து வாடும் ஸ்ரீ ராமரின் பிரும்மத் தன்மையைப் பரிசோதித்தல்.

ராமரின் பொருட் பொதிந்த கேள்வி, பிரும்ம ரூப நிருபணம், ஸதியின் பயம்; பரமசிவன்; தவம் தட்ச யாகம், ஸதிபர்வதராஜன் புதல்வியாக உதித்தல் பார்வதி திருமணம்.

இக்கதை வெகு அருமையாகக் கூறப்படுகிறது. ராம நிந்தையைச் சிவனும், சிவ நிந்தையை ராமனும் பொறுப்ப தில்லை என்னும் தத்துவம் விளக்கப்படுகிறது.

பார்வதி தவம் புரிந்து பரமசிவனை மணந்த பின் கைலாசபதியிடம் ராமகதை கேட்கிறுள்.

பார்வதி திருமணம் நகைச்சுவை சொட்டச் சொட்ட வர்ணிக்கப்படுகிறது.

பார்வதி தவம், நாரதர் உபதேசம், ஸப்தரிஷிகள் பார்வதியின் காதலைப் பரிசோதித்தல், பார்வதி பதில், திருமண ஊர்வலம், பூதங்களின் ஆர்ப்பாட்டம், ஊரார் வம்பளப்பு, இமாலயன் மனைவி, பார்வதியின் தாய் மேனையின் மன வருத்தம்;— இவை யாவும் நகைச் சுவை

உயர்ந்த ரக அப்பழுக்கில்லாத நகைச்சுவை கனிந்தொழுக, வர்ணிக்கப்படுகிறது.

ஸதி ராமருக்குத் தவறிழைத்து விட்டதால் (ஸீதை வேடம் பூண்டது) ராமப்ரியர் சங்கரரால் கைவிடப்பட்டு, (சீதை வேடம் பூண்டதால் சங்கரருக்கு வணங்கத்தக்க அன்னையாகிவிடுகிருள் ஸதி) யோகாக்னியில் உயிர் துறந்து, பார்வதியாகப் பிறந்து, கடும் தவம் புரிந்து பிராயச்சித்தம் செய்து பின் சிவனை அடைந்தாள் என்பது கருத்து.

## இது ஒரு கதை

சிவன் இங்கு ராம—பிரதாபத்தையும், ராம—நாம மகிமையையும் விளக்குவதாகக்கூறப்படும் பாகம் சிவ-விஷ்ணு (சைவ - வைணவ) பேத மனப்பான்மையை அடியோடு கெல்லி எறிந்து, பக்தி விதையைத் தூவுகிறது. வட இந்தியாவில் சைவ - வைஷ்ணவ வேற்றுமையை ஒழித்து ஒற்றுமையை நிலைநாட்டியதும் இதுதான். இப்புகழ் துளஸிக்கே உரியது. நிற்க,

அடுத்த கதை, ராவண கும்பகர்ணர்களின் ராட்சஸப் பிறவிக்குக் காரணமான ஜய - விஜயர் சாபம்.

அடுத்தது, ஜலந்தரன் மனைவி, தன்னை ஏமாற்றிய விஷ்ணுவைச் சபித்தல்; ஜலந்தரன் பழிக்குப் பழி வாங்க ராவணனுகப் பிறத்தல்.

இந்தக் கதைக்குப் பிறகு, தொடருகிறது ஒரு விந்தைக் கதை. நகைச் சுவையின் மணிமகுடம்: நாரதர் காதல்; காதலில் தோல்வியுற்ற நாரதர் திருமாலை சபித்தல்: இக் கதையை நகைச்சுவையின் சிகரம் என்ருல் மிகையாகாது.

நாரதருக்குத் தான் ஜிதேந்திரியர் என்ற கர்வம்; அதைக் குலைக்க மன்மதன் பிரதிக்ஞை; சிவன் உபதேசம்; விஷ்ணு விளையாட்டு; விஸ்வமோஹினி பிறப்பு; அவளைக் கண்டதும் நாரதர் காதல்; நாரதர்—பர்வதர் போட்டி; ஸ்வயம்வர மண்டபத்தில் அழகே உருவான விஸ்வ மோஹினி, விஷ்ணுவுக்கு மாலையிடல்; சிவகணங்கள் சிரிப்பு: நாரதர் கோபம், வரும்வழியில் விஸ்வமோஹினி, லட்சுமி ஸமேதரான விஷ்ணுவை நாரதர் சந்தித்தல்; தனக்கு வரம் கொடுப்பதாகச் சொல்லி கருங் குரங்குத் தோற்றமளித்து, தன்னைக் கண்டு உலகு நகைக்க வைத்த திருமாலை ஆத்திரத்துடன் நாரதர் சபித்தல்: விஷ்ணு ரிஷி சாபத்தை அங்கீகரித்தல்; நாரதர் ஞானோதயம்; கர்வ பங்கம்.

இந்நாரதர் சாபம் தான் சீதையின் பிரிவுக்குக் காரண மாக அமைகிறது.

கதை படிக்கப் படிக்கத் தெவிட்டவில்லை. போட்டி மனப் பான்மையில் பர்வதர் முகம் சுயம்வர மண்டபத்தில் கரடிபோல் தோன்ற வேண்டும் என்று திருமாலிடம் நாரதர் வரம் பெறுகிறார். அவ்வாறே நாரதர் முகம் கருங் குரங்கு போல் தோனறவேண்டும் என்று பர்வதர் வரம் பெறுகிறார். இருவரும் ஒருவர் மற்றொருவருக்குத் தெரி யாமல் வரம் பெற விஷ்ணுவிடம் வருகிறார்கள். குறும்புத் தனம் உள்ள விஷ்ணு இருவருக்கும் அவரவர் கோரியதைக் கொடுத்து விடுகிறார். இதையறியாத நாரதர் அவமானப் படுகிறார், ஆத்திரமடைகிறார், சபிக்கிறார். பிறகு உண்மை யறிந்து துடிக்கிறார். இக்கட்டங்களில் எல்லாம் துளஸியின் அதிசய, அபார கதாசிரியத் தன்மை வெளியாகிறது; உதாரணமாக

## தோஹா

"அசுர் ஸுரா, விஷ் சங்கர ஹி; ஆப் ரமா, மணி சாரு
ஸ்வாரத் ஸாதக், குடில் தும், ஸதா கபட ல்யவ
ஹாரு

## சௌபாயி

பரம ஸ்வதந்த்ர ந ஸிர் பர் கோயீ
பாவஹி மன் ஹிகர ஹி தும் ஸோயீ ;

## பொருள்

"நீ எப்போதுமே வஞ்சகன் ; சுயகாரியப் புலி ; கபடன் ; அசுரர்களுக்குக் கள்ளையும் சங்கரனுக்கு விஷத்தையும் கொடுத்துவிட்டு, நீ மட்டும் லட்சுமியையும், அழகிய கௌஸ்துப மணியையும் அடையவில்லையா ? உன்னைத் தட்டிக்கேட்க மேலதிகாரி கிடையாது. ஆகையால் மனம் போன போக்கெல்லாம் போவாய் ; ஏன் என்று கேட்பார் யார்" என்று பொங்கும் நாரத கோபம் கடைசியில் படீரென்று வெடிக்கிறது சாபமாக. குற்றச்சாட்டுகளை ஒன்றன்மேல் ஒன்ருக அடுக்கித் திட்டித் தீர்த்தபின் தன் இஷ்ட தெய்வத்தையே சபித்துவிடுகிறது நாரதரின் உணர்ச்சிப் பிரவாகம்.

பாருங்கள் :—

## சௌபாயி

பஞ்சேஹு மோஹி ஜவனி தர் தேஹா
ஸோய் தநு தரஹு ஸ்ராப் மம ஏஹா
கபி ஆக் ருதி தும் கினி ஹமாரி
கரிஹஹிம் கீஸ் ஸஹாய் துமாரீ

மம அபகார் கீன்தும் பாரீ
நாரி விரஹ தும் ஹோப் துகாரி

## பொருள்

"எந்த உருவெடுத்து வந்து (மனித ராஜ குமாரன்) என்னை வஞ்சித்தாயோ அதே உரு எடு! அது என் சாபம்! என்னைக் குரங்கு முகம் ஆக்கினாய் அல்லவா? குரங்குகளே உன் துணைவர்களாகக் கடவது. எனக்குத் தீங்கிழைத்தாயல்லவா? மனைவியைப் பிரிந்து நீ துடிக்கக் கடவது!"

தான் தோற்றுவிட்டால் மனம் என்னபாடு படுத்தி வைக்கிறது என்பதற்குச் சரியான சான்று!

பிறகு,

## ஸ்வாயம்பு மநு — சதருபா கதை

## மநு தம்பதி தவம்: திருமால் தரிசனம்

"உன்னைப் போலவே மைந்தன் வேண்டும்" என்று மநு பத்தினி வரம் வேண்டல். இதுதான் ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம், இரண்டுக்கும் காரணமாக அமைகிறது.

மநு தசரதர் ஆகவும், சதருபா கோசலையாகவும் திருமால், மகனாக, ராமனாகவும் பிறக்கிறார்கள்.

இக்கதையில் விஷ்ணு வர்ணனை பிரமாதம்!. கடல் வண்ணனை அப்படியே தெய்வீக சௌந்தர்யம் திகழக் கண்முன் நிறுத்துகிறார் கவி:—

## தோஹா

நீல ஸரோருஹ் நீல மணி நீல நீரதர் ஸ்யாம்
லாஜஹிம் தநு சோபா நிரகி கோடி கோடி
சத் காம்

## பொருள்

நீலத் தாமரை, நீல மணி, நீருண்ட மேகத்துக்கொப்பான சியாமள தேகம். உடல் வனப்பைக் கண்டு கோடிக் கோடி மன்மதர்கள் வெட்கி மயங்குவார்கள்.

## சௌபாயி

ஸரத் மயங்க் பதன் சபி ஸீவா
சாரு கபோல் சிபுக் தர் க்ரீவா
அதர் அருண் ரத் ஸுந்தர் நாஸா
விது கர நிகர விநிந்தக் ஹாஸா
கர் அம்புஜ் அம்பக் சபி நீகி
சித்வனி லலித் பாவ்தீ ஜிகீ
ப்ருகுடி மனோஜ் சாப் சபி ஹாரீ
திலக் லலாட் படல் துதி காரீ
குண்டல் மகர் மகுட் ஸிர் ப்ராஜா
குடில் கேஸ் ஜநு மதுப் ஸமாஜா
உர் ஸ்ரீவத்ஸ ருசிர வன மாலா
பதிக் ஹார் பூஷண் மணி ஜாலா
கேஹரி கந்தர் சாரு ஜனே உ
பாஹு வி பூஷண் ஸுந்தர் தேஉ
கரிகர ஸரிஸ ஸுபக் புஜதண்டா
கடி நிஷங்கர் ஸர் கோதண்டா

## பொருள்

சரத் கால சந்திரன் போன்ற தேக காந்தி, அழகிய கன்னம், அழகிய முகவாய், சங்கு போன்ற கழுத்து, சிவந்த உதடு, வெண்பற்கள், எடுப்பான மூக்கு, பரிபூரண சந்திரன் நிலவைப் பழிக்கும் புன் சிரிப்பு. அன்றலர்ந்த செந்தாமரை போன்ற கண்கள், மயக்கும் வனப்பு, மதனன் வில் போன்ற புருவம், நெற்றியில் பளபளக்கும் திலகம், காதுகளில் மகர குண்டலங்கள், தலையில் மகுடம், கருவண்டு போன்ற, சுருள் சுருளான சுழற்கற்றை, மார்பில் ஸ்ரீவத்ஸ மரு, வனமாலை, பதக்கம், முத்தாரம், நவரத்தின மாலைகள், கௌஸ்துபம், திண்டோள்களில் திகழும் பூணூல், கைகளில் கங்கணம், தோள்களில் தோள் வளை, யானை துதிக்கை போன்ற, முழந்தாள் வரை நீண்ட கைகள், இடுப்பில் அம்பறாத் தூணி, கையில் அம்பும் வளைந்த வில்லும்.

ஆக மநு பத்தினி முன் நிற்கிறான் மாலழகன். அத் தெய்வீக அழகில் மெய்மறந்துவிடுகிறாள் சதரூபா.

மற்றொரு கதை: கேகய தேசத்தரசன் பிரதாப பானுவைப்பற்றியது. பிரதாப பானு அரசாட்சி. திக் விஜயம், அறநெறி, செங்கோன்மை.

பிரதாப பானுவின் எதிரி கபட முனிவனாகி, அரசனை வஞ்சித்து அவனறியாமல் அந்தணர் மாமிசத்தை அந்தணர்களுக்கு விருந்தளிக்கச் செய்தல்; ஆகாச வாணியால் அதை யுணர்ந்த விருந்தினர் அவன் வேண்டுமென்றே அவ்விதம் செய்தான் எனக் கருதி, அரசன் குலம் அடியோடு நாசமாகும்படி சபித்தல், வஞ்சிக்கப்பட்ட அரசன் என்ன வேண்டியும் சாபத்தின் கடுமை தீராமை: இதையே எதிர்பார்த்திருந்த எதிரி, கபட முனிவனின் முற்றுகை,

வெற்றி. பிரதாப பானு குலம் அடியோடு அழிதல். அதே பிரதாப பானு அடுத்த பிறவியில் லங்காதிபதி ராவணனுகப் பிறத்தல்; தம்பி அரிமர்த்தனன் கும்பகருணன் ஆகவும், தருமருசி என்னும் அமைச்சன் விஷ்ணு பக்தன் விபீஷணன் ஆகவும் பிறத்தல்; இவை யாவும் தொடர்ச்சியாக வர்ணிக்கப்படுகின்றன; இக்கதையில் கபட சங்யாஸியின் சூழ்ச்சியும் பேச்சும் வெகு அருமையாக அமைந்துள்ளன.

அதன் பிறகு, ராவணன் தவம், குபேர விஜயம், லங்கா பிரவேசம், தேவ-விஜயம் முதலியன; வால்மீகி உத்தர காண்டத்தில் வர்ணிப்பதை, விவரிப்பதை, பால காண்டத் தொடக்கத்திலேயே கூறிவிடுகிருர் துளஸி. ராவணன் ராஜ்ய பாரம் கொடுங்கோலாட்சியாக மாறுவதை விவரித்து விஷ்ணு பூமியில் உதிக்க வேண்டியதின் அவசியத்தைத் தெளிவாக்குகிருர். அதன் பிறகுதான் தேவர்கள் பாற்கடல் சென்று திருமாலே வேண்டுகின்றனர். பிறகு ராமாவதாரம். இங்கு கொஞ்சம் கதைப் போக்கு வால்மீகத்திலிருந்து மாறுபடுகிறது. வால்மீகி ராமாயணத்தில் தேவர்கள் திருப்பாற்கடலுக்குச் செல்லவில்லே முறையிட. பிரும்மாவிடம்தான் முறையிட்டுக் கொண்டிருக்கிருர்கள். அச் சமயம் தற்செயலாக அச் சபைக்கு அச்சுதன் வருகிருர். உடனே அவரைப் பிடித்துக் கொள்ளுகிருர்கள் அமரர்கள். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்குகிருர் கமலாபதி. பிறகு ராமாவதாரம்.

ஆக,

ராமன் பிறப்புக் கூறுமுன், அதன் காரணத்தை விளக்க சாபச் சங்கிலித் தொடர் ஒன்று தயாரித்து, அதை மூலக் கதையுடன் இணைக்கிருர், துளஸி. இந்த சாபக்கதைகள் படிக்க நன்ருக இருப்பினும் அலுப்புத் தருகின்றன. அளவுக்கு மிஞ்சி வளருவதால். நிற்க.

அயோத்தி வர்ணனை, ராமாவதாரம் இவ்விரண்டுக்கும் நடுவில் இத்தனைக் கதைகளைக் கோக்கிறார் துளஸி. கம்பரும் வால்மீகியும் அப்படியல்ல; அயோத்தி புகழ், அரசு, வேள்வி, ராமர், பிறப்பு என்ற முறையில்தான் காவியம் அமைத்திருக்கிறார்கள். ஆக, இவ்விருவர்களிலும் அதிகம் வேறுபடுவது துளஸிதான். அதற்குக் காரணம் அவருடைய அதிசய மேதாவிலாசம்தான். இனி வரும் கட்டங்களில் கூட இவ்விதமே வேற்றுமைகள் காணப்படும். இதற்கு விளக்கம் துளஸி ஆரம்பத்தில் கூறியது போல வால்மீகி ராமாயணம் மட்டும் அன்றி வேறு பல புராணங்கள், வேதாகமங்கள், நூல்களில் இருந்து பல விஷயங்களை எடுத்துச் சேர்த்துக் கையாண்டிருப்பதுதான்.

உதாரணம் :—

| | |
|---|---|
| பார்வதி பரிணயம் : | பாகவத புராணம் |
| மநு தம்பதி வரம் : | பாகவத புராணம் |
| விஸ்வமோகினி கதை : | வேறொரு புராணம் |

ஆக, இப்படிக் கதம்பம் கோத்திருக்கிறார்.

## இது ஒரு புது முறை

துளஸி ஒரு சிறு கதை ஆசிரியர் என்று தொடக்கத்திலேயே கூறியுள்ளோம். கம்பரின் அற்புத நாடகப் பண்பும் வால்மீகியின் சரித்திராசிரியப் பண்பும் துளஸியிடம் குறைவு. ஆங்காங்கே இவை காணப்படுமாயினும் கதையின் கட்டுக் கோப்பும், அமைப்பும்தான் நம்மை இழுக்கின்றன.

எளிய, இனிய, தெள்ளிய நடையில் அரிய, பெரிய விஷயங்களையும் அகண்டாகாரத் தத்துவங்களையும் அடக்கி படிப்போர் பரவசமாகும்படி உபநிஷத், வேதாந்த

சாரத்தை உதிர்க்கும் துளஸி உண்மையிலேயே நம்மைப் பிரமிக்கவைக்கிருர்.

சௌபாயீ போன்ற சிறிய சந்தத்தில் பிரும்ம நிருபணம் செய்கிருர். வேத விளக்கம் செய்கிருர்; ஞான விரிவுரை செய்கிருர்; பக்தி முழக்கம் செய்கிருர்; முக்தித் தன்மையைப் பொழிகிருர்;

ஒரே ஒரு தோஹாவில் உலக நெறி முழுமையும் அடக்குகிருர். பாதி சௌபாயீ மூலம் பரத்துவ - நிருபணம் செய்கிருர். இந்த வல்லமையை பார்க்கும் போது துளஸியின் மேதையை வியப்பதைத் தவிர வாசகர்கள் வேரெுன்றும் செய்வதற்கில்லே.

சின்னஞ்சிறு சந்தங்கள், சிறுவர்களும் புரிந்து கொள்ளும் நடை, ஆவேசமற்ற அமைதியான நடை, ஆங்காரமற்ற சொல்லமைப்பு, அறிவு செறியும் சொற்கள், அன்பு கனிந்து பக்தி பொழியும் பாவம், ஆனுல் அண்ட பிண்ட சராசரத்தின் அகிலப்ரபஞ்சத்தின் ஸாரம் முழுவதும் நிறைந்த வாக்கியம், கடவுள் தன்மை என்னும் கடலே கால் தோஹாவில் காட்டும் திறமை.

ஆக்ரா கோட்டையில் ஓர் தம்பிடி அளவுள்ள ஓர் பச்சைக் கல் வெளிச் சுவரில், பால்கனியில், பதிக்கப் பட்டுள்ளது. இதன் சிறப்பு என்ன வென்ருல் எதிரிலுள்ள தாஜ்மகால் கட்டடம் முழுவதும் இதில் பிரதிபலிக்கிறது. அப்படியே விள்ளாமல், விரியாமல், அடியிலிருந்து முடிவு வரை, அஸ்திவாரத்திலிருந்து மேல் கும்பத் (விமானக் குமிழ்) வரை இதில் பளிச் சென்று விழுகிறது. இவ்வளவு சிறிய கல்லில் இவ்வளவு பிரும்மாண்டமான கட்டடம் எப்படித் தெரிகிறது என்றுதான் பிரமிக்கிரேும். அதன் அழகை விவரிக்க வாயில்லே. இந்தப் பச்சைக்கல்லின் வல்லமை துளஸியின் நடைக்கு இருக்கிறது.

அவர் கம்பரைப்போல ஆகாயத்தில் பறப்பதில்லை; பாதாளத்தைப் பெயர்ப்பதில்லை. வால்மீகியைப்போல் சமுத்திரத்தைக் குடைவதில்லை; சாஸ்திரங்களைக் கடைவதில்லை.

ஆயினும் பூமியில் ஓடும் ஆற்று நீர் போன்ற அவர் அவரது நடை ஈரேழு பதினாலு உலக விந்தைகளையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளது. ராம் சரித் மானஸே மிகவும் சிறிய நூல்தான். ஆனால் அது பொழியும் அமுதமோ கங்கை உற்பத்தி ஸ்தானத்தில் ஓர் பசு மாட்டின் வாயளவுதானே இருக்கிறாள். ஆனால் அவளது கீர்த்தியும் சக்தியும் சங்கரனையும் எதிர்க்கவல்லதல்லவா? அதே மாதிரிதான் ஸ்ரீ துளஸியின் நூல். இதன் மாண்பை வகுத்திட வல்லவன் யானோ!!

## இராவண அரசு

இரக்கம் என்பதற்ற இராவண அரசாட்சி கொடுங்கோலாட்சியாக மாறுகிறது. தேவர்கள் நல்லோர் துன்புறுத்தப்படுகின்றனர். பசுக்கள், பாமரர்கள், பாவமறியாதவர்கள் வதைக்கப்படுகின்றனர்.

## சௌபாயி

ஜேஹி ஜேஹி தேஸ், தேநு த்விஜ் பாவஹிம்
நகர், காஉ, புர் ஆகி லகாவஹிம

"எங்கெங்கு இடங்களில் எல்லாம் பசுக்கள், அந்தணர்கள் காணப்பட்டார்களோ அந்தந்த இடங்கள், கிராமங்கள், நகரங்களில் எல்லாம் தீ வைத்தனர் இராவணன் பணியாட்கள்.

மட்டு மரியாதை போய்விட்டது ; கட்டுப்பாடு சிதறியது ; தவம் பறந்தது ; அறிவு அழிந்தது; பக்தி பதுங்கியது ; வேதம், புராணம், வெறுத்து வீசியெறியப் பட்டன. அட்டூழியம் தலைவிரித்தாடியது. அதிகார வெறியும் இனத் திமிரும், செல்வச் செருக்கும், உடல் வலித் தருக்கும் பேயாட்டம் ஆடின. ஏழை, எளியவர், ஆன்றோர், சான்றோர், இன்னல்கள் பல சகித்து இடருற்றனர் இராவணனது இறுமாப்பு அரசாட்சியில்.

## சந்தஸ்

ஜப் ஜோக் விராகா தப் மக் பாகா
 ஸ்ரவன் ஸுனயி தஸ் ஸீஸா
ஆபுனி உடி தாவயீ ரஹை ந பாவயி
 தரி ஸப் காலயீ கீஸா
அஸ் ப்ரஷ்ட அசாரா பா ஸம்ஸாரா
 தர்ம ஸுனிய நஹிம்காநு
தேஹி பஹுவிதி த்ராஸயீ தே நிகாஸயீ
 ஜோ கஹ் வேத் — புராநு

## ஸோரடா

பரனி ந ஜாயி அநீதி, கோர் நிசாசர் ஜோ கரஹிம்
ஹிம்ஸா பர் அதி ப்ரீதி, தின் கே பாப்ஹி
 கௌன் மிதி

## சந்தஸ் — பொருள்

“ ‘இராவணன்’ என்ற பெயரைக் கேட்டதுமே ஜபம், தவம், யோகம், வைராக்கியம், வேள்வி யாவும் எடுத்தன ஓட்டம்.” அங்கு நிற்க இடமிருந்தால்தானே ? தானே பறந்துவிட்டன அறச் செயல்கள் !

நெறிமுறை தவறிக் கெட்டுவிட்டது இவ்விதம். யாவும் யாவரும் நீதி நெறி வழுவினர் மன்னன் எவ்வழி அவ்வழிதானே மக்களும். "அறம்" என்ற வார்த்தை யையே யாரும் மதிப்பதில்லை. காதில் போட்டுக்கொண் டால்தானே ? "யாரேனும் 'வேதம்' அல்லது 'புராணம்' என்று கூறிவிட்டால் வந்தது விபத்து! வகை வகையான ஆபத்து! அவர்கள் உடனே நாடு கடத்தப்பட்டனர், சித்திரவதை செய்யப்பட்டனர்".

"இம்"மென்றால் சிறைவாசம்! "ஏன்" என்றால் வனவாசம்தான்!

## ஸோரடா—பொருள்

"அரக்கர்கள் செய்த அநீதி வர்ணிக்கும் தரமல்ல; ஹிம்ஸையிலேயே அன்புகொண்டு சுவை கண்டவர்களின் பாவத்தின் தன்மையை அளவிடமுடியுமா?"
இதோ பாருங்கள், இவ்வரசாட்சியின் பான்மையை :-

## சௌபாயி

பாடே கல் பஹு சோர் ஜுவாரா
  ஜே லம்பட் பர்தன் பர தாரா
மானஹிம் மாது பிதா நஹிம் தேவா
  ஸாதுன் ஸன் கர்வாவஹி ஸேவா
ஜின் கே யஹ் ஆசரன் பவானீ
  தே ஜானஹு நிசிசர் ஸப் ப்ரானீ

## பொருள்

"கயவர், திருடர், சூதாடிகள், போக்கிரிகள், பிறர் பொருள் வவ்வுவோர், பிறன் மனை விழைவோர், தாய்,

தந்தை, தெய்வம் பேணுர், ஆன்றோர் பணிவிடை புரியார், ஆகிய இவர்களே மலிந்தனர். ஏ, பவானி, இவ்வித நடத்தையுடைய உயிர்ப் பிராணி யாராயினும் அவர்கள் தான் அரக்கர்கள், அசுரர்கள் என்று நீ அறிந்து கொள்;"

அரக்கர் யார் என்பதற்கு அருமையான விளக்கம்;

"சாதி அந்தணர்களேனும்
நுமர்களைப் பழிப்பராயின்
நொடிப்பதோ ரளவிலாங்கே
அவர்கள்தாம் புலையர்போலும்
அரங்கமா நகருளானே.

— என்கிருர் தொண்டரடிப்பொடியார்;

துளஸியும் தொண்டரும் ஒரே கருத்தைத்தான் விளக்குகிருர்கள்.

"ஸ தோவ மன்யந்தி ஹரி பரியான் கலா:"

"ஸத்துக்களாகிய ஹரி பக்தர்களை கயவர்கள் அவமதிப்பார்கள். இது புதுமையல்ல" என்கிறது பாகவதம்.

"செல்வம் வந்துற்றகாலை தெய்வமும் சிறிதும் பேணுர்
சொல்வதையறிந்து சொல்லார் சுற்றமும் துணையும் நோக்கார்
வெல்வதே கருமம் அல்லால்
வெம்பகை வலிதென்றெண்ணுர்
வல்வினை விளைவுமோரார்
மண்ணின்மேல் வாழுமாந்தர்"

— என்கிறது தமிழ் இலக்கியம்.

எவ்வளவு பொருள் பொதிந்த உண்மை;

இந்த "அறக் கொலை"யைக் கண்டு பூதேவி ஏங்கித் துடிக்கிருள். தனக்குத்தானே புலம்புகிருள் ;-

### சௌபாயி

கிரி, ஸரி, ஸிந்து, பார் நஹிம் மோஹி
ஜஸ் மோஹி கருஅ ஏக்பர த்ரோஹி

"மலை, நதி, கடல் இவையெல்லாம் எனக்குச் சுமையாக இல்லை. ஆனல் ஒரு துஷ்டனை, துரோகியைச் சுமப்பதுதான் கடினமாக இருக்கிறது ;"

பின் கயமை அரசுபுரிந்து ஆர்ப்பாட்டம் செய்வதைத் தாங்கவேண்டுமென்ருல் எத்தனை பாரம் என்று கற்பனை தான் செய்யவேண்டும் ; கணக்கிட முடியாது.

ஸகல தர்ம தேகயீ விபரீதா
கஹி ந ஸகயீ ராவன் பய பீதா

எல்லா அறமும் மறமாகித் தலைகீழாக நடப்பதைக் கண்ணுல் பார்த்தாலும் பூமி ராவண பயத்தினுல் நடுங்குகிருள். பசு உருவம் கொண்டு அமரர்களிடம் சென்று முறையிடுகிருள், அவர்களால் என்ன முடியும்? அவர்களே அடிமைகளாயிற்றே! ஆகவே,

### சந்தஸ்

ஸுர முனி கந்தர்வா மிலி கரி ஸர்வா
கே விரிஞ்சி கே லோகா
ஸங் கோதநு தாரீ பூமி பிசாரீ
பரம விகல் பய சோகா

"தேவர்கள், முனிவர்கள் கந்தர்வர்கள் அனைவரும் கூடி பிரும்மாவிடம் சென்றனர் முறையிட"

ஆனுல், விரிஞ்சியோ விரித்துவிட்டார் கையை நீள !

" பிரும்மா ஸப் ஜானு மன் அநுமானு
மோர் க சூ ந பஸாயீ

முறையீட்டைக் கேட்டுவிட்டு, எல்லாமுணர்ந்த பிரும்மா "என்னுல் ஒன்றும் செய்ய முடியாது" என்று யோசித்தார்.

ஜா கரி ஸதம் தாஸீ ஸோ அவி நாசீ
ஹம்ரேஉ தோர் ஸஹாயீ

"நீயும் நானும் யாருக்குத் தொண்டு பூண்டுள்ளோமோ அவன்தான் உனக்கும் எனக்கும் புகல்" என்ருர் பூமியைப் பார்த்து ;

எப்படி இருக்கிறது படைப்புக் கடவுளின் வலிமை? சீலே இல்லே என்று சிற்றப்பன் வீட்டுக்குப் போன கதை தான் ; வாய் வார்த்தையினுல் பூமியைத் தேற்ற முயன்ருர் பிரும்மா.

"பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணேயாமோ ?"

அவர் என்னதான் செய்வார்? முதலில் வரத்தை அள்ளிக் கொடுத்துவிட்டு விழிக்கிருர் !

அனேவரும் மகாநாடு கூடினர். "அடுத்தபடி என்ன செய்யலாம்" என்று கேள்வி எழுந்தது. சிலர் வைகுந்தம் போகலாம் என்றனர். சிலர் திருப்பாற்கடலில்தான் இருப்பார். அங்கு போகலாம் என்றனர்.

இங்கு பரமசிவன் ஓர் அழகிய அறிவுரை நிகழ்த்துகிருர்.

பரமசிவன் கூறுகிறார் :—

"ஏ பவானி, அந்தக் கூட்டத்தில் நானும் இருந்தேன். நான் ஒரு யோசனை கூறினேன் :—

## சௌபாயி

ஹரி வ்யாபக் ஸர்வத்ர ஸமாநா
ப்ரேம் தே பிரகட் ஹோஹிம் மைம் ஜாநா
தேஸ், கால், திஸி, விதிஸஹு மாஹிம்
கஹஹு ஸோ கஹாம் ஜஹாம் பிரபு நாஹிம்
அக் ஜக்மய் ஸப் ரஹித் விராகீ
ப்ரேம் தே ப்ரபு ப்ரகடயீ ஜிமி ஆகீ
மோர் வசன் ஸப் கே மன் மாநா
ஸாது, ஸாது கரி பிரும்ம பகாநா

## பொருள்

"ஹரி எங்கும், எப்போதும் இடைவிடாது நிறைந்திருக்கிறார். இடம், நேரம், திக்கு, திசை எங்குதான் அவர் இல்லை? சொல்லுங்கள், பார்க்கலாம்? சராசர மய மானவர் ஹரி; விருப்பு வெறுப்பற்றவர் ஹரி; அன்பினால் உடனே வெளித் தோன்றுவார் ஹரி. நெருப்புத் தோன்றுவதுபோல" என்றேன். "சபாஷ், சபாஷ், சபாஷ்" என்றார் சதுமுகன், அனைவருக்கும் என் சொல் பிடித்துவிட்டது.

கண்களில் நீர் தளும்ப, மெய்ம் மயிர் பொடிப்ப, இதயம் கனிந்து பிரும்மா துதி செய்யத் தொடங்கினார்.

விறகில் தீயினன் பாலில்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே;

— என்று சைவ ஆச்சாரியாரும்,

அன்பிற் சிறந்ததோர் பூசனை யார்கணுண்டே என்று கம்பரும் கூறுவது மெய்ம் மொழியன்றோ? ஆதலால்,

" கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார் பால் விரவாடும் பெருமானை "

— பிரும்மா துதிக்க ஆரம்பித்தார்.

இங்கு துளஸியின் பக்தி உணர்ச்சி கரை புரண்டு ஓடுகிறது. இதில் தொனிக்கும் தீன பாவம் (புகல் வேண்டி முறையிடும் உணர்வு) பொங்குகிறது.

பாருங்கள் :—

## பிரும்ம ஸ்துதி

### சந்தஸ்

ஜய ஜய ஸுர நாயக் ஜனசுக் தாயக்
பிரனத் பால பகவந்தா
கோ த்விஜ ஹித்காரீ ஜய அஸுராரீ
ஸிந்து ஸுதா ப்ரிய கந்தா
பாலன் ஸுர் தர்னீ அத்புத் கர்னீ
மர்ம ந ஜானயீ கோயீ
ஜோ ஸகஜ் கிருபாளா தீன தயாளா
கரஉ அநுக்ரஹ் ஸோயீ
ஜய ஜய அவி நாசீ ஸப் கட் வாஸீ
வியாபக் பரமா நந்தா
அவிகத கோதீ தம் சரித புனீதம்
மாயா ர்ஹித் முகுந்தா
ஜேஹி லாகி விராகீ அதி அநுராகீ
விகத் மோஹ் முனி ப்ருந்தா
நிசி வாஸர் த்யாவஹிம் குன் கன் காவஹிம்
ஜயதி ஸச்சிதானந்தா

ஜேஹி ஸ்ருஷ்டி உபாயீ த்ரிவித் பனுயீ
 ஸங்க் ஸஹாய் ந தூஜா
ஸோ கரஉ அகாரீ சிந்த் ஹமாரீ
 ஜானிய பத்தி ந பூஜா
ஜோ பவ பய கஞ்ஜன் முனி மன ரஞ்ஜன்
 கஞ்ஜன் விபதி வருதா
மன் வச் க்ரம வானீ சாடி ஸயானீ
 சரண் ஸகல் ஸுர ஜுதா
சாரத் ஸ்ருதி ஸேஷா ருஷய் அசேஷா
 ஜா கஹும் கோஉ நஹிம் ஜானு
ஜேஹி தீன பியாரே வேத் புகாரே
 த்ரவஉ ஸோ ஸ்ரீ பகவானு
பவ வாரிதி மந்தர் ஸப் வித் ஸுந்தர்
 குண மந்திர் ஸுக புஞ்ஜா
முனி ஸித்த ஸகல ஸுர் பர்ம பயாதுர்
 நமத் நாத் பத கஞ்ஜா

## பிரும்மா துதி — பொருள்

ஏ தேவ தேவா, நீ வாழ்க, வாழ்க, மக்களுக்கு வாழ் வளிப்போனே, வணங்குவோரைக் காப்போனே, பசு பிரா மணர்களுக்கு நன்மை செய்வோனே, அரக்கரை மாய்ப் போனே, பாற்கடல் திருமணவாளா, பூமா தேவியைக் காக்கவேண்டும் ; தேவரைக் காக்கவேண்டும்.

உன் விளையாடலை யார் அறிவார்? இயற்கையாகவே இளகிய இதயம் உடையோனே, ஏழைகளிடம் இரக்க முள்ள வள்ளலே; கருணை செய் ; காத்தருள்.

என்றென்றும் அழியாத ஒருவா; எங்கும் நிறைந் துள்ள இறைவா; இன்பக் கடலே; புலனுக்கும் அறிவுக்கும் எட்டாத புருடோத்தமா ; புண்ணிய சரிதா ; மாயை

இலாதோனே ; முத்தியளிப்போனே ; வைராக்கிய சாலிகளுக்கு வைகுந்தம் தருவோனே; "சித், ஸத், ஆனந்தம் என்னும் மூவுருவாகிய மோகனு" என முனிவர்கள் துதிக்க நின்றோனே; துணையாருமின்றி, ஒருவர் உதவி இன்றி உலகெலாம் படைத்தோனே; பாவத்தை அழிப்போனே; எங்கள் மனக்குறையைத் தீராய்; சிந்தையைத் தீராய்;

பக்தி பழகோம்; பூஜையறியோம் யாம்; ஏ பிறவிக் கடல் கடக்கும் பேறே; தவசியர் வணங்கும் ஏறே; இடரைக் களையும் சுடரே; மனம், வாக்கு, மெய் இம்மூன்றிலும் கள்ளங் கபடமின்றி உன்னை வணங்குகின்றோம்; நின்னை சரணடைந்தோம்; நீயே எமக்குப் புகல்; சாரதா எனும் சரஸ்வதி, வேதங்கள், ஆதிசேடன் இவர்களாலும் அறிய ஒண்ணுத பெருமை உடையோய்; "ஏழை பங்காளா; என்று நான் மறை கதறும் பெரியோனே; அருள் தாராய்; பிறவிக் கடலைக் கடையும் மந்தர மத்தே; அழகிய மணவாளா: அற்புத குணாளா; முனிவர். தேவர், கந்தருவர், சித்தர் பூமி யாவரும் உன் கழலே புகல் எனக் கதறுகிறோம்; கருணை புரி கடல் வண்ணு;

இத்துதியில் கனிந்தொழுகும் இதயம் சுடர் விடுகிறது. இந்திய இலக்கியத்தில், எந்த இந்திய மொழியிலும் இப் பிரும்ம ஸ்துதி அருமையாக அமைந்துவிடுகிறது. துதி பாடலில் உண்மையிலேயே நம்மை யாரும் மிஞ்ச முடியாது, ரகு வம்சத்தில் இதே கட்டத்தில், தேவர்கள் :-

ஸர்வஞ்ஞஸ்த்வம் அவிஞ்ஞாத :
ஸர்வயோனிஸ்த் வமாத்மபூ;

என்று தொடங்குவதாகக் கம்பீரமான நடையில் காளிதாஸன் வர்ணிப்பது இலக்கிய உலகுக்கே ஓர் சுடரொளி மணிச் செல்வம் ஆக அமைந்துள்ளது. இங்கு

துளஸியோ எரியும் கர்ப்பூரம் போல; மெழுகுவர்த்திபோல மெல்ல, மெல்லக் கனிந்து, கனிந்து உருகி, உருகிக் கரைந்தே விடுகிருர் கடவுள் தன்மையில்;

இத்துதியைக் கேட்டதும் ஹரி அசரீர வாணியாக அபய தானம் தருகிருர், தான் தசரத குமாரனுக அவதரித்து ராவண சம்ஹாரம் செய்வதாக;

வால்மீகியில் அப்படி அல்ல.

தசரதர் "பிள்ளை வேள்வியில்" பாகம் பெற வரும் தேவர்கள் ராவணன் கொடுங்கோன்மை பற்றிப் பிரும்மா விடம் முறையிட, அவரோ தானே வரமீந்துவிட்டுத் தானே அழிக்கலாகாது ஆகையால் "வழி" யோஜிக்கிருர்.

"மானிட இனத்தைத் துச்சமாக மதித்து, அவர்கள் கையால் சாவு கூடாது" என்று வரம் வேண்டவில்லை. ஆதலால் ஓர் மானிடனே அழிக்க முடியும். வேறு வகை யில் அவனுக்குச் சாவு கிடையாது! என்கிருர்.

இச்சமயத்தில் தான் அங்கே
மகாத்யுதி:

சங்கசகர கதா பாணி: பீத வாஸா: ஜகத் பதி:

ஒளி சுடரும் மேனியன், சங்கு, சக்கரம், கதை மிளிரும் கையன், மஞ்சட் பட்டணிந்த அய்யன், உலக நாயகன் மாதவன் வருகிருர்.
பிடித்தது ஆபத்து பிரமன் தந்தைக்கு:

"மாதவா, மானிடனுகப் போ;" என்று கட்டளை இடுகிருர்கள் உம்பர்கள்.

த்வாம் நியோக்ஷ்யா மஹே விஷ்ணே;
"உன்னை நியமித்திருக்கிருேம் விஷ்ணுவே;"

இவர்கள் மகா நாட்டில் விஷ்ணு ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். ஆகவே உத்தரவு பிறக்கிறது. அன்புக் கட்டளைதான் ; ஆனால் அறக் கட்டளை. மீற முடியுமா ஜனாதிபதியினால் ? பொது ஜன ஊழியன் கதியே இப்படித்தான் ;

வால்மீகியின் விஷ்ணு ஒரு சர்வ சுதந்திர ஜன நாயகக் குடியரசுத் தலைவர். துளஸியின் விஷ்ணு ஏக சக்ராதிபதி வால்மீகியின் விஷ்ணு பொது ஜன விருப்பத்துக்கு இணங்குகிறார் : பணிகிறார். துளஸியின் விஷ்ணுவோ பாற்கடல் பஞ்சணையின் மேல் இருந்தபடி பிராது கேட்டு, குறை தீர்ப்பதாக உறுதி மொழி தருகிறார் "அஞ்சேல்" என்று அபயம் தருகிறார் அங்கு தீர்மானம், உத்தரவு, ஏற்பாடு, திட்டம் எல்லாம் தேவர் மகாநாடு பிறப்பிக்கிறது. இங்கோ எல்லாம் விஷ்ணுவே சொல்கிறார். அந்த விஷ்ணு சுதந்திர சுவர்க்க ஜனாதிபதி. இந்த விஷ்ணுவோ சுவர்க்க ஸாம்ராஜ்ய ஸம்ராட்.

கம்பரின் விஷ்ணுவோ துதி காதில் விழுந்தவுடன் கருடன் மேல் பறந்து வருகிறார்.

திரைகெழு பயோததி துயிலுந் தெய்வவான்
மரகத மலையினை வழுத்தி நெஞ்சினால்
கரகமலங் குவித் திருந்த காலையில்
எப்படி வருகிறார் எமதய்யன்?
கரு முகில் தாமரைக்காடு பூத்துநீடு
இருசுடர் இருபுறத் தேந்தி ஏடவிழ்
திருவொடும் பொலிய ஓர் செம்பொற் குன்றின் மேல்
வருவபோல் கலுழன் மேல் வந்து தோன்றினான்.

அவரைக் கண்டதுமே அளவற்ற ஆனந்தத்தினல் 'ஆடினர், பாடினர், ஓடினர், பாதமலர் சூடினர்'' தேவர்கள். சரியான ஆள் சரியான சந்தர்ப்பத்தில் வந்து விட்டார் அல்லவா? அத்தனை நம்பிக்கை; சரசுவதி காந்தனும் உமா காந்தனும் ஓடிக் கைலாகு கொடுத்து அழைத்து வருகின்றனர். பிறகு முறையீட்டுப் படலம்தான்.

கம்பரில் தேவர்கள் முதலில் உமாநாயகனிடம் முறையிடுகிருர்கள். அவரோ, ''இனி நான் போர் புரிவது இல்லை'' என்று சபதம் செய்திருக்கிருர். பிரும்மா முதலானோர் ''இனி யாது செய்வது'' என்று வருந்திக் கொண்டிருக்கும்போது வருகிருர் கருடவாகனர்.

''வந்தாரே மேகவன்னர், வடிவுடன்
வந்தாரே ஞானக்கண்ணர்.''

உமாபதியும் வாணிரமணனும் ''சுடு தொழில் அரக்கர் கொலையரக்கர், '' இனி ஒரு வினாடி தாமதித்தாலும்

''நுங்குவர் உலகை ஓர் நொடியில் என்றனர்; ''
''அப்படியே விழுங்கி விடுவார்களாம்; ''

அதைக் கேட்ட விஷ்ணு பிறகு தன் ஏற்பாட்டைக் கூறுகிருர். கம்பரின் விஷ்ணுவும் துளஸியின் விஷ்ணுவைப் போல் ஏக சக்ராதிபதி தான்; எல்லா அதிகாரமும், ஆணையும் உரிமையும் அவர் கையில் அதற்குத் தகுந்த பொறுப்பும்தான்

இவர்கள் ஸம்ராட் விஷ்ணு கருணைக்கடல்; வர வள்ளல். ஆயினும் ராஜாதிராஜன்; ரங்கராஜன் வரதராஜன்; தேவாதி தேவன், ஷா—இன்—ஷா; all in all

வால்மீகியின் விஷ்ணு ராஜாதி ராஜன்; தேவாதி தேவன் ஆயினும் தேவர்கள் ஊழியன் ; ஜன ஸேவகன் பொதுநலப் பாதுகாவலன் ; மக்கள், மன்னர் அனைவர்க்கும் தலைவன் ஆனாலும் ஏழைகள் .ஊழியன் எளியவர் பங்காளன் ; அறக்காவலன் ; அவர்களுக்கு அவரை "ஏவும் உரிமை" உண்டு

வால்மீகியின் ஆதர்சத் தலைவன் மனப்பான்மையும் கம்பர், துளஸியின் மனப்பான்மையும் இவ்விஷ்ணுத் தன்மையில் நன்கு விளங்குகிறது

## இராமாவதாரம்

இவ்விதம் இடரைக் களையும் பொருட்டு உம்பர்களால் அனுப்பப்பட்ட இறைவன், கடல் அலை துயிலும் கரிய முகில். தன் அம்சங்களுடன் அவதரிக்கத் திருவுளங் கொள்கிறான்.

அப்போது தசரதன் அயோத்தியில் அரசு புரிந்து வருகிறான்.

இவ்வற மன்னனின் அரசாட்சி கம்பரிலும் வால்மீகியிலும் விரிவாகவும், துளஸியில் வெகு சுருக்கமாகவும் காணப்படுகிறது.

## சௌபாயீ

அவத் புரீ ரகு குல மனி ராஊ
வேத் விதித் தேஹி தசரத் நாஊ
தர்ம துரந்தர், குண நிதி, ஞானீ
ஹ்ருதய் பக்தி, மதி சாரங்க பானீ

## பொருள்

அயோத்திமா நகரில், தசரதன் என்று பெயர் கொண்ட, வேதங்களில் புகழ் பெற்ற, ரகு குல சிரோமணி யான ஓர் அரசர் இருந்தார். அவர் அறவள்ளல் ஆகவும், நற்குண நிதியாகவும், மிகுந்த அறிவாளியாகவும் விளங்கி வந்தார்.

என்று ஒரே சௌபாயீ மூலம் தசரதரை அறிமுகப் படுத்துகிறார் ஸ்ரீ துளஸி

வால்மீகியோ எனில் :—

தஸ்யாம் புர்யாம் அயோத்யாயாம்
வேதவித் ஸத்ய ஸங்கரக :
தீர்க்க தர்சீ மகா தேஜா :
பௌர—ஜான—பல—ப்ரிய :
இக்ஷ்வாகூணாம் அதிர தோ யஜ்வா தர்ம ரதோவசீ
மஹர்ஷி கல்போ ராஜர் ஷீ; த்ரிஷு லோகேஷு
விஸ்ருத :
பலவான் நிஹதாமித்ரோ மித்ரவான்
விஜிதேந்த்ரிய :
தனைஸ்ச ஸ்ஞ்ஜயைஸ் சான்யை : சக்ர
வைஸ்ரவணோபம :
யதா மனுர் மகா தேஜா லோகஸ்ய பரிரக்ஷிதா
ததா தசரதோ ராஜா வஸன் ஜகத் அபாலயத்

என்று எடுத்த எடுப்பிலேயே அரசனாகிய தசரதனின் குணாதிசயங்களை வர்ணிககத் தொடங்குகிறார். அவர் அர சமைப்பு, அரசாட்சிமுறை, அமைச்சு, குடிமக்கள் வாழ்க்கை முறை, சமூக, அரசியல் கோட்பாடுகள் யாவும்

இதே மாதிரி விரிவாக வர்ணிக்கப்படுகின்றன. இவரையே பெரும்பாலும் பின்பற்றும் கம்பரும் விரிவாக, அழகாக அரசாட்சிப்படலம் சித்தரித்திருக்கிருர்,

## ஸ்ரீ சுலோகங்களின் பொருள்

அந்த அயோத்யா புரியில், மறை வல்லவரும்; உண்மை பிறழாதவரும், பின் வருவது உணர்பவரும், ஒளி நிறைந்தவரும், நகர, கிராமக்குடி மக்களின் அன்புக்கும், அபிமானத்துக்கும் பாத்திரமானவரும், இக்ஷ்வாகு வம்ச வீரர்களுள் மகா வில்லாளியும். வேள்வி செய்தவரும், அறம் செய அனவரதமும் விரும்புவரும், புலனைக் காவலில் வைத்தவரும், மகா ரிஷிகளுக்கு ஒப்பானவரும், அரச—முனிவரும் (ராஜ ரிஷி), மூவுலகிலும் புகழ் பெற்றவரும், பலம பொருந்தியவரும், எதிரிகளை அழித்தவரும் நண்பர்கள் நிரம்பியவரும், ஐம்பொறி வென்றவரும்; செல்வச் சிறப்பிஞல் இந்திரனுக்கும் குபேரனுக்கும் இணையானவரும்; மநு என்னும் அரசர் உலகைப் புரப்பதில் எப்படி வல்லவரோ அப்படிக் காக்கும் வல்லமை பொருந்தியவருமான தசரதன் என்ற பெயர் கொண்ட அரசர் அரசாட்சி புரிந்து வந்தார்.

பின்னர்

மன்னன் தனக்கு மகப் பேறு இன்மையால் மனம் வருந்துவதையும், பிறகு "பிள்ளை வேள்வி" செய்வதையும் மூவரும் விவரிக்கிருர்கள்.

"மம லாலப்ய மானஸ்ய புத்ரார்த்தம் நாஸ்திவை
சுகம்"

—பிள்ளைப் பேறின்றி துடிக்கும் எனக்கு இன்பம்
என்பதே இல்லை.

வா. ரா.

ஏக்பார் பூபதி மன் மாகிம்
பை நலானி மோரே ஸுத் நாஹிம்
—ஓர்முறை தனக்கு மகப் பேறின்மை குறித்து
மன்னருக்கு
மிகுந்த மன வாட்ட முண்டாயிற்று.
—துளஸிராமாயணம்
என்று தசரதர் மனக்குறை விவரிக்கப்படுகிறது.

பிள்ளை வேள்வியும் அதற்கு முன் செய்யப்படும் "புனிதக் குதிரை வேள்வி" (அசுவ மேத யாகம்) யும் வால்மீகியில் மிகப் பிரமாதமாக வர்ணிக்கப்படுகின்றன. நான்கு ஸர்க்கங்கள் மந்திராலோசனை, நான்கு ஸர்க்கங்கள்வேள்வி வர்ணனை. வால்மீகத்தில் காணப்படுகின்றன. இத்தனை விஷயங்களையும், சம்பவங்களையும் இரண்டே சௌபாயீகள் மூலம் கூறிவிடுகிறார் ஸ்ரீ துளஸி.

சுருங்கச் சொல்வதில் துளஸிக்கு உவமை கிடையாது

வேள்வி நெருப்பில் ஒரு தெய்வீக புருடன் கையில் பாயஸத்துடன் தோன்றுகிறான். இது வால்மீகத்தில்:—

ததோ வை யஜமானஸ்ய பாவகாத் அதுலப்ரபம்
ப்ராதுர் பூதம் மகத் பூதம் மகா வீர்யம்
மகா பலம்
க்ருஷ்ணம் ரக்தாம் பரதரம் ரக்தாஸ்யம்
துந்துபிஸ்வனம்
ஸ்னிக்த ஹர்யக்ஷ தநுஜ ச்மஸ்ரு ப்ரவர
மூர்த்தஜம்
சுப லக்ஷண ஸம்பன்னம் திவ்யா பரண—
பூஉஷிதம்
சைல ச்ருங்க ஸமுத் ஸேதம் திருப்த சார்தூல
—விக்ரமம்

திவாகர ஸமாகாரம் தீப்தானல—சிகோபமம்
தப்த ஜாம்பூநத மயீம் ராஜதாந்த பரித் சதாம்
திவ்ய பாயஸ ஸம்பூர்ணும் பாத்ரீம் பத்னீமிவ ப்ரியாம்
ப்ரகிருஹ்ய விபுலாம் தோர்ப்யாம் ஸ்வயம் மாயா மயீமிவ

## பொருள்

பிறகு வேள்வி செய்யப்படும் நெருப்பில் இருந்து மிகுந்த ஒளி பொருந்திய வடிவம் உடையதும் மிகுந்த ஆண்மை நிறைந்ததும், மிக்க ஆற்றல் கொண்டதும், கரு நிறமுடையதும், செம்பட்டு உடுத்தியும், சிவந்த முகம் உடையதும், முரசு போல் ஒலிக்கும் குரலுடையதும், சிங்கப்பிடரி போன்ற மீசையும் தலைமயிரும் உடையதும் அழகானதும். ஆபரணங்கள் அணிந்ததும், மலைக்கொப்பானதும் புலி போன்ற வீரம், உள்ளதும் சூரியன்போல் ஜ்வலிப்பதும், எரி போன்ற திருமேனி ஒளி உடையதும் ;

வெள்ளிப்பிடி போட்ட தங்கக் கிண்ணத்தில் தேவாமுதம் போன்ற பாயஸத்தை தன் வலிமை பொருந்திய கைகளில் ஏந்தி நிற்பது மாகிய ஓர் தெய்வீக புருட உருவம் வெளிப்பட்டது.

கம்பரும் இப்படியே விவரிக்கிருர். ஆனுல் துளஸியோ ஒரே வரியில் முடித்துவிடுகிருர்.

பக்தி ஸஹித் முனி ஆஹுதி தீனே
பிரகடே அகினி சரு கர் லீனே

பத்தியுடன் சிருங்கிரிஷி ஆஹுதி செய்தார். உடனே அக்கினி கையில் பாயஸத்துடன் தோன்றினுர்.

பிறகு ராமர் பிறப்பு வழக்கம் போல் பக்திப் பெருக்குடன் சித்தரிக்கப்படுகிறது.

இவ்வுணர்ச்சிப் பெருக்கே கௌசலையின் தாய்மையில் உருவெடுத்து, துதியாக வெளி வருகிறது. இங்கு துளஸி ஒன்றிவிட்ட உணர்வினால் தானே புயல்வண்ணனைப் பயந்த புனிதவதி கௌசலையாக மாறி விடுகிறார். அவ்வற்புத உணர்வின் விளைவே இந்தக் கற்பனையையும் முறியடிக்கும் கடல் மடை திறந்த துதி.

பகவான் இராமகிருஷ்ணர் தன்னை அனுமானாகப் பாவித்து மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து ராம ஜபம் செய்வாராம். புடவை யணிந்து, வளையல் தரித்து ராதை யாகி கிருஷ்ணன் காதலில் மூழ்குவாராம். இவ்வித பாவனையேஇங்கு துளஸியை கௌசலையாக மாற்றுகிறது பெரியாழ்வாரை யசோதையாகவும், குலசேகர ஆழ்வாரை தேவகியாகவும் மாற்றுவது போல. இவ்வித பாவனை பாத்திரத்தோடு ஒன்றிதானே அதுவாகிப் பேசும் உணர்ச்சி, சாதாரணமானது அல்ல; சாமானியத்தில் வருவதும் அல்ல.

## கோசலை துதி

பே பிரகட் க்ருபாளா தீன தயாளா
  கௌசல்யா ஹித காரீ
ஹர்ஷித் மஹ்தாரீ முனி மன் ஹாரீ
  அத் புத் ருப் நிஹாரீ
லோசன் அபிராமா தநு கன ச்யாமா
  நிஜ் ஆயுத் புஜ் சாரீ
பூஷன வன மாலா நயன் விசாலா
  சோபா ஸிந்து கராரீ
கஹ் துயி கர் ஜோரீ அஸ்துதி தோரீ
  கேஹி விதி கரஹூம் அனந்தா

மாயா, குன், ஞானதீத் அமானு
   வேத் புரான் பனந்தா
கருணா—ஸுக—ஸாகர், ஸப் குன் ஆகர்
   ஜேஹி காவஹிம் ஸ்ருதி ஸந்தா
ஸோ மம ஹித் லாகி ஜன் அநுராகி
   பயஉ ப்ரகட் ஸ்ரீ கந்தா
பிரும்மாண்ட நிகாயா நிர்மித் மாயா
   ரோம் ரோம் பிரதி வேத் கஹை
மம உர் ஸோ பாஸீ யஹ் உபஹாஸீ
   ஸுனத் தீர் மதி திர் நரஹை
உபஜா ஜப் ஞானு ப்ரபு முஸ்க்யானு
   சரித் பஹுத் விதி கீன் சஹை
கஹி கதா ஸுகாயீ மாது புஜாயீ
   ஜேஹி ப்ரகார் ஸுத் ப்ரேம் லஹை
மாதா புனி போலீ ஸோ மதி டோலீ
   தஜஹு தாத் யஹ் ரூபா
கீஜை சிசு லீலா அதி ப்ரிய சீலா
   யஹ் ஸுக் பரம அநூபா
ஸுனி வசன் ஸுஜானு ரோதன் டானு
   ஹோய் பாலக் ஸுர் பூபா
யஹ் சரித் ஜே காவஹிம் ஹரிபத் பாவஹிம்
   தே ந பரஹிம் பவ-கூபா.

இந்தத் துதி ராம-பக்தி என்னும் சொல்லுக்கே ஓர் அதிசய இலக்கணம்; அபூர்வ எடுத்துக் காட்டு.

ஸ்ரீ ராமாநுஜரின் பக்தி பரம்பரையில் ஸ்ரீ துளஸி ஓர் மங்காத மாணிக்கம் வட இந்தியாவில், ராம—பக்தி—சாகையில் நிர்க்குணத் தன்மைக்கு கபீர் தாஸரும் சகுணத் தன்மைக்கு துளஸி தாஸரும் சுடர்விட்டொளிரும் சுந்தர கலங்கரை விளக்கங்கள் ஆவார்கள்.

பரப்பிரும்மத்தின் நிர்க்குணத் தன்மையில் ராமனைக் கண்டார் கபீர்; பரம்பொருளின் பழுதற்ற சகுணத் தன்மையில் ராமனைக் கண்டார் துளஸி. டம்ப, வஞ்ச உலகையும், அதன் அர்த்த மற்ற மதச் சடங்குகளையும் இன வெறி, மத வெறி, தன வெறிகளையும் வீண் பாசாங்கு, பொய், மதப் பூசல், விவேக மற்ற கடவுள் வாதம், வீண் தர்க்கம், வாய்ச் சவடால், புருடா, புரட்டு, குருட்டு நம்பிக்கை, வரட்டு ஜம்பம், முரட்டு விரதம், திருட்டு நடவடிக்கை இவைகளைக்கண்டு கனல் எனச் சீறி அடியோடு வெறுக்கும் கபீர் ராமனில் பிரும்மத்தைக் கண்டு, பிரும்மத்தை ராமனாகக் கண்டு மகிழ்கிறார். ரஸிக்கிறார் ; மெய் மறக்கிறார். அவரைப் போலவே இவ்வஞ்யான உலகை வெறுத்து நீக்கிய துறவி துளஸி ராமனது வடிவத்தில், தெய்வீக எழிலில், குண சௌந்தரியத்தில், கருணை வெள்ளத்தில் மூழ்கிவிடுகிறார்.

ஸ்ரீ ஸுர் தாஸ் புல்லாங்குழல் ஊதும் பசும் குழவி கண்ணனிடம் எப்படி ஈடுபட்டு அவன் பால-லீலைகளில் தன்னையே பறி கொடுத்து விடுகிறாரோ அப்படி, துளஸி தாஸர் ராமனது ரஞ்சகத் தன்மையில், நன்னடத்தையில் நற்குணங்களில் அவனது பரிபூரண வியக்தித்வத்தில் (Personality) தன்னையே மறந்து விடுகிறார் அம்மெய்ம் மறந்த தன்மையே, பல பல வடிவங்கள் எடுத்து இந்தியின் சுகந்தமாகக் கமழ்கிறது ; "அவதி"யின் நவ ரஸமாக வளர்கிறது. இந்திய இலக்கியத்தின் என்றும் வாடாத எழில் மிகுசெந்தாமரையாக மலர்கிறது. வற்றாத பக்திப் பாற்கடலாகப் பொங்குகிறது ; வண்ணக் களஞ்சிய மாக விளங்குகிறது. துளஸியின் இந்த வீணையில் இருந்து எழும்பும் இதயஉணர்ச்சியின் இன்னிசை நாதம் அலைஅலை

யாகப் பாய்ந்து வந்து மோதுகிறது. அவ்வரிய பெரிய ஆரவார அலைகளில் ஒன்றுதான் இக்கோசலை துதி.

## பால-லீலை

நம் இந்திய இலக்கியம் குழந்தை இன்பத்தை வர்ணிப்பதில் நிகரற்றது. மக்கட்குலத்துக்கு, மாசற்ற பிள்ளைமையின் கள்ளங் கபடற்ற தன்மையை, ஆடல் பாடல்களை எடுத்துக்காட்டுவதில் ஸ்ரீமத் பாகவதம் தலை சிறந்து விளங்குகிறது, இதில் வரும் க்ருஷ்ண லீலைதான் பின்னால் வந்த பல நூல்களுக்கு அழியாத வழிகாட்டியாக, நிலைக்களனாக விளங்குகிறது. ஸ்ரீ ஜய தேவரின் கீத கோவிந்தம், லீலா சுகரின் கிருஷ்ண கர்ணாம்ருதம், வித்யாபதியின் பதாவளி. ஸூர் தாசரின் "ஸூர் ஸாகர்" பெரியாழ்வாரின் பாசுரங்கள், நாராயண பட்டரின் "நாராயணீயம்" முதலிய இனிய எளிய, தெவிட்டாத நூல்கள் யாவும் வியாஸ பாகவதத்தின் கிருஷ்ண லீலையை அடிப்படையாகக் கொண்டு, பக்தியில் மலர்ந்து, கற்பனையில் சுரந்து, இதயத்தில் கனிந்து, வாக்கில் பழுத்த நறும் கனிகள். "கிருஷ்ண லீலை"யை மட்டும் ஆதாரமாகக்கொண்ட அழிவற்ற இலக்கியங்கள் எண்ணில் அடங்கா.

குறும்புத்தனம், துடுக்குத்தனம், சுறுசுறுப்பு: விளையாட்டு ஆடல், பாடல் கலை, நிறைவு, அழகு, நடனம், ஆனந்தக் களிப்பு, அறிவு, திறன் யாவும் ஒருங்கே நிரம்பப் பெற்ற நீலக்கண்ணன், கோல மணிவண்ணண், கவிகளின் கற்பனை, ஆறுகள் புறப்படும் வற்றாத மானசரோவரப் பொய்கை.

குழந்தை இலக்கியத்துக்கு கண்ணனே கண்கண்ட கடவுள். நாத மயக் கடவுள் லீலை மயமாகக் காட்சி யளிக்கிறன், கண்ணன் வடிவில்.

கண்ணன் என்றலே, "குழந்தைமை, விளையாட்டு" என்ற எண்ணமே மனதில் எழும். பச்சை வண்ணன் பால-லீலை அப்படிப் படிந்துவிட்டது இந்திய மக்கள் இதயத்தில். குழலூதி இசை பாடும் குழவி குடிகொண்டு விட்டான் குடிமக்கள் மனதில். முருகக் கடவுளும் அவ்வாறே. ஆனால் புருடோத்தமனுகிய இராமன், குழந்தையாக ஆடிப்பாடி விளையாடியதை கவிகள் அதிகமாக. ஏன், அனேகமாக இல்லையென்றே சொல்லலாம், வர்ணிக்க வில்லை. ஒரு வேளை இராமன் கம்பீரத் தன்மையும், அடக்க ஒடுக்கமும், இளமையிலேயே அசாதாரணமான அறிவு முதிர்ச்சியும், சிந்தனுசக்தியும் நிறைந்த, அமைதி மிகுந்த குழந்தையாக வளர்ந்தான் போலும்; அதனுல் கவிகளுக்கு உட்புக இட மின்றிப் போயிற்றே என்னவோ; கண்ணனிடம், "குழந்தைத்தனம்" அதிகம் என்றல் இராமனிடம், "பெரியதனம்" அதிகமாகக் காணப்படுவது ஒரு வேளை காரணமாக இருக்கலாமோ?

உலகில் மனித சுபாவம் இரு வகைப்படும். ஒன்று: எதையும் எளிதாக எண்ணி (Light-heartedness) மனதில் வைத்துக் கொள்ளாமல், குதூகலமாக வாழ்க்கை நடத் துவது. மற்றென்று: எதையும் அதிகம் சிந்தித்து ஆராய்ந்து, மனதில் இருத்தி (Serious - mindedness) கம்பீரமாக, கண்யமாக, தன்மதிப்புடன், தன்னடக்கத் துடன் வாழ்க்கை நடத்துவது. இரண்டும் இயற்கையே. ஒரு வேளை கண்ணன் முதல் ரகத்தையும், இராமன் இரண் டாவது ரகத்தையும் சேர்ந்த குழந்தைகளாக இருந்திருக் கலாம். கண்ணனிடம் துடிதுடிப்பும், ராமனிடம் சாந்தமு

காணப்படுவது ஒரு வேளை இக்காரணத்தினால் இருக்கலாம். யார் கண்டது? இது இப்படித்தான் என்று எப்படி வரையறுத்துச் சொல்லமுடியும்? மனித இயல்பு ஆராய்ச்சிக்குக் கட்டுப்பட்டதல்லவே. பின் இவர்கள் கடவுட்டன்மை மிகு மனிதர்கள் அல்லவா?

ஆதி கவி வால்மீகியோ ராமன் இளமையை மொத்தத்தில் வர்ணிக்கிறாரே தவிர பால - லீலை என்று தனிப்பட வர்ணிக்கவில்லை. கற்பனைச் செல்வரான கம்பரும் இங்கு தன் கற்பனையின் கைவரிசையைக் காட்டவில்லை. ஆனால் ஸ்ரீ துளஸியோ தன் சொந்த மதித் திறனால், வால்மீகி வர்ணியாமல் விட்ட, கம்பர் காட்டாமல் விட்டுவிட்ட பால - லீலையை விரிவாக வர்ணிக்கிறார். வால்மீகியின் கதைப் போக்கில் இருந்து துளஸி மாறுபடுவதற்கு இக் கட்டம் ஓர் சான்று. வடமொழி வல்லுநர் ஆன ஸ்ரீ துளஸி பாகவத - கிருஷ்ண - லீலையில் திளைத்தவர். ஆதலால் அச் சுவையை, இங்கு அள்ளிவந்து கொட்டுகிறார்.

## துளஸி நால்வர் பால - லீலை

குழந்தைகள் பிறந்ததும் கோலாகலமான கொண்டாட்டம் ஆரம்பமாகிறது. அயோத்தியில். இக்கொண்டாட்டத்தை வால்மீகியும், கம்பரும், துளஸியும் வழக்கப்படி வர்ணிக்கிறார்கள்.

"ஆடினார் நறு நெய்யொடு பால், தயிர்" அகிலும் சந்தனமும் கமழ, வர்ணப் பொடிகள் சிதற, பொற்கலசங்கள் மின்ன, நான்மறைகள் முழங்க, வாத்தியங்கள் ஒலிக்க, மக்கள் குதூகலிக்கின்றனர், இப்பிறந்த கொண்டாட்டம் ஒரு மாதம்வரை நீடிக்கிறது.

## தோஹா

மன் சந்தோஷே ஸப்னி கே ஜஹம் தஹம் தேஹி அஸீஸ்
ஸகல் தனம் சிர் ஜிவஹு துளஸி தாஸ் கே ஈஸ்

அரசன் அனைவரையும் திருப்தி செய்வித்தான்; யாவரும் நல்லாசி கூறி மகிழ்ந்தனர். துளஸீ தாசரின் பிரபுவாகிய நான்கு அரசிளங்குமரர்களும் தீர்க்காயுளுடன் வாழ்க!

## பெயர் வைத்தல்

### இராமன்

கராமலை யத்தளர் கைக்கரி யெய்த்தே
அராவணை யிற்றுயில் வோய்என வந்நாள்
விராவிய ளித்தருள் மெய்ப்பொரு ளுக்கே
இராமன் எனப்பெயர் ஈந்தனன் அன்றே

### பரதன்

கரதல முற்றெளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
வரத னுதித்திட மற்றைய வொளியைப்
பரதன் எனப் பெயர் பன்னினன் அன்றே.

### இலக்குவன்

உலக்குநர் வஞ்சகர் உம்ப ருயர்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் நீத்தனள் இந்த
விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்
இலக்குவன் என்ன விசைத்தனன் அன்றே.

## சத்துருக்கன்

முத்துருக் கொண்டு செம்முளரி யலர்ந்தால்
ஒத்திருக்கும் எழில் உடையஇவ் வொளியால்
எத்திருக் கிங்கெடு மென்பதையெண்ணு
சத்துருக்கன் எனச் சாற்றினன் நாமம்.

## இளமை

## பெயர் வைத்தல்

அதீத்யே ஏகாதசாஹம்து நாம கர்மா ததாகரோ
பதினொரு நாட்கள் கழிந்ததும் குழந்தைகட்குப் பெயர்
வைத்தனர்.

ஜ்யேஷ்டம் ராமம் மகாத்மானம்
பரதம் கேகயீ சுதம்
ஸௌமித்ரிம் லக்ஷ்மண மிதி
சத்ருக்னம் அபரம் ததா
வஸிஷ்ட : பரமப் ரீதா : நாமானி
க்ரு தவான் ததா.

மூத்தவனாகிய மகாத்மாவிற்கு இராமன் என்றும், கைகேயி மகனுக்குப் பரதன் என்றும், சுமித்ரா குமாரனுக்கு இலட்சுமணன் என்றும், சுமித்திரையின் மற்றொரு குமாரனுக்கு சத்ருக்னன் என்றும் வசிட்டமா முனிவர் மன மகிழ்ந்து பெயர் வைத்தார்.

இவ்விதம் பெயர் வைத்தலைக் கூறியபின் வால்மீகி உடனடியாக நால்வரையும் ஒன்று சேர்த்தும்; ஜோடி சேர்த்தும் அவர்களது குணாதிசயங்கள் தோற்றம், ஆற்றல், செயல், அறிவு முதலியவை பற்றியும் வர்ணிக்கத் தொடங்கி

விடுகிருர். பாலலீலை பற்றிய வர்ணனை கிடையாது. பிறகு வாலிபப் பருவ வர்ணனையும் சுருக்கமாகவே முடிந்து விடுகிறது.

தேஷாம் கேதுரிவ ஜ்யேஷ்டோ
ராமோ ரதிகர ; பிது ;
ஸ்வயம் பூரிவ பூதானும்
பபூவ குணவத்தர :

## பொருள்

அந் நால்வரிலும் ஸ்ரீ ராமன் என்னும் மூத்த மகன் நான் முகனைப் போல நற்குணங்களில் சிறந்து தந்தையின் மனதுக்குகந்தவனுக விளங்கினுன்.

## நால்வர்

ஸர்வே வேதவித சூரா ;
ஸர்வே லோக ஹிதே ரதா :
ஸர்வே ஞானேப சம்பன்ன :
ஸர்வே ஸமுதிதா ; குணை :

அந்த தசரத குமாரர்கள் நால்வருமே வேதத்தில் விற்பன்னர்கள் ; நால்வரும் பொது ஜன நன்மையில் அக்கரை கொண்டவர்கள், நால்வரும் அறிவிற் சிறந்தவர்கள் ; நால்வரும் நற்குணம் நிரம்பியவர்கள்.

## இராமன்

தேஷாமபி மகா தேஜா
ராம : ஸத்ய பராக்ரம ;
இஷ்ட : ஸர்வஸ்ய லோகஸ்ய
சசாங்க இவ நிர்மல :

அப்படி இருந்த போதிலும், ஸத்தியத்தையே ஆற்றலாகக் கொண்ட, சிறந்த ஒளி பொருந்திய இராமன் வெண்மதியம் போல அனைவர்க்கும் ஆனந்தமளிக்கும் அன்பு மிகு அண்ணலாக விளங்கினன்.

கஜஸ் கந்தே அஸ்வ பிருஷ்டேச
ரத சர்யாஸு ஸம்மத:
தநுர் வேதே ச நிரத:
பித்ரு சுச்ருஷணே ரத:

யானை ஏற்றம், குதிரை ஏற்றம், தேர் நடத்தல், வில் வித்தை முதலிய கலைகளை வரன் முறை பிறழாது கற்றுத் தேர்ந்து, திறமையின் தேர்ச்சியினல் அறிஞர்களால் பாராட்டப் பெற்றவன், தந்தைக்குப் பணிவிடை புரியும் சிந்தையுள்ள மைந்தன் இராமன்.

அடுத்து வருகிறது இளவல் என்றும் இளையாழ்வார் என்றும் போற்றப்படும் அருமந்த மைந்தன், தியாகத்தின் சிகரம், அன்புச் சுடர், அறிவுக்கடல், ஆற்றல் மலையாகிய இலக்குமணனின் குண சித்திரம்.

இங்கே வால்மீகி நம்மை இலக்குமண-குண சௌந்தரியத்தில் திளைக்கச் செய்து விடுகிருர்.

## இலக்குவன்

பால்யாத் ப்ரபிருதி சுஸ்னிக்தோ
லக்ஷ்மணோ லக்ஷ்மி வர்த்தன:
ராமஸ்ய லோகராமஸ்ய
ப்ராதுர் ஜ்யேஷ்டஸ்ய நித்யச:
ஸர்வ ப்ரியகரஸ் தஸ்ய
ராமஸ்யாபி சரீரத:

லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பன்னோ
 பஹி ; ப்ராண இவாபரஃ
நச தேன விநா நித்ராம்
 லபதே புருஷோத்தம:
ம்ருஷ்ட மன்னம் உபா நீதம்
 அஸ்நாதி நஹி தம் விநா
யதாஹி ஹயமாருடோ
 ம்ருகயாம் யாதி ராகவ:
ஸயேனம் ப்ருஷ்ட தோப்யேதி
 ஸதநு: பரி பாலயன்

## பொருள்

ஒளிவிடும் அழகு நிரம்பிய ஆண்டகை லட்சுமணன் இளமையில் இருந்தே உலகத்தை மகிழ்விக்கும் இராமனுக்கு மனமொத்த தம்பியாகத் திகழ்ந்தான். இராமனுக்கு அவன் தன் உயிரைவிட மேலானவன்; உடலைவிட ஒன்றியவன், இராமனது வெளியேறி நின்று உலாவுகின்ற மற்றோர் உயிர்தான் இலக்குவன்.

இளவல் இல்லாமல் புருடோத்தமன் இராமன் உறங்கப்போக மாட்டான். இனிய உணவு இளவல் இன்றேல் இனிக்காது இராமனுக்கு.

இராமன் குதிரை மீதேறி வேட்டையாடச் சென்றால் பின்னாலேயே வில்லும் அம்பும் கையுமாகப் புறப்பட்டு விடுவான் இலக்குவன் அண்ணனைக் காப்பாற்ற ;

## பரதனும் சத்துருக்கினனும்

பரதஸ்யாபி சத்ருக்னோ
 லக்ஷ்மணா வரஜோ ஹிஸ :

ப்ராணப்ரியதரோ நித்யம்
தஸ்ய சாஸீத் ததாப்ரிய:

இராமனுக்கு இலக்குவன் எப்படியோ அப்படியே பரதனுக்கு சத்துருக்கினன். அவன் இலக்குமணனின் தம்பியல்லவா? பரதனுக்கு உயிர் நிலை சத்துருக்கினன் சத்துருக்கினன் உயிரே பரதன்.

ஸ சதுர்பி: மகா பாகை:
புத்ரை: தசரத: ப்ரியை:
பபூவ பரமப்ரீதோ
வேதைரிவ பிதாமஹ:

நான்கு மறைகளாலும் நான்முகன் விளங்குவது போல இந் நான்கு மகாநுபாவர்களாகிய மைந்தர்களால் தசரதன் சிறப்புற்று விளங்கினான்.

ஹ்ரீமந்த: கீர்த்தி மந்தஸ்ச
ஸர்வஞ்ஞா தீர்க்க தர்சின:

அடக்கம் மிகுந்தவர்களும், புகழ் நிறைந்தவர்களும், அறிவிற் சிறந்தவர்களும், வருங்காலமறிந்து செயலாற்றும் திறன் உடையவர்களும் ஆன இராம-இலக்குமண-பரத-சத்துருக்கினர்கள் தசரதன் பெருமையைப் பன் மடங்கு பெருக்கினார்கள்.

தே சாபி மநுஜ வ்யாக்ரா:
வைதிகாத்யயனே ரதா:
பித்ரு சுச்ருஷ்ண ரதா:
தநுர் வேதே ச நிஷ்டிதா:

அந்த மனிதப் புலிகளும் படிப்பதிலும், படைக்கலம் விடுப்பதிலும், பணிவிடை புரிவதிலும் நிகரற்று விளங்கினார்கள்.

இவ்வாறு முடிவடைகிறது தசரத-ராஜ குமாரர்களின் குண சித்திரம். கம்பரும் இவ்விதமே தான் புனைகிறார். ஆனால் துளஸிதாஸர் நால்வரையும் மதலைகளாகக் குதலை மொழி பேச வைத்து, தவழ விட்டு, தளர் நடை நடக்க வைத்து, பெற்றோர்கள் மார்பு மேலும் மடி மேலும் "புழுதியாடிய பொன்மேனி" யோடு புரளவைத்து, பொற்சதங்கை கிண் கிணி "கலின் கலின்" என நால் வரும் அயோத்தி அரண்மனையில் விளையாடுவதைக் கண்டு களிக்கிறார். அந்த ஆனந்த ரஸாநுபவத்தில் திளைக்கிறார். ஆடுகிறார் ; பாடுகிறார். தன்னை மறந்து தசரத மைந்தர்கள் விளையாட்டில் ஒன்றிவிடுகிறார்.

காட்சி மேல் காட்சி அடுக்குவதில் கம்பரும் வால் மீகியும் வல்லவர்கள். வாலிபர்களான இரகு குல குமாரர் களை வர்ணித்த மாமுனிவர் உடனடியாக விசுவாமித்ர மகரிஷியின் வருகையைத் தொடங்குகிறார். கம்பரிலும் வால்மீகியிலும் இக்கட்டம் மிகவும் ரசிக்கத் தக்கதாக அமைந்துள்ளன : வழக்கம் போல் கதையைச் சுருக்கி விடுகிறார் துளஸி.

விசுவாமித்திரர் வருகை, வரவேற்பு, வேண்டுகோள், மன்னன் திகைப்பு, மறுதளிப்பு, முனிவர் கோபம், வசிட்டர் சமாதானம், ராம-லட்சுமணர் வருகை, முனிவர் பின் அண்ணன் தம்பி புறப்பாடு யாவும் ஏதோ ஓர் உயர்ந்த, கலையிற் சிறந்த படக் காட்சி வருவது போல் ஒன்றன் பின் ஒன்றாக வந்து வாசகர்களைக் கவர்கின்றன. விறுவிறுப்பு

சம்பாஷணை நயம், கதை போக்கு இவை வால்மீகியிடம் அபாரம். இக் கட்டத்தில் கம்பர் சம்பாஷணை நாகரிகம், அறிவு, ஆற்றல், பண்பாடு இவற்றால் தலை சிறந்த இருவர் எப்படி நாசூக்காக, நயம்பட எதிராளியின் மனம் புண் படாத வாறும், தன் கருத்து தெளிவாக விளங்குமாறும் உரையாடுவார்களோ அதற்கு அருமையான எடுத்துக் காட்டாக விளங்குகிறது. சம்பாஷணையின் நயத்திலேயே நாம் மெய்ம்மறந்து விடுகிறோம். கதை கூட மறந்து விடுகிறது.

வால்மீகி, கம்பர், துளஸி மூவருமே சம்பாஷணை, சம்வாதம், எழுதுவதில் அசகாய சூரர்கள். ஒவ்வொரு வரும் ஒரு தனி ரகம்- தனி நடை, கம்பீரமும் கண்யமும் கலந்து கொழிக்கும் வால்மீகியிடம் 'இயற்கைத் தன்மை, மனிதன் இயல்பின் மாட்சி, மனோதத்துவத்தின் உண்மை நிலை அதிகம். அந்தச் சூழ்நிலையில் அந்தச் சந்தர்ப்பத்தில் அப்படிப்பட்ட மனிதன் அப்படித்தான் பேசி இருப்பான்; அப்படித்தான் நடந்திருப்பான் என்று நாம் ஐயம் திரிபு அற உணர்ந்து கொள்கிறோம் வால்மீகியைப் படிக்கையில். கம்பரிடமோ "சபாஷ் அப்படிச்சொல்" என்று நம்மையும் அறியாமல் கவிச் சக்கரவர்த்திக்குப் பாராட்டு தெரிவிக்கும் வண்ணம் நயம், நளினம், நெளிவு, கருத்தின் ஆழம், குத்திக் காட்டுதல் முதலிய சொல் வன்மை அதிகம். துளஸியிடமோ உண்மை, பக்தி, உள்ளன்பு, தூய்மை, பொதுப்படக் காணப்பட்டாலும் "வார்த்தை யுத்தம்" வரும் இடங்களில் வாழைப்பழத்தில் ஊசி செருகுவது போல் செருகிப் பேசும் குணம், தேனினும் இனிய தாய்த் தோன்றினும் இதயத்தைப் பிளக்கும் வியங்கியம், தவறை எடுத்துத் தவடையில் அடிக்கும் தன்மை அபாரம். "அப்படித்தான் கொடுக்கவேண்டும் சாட்டை" என்று வாசகர்கள் குதூகலிக்கும் வண்ணம் இருக்கும் நியாயம் பிறழாத துளஸியின் வாக்கு வன்மை. ஆக, இம்மூவருமே

சம்பாஷணை எழுதுவதில் தீரர்கள். ஆதலால் விசுவாமித்திரர் வரும் சம்பவத்தை மூவரும் எப்படி விவரிக்கிறார்கள் என்று பார்ப்போம்.

## வால்மீகி ராமாயணத்தில் விசுவாமித்திரர் வருகை

விசுவாமித்திர முனிவர் ஸ்ரீராமனை அழைக்க அயோத்திக்கு வருமுன், தசரத மன்னன், எல்லாத் தகுதிகளும் வாய்ந்த தன் மைந்தர்களுக்குத் திருமணம் செய்துவைப்பது பற்றி ஆலோசித்துக் கொண்டிருந்தார்.

மந்திரிமார்களுடன் மன்னன் அப்படி ஆலோசனையில் இருக்கையில் தான், மிகவும் ஒளிபொருந்திய துறவியான விசுவாமித்திரர் வந்து சேர்ந்தார்.

வாயிற்காப்போரை நோக்கி முனிவர் "நான் வந்திருப்பதாக விரைவில் உங்கள் மன்னனிடம் தெரிவியுங்கள். காதியின் புதல்வன் கௌசிகன் வந்திருக்கிறான் என்று தெரிவியுங்கள்" என்று சொல்லியனுப்பினார்.

அதைக் கேட்டவுடனேயே அரசன் ராஜ குருவுடன் எழுந்து சென்று பிரும்மாவை இந்திரன் எதிர் கொண்டழைப்பது போல எதிர் சென்றழைத்தான்.

விரதத்தினாலும் தவத்தினாலும் ஜொலிக்கும் முனிவரைக் கண்டு மன்னன் மலர்ந்த முகத்துடன் அர்க்கியம் (கை யலம்ப நீர்) பாத்யம் (காலலம்ப நீர்) முதலியன அளித்து முறைப்படி உபசரித்தான்.

## முனிவர் அரசனை நலம் விசாரித்தார்

"மந்திரிகள், பிரதானிகள், பிரஜைகள் யாவரும் நலமா" என்று கேட்டபின் வசிஷ்டரையும் விசாரித்தார்,

அனைவரும் அளவளாவிய வண்ணம் அரண்மனைக்குள் நுழைந்தனர். அவரவர் தமக்குரிய ஆசனங்களில் அமர்ந்தனர்.

மிகவும் மகிழ்ச்சி கொண்ட மன்னன் "அமுதம் அருந்தியது போலவும், தண்ணீர் இல்லா ஊரில் பெரு மழை கொட்டியது போலவும், கற்புள்ள மனைவிக்கு சற்புத் திரன் உதித்தது போலவும், கெட்டுப்போன பொருள் திரும்பக் கிடைத்தது போலவும், உயர்ந்த அதிர்ஷ்டம் திடீரென்று தோன்றியது போலவும்,

"ததைவாகமனம் மன் யே ஸ்வாகதம் தேமகா முனே;" தங்கள் வருகை எனக்கு உள்ளது. நல் வரவு, முனிவரே, என் பிறவி பயனடைந்தது; வாழ்வு உயர்ந்தது.

"முதலில் தவ வலிமையினால் ராஜரிஷி என்னும் பதவி யைப் பெற்றுப் பின் தன் வல்லமையினால் பிரும்ம ரிஷி எனும் தன்மையை எய்தியுள்ள தாங்கள் என்னால் மிகவும் பூஜிக்கத் தக்கவர். ஆஹா; பிரும்ம ரிஷியே; அற்புதம், நான் செய்த புண்ணிய பலன், தங்களைப் பார்த்ததாலேயே எனக்குப் புண்ணிய க்ஷேத்திரங்கட்குச் சென்ற பலன் கிட்டிவிட்டது. தங்கள் வருகையின் காரணத்தைத் தெரி வியுங்கள். எந்தக் காரியமாக இருந்தாலும் யோசிக்க வேண்டாம், எதுவாயினும், செய்து தருகிறேன்.

"கார்யஸ்ய ந விமர்சம் ச கந்துமர்ஹஸி கௌசிக,
கர்த்தா சாஹமசேஷண தைவதம் ஹி பவான்மம.

தங்கள் வரவு என் பாக்கியம்.!!

இவ்விதம் மனம் மலர்ந்து நல் வரவு கூறுகிறான் முதலில் தசரதன். ஆனால் பின்னால் அல்லவா தெரியப் போகிறது, "எதுவாயினும் யோசனை வேண்டாம்" என்று

ஆராயாது கூறிவிட்டுப் பின் வகையாக மாட்டிக் கொள்வது இம் மன்னனுக்கு ஓர் வழக்கம் போலும்! அப் படித்தானே பின்ருல் இளைய - மனைவி கைகேயிடம் மாட்டிக் கொண்டு தவிக்கிருன் ; அது நிற்க,

இவ்விதம் இனிமையான, கர்ண ரஸாயனம் ஆன மன்னனது மனங்கவரும் பேச்சைக் கேட்டு நற்குண சாலியான முனிவர் மகிழ்ச்சியடைந்தார். "பரமரிஷி: பரமம் ஜகாம ஹர்ஷம்"

முனிவர் தன் கருத்தை வெளியிடுமுன் இதே கட்டத் தைக் கம்பர் எப்படிச் சித்தரிக்கிருர் என்று பார்ப்போம்.

## கம்ப ராமாயணத்தில், விசுவாமித்திரர் வருகை

தன் வெண் கொற்றக் குடை நிழலில் உலகம் யாவும் விளங்கிட "முரசொலி சுறங்கிட" முனிவர் ஏத்துறக் கரை செயலரியதோர் களிப்பின் வைகுநாள்"

"ஆனந்தக்கடலில் மூழ்கி இருக்கும்.காலத்தில்" என்று இன்பமயமாக முடிகிறது திருவவதாரப் படலம். அடுத்தது கையடைப் படலம். அதாவது சக்கரவர்த்தி தன் திருக் குமாரர்களாகிய இராம இலக்குமணர்களை விசுவாமித்திர முனிவர் வசம் ஒப்புவித்தலை உணர்த்தும் படலம். அந்நாட் களில் ஓர் நாள்.

## அரசன் கொலுவிருக்கை

நணிவரு கற்பக நாட்டு நன்னகர்
அணிவரு மணிதர லயிர்க்குஞ் சிந்தையான்

நினையவு மரியது விசும்பி னீண்டதோர்
புனை மணிமண்டபம் பொலிய எய்தினான்.

அரும்பு கவிழ்கின்ற கற்பகக் காவினையுடைய அமராவதியில் வாழ்கின்ற தேவர்கள் எல்லாரும் அழகு மிகுதியைக் கண்ணுற்று ''இது இந்திரன் மணி மண்டபம் தானோ'' என்று ஐயுறவும்,

ஆனால் அப்படி ஐயுற்றும் வந்து பொருந்த நினைக்கவும் அருமையானதும் (சிறப்பு, ஆற்றல் மிகுதியினால்); ஆகாயத்தை அளாவி நிற்பதும், ஆகிய விசித்திர வேலைப்பாடுகள் அமைந்த நவமணி மண்டபத்திற்குத் தான் ஒளி தருவதே போல் வந்து ஏறினான் சிங்காதனத்தில் வேந்தன்.

தேவர் மயங்கும் மண்டபம். அண்டரும் அண்ட முடியாத மண்டபம், அழகிற் சிறந்த அணி மணிமண்டபம். அப்படிப்பட்ட மண்டபம் ஒளிபெற்று வீசும்படியாக வந்து சேர்ந்தான் அரசர் பெருமான் என்றால் வேலைப்பாட்டின் நுண்மையையும், வேந்தனது பெருமையையும் எப்படி விவரிப்பது என்றும் வியப்புமிகுதி தொனிக்கிறது பாடலில்.

படலத் தொடக்கத்திலேயே தன் கவித்திறத்தினால் படிப்பவர்களைத் திணற வைப்பது கம்பரது பெருமை. மண்டபமும், மன்னனும், மஞ்சமும், மணிகளும், குஞ்சமும் கொத்து சரங்களும், அண்டரும், அச்சமும், அழகும், கம்பீரமும் நம் கண்முன் அன்றோ காட்சி தருகின்றன. இந்திரனோ இவன்.

தூய மெல்லரியணை பொலிந்து தோன்றினன்
சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்
நாயகனிவன் கொலென்றயிர்த்து நாட்டமோர்
ஆயிரமில்லை என்றைய நீங்கினர்

பரிசுத்தமான, மென்மையான சிங்காதனத்தில் தசரதன் அமர்ந்து விளங்கினன். அப்போது பெரிய ஆகாய வீதியில் திரியும் சாரணர்கள் (ஓர் தேவ இனம், தேவ ஒற்றர்) இவன் நமது தலைவன் இந்திரன்தானே என்று ஐயுற்று "ஓ, இவனுக்கு ஆயிரம் கண்கள் இல்லை; ஆதலால் இவன் இந்திரன் இல்லை" என்று ஐயம் நீங்கித் தெளிந்தார்கள்.

இந்திரன் போன்ற மன்னன் என்பதை எவ்வளவு நயம்பட உரைக்கிறார் கவி.

சாரணர் என்பவர் தேவ ஒற்றர். இவர் எப்போதும் ஆகாயத்தில் இங்குமங்கும் திரிந்து செய்தி சேகரிக்கும் தேவலோக நிருபர்கள். சாதுர்யமும் சாமர்த்தியமும் சாகசமும் மிகுந்த சாரணர்களே மயங்கினல் பிறரைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ ?

## விசுவாமித்திரர் வருகை

மடங்கல்போல் மொய்ம்பினன் முன்னர் மன்னுயிர்
அடங்கலும் உலகும் வேறமைத்துத் தேவரோ
டிடங்கொளுன் முகனையும் படைப்பனீண் டெனத்
தொடங்கிய துனியுறுமுனிவன் தோன்றினன்

சிங்கத்தை யொத்துச் சிங்காதனத்தில் வீற்றிருக்கும் அரசன் முன்னே, நிலைபெற்ற உயிர்கள் எல்லாவற்றையும் அவைகட்கு உறைவிடமான உலகங்களையும் பிரும்ம சிருஷ்டியினின்றும் வேருகப் படைத்து, தேவர்களுடன் அந்த சிருஷ்டிகர்த்தா நான் முகனையும் வேருகப் படைப் பேன் இப்பொழுதே என்று சிருஷ்டிக்கத் தொடங்கிய யாவரும் அஞ்சுதற்குரிய முனிவன் வந்து தோன்றினன்,

இந்தப் பாடல் இரத்தினச் சுருக்கமாக விசுவாமித்திர ருக்குக் கட்டியம், பராக் கூறுவதோடு நில்லாமல் அவரது குணுதிசயங்கள் யாவற்றையும் மூன்றே வரியில் கூறி முடித்துவிடுகிறது.

## கம்பராமாயணத்தில் விசுவாமித்திரர்

பூவுலகையும் வேறு படைத்தும் பொன்னுலகையும் வேறு படைத்துச் சத்திய லோகாதிபதியையும் படைக்கத் தொடங்கிய பெருவல்லமை, யாவரும் அஞ்சத்தக்க தேஜஸ், அரிய ஆற்றல், மாபெருந் தவத்தினல் உரம் பெற்ற தோற்றம், நினைத்த காரியத்தை நடத்தி முடிக்கும் அஞ்சாத மனவுறுதி, மாண்பு யாவும் பளீர் எனத் தோன்றுகின்றன. பாடலைப் படிக்கும்போதே ; ஐயோ ; இப்படிப்பட்ட முனிவர் அல்லவா வருகிருர்! என்ன விளையுமோ என்ற ஓர் அச்சம், துணுக்கமும் உண்டா கிறது.

வந்து முனி யெய்துதலு மார்பி லணியாரம்
அந்தர தலத்திரவியஞ்ச ஒளி விஞ்சக்
கந்தமலரிற் கடவுடன் வரவு காணும்
இந்திரனெனக் கடிதெழுந்தடி பணிந்தான்
பணிந்து மணி செற்றுபு குயிற்றியவிர் பைம்பொன்
அணிந்த தவிசிட்டதின ருத்தியோடி ருத்தி

இணைந்த கமலச்சரண ருச்சனை செய்தின்றே
துணிந்ததென் வினைத் தொடர் பெனத்தொழுது
சொன்னான்
நிலஞ்செய் தவமென்றுணரினன்று நெடியோய் ஈன்
நலஞ்செய் வினையுண்டெனினுமன்று நகர்
நீயான்
வலஞ்செய்து வணங்கவெளி வந்தவிது முந்தென்
குலஞ்செய் தவமென்றினிது கூறமுனி கூறும்

அப்படி வந்த முனிவனைக் கண்ணுற்ற அரசர் பிரான் தன் மார்பில் அணிந்துள்ள இரத்தின மாலையானது ஆகாயத்தில் சுடரும் பகலவனது ஒளியையும் வென்று விளங்கும்படி எதிர் சென்று, மூலத் தாமரையில் வீற்றிருக்கும் பிரும்மதேவன் வரவைக் கண்ட இந்திரன் எப்படி அந்நான்முகனை வரவேற்பானோ அப்படி, பரபரப்புடன் சென்று அவனடிகளில் வணங்கினான்.

முனிவன் வரவு கண்டான்
இரவி ஒளி விஞ்ச எழுந்தான்
இந்திரன் என அடி பணிந்தான்

இச் செய்திகளைச் சொல்லும் இப்பாடல்களில் உள்ள ஓசை நயம் ஓதி ஓதி உணரத் தக்கது. முனிவரும் தசரதரும் அயோத்தி கொலு மண்டபத்தில் நேரே நம்முன் நிற்கிறார்கள்.

எழுந்துவந்து, பணிந்து, பின் நவமணி ஆதனத்தில் முனிவரை இருத்தி, அவர் பாத கமலங்களைப் பூசித்து, தொழுது, "இன்றே என் கருமபலன், வினைத் தொடர்பு விட்டது" என்று கூறினான்.

"நான் பணிந்து வலம் வந்து வணங்கும்படி பெரியோராகிய தாங்கள் இங்கு எழுந்தருளி வந்தது, இந்த

நாடு செய்த புண்ணியமும் அல்ல ; நான் செய்த புண்ணியமும் அல்ல, என் முன்னோர்கள் செய்த மாதவம்"
என்று அரசன் நயம்படக் கூற முனிவர் கூறுவார்.

### புகலுண்டோ ?

என்னனைய முனிவரரு மிமையவரு
  மிடையூறென் றுடையராஞல்
பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும்
  பாற்கடலும் பதுமபீடத்
தன்னகருங் கற்பகநாட்டணி நகரு
  மணிமாட அயோத்தி என்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ
  இகல் கடந்த புலவு வேலோய் ;

பகைவரை வென்ற, ஊன் தங்கிய, வீர வேற்பிடித்த மன்ன ; என் போன்ற துறவிகளும் தேவர்களும் ஏதேனும் ஓர் துன்பமும் அடைவார்களாயின், அவர்கட்கும் பல உயர்மலைகளையும் அவமதித்து நகைக்கும் குளிர்ச்சி பொருந்திய வெள்ளிமலையாகிய கைலாயமும், திருப் பாற்கடலும், தாமரை மலராசனனது சத்திய லோகமும், கற்பகப் பூங்காவையுடைய அமராவதி பட்டணமும், இரத்தின மாளிகைகள் நிறைந்த "பொன் நகர்" என்று பூவுலகில் பெயர்பெற்ற இந்த அயோத்திமா நகரும் அன்றி வேறு ஓர் புகல் உண்டோ ? புகல். கிடையாது என்பது குறிப்பு.

துன்பம் நேரிட்டால் மும்மூர்த்திகளின் உலகங்களும் அமராபதியாகிய அந்தப் பொன் நகரும் அயோத்தியாகிற இந்தப் பொன் நகருமே, தஞ்சம் என்று சொல்லும் போதே "எனக்கு இப்போது இடையூறு ஏற்பட்டுள்ளது, மேற்கூறிய பட்டணங்கள் எல்லாம் சென்று வந்தும் பயனில்லை ; இனி அயோத்திதான் சரண் என்பதைச் சொல்லாமல் சொல்கிருர் விசுவாமித்திரர்.

## அன்றளித்த அரசு

இன்றளிர்க் கற்பக நறுந்தேன் இடைதுளிக்கும் நிழ
லிருக்கை
இழந்து போந்து
நின்றளிக்குந் தனிக்குடை கீழதி ஞெதுங்கி குறையிரந்து
நிற்ப நோக்கிக்
குன்றளிக்குங் குலமணித் தோட் சம்பரனைக்குலத் தோடுந்
தொலைத்து நீகொண்
டன்றளித்த வரசன்றோ புரந்தர னின் ருள்கின்ற
தரச வென்ருன்

"இனிய நறுந்தளிர்க் கற்பக நிழல் அரசுதனை இழந்து வந்து, உனது செழிக்கின்ற ஒப்பற்ற வெண்குடை நிழலில் ஒதுங்கி, முறையிட்டு, வேண்டி நிற்க, மலைகளை வென்ற தோள்களையுடைய சம்பராசுரனை குலத்தாரோடு அழித்து, உன் வயப்படுத்திக்கொண்டு, நீ அன்று தயையிஞல் அளித்த அரசாட்சியல்லவா இன்று இந்திரன் ஆளும் அரசுவேந்தர் பிரானே என்ருர்!"

இந்திரன் கற்பக நாட்டரசை இழந்தான்.
மண்ணுலகில் வந்தான்; அதுவும அயோத்திக்கு
தசரதன் வாசலில் முறையிட்டு நின்ருன்.
அதைக் கண்டான் அயோத்தி வேந்து.
சம்பரனைக் குலத்தோடும் தொலைத்தான்.
அமராவதியை மீட்டு வசப்படுத்திஞன்.
தயவிஞல் இந்திரனுக்குத் திருப்பி யளித்தான்.
அது அல்லவா இன்று இந்திரன் ஆளும் அரசு?

"நீ யளித்த பிச்சை" இந்திரனுக்கே நீ அரசு அளித்தவன் என்ருல் உன் பெருமை சொல்லத் தரமோ என்பது கருத்து.

என்ன நயமாக மன்னனைப் புகழாமல் புகழ்ந்து, துதிக்காமல் துதிக்கிறார் முனிவர்! தன்னுடைய சுய மரியாதையும் கெடாமல் வீண் முகஸ்துதி செய்யாமல், பொய்யும் சொல்லாமல், புகழ் புகழாகவே பேசும் முனிவரின் திறம் தான் என்னே!

## அருளுக!

உரை செய்யுமளவின் அவன் முக நோக்கி
　உள்ளத்தி னொருவராலும்
கரைசெய்யவரிய தொரு பேருவகைக்கடல்
　பெருகக் கரங்கள் கூப்பி
அரை செய்தி இருந்த பயன் எய்தினன்
　மற்றினிச் செய்வ தருளு கென்று
முறை செய்து கடைத் தலையான் முன் மொழியப்
　பின் மொழியு முனிவன் ஆங்கே!

முனிவர் இப்படிச் சொல்லும்போது அரசன் அவர் முகத்தைப் பார்த்து, கரை காண முடியாத மகிழ்ச்சிக்கடல் பொங்க, கைகளைக் கூப்பிய வண்ணம் "இதுவரை அரசாட்சி செய்த பயன் இன்று அடைந்தேன். இனி அடியேன் செய்ய வேண்டுவது யாது? அருளிச் செய்ய வேண்டும்" என்று முரசுமுழங்கும் தலைவாயிலையுடைய தசரதன் கேட்க பிறகு விசுவாமித்திரர் சொல்லல் ஆனார்,

அமுதம் வேண்டும் எனப் பாற்கடலைக் கடைய ஆங்கே அதி பயங்கரமான ஆலகால விஷம் தோன்றியது போல வரப் போகிறது விசுவாமித்திரரின் வேண்டுகோள்.

அதையறியாது ஆனந்தம் பொங்க அரசன்

"நம்மால் செய்யமுடியாதது முனிவர் என்ன கேட்டு விடப் போகிறார்" என்ற தன்னம்பிக்கை மீதூறிய எண்

ணத்தில் அசைக்க முடியாத மலை போல் நிற்கிருன். அதற்குத்தான் வெடிவைத்துத் தாக்கப்போகிருர் துறவி கௌசிகர். உயிர் எடுக்கும் யமனைப் போல இவர் வேண்டுகோள் விடுக்குமுன் வால்மீகியுடன் கம்பரையும் இங்கே சற்று நிற்கச் செய்துவிட்டு, ஸ்ரீ துளசி இவ்விடத்தை எப்படிக் கூறுகிருர் எனப் பார்ப்போம்.

அதையும் பார்த்தபின் மூன்று ராமாயணங்களிலும் வரும் முனிவர் எப்படிப் பேசி, என்ன கேட்கிருர், அதனுல் தசரதன் படும் பாடு என்ன என்று முறையே கவனிப்போம்.

## துளஸி ராமாயணத்தில் விசுவாமித்திரர் வருகை

### சௌபாயி

விசுவாமித்ர மகாமுனி ஞானீ
பஸஹிம் விபின சுப் ஆஸ்ரம் ஜானீ
ஜஹம் ஜப் ஜஞ்ஞ ஜோக்முனி கரஹீம்
அதிமாரீச சுபாஹுஹி டர ஹீம்
தேகத் யஞ்ஞ நிசாசர் தாவஹிம்
கரஹிம் உபத்ரவ் முனிதுக் பாவஹிம்
காதி தனய் மன் சிந்தா வ்யாபீ
ஹரிவிநு மரஹிம்ந நிசிசர பாபீ
தப் முனிவர்மன் கீன்ஹ விசாரா
ப்ரபு அவதரஉ ஹரன் மஹி பாரா
ஏஹும் மிஸ் தேகதுஹும்மை ஜாயீ
கரி பின்தீ ஆந உம் தோஉ பாயீ
ஞான் பிராக் ஸகல் குன் அயனு
ஸோ ப்ரபு மைம் தேகத் பரி நயனு

## தோஹா

பஹு விதி கரத் மனோரத் ஜாத் லாகி நஹிம் பார்
கரி மஜ்ஜன் ஸரயூ ஜல் கயே பூப் தர்பார்

## பொருள்

விசுவாமித்திரர் என்னும் ஓர் மகாஞானி, துறவி, காட்டில் ஆசிரமத்தில் வசித்துக்கொண்டு தவம் புரிந்து வந்தார். அங்கு பல முனிவர்கள் வேள்வி, தவம்புரிந்து வந்தனர்: ஆனால் மாரீசன், சுபாகு என்ற இரு அரக்கர்களுக்கு எப்போதும் பயந்துகொண்டே இருந்தனர். வேள்வி செய்யத் தொடங்கவேண்டியதுதான் தாமதம். அரக்கர்கள் துன்புறுத்தக் கிளம்பிவிடுவார்கள். துறவிகள் இப்படித் தொல்லைப்பட்டு வந்தனர். இதைக் கண்ட காதி மைந்தர் விசுவாமித்திரர் வருத்தம் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தார்.

“ இந்தக் கொடியவர்கள் ஹரி இல்லாவிடில் அழியமாட்டார்கள். இந்தக் காரணத்தை முன்னிட்டுக்கொண்டு போய் ஹரி பாத தரிசனம் செய்கிறேன். அண்ணன் தம்பி இருவரையும் அழைத்து வருகிறேன். ஞானம், வைராக்கியம் மற்றும் எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமான இறைவனை நேரில் கண்குளிரக் கண்டு வருகிறேன். ” என்று இவ்விதமாகப் பல எண்ணக் கடல்களில் மூழ்கி ஸரயூவில் சென்று நீராடினார் முனிவர். பிறகு நேரே அயோத்தி மன்னன் அரசவைக்கு வந்தார்.

இங்கு கதைப் போக்கில் ஓர் முக்கிய மாறுபாடு காணப்படுகிறது. வால்மீகியிலும் கம்பரிலும் விசுவாமித்திரர் நேரே வருகிறார்.அவர்மன எண்ணங்கள் பற்றி முதலில் ஒன்றும் தெரிவிக்கப்படவில்லை

"தசரதனைப் பார்க்க விசுவாமித்திரர் வந்தார். இவ்வளவுதான் அவைகளின் கதா சாராம்சம். ஆனால் துளஸியிலோ, வருமுன்பே சிந்தனை செய்து தீர்மானித்துக் கொண்டு வருகிறார். அதுவும் அண்ணன் தம்பி இருவரையும் அழைத்துப் போக. (அனுஉம் தோஉபாயீ) முடிவுக்கு வந்துவிட்டார். பிறகே புறப்படுகிறார்.

வால்மீகியில் "ஜ்யேஷ்டம் மே தாதுமர்ஹஸி" "முத்தவனைத் தா" என்றும், கம்பரில் "கரிய செம்மல் ஒருவனைத் தந்திடு" என்றும் இராமனை மட்டும் தான் கேட்கிறார் முனிவர். அவர் கோபத்தைத் தீர்க்கவே இளவலையும் சேர்த்து அனுப்புகிறார்கள் வசிஷ்டரும் தசரதரும்

ஆனால் துளஸியின் விசுவாமித்திரரோ "ராம லட்சுமணர் இருவரையுமே அழைத்துப் போகப் போகிறேன்" என்று உறுதியோடு வருகிறார்.

## வருகை

முனிவரின் வரவைக் கேட்ட அரசன், அந்தணர் கூட்டத்துடன் சென்று அவரை அழைத்து வந்தான். நமஸ்கரித்தான், தன் சிங்காதனத்தில் உட்கார வைத்தான், கால்பிடித்து உபசரித்தான்.

"மோ ஸம் ஆஜ் தன்ய நஹிம் தூஜா"

என்னைப் போன்ற பாக்யசாலி இன்று வேறு யாரும் இல்லை என்று கூறினான். பிறகு சாப்பாடு செய்வித்தான். முனிவர் மகிழ்ந்தார்.

இங்கும் மாறுபாடு, பெருத்த மாறுபாடு.

புனி சரணனி மேலே சுத் சாரீ
ராம் தேகி முனி தேஹ் பிஸாரீ

பிறகு தன் புதல்வர்கள் நால்வரையும் அழைப்பித்து முனிவருக்கு நமஸ்காரம் செய்வித்தான். இராமனைக் கண்ட முனி மெய்மறந்து சொக்கிப்போனார்.

பயேமகன் தேகத்முக் சோபா
ஜநு சகோர் பூரண் ஸஸி லோபா

பூரண சந்திரனை அளவற்ற ஆவலுடன் நோக்கும் சகோரப் பட்சிபோல் இராமனது முக காந்தியைப் பார்த்து ஆனந்த பரவசர் ஆகிவிட்டார்.

வந்த வேலை இன்னது என்று விசாரிக்குமுன்பே ஸ்ரீ ராம தரிசனமும் ஆகர்ஷணமும ஈடுபாடும் நேர்ந்து விடுகிறது, ஸ்ரீ துளஸியில், அதுவும் அரசிளங் குமரர்கள் நால்வரும் வருகிறார்கள்.

வால்மீகியிலும் கம்பரிலும் ''ராமனை அழைத்து வா'' - என்றுதான் அரசன் கட்டளையிடுகிறான்.

இணைபிரியாத தன்மையினால் நம்பி தம்பியோடு வருகிறான்.

இங்கு இராமனது காம்பீர்ய சௌந்தர்யத்தை கண்டாரைக் கவரும் கட்டழகை, முக வசீகரத்தை, ஆத்ம சக்தி லாவண்யத்தை, நாம் Personality என்று கூறும் அந்த விளக்க முடியாத, விலக்கமுடியாத மகத்துவ ஒளியை அதிகரித்துக் காட்ட வேண்டி கதையை இப்படி மாற்றிவிட்டார் துளஸி. ''நால்வரிலும் சிறந்தோன்'' ராமன் என்று வால்மீகி வேறு இடத்தில் கூறி இருப்பதை இங்கு புகுத்தி விட்டார் துளஸி. இராமனைக் கண்டதும் காதல் (அன்பு) கொள்ளுகிறார் துறவி துளஸியில் கட்டழகு, கவர்ச்சி, கம்பீர்யம் இவற்றை எங்கு கண்டாலும் மனித உள்ளம் அன்பு செய்தல் இயற்கை. அப்படியிருக்க

அவை மட்டு மின்றி, வாய்மை, தூய்மை, இளமை இவற்றுடன் எல்லா தெய்வீக குணங்களும் அமைந்து விளங்கிய வாலிபன் இராமனை. அடக்கமே உருவாக, அன்பே வடிவாக, ஆற்றலே வண்ணமாக அடியிற் பணிந்த அயோத்தி அரசிளங்குமரனை, இளமைக்கும் யௌவனத்துக்கும் நடுப் பருவத்தில் இருந்த எழில் அரசனை சாந்தி நிலா பொழியும் ஏந்தலை, அறிவும், அழகும், அன்பும் அங்கம் அங்கமாகப் பொங்கி வழியும் அருட்கடலை, அஞ்சன வண்ணனை, அம்புயக் கண்ணனை, கோசலை மதலையை, குமரன் இராமனைக் கண்டதும் பெருந்தன்மையும் பேரன்புமே வடிவாயுள்ள முனிவர் கண்டதும் அன்பு பூண்டது இயற்கையே, நடக்கக்கூடியதே. பக்தனும் பகவானும் கலந்து விட்டனர் ஒரே பார்வையில். அதுதான் துளஸியின் குறிப்பு.

பிறகு, என்ன காரியமாக வந்தீர் என்று கேட்க "அசுரர்கள் துன்புறுத்துகிறார்கள். உன்னிடம் யாசகம் கேட்க வந்தேன்" என்கிறார் கௌசிகர். என்ன கேட்கப் போகிறாரோ என்று அரசன் நினைப்பதற்கு முன்பே "சடார்" என்று கூறிவிடுகிறார் தான் பிச்சை கேட்க விரும்பும் பொருளை.

விஸ்வாமித்திரர் வேண்டும் பொருள்

## வால்மீகி இராமாயணம்

இராஜசிங்கமாகிய தசரதன் பேச்சைக் கேட்டு மனம் மகிழ்ந்த முனிவர், "உலகில் உன்போல் யாருமே இருக்க மாட்டார்கள். உயர்ந்த குடியில் பிறந்து, வசிஷ்டரைக் குருவாகக் கொண்டுள்ள நீ இப்படிப் பேசுவது, தகுதிதான்" என்று கூறிவிட்டு மெதுவாக வெளியிடுகிறார் விஷயத்தை. அதுவும் அரசனை முதலிலேயே ஓங்கி ஒரு போடு போட்டு விட்டுத்தான்.

## முனிவர் போட்ட போடு!

யத்து மே ஹ்ருத்கதம் வாக்யம் தஸ்ய கார்யஸ்ய நிச்சயம்
குருஷ்வ ராஜ சார்தூல பவ சத்ய பிரதிச்ரவ:

"புலியன்ன வலி கொண்ட மன்னு, நான் மனதில் எண்ணி இருப்பதைக் கேள். காரியத்தின் தீர்மானத்தைச் சொல்லுகிறேன். கேட்டபிறகு சத்தியப் பிரதிக்ஞை உள்ளவனுக (சொன்ன சொல்லை மீருதவனுக) இரு"

மன்னனுக்குச் சரியான சூடு கொடுக்கிறுர் உலகியல் அறிவில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத முனிவர் இங்கு. அப்பனே, விஷயத்தை அறிந்து கொண்டபின்பல்லவா வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும். அவசரப்படாதே கேள். அதன் பின் "வாக்குத் தவருதே" என்பதும்;

இன்னும் சிந்திக்கச் சிந்திக்கப் பற்பல ஆழ்ந்த பொருள்கள் தருவதுமாய் அமைந்துள்ளது, "பவ சத்ய பிரதி ச்ரவ:" என்று அழுத்தம் திருத்தமாக வந்து விழும் ராஜ ரிஷியின் வாக்கு. என்ன அறிவு, என்ன கம்பீரம், என்ன நடை, என்ன தீர்க்க தரிசனத்தன்மை!

"பிள்ளைக் கனியமுதை, அதுவும் உனக்கு உயிர்நாடி போன்ற மூத்த மகனைக் கொடு" என்று நான் கேட்டபின் நீ வாக்குத் தவருமல் இருப்பாயா? தவறக்கூடாது தரும துரையே" என்று சுட்டுகிறது அந்த சின்னஞ்சிறு சுடர் மணிச் சொல். தான் கேட்கும் பொருள் சாமான்ய மானது அல்ல என்பது தவசிக்குத் தெரியாதா?

அதன் பின் காரணம் விளக்கப்படுகிறது!

நான் நியமத்துடன் தவம் புரிகிறேன்! சித்தி பெறுவதற்காக அதற்கு இடையூறு விளைவிப்பவர்களாக (விக்ன

களெள) இரண்டு அரக்கர்கள் இருக்கிறார்கள். அவர்கள் நினைத்த மாத்திரத்தில் மாயா வடிவம் கொள்ள வல்லவர்கள். அனேகமாக முடியும் தருவாயில் இருந்த என் தவத்தில் இவர்கள் குறுக்கே வந்து இறைச்சிகளையும் இரத்தத்தையும் வாரியடித்தார்கள், யாகமேடைமீது. இதுபோல் ஒருமுறை இருமுறையல்ல. பற்பல தடவைகள் செய்யப்பட்டன. என் சித்தி தடைப்பட்டது. உழைத்து உழைத்துப் பலன் காணமாட்டாமல் மனம் சோர்ந்து இங்கிருந்து வேறிடம் சென்று விட்டேன். நான் கோபிக்கவும் கூடாது சாபம் தரவும் கூடாது, அந்தத் தவமே அப்படிப்பட்டது.

ததா பூதா ஹி ஸா சர்யா ந சாபஸ் தத்ர முச்யதே !

நான் சபித்து விட்டால் தவம் பலிக்காது. ஆதலால் அதில் பயன் இல்லை. ஆகையினால் ... ... ஆனபடியால் ... ... ஆதலாலே அடுத்து வருகிறது அரசனுக்கு அணுகுண்டு!"

## தா !

ஸ்வபுத்ரம் ராஜ சார்தூலம் ராமம் சத்ய பராக்ரமம்!
காகபக்ஷதரம் சூரம் ஜ்யேஷ்டம் மே தாதும் அர்ஹஸி

"அரச குமாரர்களுள் வேங்கை போன்றவனும் சத்தியத்தின் சக்தியையே புயவலியாகக் கொண்டவனும் இளைஞன் என்பதற்கடையாளமான சுருண்டு புரளும் இருண்ட குஞ்சியுடையவனும், சூரனும், மூத்தவனும் ஆகிய உன் சொந்தப் புதல்வன் இராமனை எனக்குத் தா!"

## வெடித்துவிட்டது குண்டு கடைசியில்

அதன் பிறகு இராமனைத் தான் பத்திரமாகத் திருப்பி கொண்டு வந்து சேர்ப்பதாக உறுதி மொழி:—

"என்னுலும், தன் சொந்த ஒளியாலும் (தேஜஸ்) இவன் இடையூறு செய்யும் அரக்கர் யாவரையும் அழிக்க வல்லவன் ஆவான்,"

முக்கியமான உறுதி மொழி :—

சிரேயஸ் சாஸ்மை ப்ராதாஸ்யாமிபஹுரூபம்
ந சம்சய ; !
த்ரயாணும் அபி லோகாநும் யேனக்யாதிம்
கமிஷ்யதி !!

"பலவகையிலும் இவனுக்குப் புகழும் நன்மையும் அளிப்பேன், மூவுலகங்களிலும் நின்று நிலவும் குன்ருத கீர்த்தியடைவான் உன் மைந்தன்.

ராமன் முன்னுல் அவர்களால் நிற்க முடியாது, ராமனன்றி அவர்களை வேறு யாராலும் கொல்ல முடியாது, வீரத்திமிர் கொண்ட அவர்களுக்கு யமபாசம் நெருங்கி விட்டது. ராமனுக்கு அவர்கள் போதவே போதார்கள். உலகியலறிவு மறுபடி மிளிர்கிறது.

ந ச புத்ரக்ருதம் ஸ்னேகம் கர்த்துமர்ஹஸி பார்த்திவ!
அஹம்தே பிரதிஜாநுமி ஹதௌ தௌ வித்தி
ராக்ஷஸௌ

அரசே, புத்ர வாத்ஸல்யத்தைத் தற்போது ஒழி, நான் உனக்கு உறுதி கூறுகிறேன். அரக்கர்கள் அழிந்து விட்டார்கள் என்பது திண்ணம்.

கீழ் வரும் ஸ்லோகங்கள் மிக அருமையானவை.

தா, தா, தா;

அஹம் வேத்மி மஹாத்மானம் ராமம் சத்ய
பராக்ரமம்

வஸிஷ்டோபி மகா தேஜா யே சேமே தபஸி
ஸ்திதா;
யதி தே தர்ம லாபம் ச யசஸ் ச பரமம் புவி ;
ஸ்திர மிச்சஸி ராஜேந்த்ர ராமம் மே தாதுமர்
ஹஸி
யத்யப் யநுக்ஞாம் காகுஸ்த தததே தவ
மந்த்ரிண ;
வஸிஷ்டப்ரமுகா ஸர்வே ததோ ராமம் விஸர்
ஜய
அபிப்ரேதம ஸம்ஸக்தம் ஆத்மஜம் தாதுமர் ஹஸி
தசராத் ரம் ஹி யக்ஞஸ்ய ராமம்ராஜீவ
லோசனம் ;
நாத்யேதி காலோ யக்ஞஸ்ய யதாயம் மம
ராகவ
ததா குருஷ்வ பத்ரம் தே மாச சோகே மன ;
க்ருதா ;

## தரவேண்டும் தசரதா
## பொருள்

சத்தியத்தையே வல்லமையாகக் கொண்டு விளங்கும் இம்மகாத்துமா இராமனை யான் அறிவேன். இந்த வசிஷ்டரும் அறிவார் ; மற்ற முனிவர்களும் அறிவார்கள். (அதாவது "நீ அறியமாட்டாய்" என்பது கருத்து)

"மணி முடி தரித்த மன்னு நீ அறியாய்" சடைமுடி தரித்த துறவி நான் அறிவேன்" என்கிறுர் முனிவர்.

"அறத்தின் பயனை நீ அடைய விரும்பினுல், பூமியில் பொன்ருது நிற்கும் புகழை விரும்பினுல் ராஜனே ராமனைத்தா."

வசிஷ்டர் முதலிய உன் மந்திரமார்களைக் கேட்டுக் கொள். அவர்கள் சரி என்றால் ராமனை என்னிடம் விட்டு விடு.

நினைத்த காரியத்தை நிறைவேற்ற, பற்றை ஒழித்து, பெற்ற மகனைத் தா.

பத்து நாட்களுக்கு யாகம் புரிவேன். அது வரை செந்தாமரைக் கண்ணனாகிய மணிவண்ணன், மகனைத்தா;

எனக்கு நேரமாகிறது ; தாமதியாதே ; வருந்தாதே : மைந்தனைத்தா ; நீ வாழ்க;'' என்று வேண்டுகிறார் விசுவாமித்திர முனி.

இதை விட அழகிய, மனதைக் கவரும் வேண்டுகோள் வேறு இருக்க முடியுமா?

திறமை கண்டவிடத்தில் ''தூக்கி விடுதல்'' என்கிறோமே அதைத்தான் செய்கிறார். விசுவாமித்திரர், உள்ளே பொதிந்து கிடக்கும் ராமனது சக்தியை, வீரத்தை, தன்மையைத் தகுதியை உலகறிய அறிமுகப் படுத்த வருகிறார். அதாவது ''முன்னுக்குக் கொண்டு வருகிறார்.' ''முளரியங்கண்ணனின் முதிராத ஆற்றலை, இராம நாடகக் கீர்த்தனையில் :-

ராமனைத் தருவாயே—ஜகத் ரட்சக—ராமனைத் தருவாயே

தாடகைப் பாவி—தவிர்க்கிறாள் வேள்வி
பீடை வராமல் காத்தால்—பிழைக்கும் என்னாவி (ராமனை)

அரனிடம் செல்வேன்—அரியிடம் சொல்வேன்
இதற்கும் தப்பினால் உன்னைவிட் டெவரால் பகை வெல்வேன் (ராமனை)

உம்பர்கள் பாரம்—ஒழிக்க அந்நேரம்

சம்பரனைக் கொன்றுயே — தயவாய் இந்நேரம்
(ராமனை)

கோபத்தில் ருத்ரன்—குரு விசுவாமித்திரன்
ஆபத்தைக் காக்க வேணும்—அதனால் உன்
புத்திரன் (ராமனை)

என்று வெகு அழகாகச் சித்தரிக்கிறார். அருணாசலக் கவிராயர்.

பத்து நாட்களுக்குத் தனது பாதுகாப்பில் பதினைந்து வயது நிரம்பிய பாலவடிவன் பரந்தாமனை அழைத்துப் போகஇந்தப் பாடு படுகிறார் விசுவாமித்திரர். ஆற்றலும், அறிவும், தவமும், ஒளியும், பெருமையும் கொண்ட துறவி "உன் மகனை ஒரு பத்து நாட்களுக்கு நான் என்னுடன் வைத்துக்கொள்கிறேன்." என்று கேட்டு அழைத்துப் போக, இத்தனை முன்னுரை, புகழுரை, அறிமுகம், விளக்கம், உறுதி மொழி, யாவும் தேவைப் படுகின்றன என்றால் மகவாஞ்சையின் வல்லமையே வல்லமை.

அப்பொழுது கூட மகனை விட இசையவில்லை தந்தை யுள்ளம்; "அன்புக்கு முண்டோ, வடைக்குந் தாழ்.

## விசுவாமித்திரர் வேண்டும் பொருள்-கம்பராமாயணத்தில்

தருவனத்துள் யானியற்றும் தவவேள்விக்கிடை
யூறாத் தவம் செய்வோர்கள்
வெருவரச் சென்றடைகாம வெகுளியென நிருத
ரிடை விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின் சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத் தந்திடுதி என உயிரிரக்கும் கொடுங்
கூற்றின் உளையச் சொன்னான்

"மரங்களடர்ந்த காட்டில் நான் செய்கிற தவத்துக்கும் வேள்விக்கும் இடையூருக அரக்கர்கள் வந்து அழிக்கிருர்கள். முனிவர்கள் அஞ்சத் துன்புறுத்துகிருர்கள். வேள்விக்கு இடையூருகக் காமக்குரோதங்கள் வந்து கலக்கா வண்ணம் "யுத்த முனைக்குச் சென்று வா" என்று சொல்லி உன் நான்கு மைந்தரிலும் கரிய நிறமுள்ள வீரன் ஸ்ரீ ராமனைத் தந்தருள்வாய் என்று "உயிரைக் கொடு" என்று கேட்கும் கொடிய யமனைப் போல் மன்னன் மனம் மறுகும்படி சொன்னுன் விசுவாமித்திர மாமுனிவன்."

ஸ்ரீ ராமனை முனிவன் கேட்டது, சக்கரவர்த்திக்கு, யமன் வந்து உன் உயிரைக் கொடு என்று கேட்டது போல் இருந்தது என்பது கருத்து. இப்போது யமனுகத் தோற்ற மளிக்கத் தொடங்கிவிட்டார் முனிவர். தன் சொந்த விஷயங்களுடன் "மோதுதல்" (clash) ஏற்பட்டால்தானே ஒருவனது உண்மை சொரூபம் வெளிப்படும்.

எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பிய சொல்
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையில் கனல் நுழைந்தால்
எனச் செவியில் புகுதலோடும்
உண்ணிலாவிய துயரம் பிடித்துந்த ஆருயிர்
நின்றூ சலாடக்
கண்ணிலான் பெற்றிழந்தான் எனவுழந்தான்கடுந்
துயரம் காலவேலான்

## அஸ்திவாரம் ஆட்டம் கண்டது.

அளவற்ற அரிய தவத்தையுடைய விசுவாமித்திர முனிவன் சொன்ன வார்த்தையானது, மார்பில் பகைவன் எறிந்த வேல் பாய்ந்ததனுல் உண்டான புண்ணில்

ஏற்பட்ட பெரிய துவாரத்தில், நெருப்புப் புகுந்தாற் போலத் தன் காதுகளில் நுழையவே, உள்ளத்தில் உண்டான பெருந் துன்பம் பிடித்துத் தள்ள, அதனுல் அரிய உயிரானது ஊஞ்சல் போல ஆட (போய்ப்போய் வர); ஓர் பிறவிக் குருடன் ', திடீர்'' என்று பார்வை பெற்று, அதை மறுபடி இழந்தது போல, பகைவரைக் காயும் காலன் போன்ற வேலாயுதம் தாங்கும் சக்கர வர்த்தி கொடிய துன்பத்துள் உழன்ருன்.

இதைத்தான் விசுவாமித்திரர் முதலிலேயே எதிர் பார்த்தார்.

## துளஸியின் விசுவாமித்திரர்

முனிவர் வருகை, வரவேற்பு, சாப்பாடு, தசரத குமாரர்கள் சந்திப்பு, இராமனிடம் முனிவர் அன்பு, இவை யாவும் நிகழ்ந்த பிற்பாடு தான் தசரதன் அவர் வருகையின் காரணத்தை வினவுகிருன்.

### சௌபாயி

கேஹிகாரன் ஆகமன்துமாரா
கஹஹு ஸோ கரத் நலாவஉம் பாரா

''தங்கள் வருகையின் காரணம் என்ன? அதைக் கூறுங்கள். தாமதமின்றி உங்கள் வேலையைச் செய்து முடிக்கிறேன் ''

### வேலை

அஸுர்-ஸமூஹ் ஸதாவஹிம் மோஹி
மைம் ஜாஸன் ஆயஉம் ந்ருபதோஹி
அநுஜ-சமேத் தேஹு ரகுநாதா
நிசிசர் வத்மைம் ஹோப்ஸ நாதா

தோஹா

தேஹு பூப்மன் ஹர்ஷித்
தஜஹு மோஹ் அஞ்ஞான்
தர்ம ஸுஜஸ் ப்ரபு கஹம்
இன்ஹ் கஹம் அதிகல்யாண் ;

## பொருள்

என்னை அரக்கர் இனம் மிகவும் துன்புறுத்துகிறது. நான் உன்னிடம் ஓர் பிச்சை கேட்க வந்திருக்கிறேன். தம்பியுடன் ரகுநாதனைத் தா. அரக்கர்களை அழித்து நான் சித்தி பெறுவேன்.

ஏ அரசே, மனக்களிப்போடு மைந்தரைத் தந்தனுப்பு. மோகத்தையும் பாசத்தையும் விடு. உனக்கு அறமும் புகழும் பெருகும். இவர்கட்கு மா நன்மைஉண்டாகும்.

## தசரதன் படும் பாடு

ஸுனி ராஜா அதி அப்ரிய வானீ
ஹ்ருதய் கம்ப் முக்துதி கும்லானீ;
சௌதேபன் பாயஉம் சுத் சாரீ
விப்ரவசன் நஹிம் கஹேஹு விசாரீ

மகா அப்ரியமான முனிவரது சொல்லைக் கேட்டதுமே தசரதன் இதயம் நடுநடுங்கியது. முகம் சாந்தி இழந்து வெளிறியது. "கடைசி காலத்தில் நான்கு பிள்ளைகள் பெற்றேன். பிரும்ம ரிஷியே, தீர யோசித்துப் பேசவில்லையே நீர்" என்று திருப்புகிருன் குண்டை அவர் மீது.

அரசன் இப்பாடு படுவான் என்று அம் முனிவர் முதலிலேயே அறியாரா என்ன? அதற்காகத்தானே ஆரம்பத்திலேயே அவர் அப்படிச் சூடு கொடுத்தார்.

## வால்மீகியில் தசரதன் படும் பாடு

அறக்கடலாகிய முனிவர் அறமும் பொருளும் நிறைந்த வசனத்தைக் கூறிவிட்டு நிறுத்தினார்.

அவ்வளவுதான் ; பறந்தது வாக்குறுதி காற்றில்

ஸ தந்நிசம்ய ராஜேந்த்ரோ விசுவாமித்ரவச :
சுபம் ;
சோகமப்யாக மத்தீவ்ரம் வ்யஷீதத பயான்வித;

ராஜராஜன் இவ்விதம் விசுவாமித்திரரின் சுப வாக்கைக் கேட்டதும் பயம் அடைந்தான். கடும் சோகம் கொண்டான்.

இதி ஹ்ருதய மனோ விதாரணம்
முனிவசனம் தததீவ சுஸ்ருவான் ;
நரபதிரகமத் பயம் மஹத்
வ்யதிதமனா : ப்ரசசால சாஸனாத் ;

பொருள்

இவ்விதமாக இதயத்தையும் உள்ளத்தையும் பிளக்கின்ற முனிவரது சொல்லைக் கேட்டான் அரசன் அளவற்ற அச்சம் கொண்டான். கலங்கிய உள்ளத்துடன் இருக்கையில் அசைந்து அயர்ந்தான், துயரம் அவனை ஆட்டி உலுக்கியது.

அப்பாடா என்ன பாடுபடுகிறான் இந்த வேந்தன்?

''என்ன பிரமாதம் கேட்டுவிடப் போகிறார்'' என்று நினைத்தவன் ''இராமனைத் தா'' என்றவுடனேயே துயரம் பயம், கலக்கம், ஆட்டம், மூர்ச்சை, யாவும் ஏக காலத்தில் அடைகிறான். சிலர் இப்படித்தான் முதலில் மகா பிரமாதமாக அளப்பார்கள். காரியம் கிட்டியவுடன் கலங்குவார்கள்.

வீராதி வீரன், ஸத்திய சந்தன் தசரதனே இப்பாடு படவேண்டும் என்ருல் அந்தப் புத்திர வாத்ஸல்யத்தின் சக்தி, வீறு, எவ்வளவு மகத்தானது; அதையும் தியாகம் செய்யவேண்டும் ஜனங்களுக்காக என்ற கொள்கை எவ்வளவு மேன்மையானது.

இப்போது அரசன் என்ன பதில் கூறுகிருன் என்று முநூல்களிலும் வரிசையாகப் பார்ப்போம்.

## வால்மீகியில் தசரதன் மறுமொழி

தச்சுருத்வா ராஜசார்தூலோ
விச்வாமித்ரஸ்ய பாஷிதம்
முகூர்த்தமிவ நிஸ்ஸம்க்ஞ
ஸம் ஞாவான் இதம் அப்ரவீத்

விசுவாமித்திரர் சொல்லைக் கேட்டு ஒரு முகூர்த்த காலம் அரசன் மூர்ச்சையுற்றவன் போல் நினைவற்று இருந்தான். பிறகு ஒருவாறு தெளிந்து சொல்லல் ஆனுன்.

ஊன ஷோடச வர்ஷோமே ராமோ ராஜீவ
லோசன:
நயுத்த யோக்யதாம் அஸ்ய பச்யாமி ஸஹ்
ராட்சஸை:
இயம் அட்சௌஹினி பூர்ணு யஸ்யாஹம்
பதிரீஸ்வர:
அநயா ஸம்ப்ருதோ கத்வா யோத்தாஹம்
தைர் நிசாசரை:
இமே சூராஸ்ச விக்ராந்தா ப்ருத்யா மேத்ர
விசாரதா:
யோக்யா ரக்ஷோகணைர் யோத்தும் ந ராமம்.
நேது மர்ஹஸி

அஹமேவ தனுஷ்பாணிர் கோப்தா ஸமர
மூர்த்தனி

யாவத் ப்ராணுன் தரிஷ்யாமி தாவத்
யோத்ஸ்யே நிசாசரை:

நிர்விக்னுவ்ரதசர்யா ஸ பவிஷ்யதி சுரட்சிதா ;
அஹம் தத்ராகமிஷ்யாமி ந ராமம் நேது
மர்ஹஸி

பாலோ ஹ்யகிருதவித்யஸ்ச ந சவேத்தி
பலாபலம்

ந சாஸ்த்ர பலஸம்யுக்தோ ந சயுத்த
விசாரத ;!

நசாஸௌ ராட்சஸாம் யோக்ய ; கடயோத்யா
ஹிதேத்ருவம்

விப்ரயுக்கோ ஹி ராமேண முகூர்த்தமபி
நோத்ஸஹே;

ஜிவிதும் முனிசார்தூல ந ராமம் நேதுமர் ஹஸி
யதிவா ராகவம் ப்ரும்மன் நேது மிச்சஸி
ஸுவ்ரத

சதுரங்க ஸமாயுக்தம் மயா ச ஸஹ தம் நய
ஷஷ்டி வர்ஷ ஸஹஸ்ராணி ஜாதஸ்ய மம
கௌசிக

துக்கேனேத்பாதி தஸ்சாயம் ந ராமம் நேதுமர்
ஹஸி ;

சதுர்ணும் ஆத்மஜானும் ஹி ப்ரீதி; பரமிகா
மம;

ஜ்யேஷ்டம் தர்ம ப்ரதானம் ச ந ராமம் நேதுமர்
ஹஸி; !

கிம் வீர்யா ராக்ஷஸாஸ் தே ச கஸ்ய
புத்ராஸ்ச கேசதே;

கதம் ப்ரமாணு கேசைதான் ரக்ஷந்தி முனி
புங்கவ;
கதம் சப்ரதி கர்த்தவ்யம் தேஷாம் ராமேண
ரட்சஸாம்;
மாமகைர் வா பலைர்ப்ரும்மன் மயாவா
கூடயோதினும்;
ஸர்வம் மே சம்ஸ பகவன் கதம் தேஷாம்
மயாரணே ;
ஸ்தாதவ்யம் துஷ்ட பாவானும் வீர்யோத்
ஸிக்தா ஹிராட்சஸா:

சரமாரியாகப் பொழிகிறது தசரதன் மறுத்தல் மொழி. கடல் மடை திறந்தது போலச் சொரிகிருன் அன்பின் வசப்பட்டு அதனுல் பயமடைந்த அரசன்.

''அதிஸ்னேஹோ பாபசங்கீ'' (சாகுந்தலம்)

''அதீதமான அன்பு இல்லாததையும் பொல்லாததையும் எண்ணும்'' தன்னையே மறந்து தன் வசமிழந்து நிற்பவன் தனது வாக்குறுதி காற்றில் பறப்பதையும் சிந்திக்கவில்லை' சிந்திக்க நேரமில்லை போலும். அன்பு அவனை அப்படியேஆட்டி வைக்கிறது.

அவன் பதிலைத்தான் பாருங்கள்:—

வேண்டாம்; அழைத்துப் போகாதே!

தாமரைக் கண்ணன் என் ராமனுக்கு இன்னும் பதினுறு வயது நிரம்பவில்லை. அவன் அரக்கர்களுடன் போர் புரிய வல்லவன் அல்லன். இதோ என்னுடைய பல வெள்ளம். சேனை நிரம்பி நிற்கிறது. நான் இதற்குப் பதி, நாயகன். இச்சைன்யத்துடன் நான் வந்து அரக்கர்களுடன் போர் புரிகிறேன். இதோ, அஸ்திர, சஸ்திர வல்லுநர்களாகிய எனது சேவகர்கள். இவர்கள் போரிடுவார்கள். இராமனை அழைத்துப் போகாதீர்.

“நான் வில்லேந்தி, சேனை நடத்தி வந்து, என் உயிர் உள்ளவரை அரக்கருடன் போர் புரிகின்றேன்,”

“தங்கள் தவம் இடையூறின்றி நிறைவேறும்; நான் அங்கு வருகிறேன். இராமனை அழைத்துப் போகாதீர்.”

“இராமன் குழந்தை. இன்னும் படிப்பே முடியவில்லை. தன் சக்தி, பலவீனம், இவை யொன்றும் இவன் அறியான். அஸ்திரம் பயிலவில்லை. யுத்த நிபுணனும் அல்லன். அரக்கர்களுக்குச் சரியல்லன். அவர்கள் மாயாவிகள். வஞ்சக யுத்தம் புரிபவர்கள்.”

இராமனை விட்டுப் பிரிந்தால் விநாடி நேரமும் உயிர் தரியேன். அதனால் அவனை அழைத்துப் போகாதீர். அப்படி அழைத்துத்தான் போக வேண்டும் என்றால் நால் வகைப் படைகளுடன் என்னையும் சேர்த்து அழைத்துப் போங்கள். அறுபதினாயிரம் ஆண்டுகள் உயிர் வாழ்ந்த பின், எவ்வளவோ இன்னல் ஏற்ற பின், எனக்கு இவன் பிறந்தான். அவனை அழைத்துப் போகாதீர். நான்கு மைந்தரிலும் மூத்தவனும், அறவள்ளலுமான இவனிடம் எனக்கு அன்பு அதிகம். ஆதலால் அழைத்துப் போகாதீர்.

அந்த அரக்கர்கள் யார்? எவ்வளவு பலம் பெற்றவர்கள்? யாருடைய பிள்ளைகள்? யார் பாதுகாவலில் இருப்பவர்கள்? அவர்களை இராமன் எப்படி எதிர்க்க முடியும்? நானோ என் படையோ என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள் பிரும்ம ரிஷியே”

முனிவரின் அணுகுண்டுக்குப் பதில் ஹைட்ரஜன் குண்டு போட்டு விட்டான் அரசன்.

"தா, தா, தா" என்று அவர் பல்லவி பாடியதற்கு எதிராக "அழைத்துப் போகாதே, போகாதே என்று" ஆவர்த்தனம் வாசிக்கிறுன். கல்லும் கனிந்துவிடும் அவன் அலறலுக்கு. வேறெருவராக இருந்தால் "சரி நீ வா. ராமன் வேண்டாம்" என்று சொல்லி இருப்பார்கள், ஆனுல் அவரா அசைவார்? அவர் விசுவாமித்திரர், அல்லவா? தசரன் எதற்கு அவருக்கு?
சாதரணப் பாடலில் ;

பல்லவி

"ராமனே விட்டு நான் ராஜ்யத்தில் அரைக்கணம்
பூமியில் இருப்பதுண்டோ கௌசிகரய்யா?"
பூமியில் இருப்பதுண்டோ [ராமனே விட்டு]

அனுபல்லவி

ப்ரேமையுடனே புத்ர காமேஷ்டி
செய்தல்லவோ ரகு
ராமன் பிறந்தானய்யா ரவிகுல சோமன்
[ராமனே விட்டு]

சரணம்

இன்னும் என் ராமனுக்கு ஈரெட்டு வயதில்லே
எப்படி அரக்கர் முன் எதிர்த்துப்
போர் புரிவானே?
என்னுவியுள்ள மட்டும் எதிர்த்துப்
போர் புரிகின்றேன்
என் ஜீவன் உள்ள மட்டும் எதிர்த்துப்
போர் புரிகின்றேன்
என் கண்மணி ராமனே காட்டுக் கனுப்ப
மாட்டேன்

ரகுராமனை அபிராமனை ஜயராமனை விட்டு
இருப்பதுண்டோ?

என்பதாக வருகிறது பதில்.

முனிவர் பதில் கூறுமுன் கம்பரையும் துளஸியையும் பார்ப்போம்.

## கம்ப ராமாயணம்

தொடையூற்றுந் தேன்றுளிக்கு நறுந்தாராளெருரு
வண்ணந் துயர நீங்கிப்
படையூற்றமிலன் சிறியனிவன் பெரியோய் பணி
இதுவேல் பனி நீர்க்கங்கை
புடையூற்றுஞ் சடையானும் நான்முகனும்
புரந்தரனும்
புகுந்து செய்யும்
இடையூற்றுக்கிடையூருயான் காப்பேன், பெரு
வேள்விக் கெழுக என்ருன்

### பொருள்

இடையரு தொழுகும் தேன் துளும்பும் மலர் மாலை அணிந்த மன்னன் ஒருவாறு துயரம் நீங்கிச் சமாளித்துக் கொண்டு, "பெரியவரே, இந்த ராமன் படைத் தொழில் வல்லுநன் அல்லன்; அன்றியும் வயதில் சிறியவன். உமது கட்டளை, வேலை இதுவானல், குளிர்ந்த கங்கை ஒரு புறம் பாய்ந்தோடும் சடாமுடி உடைய சிவனும், இந்திரனும், பிரம்மதேவனும் வந்து இடையூறு செய்தாலும் அதற்கு இடையூருக நான் நின்று காப்பேன். யாகம் செய்ய எழுந்து வாருங்கள் என்ருன்.

கம்பரில் இதைக் கேட்டதுமே முனி "கறுத்து" விடுகிருர். ஆனல் வால்மீகியிலோ இன்னும் பொறுமை

யுடன் பதில் சொல்லுகிறார். அரசன்தான் வரம்பு மீறுகிறான். வாக்குறுதியை மறுக்கிறான், அழுத்தம் திருத்த மாக. பிறகுதான் விசுவாமித்திரர் சொருபத்தைக் காட்டு கிறார். அதுவும் கூட பொறுமையின் எல்லை மீறாமல், மரியாதை வரம்பு கடவாமல் தான். குணம் எனும் குன்றேறி நின்றவர், வால்மீகி காட்டும் விசுவாமித்திர முனிவர். இது நிற்க.

## துளஸியில் தசரதன் பதில்

மாங்கஉ பூமி தேநு தன் கோஸா
ஸர்வஸ் தேஉம் ஆஜு ஸஹஸ்ரோஸா
தேஹ் ப்ரான் தே ப்ரிய கசு நாஹிம்
ஸோஉ முனிதேஉம் நிமிஷ் ஏக் மாஹிம்

பொருள்

முனிவரே, பூமி, பசு, தனம், கஜானா, எது வேண்டு மாயினும் கேளுங்கள், தருகிறேன் அப்படியே, தன் உடலையும் உயிரையும் விட பிரியமானது ஒருவனுக்கு வேறொன்றும் இல்லை. அவைகளையும் நீர் விரும்பினால் ஒரே நொடியில் தந்துவிடுகிறேன். ஆனால்..... முடியாது;

ஸப் ஸீத் ப்ரிய மோஹிம் ப்ராண் கீ நாயீம்
ராம் தேத் நஹீம் பனயீ குஸாயீ

"எனக்கு என் நான்கு மைந்தர்களும் உயிருக்கு நிகரானவர்கள். முனிவரே, இராமனை என்னால் தர முடியாது."

கஹம் நிசிசர் அதி கோர் கடோரா
கஹம் சுந்தர்சுத் பரமகிசோரா!

“ஹூம் ; மகா கோரமான கொடிய அரக்கர்கள் எங்கே? பச்சைப்பசுங் குழந்தை, அழகன் என் ராமன் எங்கே?

இங்கும் கதைப் போக்கில் துளஸி ஓர்பெரிய மாறுதல் செய்திருக்கிறார். வால்மீகி, கம்பர், விசுவாமித்திரர், வேறு. இவர் விசுவாமித்திரரது குணமே வேருகத் தென் படுகிறது. அதைப் பின்னல் காட்டுவோம்.

மூன்று ராமாயணங்களிலும், வரும் விசுவாமித்திர மாமுனிவர் அரசன் “முடியாது” என்று மறுத்த பின் என்ன செய்கிறார், சொல்கிறார் என்பவற்றை இனி பார்ப்போம்.

விசுவாமித்திரரின் சாந்தமான பதில்

தஸ்ய தத் வசனம் ச்ருத்வா விசுவாமித்ரோப்யபாஷத விசுவாமித்திரரின் சாந்தமான பதில் “அரசன் அவ் வண்ணம் சொல்லக் கேட்ட முனிவர் கூறினர்.

## அரக்கர் விவரம்

புலஸ்த்ய வம்சப்ரபவோ ராவணோ நாம
ராட்சஸ;!
ஸப்ருஹ்மணு தத்த வரஸ் த்ரைலோக்யம்
பாததேப்ருசம்;!
மகாபயோ மகா வீர்யோ ராட்சஸைர்
பஹூபிர் வ்ருத;!
ச்ருயதே ஹி மகா வீர்யோ ராவணோ
ராட்சஸாதிப;!!
ஸாட்சாத் வைச்ரவணப் ராதா புத்ரோ
விச்ரவஸோ முனே;!

யதர் ஸ்வயம் நயஞ்ஞஸ்ய விக்ன கர்த்தா
மகாபல :!!
தேன ஸஞ்சோதிதௌ த்வௌது ராட்சசௌ
ஸமகா பலௌ
மாரீசஸ்ச சுபாகுஸ்ச யஞ்ரு விக்னம்
கரிஷ்யத : !
இத்யுக்தோ முனிஞ தேள ராஜோவாச முனிம்ததா!!

பொருள்

புலஸ்திய வம்சத்தில் பிறந்தவனும் ராவணன் என்று பெயர் கொண்டவனுமான அரக்கன் ஒருவன் இருக்கிறுன் அவன் பிரும்மா தந்த வரத்தின் செருக்கால் மூவுலகையும் மிகத் துன்புறுத்துகிருன் மகா பலமும் சக்தியும் பொருந்தியவன் சாட்சாத் குபேரனுக்கு தம்பி. விச்ரவஸ் முனிவரின் பிள்ளை. அவன் தானே நேரில் வராதபோது இவ்வண்டு அரக்கர்களைத் தூண்டிவிட்டு இடையூறு விளை விக்கிருன். அரக்கர்களின் பெயர்கள், மாரீசன் சுபாகு என்பன. என்ருர் முனிவர்.

## அரசன் மறுமொழி கூறிஞன்

ராவணன் பெயர் கேட்டதுதான் தாமதம் அரசன் தலைகீழாகப் புரண்டு விட்டான். வாக்குறுதியை வெளிப் படையாகவே காற்றில் பறக்கவிட்டான்.

### தர முடியாது, போ :

சுலோகம்

நஹி சக்தோஸ்மி ஸங்க்ராமே ஸ்தாதும் தஸ்ய
துராத்மன :!

ஸத்வம் ப்ரஸாதம் தர்மஞ்ஞ குருஷ்வ மம
புத்ரகே !!
தேவ தானவ கந்தர்வா யக்ஷா : பதக
பன்னகா :
ந சக்தா ; ராவணம் ஸோடும் கிம் புனர் மானவா
யுதி !!

அந்தக் கயவனுக்கெதிராக என்னுலேயே நிற்க முடியாது ; ஆதலால், அறமுணர்ந்தவரே, என் மகனிடம் கருணை காட்டுங்கள்.

அமரர்கள், அரக்கர்கள் , கந்தருவர்கள், யக்ஷர்கள் நாகர்கள், பட்சிராஜர்கள் முதலிய உயர் இனங்களே இராவணனுக்கு எதிராக யுத்த முனையில் நிற்க முடியாதே பின், மனிதர்கள் எந்த மூலை?

ஸ ஹி வீர்யவதாம் வீர்யம். ஆதத்தே யுதி
ராட்சஸ:
தேன சாஹம் ந சக்னேமி ஸம்யோத்தும் தஸ்ய
வா பலை :
ஸபலோ வா முனிச்ரேஷ்ட ஸஹிதோ வா
மமாத்மஜை;

அந்த அரக்கன் வீராதி வீரர்களின் வீரத்தனத்தையும் போர் முனையில் பறித்துவிடுவான். அவனுடனே அவனது படைகளுடனே நான் எனது சைன்யத்துடனே மைந்தர் களுடனே சேர்ந்தும் கூட போர் புரிய இயலாது.

மாட்டவே மாட்டேன்

கதமப்யமரப்ரக்யம் ஸங்க்ராமாணும் அகோவிதம்
பாலம் மேதனயம் ப்ரும்மன் நைவ தாஸ்யாமி
புத்ரகம்.

அத காலோபமௌ யுத்தே ஸுதௌ ஸுந்தோப
ஸுந்தயோ :!
யஞ்ஞ விக்னகரௌ தௌ தே நைவ தாஸ்யாமி
புத்ரகம்!;!

ஆதலால், தேவ குமாரனுக்கு ஒப்பானவனும், போர் முறைப்பயிற்சி அற்றவனும், இளைஞனும் ஆகிய என் மைந்தனை, என் குழந்தையைத் தரவே மாட்டேன்.

யுத்தத்தில் யமனைப் போல் விளங்குபவர்களும் சுந்தோப சுந்தர்களின் பிள்ளைகளுமாகிய மாரீசனும் சுபாகுவும் தான் தங்களுக்கு இடையூறு செய்பவர்கள் என்றால் என் மகனைத் தரவே மாட்டேன்.

மாரீசஸ்ச சுபாகுஸ்ச வீர்யவந்தௌ சுசிட்சிதௌ;!
தயோரன்யதரேணஹம் யோத்தாஸ்யாம்ஸ
ஸஸிஹ்ருத்கண;!!

மாரீசனும் சுபாகுவும் வீரர்கள், நிபுணர்கள், பயிற்சி பெற்றவர்கள். அவர்களுள் ஒருவனுடன் நான் சேனையுடன் வந்து போர் புரிகிறேன்;

இவ்விதமாகச் சுய நலமும், அன்பும் குறுக்கிட அரசன் தன் வாக்குறுதியை மீறி அறத்தையும் மறந்து அச்சத்தையும் துறந்து பதிலளித்தான். ஆராயாது உறுதி மொழி தந்ததின் பலன்.

முனிவரின் கோபக்கனல் கொழுந்து,

இதி நரபதி ஜல்பனத்து விஜேந்திரம்
குசிக சுதம் சுமகான் விவேச மன்யு ;!
சுஹுத இவ மகே (அ)க்னி ராஜ்ய ஸிக்த
ஸம பவதுஜ்ஜ வலிதோ மகர்ஷி வன்னி :

இவ்விதம் அரசன் கூறவே, குசிகர் மைந்தர் கடுங் கோபம் அடைந்தார். நன்கு வளர்க்கப்பட்ட ஓம குண்டத்தில் நெய்யை வாரி ஊற்றி ஆகுதி செய்தாற்போல் முனிவரின் கோபக் கனல் கொழுந்து விட்டெரிந்தது.

## கோபத் தீ

அரசனுடைய, மகவாஞ்சையினுல் தழு தழுத்த குரலேயும் பதிலேயும் கேட்ட முனிவர் அரசனேப் பார்த்துக் கூறினர்.

## விசுவாமித்திரர்

பூர்வம் அர்த்தம் பிரதி சுருத்திய பிரதிஞ்ஞாம் ஹாது
மிச்சஸி;!
ராகவாணும் அயுக்தோ(அ)யம் குலஸயாஸ்ய
விபர்யய :
யதீதம் தே க்ஷமம் ராஜன் கமிஷ்யாமி யதாகதம் !!
மித்யா பிரதிஞ்ஞ ; காகுஸ்த சுகீபவ ஸ பாந்தவ !

முதலில் 'வாக்குறுதி யளித்து, சத்தியம் செய்து கொடுத்து விட்டு இப்பொழுது அதைக் கை விட விரும்பு கிருய் ; அரசே, இது ரகு குலத்துக்கும் தகாது ; உனக்கும் அழகல்ல ; உன் குலத்துக்கும் நேர் எதிரிடையான செய்கை. விபரீதமாக இருக்கிறது உன் போக்கு. இது உனக்கு சரிதான் என்ருல் நான் வந்த வழியே போகிறேன்· நீ உன் சுற்றத்தாருடன் நன்ருய் இரு ;

தஸ்ய ரோஷ பரீதஸ்ய விசுவாமித்திரஸ்ய தீமத;!
சசால வசுதா க்ருத்ஸ்ஞ விவேச ச பயம் சுரான்!!

அப்படி விசுவாமித்திரர் கோபம் கொள்ளவே பூமி முழுவதும் நடுங்கி ஆடியது. தேவர்களைப் பீதி பிடித்துக் கொண்டது.

## கம்பர் முனிவர்

என்றனன் என்றலும் முனிவோ டெழுந்தனன் மண்
படைத்த முனி இறுதிக் காலம்
அன்றெனவாம் என இமையோர் அயிர்த்தனர் மேல்
வெயில் காந்த தங்குமிங்கும்
நின்றனவுந்திரிந்தன ; மீங்வந்த கொழுங்கடைப் புருவ நெற்றிமுற்றச்
சென்றன வந்தன நகையுஞ் செவந்தன கண், இருண்டன போய்த் திசைகள் எல்லாம்

ஊழித் தீயோ ?

என்று அரசன் சொல்லக் கேட்டதுதான் தாமதம், விசுவாமித்திர முனிவர் எழுந்தார். "சரி பூமியைப் படைத்த பிரும்ம தேவனது முடிவுக்காலமா ? இது என்று தேவர்கள் சந்தேஹித்தனர். ஆகாயத்தில் சூரியன் மறைந்தான். இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் உள்ள அசையாப் பொருள்களும் சுழன்றன. செழுமையாகிய புருவக் கடைகள் நெற்றி முழுவதும் வியாபித்தன. சிரிப்பும் வந்தது ; கண்கள் சிவந்தன. திக்குகள் எல்லாம் இக் கோபத்தீயில் உண்டான புகையால் இருண்டு விட்டன.

## துளஸி

இக்கட்டத்தில் வால்மீகியும் கம்பரும் விசுவா மித்திரரின் கடுங்கோபத்தையும், அதனால் சகல சராசர

ஜகத்துக்கும் ஏற்படும் அலங்கோல நிலையை வர்ணித் திருக்க ஸ்ரீ துளஸி மீண்டும் மாறுபடுகிறார். துளஸியின் முனிவர் சாந்தமாக இருப்பது மட்டுமின்றி அரசன் சொற் கேட்டு ஆனந்தம் அடைகிறார்.

சௌபாயீ

சுனிந்ருப்கிரா ப்ரேமரஸ் ஸானி
ஹ்ருதய் ஹர்ஷ மானா முனி க்யானி!!

அரசனது அன்பு சொட்டும் சொற்களைக் கேட்ட ஞானி விசுவாமித்திரர் மனதுக்குள் சந்தோஷப்பட்டார்.

ஸ்ரீ துளஸி தாஸர் இங்கு புரட்சிகரமான, துணிகரமான மாறுதல் செய்திருக்கிறார். அரசன் மனதை அணுவளவும் பிசகாது நன்கறிந்திருந்த முனிவர் அவனது புத்ர வாஞ்சையைக் கண்டு பூரிக்கிறார். வால்மீகியும் கம்பரும் காட்டும் விசுவாமித்திரர். மற்ற எல்லா குணங்களிலும் சிறந்திருந்தாலும், மகா அகங்காரி. வித்யா கர்வம், தபோ கர்வம், நிக்ரஹ அனுக்ரஹ சக்தி கர்வம், லோக மான்யதா கர்வம் யாவும் ஒன்று சேர்ந்து அவரது இயற்கையான ராஜ வம்ச குணமாகிய ராஜஸ சுபாவத்துக்கு, க்ஷத்ரிய தேஜஸுக்குத் தூபம் போடு கின்றன. அவர் கற்று உணர்ந்தார்: ஆனால் அடங்க வில்லை. தவம் செய்து உயர்ந்தார்: ஆனால் "அஹம்" அவரை முழுவதும் விடவில்லை. சூரிய காந்தக்கல் சூரியன் ஒளியைப் பொறுக்காது. தன் ஒளியைக் கிளப்பித்தீய்ப் பதுபோல அவர், பிறர் பிரதாபத்துக்கு ஒடுங்கவோ, ஒதுங்க வோ மாட்டார், எதிர்ப்பார். எது வரினும் எதிர்ப்பார். ரௌத்ராகாரமான கோபமே விசுவாமித்திரர் என்பது முதல் நூல் எழுதிய வால்மீகியும் வழி நூல் இயற்றிய கம்பரும்

காட்டும் சித்திரம். ஆனால் எத்தனையோ இடங்களில் கம்பர் வால்மீகியில் இருந்து வேறுபட்டுத் தனது மேதா விலாசத்தினால் மெருகு கொடுத்திருப்பது போலத் துளஸி இங்கு வேலை செய்கிறார். இதுவரை காட்டப்பட்டு, ஒப்புக் கொள்ளப்பட்ட விசுவாமித்திர சித்ரத்தை தனது நூலில் சற்று மாற்றி அமைத்திருக்கிறார். துளசி தீட்டும் விசுவாமித்திரரோ அடக்கமே உருவெடுத்து உபகாரி. அவர் சந்த்ரகாந்தக்கல் தண்மையையும், தண் ஒளியும் தருபவர். வால்மீகியும் கம்பரும் காட்டும் விசுவாமித்திரரின் அகங்காரத்துக்கு அடிப்படைக்காரணம் சுய கௌரவம். இது ஓர் உயர்ந்த உணர்ச்சி. ஆனால் துளஸியின் முனிவரோ அதையும் கடந்த ஞானி. முன்னவர் ராஜஸி, பின்னவர் சாத்துவிகி. முன்னவர் பொறுக்க மாட்டார் அநீதி, அக்கிரமம், வஞ்சனை, பொய் இவைகளைப் பொறுக்கவே மாட்டார். கண்ட இடத்தில் கண்ட துண்டமாக வெட்டுவார். சின்னபின்னமாகச் சீவுவார். பின்னவரோ இவைகளைக் கண்ட இடத்து வருந்துவார் : திருத்த வழிதேடுவார். இவர் பொறுமையே வடிவானவர். முன்னவர் வீரர் ; வெற்றி வீரர் ; பின்னவர் தீரர், தயா-தீரர். ஆகையால்தான் இந்த வேறுபாடு. இது நிற்க.

## வசிஷ்டர் குறுக்கீடு

த்ரஸ்தரூபம் து விஞ்ஞாய ஜகத் ஸர்வம் மகான்
ருஷி:!
ந்ருபதிம் சுவ்ரதோ தீரோ வசிஷ்டோ
வாக்யமப்ரவீத்!

இவ்விதம் சராசர ஜகத்து நடு நடுங்குவதைக் கண்ட மகர்ஷி தீரரான வசிஷ்டர் அரசனைப் பார்த்துக்கூறினார் :-

## அறத்தைக் கைவிடாதே

இக்ஷ்வாகூணும் குலேஜாத : ஸாட்சாத்தர்ம
இவாபர :!
த்ருதிமான் சுவ்ரத : ஸ்ரீமான் ந தர்மம் ஹாதுமர்
ஹஸி:!

இஷ்வாகு வம்சத்தில் பிறந்த நீ' சாட்சாத் தர்மமே வடிவெடுத்து வந்தவன் போன்ற நீ, தைரிய சாலியான நல்விரதம் பூண்ட செல்வனாகிய நீ, தர்மத்தைக் கை விடலாகாது.

த்ரிஷுலோகேஷு விக்யாதோ தர்மாத்மா இதி ராகவ!
ஸ்வதர்மம் பிரதி பத்யஸ்வ நா அ தர்மம் வோடுமர்
ஹஸி!!

மூவுலகிலும் "தர்மாத்மா" என்று பெயர் பெற்றவன் நீ. உன் சொந்த, உனக்குரிய தர்மத்தைக் கைக்கொள். அதர்மத்தை சுமக்காதே.

## இராமனை விடு

சம்ஸ்ருத்யைவம் கரிஷ்யாமீத்ய குர்வாணஸ்ய ராகவ!
இஷ்ட பூர்த்தவதோ பூயாத் தஸ்மாத் ராமம் விஸர்ஜய!!

"இவ்விதம் செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டு விட்டு செய்யாமல் இருப்பவனை "நம்பிக்கைத் துரோகம்" என்று பாவம் பற்றிக் கொள்ளும், ஆகையால் இராமனை விடு!!

## விசுவாமித்திரர் வீரப் பிரதாபம்

ஏஷவிக்ரஹவான் தர்ம ; ஏஷ வீர்யவதாம் வர:!
ஏஷபுத்யாதிகோ லோகே தபஸஸ்ச பராயணம்!!
ஏஷோஸ்த்ரான் விவிதான் வேத்தித்ரைலோக்யே
ஸசராசரே!
நைனமன்ய : புமான் வேத்தி நச வேத்ஸ் யந்தி
கேசன!!
நதேவா : நர்ஷய : கேசின் நாசுரா : ந ச
ராட்சஸா:
கந்தர்வ யட்சப்ரவரா ; ஸ கின்னர மகோரகா:!!

இவர் அறமே வடிவெடுத்த மூர்த்தி : இவர் வீரர்களுள் தலை சிறந்தவர் ; இவர் மிகுந்த அறிவாளி; உலகில் இவரே தவத்துக்கு இருப்பிடம். அசைவன அசையாதன நிரம்பிய இம் மூவுலகிலும் பல படைக் கலங்களில் வல்லுனர் இவரே. இவரது மகிமையை, பெருமையை என்னைத் தவிர வேறு யாரும் உள்ள படியே உணர்ந்தவர் இல்லை. உணரவும் மாட்டார்கள் : தேவர்களோ, ரிஷிகளோ, அசுரர்களோ, அரக்கர்களோ, கந்தர்வர்களோ, இயக்கர்களோ, கின்னரர்களோ, நாகர்களோ யாரும் உணரவல்லர் அல்லர்.

## படைத் திறன்

ஸர்வாஸ்த்ராணி ப்ருசாஸ்வஸ்ய புத்ரா : பரம
தார்மிகா;!
கௌசிகாய புரா தத்தா யதா ராஜ்யம் ப்ரசாஸதி!!

அப்பனே இக்கௌசிகர் அரசாட்சி செய்து வந்த காலத்தில், பரம .தர்மவான்களான, அஸ்த்ர ரூபமான

ப்ருசாஸ்வர் என்பவரின் மைந்தர்கள் முன்பு இவருக்கு அளிக்கப்பட்டனர்.

ப்ருசாஸ்வர் என்பவரின் தூய குமாரர்கள் தெய்வீக படைக்கலன்கள் ஆனுர்கள். அவ்விதம் மாறிய திவ்யாஸ்திரங்களை விசுவாமித்திரர் பெற்றுக்கொண்டார். ஆகையால் அஸ்திரங்கள் தவசிகள் என்று அறி.

## அஸ்திரங்கள் வரலாறு

தே (அ) பி புத்ரா : ப்ருசாஸ்வஸ்ய ப்ரஜாபதி சுதா
சுதா:।
நைகரூபா மகா வீர்யா : தீப்தி மந்தோ
ஜயாவஹா:॥

பல வடிவங்கள் எடுக்க வல்லவர்களும், மிகுந்த வீரம் நிறைந்தவர்களும், ஒளி விடுபவர்களும், வெற்றி வாகை சூடுபவர்களும் ஆகிய இந்த ப்ருசாஸ்வ குமாரர்கள், தட்சப்பிரஜாபதியின் புதல்விகளின் மைந்தர்க்ள்.

### ஜயா சுப்ரபா

ஜயா ச சுப்ரபா சைவ தக்ஷகன்யே ஸுமத்யமே!
தே ஸுவாதே அஸ்த்ர சஸ்த்ராணி சதம் பரம
பாஸ்வரம்॥

ஜயா, சுப்ரபா என்ற இருவரும் தட்சப்ரஜாபதியின் குமாரிகள். துடி இடை அழகிகள் ஆன இவ்விருவரும் சிறந்த ஒளிவீசும் நூறு அஸ்திரங்களையும் "மந்திர உச்சாடனம் செய்து விடப்படும் தெய்வீகபடைக்

கலங்கள் ! சஸ்திரங்களையும் (மந்திரமின்றி விடுபவை) பெற்றார்கள். (ஆக தட்சப் பிரஜாபதியின் பேரர்கள் இவர்கள் என்பது கருத்து).

ஜயா குமாரர்கள்

பஞ்சாசதம் சுதான் லேபே ஜயா நாம பரான்புரா!
வதாயாசுர ஸைன்யானும் அமேயான்
காமரூபிண:!!

இவர்களுள் ஜயா என்பவள், அசுரப்படைகளை அழிப்பதற்காக, பரர்கள் என்று பெயர் கொண்ட அளவிடலரிய ஆற்றல் வாய்ந்த, நினைத்த வடிவம் எடுக்க வல்ல புத்திரர்களை அடைந்தாள். இவர்கள் ஐம்பது பேர்கள்.

சுப்ரபா குமாரர்கள்

சுப்ரபா ஜனயச்சாபி புத்ரான் பஞ்சாசதம் புன :!
ஸ்ம்ஹாரான் நாம துர்த்தர்ஷான் துராக்ராமன்
பலீயஸ :!!

சுப்ரபாவும் ஸம்ஹாரர்கள் என்று பெயர் கொண்ட பக்கத்திலேயே அண்ட முடியாத பராக்ரம முடைய, பலசாலிகளான, யாராலும் ஜயித்தற்கரிய ஐம்பது குமாரர்களை அடைந்தாள்.

## முனிவர் திறமை

தானி சாஸ்த்ராணி வேத்யேஷு யதாவத்
குசிகாத்மஜ :!
அபூர்வாணும் சஜனனே சக்தோ பூயஸ்ச
தர்மவித் !,

அந்தப் படைக்கலங்கள் யாவற்றையும் முறைப்படி உபயோகிப்பதை இவர் நன்கு அறிந்தவர். அதமட்டு மல்ல. அதுபோன்ற அதைவிட உயர்ந்த அஸ்திரங்களைத் தானே சிருஷ்டிக்கவும் வல்லவர்.

தேஜஸ்ய முனி முக்யஸ்ய ஸர் வக்ஞஸ்ய
மகாத்மன :!
ந கிஞ்சிதப்யவிதிதம் பூதம் பவ்யம் ச ராகவ

ஏ, தசரதா ! இவர் சிறந்தவர் ; யாவுமறிந்தவர் ; மகாத்துமா ; முக்காலமும் நடந்ததும், நடக்கப் போவதும் யாவும் உணர்ந்தவர்.

ஏவம் வீர்யோ மகா தேஜா விசுவாமித்ரோ மகா
தபா ;!
ந ராமகமனே ராஜன் சம்சயம் கந்துமர் ஹஸி :!!

## சந்தேகப்படாதே

இவ்விதமான மகிமையும் பராக்கிரமும் பொருந்தியவர் இந்த மகா தபஸ்வியாகிய விசுவாமித்திரர். ஆதலால், அரசே, இராமன் அவருடன் போவது குறித்து நீ சந்தேகப்பட நியாயமில்லை.

## வசிஷ்டர் கொடுத்த சூடு

தேஷாம் நிக்ரஹணே சக்த : ஸவயம் ச குசிகாத்
மஜ !:
தவ புத்ர ஹிதார்த்தாய த்வாம் உபேத்ய
அபியாசதே !:

## பிச்சை உன்மகன் நன்மைக்கே :

குசிகர் மைந்தராகிய இவர்தானே அவ்வரக்கர்களை வெல்லக்கூடிய வல்லவர். உன் மகனுக்கு நன்மை புரிவதன் பொருட்டே உன்னிடம் வந்து பிச்சை கேட்கிறார்.

இச் சிறு சுலோகம் பல பொருள்களை உணர்த்து கிறது. இவர் பிச்சை கேட்கவில்லை. கேட்கக்கூடியவரும் அன்று. இவரால் பிரும்ம சிருஷ்டியே செய்ய முடியும் என்றால் எதிரியை வெல்லுவதுதானா பிரமாதம், அது ஒரு வியாஜமே தவிர வேறல்ல. முக்கியமாக அவர் உன் மைந்தனுக்கு நலம் புரிய எண்ணுகிறார். அதை உணராமல் பிதற்றாதே உஷார் என்றும் இத்தனையையும் சொல்லாமல் சொல்லுகிறது இரண்டாவது வரி. அதிலுள்ள அர்த்த புஷ்டியும் பாவமும் அறிஞர்கள் உணர்ந்து உணர்ந்து ரசிக்கத்தக்கன.

" மாட்டேன் " என்று அலறிய மன்னனை " விடு " என்று சாட்டையால் சொடுக்குகிறார் குலகுரு. அவர் பிரும்ம ஞானி அல்லவா? அதனால் தானே முன்பு கௌ சிகரே வசிஷ்டர் வாயால் பிரும்ம ரிஷிப்பட்டம் பெற வேண்டும். பிரும்மதேவன் சொன்னால் போதாது என்று பிடிவாதம் பிடித்து அப்பட்டத்தை அப்படியே பெறவும் பெற்றவர். ஆதலால் விசுவாமித்திரரது பெரு மையை வசிஷ்டரைத் தவிர நன்கு உணர்ந்தவர்கள் வேறு யாரும் இல்லை என்பது முக்காலும் உண்மை. அதை வசிடரேதான் சொல்லி விட்டாரே :

" இவ்விதம் வசிஷ்டமுனி சொல்லவே, தன்னுணர்வு பெற்ற தசரதன் சந்தோஷத்துடன் பூரிப்புடன் ராமனை அனுப்ப இசைந்தான் " என்று முடிகிறது இருபத் தொன்றாவது சர்க்கம்.

கருத்த மாமுனி கருத்தை யுன்னி நீ
பொறுத்தி என்றவற் புகன்று நின் மகற்
குறுத்தலாகலா வுறுதி எய்து நாள்
மறுத்தியோ வெஞ வசிட்டன் கூறினன்.

இவ்வாறு முனிவன் கோபிக்கவும், அவரது கருத்தை யறிந்த வசிட்ட முனிவர் "நீ பொறுப்பாய்" என்று அவருக்குச் சொல்லிவிட்டுச் சக்கரவர்த்தியை நோக்கி "உன் மகனுக்குப் பிறரால் கிடைக்கக்கூடாத சித்திகள் கிட்டுகிற காலத்தில் நீ தடுக்கின்ருயோ?" என்று கேட்டார்.

இச்செய்யுள், "அட முட்டாளே" என்ற பாவத்தைப் பிழிந்து கொட்டுகிறது. அப்படி குலகுரு கூறவில்லைதான் ஆனல் அவரது "மறுத்தியோ?" என்ற கேள்வி ஒன்றே அரசனது செய்கை அறிவின்மை என்பதைச் சுட்டுகிறது

பெய்யுமாரியாற் பெருகு வெள்ளம் போய்
மொய் கொள் வேலைவாய் முடுகுமாறு போல்
ஐய நின் மகற்களவில் விஞ்சை வந்
தெய்து காலமின் றெதிர்ந்த தென்னவே

பெய்கின்ற மழையினல் பெருகுகின்ற வெள்ளம் போய் எவ்வளவு நதிகள் பெருகி வந்தாலும் தன்னிடத்தில் அடக்கிக் கொள்ளும் வல்லமை கொண்ட, கடலினிடம் விரைந்து பாய்வது போல, ஐயனே, உன் மகனுக்கு அளவில்லாத வித்தைகள் வந்து சேரும் காலம் இன்று நேரிட்டிருக்கிறது.

ஞானனந்த ரூபன் ஆதலால் ஸ்ரீ ராமபிரானைக் கடலாகவும், முனிவன் கற்பிக்கும் மந்திர ஜாலங்களை வெள்ளங்களாகவும் உவமிக்கிறார் கம்பர்.

இங்கு வால்மீகி வசிஷ்டர் கூற்றை அதிகமாகவும், கம்பர் இரண்டே செய்யுட்களிலும், துளஸி இரண்டே வரியிலும் வர்ணிக்கிறார்கள்.

## துளஸி

தப் வசிஷ்ட பகுவிதி ஸமுஜாவா
ந்ருப் ஸந்தேஹ நாஸ் கஹம் பாவா

அப்போது வசிஷ்டர் பலவிதமாக அறிவுறுத்தினார். அரசனது சந்தேஹம் ஒழிந்து விட்டது.

ஒரு சர்க்கம் முழுவதும் வாதாட வேண்டி வந்தது வால்மீகியின் வசிஷ்டருக்கு. கம்பரது வசிஷ்டர் மிதமாக "டோஸ்" கொடுக்கிறார். துளஸியின் வசிஷ்டரோ ஒரே வரியில் காரியத்தை சாதித்துவிடுகிறார்.

தாமரைக்கண்ணன், சாமளமணிவண்ணன், கோசலை குமாரன், கோதண்ட வீரன், குணசௌந்தர்ய *தீரன்*. அயோத்திபுரி நாதன் அம்புயப் பொற் பாதன், தம்பி இலக்குவனுடன் தந்தையின் சம்மதியும் குருமார்களின் ஆசியும் பெற்று வில்லும் அம்பும் கையுமாக விசுவாமித்திரரின் பின்னே காட்டுக்குப் புறப்படுகிறான். அந்த ராம சௌந்தர்யத்தை இந்த கவி மன்னர்கள் மூவரும் வெகு, வெகு அழகாக வர்ணிக்கிறார்கள்.

அச் செல்வனது அழகை அடுத்தபடியாகப் பார்ப்போம்.

# இராமன் புறப்பாடு

ததா வசிஷ்டே ப்ருவதி ராஜா தசரத சுதம்!
ப்ரஹ்ருஷ்ட வதனோ ராமம் ஆஜுஹாவஸ
லக்ஷ்மணம் !!

அவ்விதம் வசிஷ்டர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே மலர்ந்த முகமுடையவனாய் அரசன் தசரதன் இராமனுடன் இலக்ஷ்மணையும் கொலு மண்டபத்துக்கு அழைத்து வரும்படி கட்டளையிட்டான்.

கடைசியில் கொடுத்தான்

ஸ புத்ரம் மூர்த்னி உபாக்ராய ராஜா தசரத :
ப்ரியம் !
தமெள குசிக புத்ராய சுப்ரீதேனாந்தரா த்மனா!!

தாயும், தந்தையும், ஆசானும் ஆசியளித்து விடை கொடுத்து வாழ்த்தினர். பின்னர் அரசன் தன் அன்புக் குரிய மைந்தனை உச்சி முகந்து மனமகிழ்வுடன் கௌசிக ரிடம் தந்தான்.

கம்பர்

குருவின் வாசகம் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றனன் என்றலோடும் வந்
தருகு சார்ந்தனன் அறிவின் உம்பரான்.

குருவாகிய வசிட்டரது கருத்தை ஏற்றுக்கொண்டு சக்கரவர்த்தி தூய ஏவலாளர்களை நோக்கி "நீங்கள்

போய் செல்வத் திருமகள் மணாளன் ஆகிய இராமனை அழைத்து வாருங்கள்'' என்று கட்டளையிட்டான். ''அரசன் வரச் சொன்னான் வா'' என்றவுடனேயே நான்மறைக்கும் எட்டாது நிற்கும் வாலறிவன் ஆகிய இராமன் தன் தந்தையின் பக்கம் வந்து சேர்ந்தான்

## நம்பியும் தம்பியும்

வந்த நம்பியைத் தம்பி தன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டி நற்
றந்தை நீ தனித்தாயு நீ இவர்க்
கெந்தை தந்தனனியைந்த செய்கென்றான்.

வந்து நின்ற இளைஞனை இளவலோடு நான்கு வேதங்களுமுணர்ந்த முனிவருக்குக் காண்பித்து, ''இவர்கட்கு நல்ல தந்தையும், நீயே; ஒப்பற்ற தாயும் நீயே, தந்தையே நீர் கேட்டபடி இவர்களைத் தந்து விட்டேன். உமக்கு வேண்டிய வேலைகளை இவர்களைக் கொண்டு முடித்துக் கொள்ளுங்கள்.'' என்றான் தசரதன்.

## புறப்பட்டார்

கொடுத்த மைந்தரைக் கொண்டு சிந்தை முந்
தெடுத்த சீற்றம் விட்டினது வாழ்த்தி மேல்
அடுத்த வேள்விபோய் முடித்து நாமெனா
நடத்தன் மேயினான் நவைக் கண் நீங்கினான்.

அரசன் அப்படிச் சொன்னவுடன், முக் குற்றங் களுமற்ற முனிவன். கொடுக்கப்பட்ட மைந்தரைப் பெற்றுக்கொண்டு, மனத்தில் மூண்டெழுந்த கோபம் தணிந்து, வேந்தனை வாழ்த்தி விட்டு '' இனி வேள்விக்குப் போவோம் '' என்று புறப்பட்டான்.

## துளஸி

அதி ஆதர் தோஉ தனய் புலாயே!
ஹ்ருதய் லாயி பகுபாந்தி ஸிகாயே !!
மேரே ப்ரான் நாத் சுத் தோஊ!
தும் முனிபிதா ஆன் நஹி கோஊ!/

அன்புடன் அரசன் இரு மைந்தரையும் வரவழைத்தான். தன் மார்புறத் தழுவிக் கொண்டு பல புத்தி மதிகள் சொன்னான்

" முனி புங்கவரே, இவ்விருவரும் எனது உயிர். இவர்கட்கு நீயே தந்தை மற்று யாரும் இல்லை.

### தோஹா

சௌம்பே பூப் ரிஷிஹி சுத் பஹு-விதி தேயி அஸீஸ்
ஜனனீபவன் கயே ப்ரபு சயே நாயி பத் சீஸ் !!

இவ்விதம் சொல்லி ஆசீர்வதித்துத் தன் மைந்தரை முனிவரிடம் ஒப்புவித்தான் தசரதன். பிறகு இராமன் தனது பெற்ற தாயின் இருப்பிடம் சென்று வணங்கி விடை பெற்றுப் புறப்பட்டான்.

இவ்விதமாக, வசிஷடர் தலையீட்டினால், வர இருந்த அனர்த்தம் விலகியது. மூன்று நூல்களிலும் இந்தக் கட்டத்தில் இராம லட்சுமணர்களுக்கு விசுவாமித்திர முனிவரை அரசன் " இவர்கட்குத்தாயு நீ, தந்தையுநீயே " என்று சொல்லி விடையளித்ததாகவே காணப்படுகிறது.

பிறகு தென்றல் வீசியது ; விண்ணில் இருந்து மலர் மாரி பொழிந்தது, சங்குகள் ஒலித்தன ; பேரிகைகள் முழங்கின.

## மூவரும் போகும் முறை

விசுவாமித்ரோ யயௌ அக்ரே ததோராமோ
மகாயசா :।
காக பட்சதரோ தன்வீ தம்ச சௌமித்ரி
ரன்வகாத் ।

முதன் முதலில் 'விசுவாமித்திரர், அவர் பின் ஒளி மிகும் இராமன். அவனைத் தொடர்ந்து சுருண்ட குஞ்சியும் நீண்ட வில்லும் தரித்த சுமித்ரா குமாரன் என்று இம் முறையில் சென்றனர்.

## காடு செல்லும் காகுத்தர்களின் அழகு

## வால்மீகி

கலாபினௌ தநுஷ்பாணீ சோபயானௌ திசோ
த ச ।
விசுவாமித்ரம் மகாத்மானம் த்ரி சீர்ஷௌ
இவபந்நகௌ।।
ததா குசிக புத்ரம் து தநுஷ்பாணீ ஸ்வலங்
கிருதௌ ।
பக்த கோதாங்குவித்ராணௌகட்கவந்தௌ
ஸஹாத்யுதீ
குமாரௌ சாரு வபுஷௌ ப்ராதரௌ ராம
லட்சுமணௌ।।
அநுயாதௌ ச்ரியாஜுஷ்டௌ, தௌசோப
யேதாம் அநிந்திதௌ

ஸ்தாணும் தேவமிவா சிந்த்யம் குமாரௌ
இவபாவகீ!

வரிவில்லும், அம்பறுத்தூணியும் தோள்களில் தாங்கி பத்துத்திக்குகளிலும் ஒளி வீச. மூன்று தலைகளுடைய இரு பாம்புகள் போவது போல் இளைஞர்கள் விசுவாமித்திரருடன் போனார்கள்.

வில்லணிந்து ; துணி சுமந்து ; உடைவாள் அணிந்து, விரல் உறைகள் புனைத்த, அழகிற் சிறந்த வாலிபர்களாகிய இராம-லட்சுமணர்கள் இருவரும் பரமசிவனைப் பின் தொடர்ந்து செல்லும் அக்கினியிற் பிறந்த சிவகுமாரர்களைப் போல், முனிவருடன் போனார்கள்.

கம்பர்

வென்றிவாள் புடை விசித்து மெய்ம்மை போல்
என்றும் தேய்வுறுத் தூணியார்த்திரு
குன்றம் போன்றுயர் தோளில் கொற்ற வில்
ஒன்று தாங்கினன் உலகந்தாங்கினன்

வில் ஒன்று தாங்கினன்.

சகல அண்டங்களையும் தன் திரு வயிற்றில் ஒரு புடையே தாங்கவல்ல இராமபிரான் வெற்றிவாளை இடப் புறத்தில் கட்டி, சத்தியத்தின் தன்மை போல எக் காலத்தும் குறைவு படாத அம்பாறுத் தூணியை இடது தோட்புறத்தில் கட்டி இரு பெருமலைகள் போன்று உயர்ந்து விளங்கும் தன் புயத்தில் வெற்றியைத் தருகின்ற ஒரு வில்லையுந் தாங்கிச் சென்றான்.

அன்ன தம்பியுந் தானுமையனும்
மன்னனின்னுயிர் வழிக்கொண்டால் எனச்
சொன்ன மாதவற் றெடர்ந்த சாயைபோல்
பொன்னின் மா நகர்ப்புரிசை நீங்கினுன்.

புரிசை நீங்கினுன்

அப்படிப்பட்ட தம்பியுந் தானுமாக, தந்தையாகிய தசரத சக்கரவர்த்தியின் இனிய உயிரானது வழிக்கொண்டு நடந்தாற்போல, மேற்கூறிய விசுவாமித்திர முனிவனைத் தொடர்ந்து போகிற நிழலைப்போல, பொன்னுல் செய்யப்பட்ட அந்தப் பெருமை பொருந்திய அயோத்தியா நகரத்தின் மதிலைக் கடந்தான்.

சரயு எய்தினுர்.

வரங்கள் மாசறத் தவஞ் செய்தோர்கள் வாழ்
புரங்கணேரிலா நகர நீங்கிப் போய்
அரங்கினுடுவார் சிலம் பினன்னநின்
றிரங்கு வார்புனற் சரயு எய்தினுர்.

இவ்வாறு சென்ற முனிவர், இராமன், இலக்குவன், மூவரும், தவம் செய்த தேவர்கள் வாழ்கின்ற பதவிகள் ஒப்புவமை இல்லாத அயோத்திமா நகரத்தை நீங்கிச் சென்று, நாட்டிய அரங்கில் நின்று நடனமாடும் ரமணிகள் அணிந்திருக்கின்ற கால் சிலம்பின் ஓசைபோல அன்னம் நின்று ஒலிக்கின்ற, ஓடிவரும் நீரையுடைய சரயுநதியை அடைந்தார்கள்.

சோலை நண்ணினுர்.

கரும்புகால் பொரக் கமுகின் வார்ந்ததேன்
வரம்பை மீறிடு மருத வேலி வாய்

அரும்பு கொங்கையா ரெம்மலோதி போற்
சுரும்பு வாழ்வதோர் சோலை நண்ணினர்.

கரும்புகள் காற்றினுல் அலைக்கப்பட்டுப் பாக்கு மரங்களின் மீது மோத அதனுல் அக்கமுக மரங்களில் இருந்து ஒழுகிய தேன் ஆனது வரம்புகளைக் கடந்து பாய்கின்ற வளமிகுமருதநிலத்தில், அரும்புகின்ற ஆகத்தினை யுடைய ஆரணங்குகளின் அழகிய, மெல்லிய, கருத்தடர்ந்த கூந்தலைப் போன்ற ஜாதி வண்டுகள் வாழ்கின்ற ஒரு பூஞ் சோலையைப் போய்ச்சேர்ந்தார்கள்.

## துளஸி

### ஸோராடா

புருஷ சிம்ம தோஉ வீர், ஹரஷீ சலே முனிபய்
ஹரன் !
க்ருபா சிந்து மதிதீர், அகில விஸ்வ காரன் கரன் !!

சகல சராசர காரணர்களும், அறிவாளிகளும், தீரர்களும் கருணைக்கடல்களும் புருடர்களுள் சிங்கங்களும் ஆன இராம இலக்குமணர் இருவரும் முனிவருடன் சந்தோடமாகப் புறப்பட்டுப் போயினர்.

### அண்ணன், தம்பி அழகு

அருண் நயன் உர் பாஹுஃ விசாலா ! நீல ஜலஜ
தநுஸ்யாம் தமாலா !!
கடிபட் பீத் கஸேம் பர் பாதா ; ருசிர் சாப-ஸாயக்
துஹாம் ஹாதா !!
ஸ்யாம் கௌர் சுந்தர் தோஉ பாயி ; விசுவாமித்ர
மகா நிதி பாயீ !!

செந்தாமரைக் கண்களும், பரந்த மார்பும், இடுப்பில் பட்டாடையும், கையில் அம்பும், தோளில் வில்லுந் தாங்கி நிற்கும், நீலோற்பல மலர் போல் சியாமள நிறங்கொண்ட கோசலே குமாரனும் வெண்ணிறங் கொண்ட சுமத்திரா குமாரனும் ஆன இரு மாபெரும் புதையற் பொக்கிஷங்களே விசுவாமித்திர முனிவர் பெற்ருர்.

## எனக்காக வன்றே துறந்தான்

பிரபு ப்ரஹ்மண்ய தேவ் மைம் ஜாணு!
மோஹி நிதி பிதா தஜேஉ பகவாணு!!

"இராமன் தான் பரம் பொருள் என்று எனக்குத் தெரியும். எனக்காக, அந்தக் கருணைக்கடல் தன் அரும் தந்தையையும் துறந்து வந்திருக்கிருன்" இப்படி எண்ணிய வண்ணமே வழிநடந்தார் விசுவாமித்திரர்.

ஸ்ரீ வால்மீகியும் கம்பரும் இங்கும் ஒரே மாதிரிதான் படம் பிடித்திருக்கிருர்கள். துளஸி தாஸர்தான் மாறு படுகிருர். "தனக்காக இராமன் தந்தையைத் துறந்து வந்தான் என்று எண்ணிய முனிவர் மனமுருகுவதாக வட மொழி கவிகுல மன்னரும், தென் மொழிச் சக்கர வர்த்தியும் இங்கு கூறவில்லை. என்று குறிப்புக் கூடத் தரவில்லை. ஆனல் ஹிந்தி மொழி வேந்தர் இந்த விவரத்தை தெரிவிக்கிருர்.

மாறு படுவதே தொழிலாகவுள்ள துளஸி, ரஸனை சிறிதும் குன்ருமல், பாவம் மாருமல் மாறுபடுவது தான் வியப்பிலும் வியப்பாக இருக்கிறது. வால்மீகியும், கம்பரும் கூருதவைகளைக் கூறுகிருர். காணுதவைகளைக் கண்டு காட்டுகிருர். கேளாதவைகளைக் கேட்கிருர். இதுதான் மேதையின் அற்புதம் போலும்.

## தாடகை வதம்

மூக படாம் அணிந்து நிற்கும் மா பெரும் கரும் யானைகள் போல் தோன்றுகின்ற மேகங்கள் சூழ்ந்த நெடிய மலையுச்சியில் செங்கதிர்ச் செல்வனின் பச்சைக் குதிரைகள் ஏழும் சென்று மறைந்தன. அச்சமயம் இராமன் இலக்குவன், முனிவர் மூவரும் சரயு ஆற்றின் அக்கரை போய் அடைந்தார்கள்.

பாதி யோசனை தூரம் சென்றதும் விசுவாமித்திரர் "ராம" என்று இனிமையாக அழைத்தார் "கையில் நீரை எடுத்துக்கொள், குழந்தாய், நேரமாகிறது" என்றார் முனிவர்.

### பசி வெல்லும் பலையும்—அதிபலையும்

மந்த்ரக்ராமம் கிருகாண த்வம் பலாம் அதிபலாம் ததா!
ந சிரமோ ந ஜ்வரோ வாதே நருபஸ்ய விபர்யய!!
நச சுட்தம் பிரமத்தம் வா தர்ஷயிஷ்யந்தி நைர்ருதா!
ந பாஹ்வோ: ஸதிருசோ வீர்யே பிருதிவ்யாம்
அஸ்தி கஸ்சன !!
திரிஷு லோகேஷு வை ராம நபவேத்
ஸத்ருசஸ் தவ!
ந சௌபாக்யே ந தாட்சிண்யே ந ஞானே
புத்தி நிச்சயே!!
நோத்தரே பிரதி வக்தவ்யே ஸமோ லோகே
தவானக!
ஏதத் வித்யாத்வயே லப்தே பவிதா நாஸ்தி தேஸம:!!

### பலை, அதி பலை பிரபாவம்

பலா த்வதி பலா சைவ ஸர்வஞானஸ்ய மாதரௌ
க்ஷுத்-பிபாஸே நதே ராம பவிஷ்யதே நரோத்தம!!

பலாம் அதிபலாம் சைவ படத: பதி ராகவ!
வித்யாத்வயமதீயானே யசஸ்சாப்யதுலம் த்வயி!!
பிதாமகசுதே! த்வேதே வித்யே தேஜஸ் ஸமன்விதே!!
பிரதாதும் தவகாகுஸ்த ஸத்ருசஸ் த்வம் ஹி
தார்மிக!!
காமம் பகுகுணஸ் ஸர்வே த்வய்யேதே நாத்ரஸம்ஸய:!
தபஸா ஸம்பிருதே சைதே பகுரூபே பவிஷ்யத:!!

## பொருள்

பலே, அதிபலே என்று பெயர் கொண்ட இந்த மந்த்ரக் குழாத்தை நீ ஏற்றுக்கொள்வாயாக. உனக்கு ஓய்வு, அசதி, காய்ச்சல், இளைப்பு, களைப்பு, ஒன்றுமே தோன்ருது, துன்புறுத்தாது. நீ தூங்கினுலும் அயர்ந்திருந்தாலும் அரக்கர்கள் உன்னை ஒன்றும் செய்ய இயலாது, உனது புஜ பல பராக்ரமத்துக்கு ஈடாக இப்பூவுலகில் யாருமே கிடையாது. மூவுலகிலும் உனக்கு ஒப்புவமையே சொல்லக் கிடைக்காது.

அழகிலோ, அருளிலோ, அறிவிலோ, உறுதியிலோ பதில் கூறும் தர்க்க சக்தியிலோ உனக்கு ஈடு ஜோடு யாருமே இருக்க முடியாது. இந்த இரு வித்தைகளையும் கற்றுக்கொண்டுவிட்டால் பிறகு நீ ஒப்பற்றவனுகவே திகழ்வாய்.

## பலே, அதிபலே மாட்சி

பலேயும், அதிபலேயும் எல்லா அறிவுக் களஞ்சியங் களுக்கும் தாய்மார். பசியும் தாகமும் வழியில் உன்னைப் பாடுபடுத்தா. இவைகளை உருவேற்றினுல் உன் புகழ், கீர்த்தி, அதிகரிக்கும். இவ்விரண்டு வித்தைகளும் பிரும்ம

தேவரின் புதல்விகள். இவைகளைக் கைக்கொள்ள நீதான் தகுதி வாய்ந்தவன். உன்னை வந்தடைந்தபின் இவை இன்னும் நன்கு பிரகாசிக்கும் என்றார் விசுவாமித்திர மா முனிவர். உடனே இராமன் மலர்ந்த முகத்துடன் மந்தி ரங்களை ஏற்றுக்கொண்டான்.

## வித்தை பெற்ற வில் வித்தகன்

வித்யா ஸமுதிதோ ராம: சுசுபே பூரிவிக்ரம:!
ஸஹஸ்ர ரச்மிர் பகவான் சரதீவ திவாகர:!!

வித்தைகளைப் பெற்றுக்கொண்டதும் வீரம் செறிந்த அந்த ராமன் இலையுதிர் காலத்தில் ஆயிரம் ஒளிக்கதிர் களோடு கூடி விளங்கும் செங்கதிர்ச் செல்வன் போலத் திகழ்ந்தான். பிறகு, பெரிய வேலைகளின் பொறுப்பை முனிவர் ஏற்றுக்கொண்டார். மூவரும் அந்த சரயு நதிக் கரையில் இரவைக் கழித்தனர்.

## புல்லணைமேற் புனிதர்கள்

தசரத ந்ருப ஸூநு ஸத்தமாப்யாம்
　　த்ருணசயனே நுசிதே ஸஹோஷி தாப்யாம்
குசிகசுத வசோநு லாலிதாப்யாம்
　　சுகமிவ ஸா பபெள விபாவரீச !!

பொருத்தமற்ற, தங்கள் மேன்மைக்கு ஒவ்வாத, புல்லணைமேல் சோர்ந்து உறங்கும் தசரத ராஜ குமாரர் களுக்கு கௌசிக முனிவரின் இனிய பேச்சினால், தாராட்டிப் பாராட்டிச் சீராட்டப்பட்ட செல்வர்களுக்கு அன்றைய இரவு சுகமே கழிந்தது.

அநங்காசிரமம்

தேவு மாதவற்றெழுது தேவர் தம்
நாவுளாகுதி நயக்கும் வேள்வி வாய்
தாவு மா புகை தழுவு சோலைகண்
டியாவதீ தென்றனெவர்க்கு மேனின்றன்

எவருடைய அறிவிற்கும் எட்டாமல் நின்ற வேத விழுப் பொருளாகிய இராமபிரான், தேவர்களது நாக்கு விரும்பு கின்ற ஆகுதியினிடத்து உண்டாகும் ஓர் பெரும் புகை சூழ்ந்த சோலையைக் கண்ணுற்று முனிவரைத் தொழுது நோக்கி "இது என்ன" என்று கேட்டான்.

திங்கள் மேவுஞ்சடைத் தேவன் மேன் மாரவேள்
இங்கு நின்றெய்யவும் எரிதரும் நுதல் விழிப்
பொங்கு கோபஞ்சுடப் பூளை வியன்னதன்
னங்கம் வெந்தன்று தொட்டங்கனேயாயினன்

வாரணத்துரிவையான் மதனனைச் சினவுநாள்
ஈரமற்றங் கயிங்குகுதலா லிவணெலாம்
ஆரணத்துறையுளா யங்கநாடிதுவுமக்
காரணக் குறியுடைக் காமனச்சிரமமே.

சந்திரனைத் தலையில் தரித்த பரமன்மீது மாரன் இங் கிருந்து தான் மலர்க்கணை எய்தான். எய்யவே பரமனது நெற்றிக்கண் சற்றே திறந்து கிளம்பி மதனனைச் சாம்பலாக்கி விட்டது பூளைப்பூப்போல் அங்கம் வெந்தழிந்தான் பூங் கணையான். அன்றுமுதல் அநங்கன் (சரீரமற்றவன்) ஆகி விட்டான்.

கரித்தோல் போர்த்த கண்ணுதல் மதனனைக் கோபித் தபோது அவனது அங்கம் வெந்து இங்கு உதிர்ந்தபடியால்

இதற்கு அங்கநாடு என்று பெயர் வந்தது. அக்காரணத்தாலேயே இந்த இடத்துக்கும் அநங்காசிரமம் என்ற பெயரும் ஏற்பட்டது.

## போகும் வழி

இனி, போகும் வழியில், இராம-இலக்குமணர்கள் இளைஞர்கள் ஆகையால் புதிதாகப் பார்க்கும் இடம், பொருள் யாவற்றையும் "இது என்ன, அது என்ன" என்று கேட்பார்கள். விசுவாமித்திரர் ஒவ்வொன்றின் வரலாற்றையும் வெகு விரிவாக எடுத்துரைப்பார். இது தாடகை வதம், அகலிகை சாப விமோசனம் ஆகி மூவரும் மிதிலை சென்று தங்கும் வரை நடைபெறும். ஆகவே, கதைகள், உப-கதைகள், இங்கு மிக மலிந்து காணப்படும். நேயர்களுக்கு நன்கு தெரிந்த சாதாரணமாகப் பாரத நாட்டில் பிரசித்தி பெற்ற கதைகள், வரலாறுகள் எல்லாம் இங்கு இடம் பெறும்.

வால்மீகியின் இக் கதைகட்கு ஓர் முடிவே கிடையாதோ என்று எண்ணும் வண்ணம், வர்ணனை அபரிமிதமாகவுள்ளது. கம்பர் ஆங்காங்கு வெட்டி, ஒட்டி, சுருக்கி விளக்குகிறார். துளஸியில் தாடகா வதமே ஓட்ட ஓட்டமாக ஓடுகிறது என்றால் இக்கதைகளைப்பற்றிக் கேட்கவா வேண்டும்.

வால்மீகி இங்கு "கட்டை வண்டி வேகம்" என்று வைத்துக்கொண்டால் கம்பர் "மெயில் வேகம்" எனலாம். துளஸியோ உலகை ஒரு நொடியில் சுற்றிவரும் ஆகாய விமான "ஓட்டம்"தான். அல்லது வால்மீகி கதை சொல்கிறார் மெதுவாக: கம்பர் நாடகம் நடத்துகிறார் வேகமாக: துளஸி சினிமா காட்டுகிறார் படுவேகமாக என்றும் கூறலாம்.

வால்மீகி "இக்கதைகளை முடித்துவிட்டு மேலே முக்கிய கதைக்குப் போகமாட்டாரா" என்றும், கம்பர், "அடுத்தது என்ன சொல்வார்" என்றும், துளஸி, "ஏன் இத்தனை வேகம், மூச்சுவிட முடியாமல் திணற அடிக்கிருரே, கொஞ்சம் மெதுவாகப் போனால் தான் என்ன?" என்றும் படிப்பவர்களுக்குத்தோன்றுகிறது. இது இயல்பே.

மூவர் நடைகளிலும் உள்ள வேற்றுமையே ( காரணம். வால்மீகி மதயானை நடை போடுகிருர்; கம்பரோ பஞ்ச கல்யாணிக் குதிரைபோல் பாய்கிருர். துளஸியோ புள்ளிமான் குட்டிப்போல ஒரே துள்ளல்தான்.

இவ்வகையில் இக்கதைக்கோவையில் முதலாவது காமன் அழிந்த கதை வால்மீகியில் இது வெகு விரிவாகவும் கூறப்படுகிறது கம்பரில் மேற்படி இரு பாடல்களிலும் வர்ணிக்கப்பட்டுள்ளது. ஆனால், இக்கதை இக்கட்டத்தில் துளஸியில் இல்லை.

அதுவுமன்றி

துளஸியில் தாடகா வதத்துக்குப்பிறகே, பலை, அதிபலைகளை ராமன் ஏற்றுக் கொண்டதாக மாறுதல் காணப்படுகிறது.

"வித்யா நிதி கஹும் வித்யாதீனி" என்கிருர் துளஸி. வித்தைக் கடலுக்கு வித்தை புகட்டினுர் விசுவாமித்திரர்.

புல்லணையில் படுத்து உறங்கும் இராம இலக்குவர்களை விடிந்ததும் விசுவாமித்திர முனிவர் எழுப்பினுர்.

"கௌசல்யா சுப்ரஜாராம பூர்வாசந்தியா
ப்ரவர்த்ததே
உத்திஷ்ட நரசார்தூல கர்த்தவ்யம்தைவம்
ஆன்னிகம்"

கோசலை பெற்ற குலக் கொழுந்தே, ராமா, விடிந்து விட்டது, எழிந்திரு, மனிதரேறே, காலைக் கடன்களை முடிக்கவேண்டும். ரிஷியின் குரலைக் கேட்ட குமாரர்கள் எழுந்தனர், நீராடினர். காலைக் கதிரைத் துதித்தனர். பின்னர் புறப்படவும் தயாராயினர். போகும் வழியில் கங்கையும் சரயுவும் கலக்கும் சங்கமத்தைக் கண்டனர். அங்கு பல்லாயிர வருடங்களாகக் கடுந்தவம் புரியும் முனிவர்களின் ஆசிரமத்தைக் கண்டனர். அதைக் கண்ணுற்றதும் "இது யாருடைய இருப்பிடம்? இங்கு யார் வசிக்கிறார்கள்? அறிந்து கொள்ள மிகவும் ஆவல் உள்ளவர்களாக இருக்கிறோம்" என்றார்கள்.

இங்கு தான் ஆரம்பமாகிறது காமன் கதை. அவன் தவத்திலிருந்த பரம சிவனை மலர்க் கணையால் எய்ததும் அவர் கோபித்ததும், அவருடைய தூய நெற்றிக் கண் நெருப்பினால் மாரன் வெந்து விழுந்ததும், அப்படி அவன் விழுந்த இடமே - காமன் ஆசிரமமானதும் வர்ணிக்கப் படுகிறது.

இஹாத்ய ரஜனீம் ராம வஸேம சுபதர்சன<br>
புண்யயோஸ் ஸரிதோர் மத்யேதீச்வஸ தரிஷ்<br>
யாமஹே வயம்

"இன்றைய இரவை இந்தப் புண்ணிய நதிகளினிடையே கழிப்போம்" என்றார் முனிவர். இவர்கள் வந்திருப்பதை அறிந்த மற்ற முனிவர்கள் ஓடோடி வந்தனர். கௌசிகருக்கு அர்க்கியம், பாத்யம் கைகாலலம்ப நீர் கொடுத்து, விருந்துபசாரம் செய்து, பின்னர் இராம இலக்குமணர்களையும் உபசரித்தனர். விருந்துக்குப் பின் மூவரும் அளவளாவி மகிழ்ந்தனர்.

கதாபிராபி ராமாபி : அபிராமௌ நிருபாத்மஜௌ<br>
ரமயாமாஸ தர்மாத்மா கௌசிகோ முனிபுங்கவ :

அழகிற் சிறந்த அவ்விரு அரசிளங்குமாரர்களுக்கும் இனிய கதைகளைச் சொல்லி மகிழ்வித்தார் விசுவாமித்திரர். அடுத்து வருவது இந்திரன் சாபவிமோசனக் கதை.

## கம்பராமாயணம்

பற்றலா வேரோடும் பசையறப் பிறவி போய்
முற்ற வால் உணர்வு மேல் முடுகினர் அறிவுசென்

றுற்ற வானவனிருந்தியோகு செய்தனனெனிற்
சொற் றலாமளவதோ மற்றி தன் தூய்மையே

இருவகைப் பற்றும் ஆசையும் வேரும் வேரடி மண்ணு மில்லாமற் போக, பிறவியற்று முடிய, உண்மையான மெய்யறிவு மேலிட விளங்கும் தூய ஞானிகளின் உணர் விற் சென்று குடி கொண்டுள்ள பரம சிவனே, இங்கு சுகா சனத்தில் அமர்ந்து யோகம் செய்தான் என்றால், இவ் வாசிரமத்தின் தூய்மையை அளந்து சொல்லமுடியுமோ ?

என்றவந்தன னியம்பலு வியந்தவ்வயிற்
சென்றுவந்தெதிரெழும் செந்நெறிச் செல்வரோ

டன்றுறைந்தவர் கதிர்ப்பரிதி மண்டலமகன்
குன்றினின் றிவரலோர் சுடுசுரங்குறுகிறார்.

என்று விசுவாமித்திரர் கூற ; இருவரும் வியந்து,

தங்களை அன்புடன் எதிர் கொண்டுபசரிக்கும் தவச் செல்வர்களோடு அன்றைய தினம் அங்கிருந்து, பிறகு மறுநாள், கிரண மிகுதியையுடைய சூரிய மண்டலத்துக் குரிய ஆதவன் உதயகிரியில் இருந்து கிளம்பும் போது இவர்கள் ஓர் சுட்டு வெதும்புகின்ற பாலைவனத்தைப் போய் அடைந்தனர்.

## இனிப் பாலை நில வர்ணனை ஆரம்பம்

இங்கு கம்பர் கொஞ்சம் வேகமாகப் போகிறார். ஆனால் வால்மீகியோ பாலையை வர்ணிப்பதன் முன் கங்கையை வர்ணிக்கிறார். ஜில்லென்று குளிர்ந்திருக்கும் கங்கா வர்ணனையைத் தொடர்ந்து பாலை நில வர்ணனை வருவது இரண்டுக்கும் உள்ள கடும் வேற்றுமையை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

இங்கு துளஸியில் வர்ணனையே கிடையாது. ஆதலால் முதலில் வால்மீகியின் கங்கா - சரயு வர்ணனையையும் பிறகு பாலை நில வர்ணனையும் பார்ப்போம்,

விடிந்ததும், மறுநாட்காலை, விசுவாமித்திரரும் அரச குமாரர்களும் அந்த ஆற்றங் கரைக்கு வந்தனர். அங் கிருந்த தவச் செல்வர்களாகிய முனிவர்கள் ஓர் நல்ல படகைக் கொண்டு வந்து நிறுத்தி, " அரசிளங்குமாரர் களோடு இதில் ஏறிக்கொள்ளுங்கள். நேரமாகப் போகின்றது. உங்கள் பிரயாணம் இடையூறின்றி முடிவ தாக," என்றனர். " அப்படியே " என்று கூறி விசுவா மித்திர முனிவர் அவர்களுக்கு விடை கொடுத்தனுப்பி விட்டுப்படகில் பாலகர்களோடு ஏறிக்கொண்டார், சமுத் திரத்தை நோக்கி விரைகின்ற சரயுவைக் கடந்தனர் அவர்கள்.

### " அலை ஓசை "

தத : சுஸ்ராவ தம் சப்தம் அதி ஸம்ரபவர்தனம்
மத்யமாகம்ய தோயஸ்ய ஸகராம : கனீயஸா

அந்த இரு ஆறுகள் கூடுமிடத்துக்கு நடுவில் படகு வந்ததும் மிகப் பெரிய ஓசை ஒன்றுகேட்டது. அந்நதி

களின் நடுவே கரியநம்பி முனிவரைப் பார்த்து இள வலுடன் அப்பேரோசையைக் கேள்வியுற்று ; இது என்ன ஆரவாரம் ?

அதராம : ஸரின்மத்யே பப்ரச்ச முனிபுங்கவம்
வாரிணோ பித்யமானஸ்ய கிமயம் துமுலோத்வனி :

“ இது என்ன தண்ணீரின் தாங்க முடியாத ஆர வாரம் ” ? என்று கேட்டான்

இராமனது தாங்க முடியாத ஆர்வம் நிறைந்த கேள்வியைக் கேட்ட தவசி “ தச்ய சப்தச்ய நிச்சயம் ” அந்தப் பேரிரைச்சலின் காரணத்தை விளக்கினர்.

### சரயு பிறப்பு

கைலாஸ பர்வதேராம மனஸா நிர்மிதம்ஸர :
ஸரப்பிரவிருத்தா ஸரயூ : புண்யா பிரும்ம ஸரச்சுதா
தஸ்யாயமதுல : சப்தோஜான்னவீம பிவர்ததே
வாரி ஸம்க்ஷோபஜோ ராம ப்ரணமம் நி யத : குரு

இராமா கேள் : கைலாய மலையில் பிரும்மாவினல் உண்டு செய்யப்பட்ட ஓர் தெய்வீகப் பொய்கை இருக் கிறது. அதற்கு “ மானஸ ஸரோவரம் ” என்று பெயர். அத்தப் புண்ணியமயமான பூம்பொய்கையிலிருந்து பிறந்து வழிந்தோடி வருகிறது ஒரு ஆறு. மானஸரஸில் உற்பத்தி யாவதால் அந்நதியின் பெயர் ஸரயூ என்ருயிற்று. அச் சரயூ தான் அயோத்தியை அணைத்துக் கொண்டு ஓடு கிறது. அது இங்கே கங்கையுடன் கலக்கிறது. அதுதான் இந்தப் பேரோசை இதை வணங்கு என்ருர் முனிவர்.

உடனே அண்ணன் தம்பி இருவரும் வணங்கினர்கள். பிறகு தெற்கு பக்கக் கரைக்கு வந்து சேர்ந்தனர்.

## பயங்கரப் பாலை

வைனம் கோரஸங்காஸம் த்ருஷிட்வாங்ருபவராத்மஜ :
அவிப்தர கதமைக்ஷீவாக : பப்ரச்ச முனிபுங்கவம்

பார்க்கப் பயங்கரமாகிய அக் கொடிய பாலைவனத்தைக் கண்ணுற்ற இராமன் முனிவரைக் கேட்கலானான் :—

அகோவனமிதம் துர்க்கம் ஜில்லிகா கணநாதிதம்
பைரவைஸ்வாபதை: கீர்ணம் சகுந்தைர்தாருணாருதை :
நாநா ப்ரகாரைர் சகுனை : வாச்யச்பிர்பைரவஸ்வனை :
ஸிம்ம வ்யாக்ரவராகைஸ்ச வாரணைஸ்ஸோப
சோபிதம்
தலாஸ்வகர்ணககுபை : பில்வதிந்துக பாடலை :
ஸங்கீர்ணம் பதரீபிஸ்ச கிங்வேதத்தாருணம் வனம் ?

அ, ஆ, இதென்ன ? இக் கொடிய காடு "சிள்" என்னும் சுவர்க் கோழியின் இரைச்சலாலும், கடுமையாகக் கர்ஜிக்கின்ற காட்டு விலங்குகளின் பேரிரைச்சலாலும், பயங்கர ஆரவாரத்துடன் கூச்சலிடும் பெரிய பறவைகளாலும் நிறைந்து இருக்கிறது.

பற்பல விதமாகக் கூச்சலிடுகின்ற பயங்கரப் பறவைகள், சிங்கங்கள், புலிகள், யானைகள், பன்றிகள் எங்கு பார்த்தாலும் காணப்படுகின்றன.

தவம், அசுவகர்ணம், மருது, பில்வம், புளி, மாதுளை இலந்தை முதலிய வன விருக்ஷங்கள் அடர்ந்து படர்ந்து நிற்கும் இக் கொடிய கானகம் யாது ?" என்றான்.

கலிங்கத்துப் பரணியில் வரும் பாலை வருணனையும், காரைக்கால் அம்மையார் அருளிச் செய்துள்ள மூத்த

திருப்பதிகத்தையும் படித்துப் பார்த்தால், இங்குள்ள வருணனையின் ரஸம் நன்கு புலப்படும்.

"எட்டி இலவம் ஈகை சூரை காரை படர்ந்தெங்கும் சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி" என்றும், "முள்ளிதீய்ந்து முளரி கருகி மூலை சொரிந்துக்கு கள்ளிவற்றி வேனில் பிறங்கு கடுவெம் காட்டுள்ளே" என்றும், வருகிற இடங்கள் அநுபவிக்கத் தக்கவை.

## பாலை வருணனை

பரிதி வானவனிலம் பசையறப்பருகுவான்
விருதுமேற்கொண்டுலாம் வேனிலேயல்லதோர்
இருதுவேறின்மையால் எரிசுடர்க்கடவுளும்
கருதின் வேம் உள்ளமும் காணில்வேம் நயனமும்

சூரியன் பூமியை ஈரமின்றி ஒட்ட உறிஞ்ச விருதுக் கொடி கட்டியிருக்கிறான். கோடையைத் தவிர வேறு எந்தப் பருவமும் (ருதுவும்) அங்கு கிடையாது. ஆதலால் எரிகின்ற தீக்கடவுளே அப்பாலையை நினைத்தாலும் அவன் உள்ளம் வேகும், கண்டாலும் கண்கள் வேகும்.

## வேம், வேம், வேம்

படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவேம் முடியமூடிருளும் வான்முகடும்வேம்
விடியுமேல் வெயிலும் வேம் மழையும் வேம்
மின்னிளே
டிடியும் வேம் என்னில் வேறியாவைவே வாதவே

அப்பாலை நிலத்தின் வெப்பத்தை வாயால் கூறினாலும் சொன்ன நாக்கு முழுவதும் வேகும். உலகமுற்றும், மூடிக்கொள்கின்ற இருளும், அண்டமுகடும் (வான வெளிச்சுவர்) வேகும். இருள் நீங்கி விடிந்தால், சூரியனும் வெந்துபோவான். மேகங்களும் வேகும்: மின்னல் இடிகள் வேகும் என்றால் வேகாதவை வேறுயாவை?

## வீர நெஞ்சுபோல

விஞ்சுவான் மழையின் மேலம்பும் வேலும்படச்
செஞ்செவே செருமுகத்தன்றியே திறனிலா
வஞ்சர் தீவினைகளாம் மானமாமணி இழந்
தஞ்சினர் நெஞ்சுபோல் என்று மாருதரோ.

அம்பும் வேலும் தன்மேல் பட, இரத்த நதி பெருகும் போர்க்களத்தே போரிடத் திறமற்ற கோழைகளான வஞ்சகர்களின் வஞ்சனையினால் தங்கள் மானமென்னும் இரத்தினத்தை இழந்த உத்தம வீரர்களின் சுத்தமான நெஞ்சு வேவதுபோல வெந்ததுபாலை.

வஞ்சனையினால் மானம் பறி கொடுத்த மனிதர்களின் நெஞ்சுபோல பாலைவனம் கொதித்தது. என்ன அருமையான உண்மை.

Blow, blow, thou winter wind
Thou art not so unkind
As man's ingratitude.

என்னும் ஷேக்ஸ்பியரின் வாக்கியமும் சிந்திக்கத் தக்கது.

### பாலைவனப் பொருள்களின் மிகுதி

பேய் பிளந்தொக்க நின்றுவர் பெருங்கள்ளியின்
தாய் பிளந்துக்க காரகில் களுந்தழையிலா
வேய்பிளந்துக்க வெண்டரளமும் விடவரா
வாய்பிளந்துக்க செம்மணியுமே வனமெலாம்

பேய்கள் பிளந்தாற்போல நின்று உலருகின்ற பெரிய கள்ளி மரங்களின் தாய் மரங்கள், பிளந்து சிந்திக் கிடக்

கின்ற அகிற் கட்டைகளும் இலையில்லா துலர்ந்த மூங்கில்களும் பிளந்து சிந்தின வெண்முத்துக்களும், கொடிய விடப் பாம்புகள் தங்கள் வாய்களைப் பிளந்து சிந்தின செம்மாணிக்கங்களுமே, அப்பாலை முழுதும் நிறைந்து இறைந்து கிடந்தன ;

கள்ளியில் வெடித்த காரகில்கள், மூங்கிலில் வெடித்த வெண்முத்துக்கள், பாம்புகள்கக்கிய மாமணிகள் எங்கும் இறைந்து கிடந்தன, என்றால், எத்தனை எத்தனை கள்ளி மரங்கள், எத்தனை மூங்கிற் புதர்கள், எத்தனை விடப் பாம்புகள் என்று கணக்கிட்டுக் கொள்ளுங்கள். அத்துடன் அவ்வனத்தின் வெம்மையையும் சேர்த்து நினைத்துப் பாருங்கள்.

ஓடாது, ஓடாது, ஓடாது

பாருமோடாது நீடாதெனும் பாலதே
சூருமோடாது கூடாதரோ சூரியன்
தேருமோடாது மாமாகமீதேரினர்
காருமோடாது நீள்காலுமோடாதரோ

பூமி நீளாது, ஆகையால் அப்பாலைவனத்தை விட்டு ஓடாது. காளி அப்பாலை நில தேவதை, அவள்கூட ஓடாது நிற்க மாட்டாள், பெரிய ஆகாய வீதியில் சூரியனுடைய தேரும் ஓடாது. அதற்கு நேராக மேகமோடாது காற்றுமோடாது.

பூமி, பாவம் ஓடமுடியாது, காளியோ ஓடிவிடுவாள். சூரியன் நகர மாட்டான். மழையுங்கிடையாது, மேகமும் கிடையாது, காற்றுங் கிடையாது. சற்று இந்நிலைமையை நினைத்துப்பாருங்கள். ஆனால் வட இந்தியாவின் கோடையையனுபவித்தவர்களுக்கும் கம்பர் கூற்று எவ்வளவு அனுபவபூர்வமானது என்பது தெரியும்.

நாகரத்தினமா, பூமாதேவியின் இரத்தமா ?

கண்கிழித்துமிழ் விடக்கனல் அரா அரசுகார்
விண்கிழித்தொளிருமின்னனைய பண்மணி வெயில்
மண்கிழித்திட வெழும் சுடர் கள் மன் மகளுடற்
புண் கிழித்திட வெழும் குருதியே போலுமே.

கண்களை பிளந்து கொண்டு விஷாக்னியை கக்குகின்ற நாகராஜனுடைய நாகரத்தினமென்னும் மேன்மையுள்ள மாணிக்கக்கல்லின் காந்தியானது மேகத்தைப் பிளந்தெழும் மின்னல் போலமின்னும். அது பூமாதேவியின் உடல் கிழிந்து வெளிப்பட்ட இரத்தம் போல ஜொலிக்கும்.

பாலையில் வேலைகள்

புழுங்கு வெம்பசியொடு புரளும் போரரா ?
விழுங்க வந்தெதிரெதிர் விரித்த வாயின்வாய்
முழங்குதிண் கரிபுகு முடுகிமீமிசை
வழங்கு வெங்கதிர்சுட மறைவு தேடியே.

அந்நில வெப்பத்துக்காற்றுமல் யானைகள் நிழலைக் கருதி ஓடி வந்து அங்கு பசியொடு புரண்டுகொண்டிருக்கும் பெரிய பாம்புகளின் வாயுள் புகும்.

கனலரசு

ஏகவெங்கனலர சிருந்த காட்டினில்
காகமும் கரிகளும் கரிந்து சாம்பின
மாக வெங்கனலெனும் வடவைத் தீச்சுட
மேகமுங்கரிந்திடை வீழ்ந்த போலுமே.

ஒப்பு வேறில்லாத தீக்கடவுள் அரசு வீற்றிருக்கும் அக் காட்டில் காக்கைகளும் யானைகளும் வெந்து

ஒடுங்கின. கொடிய வடவாக்கினியானது சுடுவதால் மேகங்களும் கரிந்து கரியாகி வீழ்ந்தன போல் இருந்தன.

ஏய்ந்தவக் கனலிடை யெழுந்த கானற்றேர்
காய்ந்த கடுவனங்காக்கும் வேனிலின்
வேந்தனுக்கரசு வீற்றிருக்கச் செய்ததோர்
பாய்ந்த பொற்காலுடை பளிக்குப்பீடமே

அக்கனலிடை எழுந்த கனலாகிய பேய்த்தேரானது அக் கொடிய வனத்தைக் காக்கின்ற கோடையாகிய மன்னனுக்கு அரசு வீற்றிருப்பதற்காகச் செய்த பொற் காலுடைய பளிங்காதனம் போல இருந்தது.

பொரிபரற் படர்நிலம் பொடிந்துகீழுற
விரிதவிற் பெருவழி விளங்கித் தோன்றலால்
அரிமணி ப்பணத்தராவரசர் நாட்டிலும்
எரிகதிர்க்கினிது புக்கியங்கலாயதே

பொரிபரந்த கற்கள் சாம்பலாகி கீழுலகம் வரை விரிந்து வழியாவதானால் செம்மாணிக்கப் படத்தையுடைய நாக அரசர்களுடைய பாதாள லோகத்திலும் சூரியன் சுலபமாகச் சென்று உலாவினான்.

பூவின் மெல்லியர்

எரிந்தெழு கொடுஞ்சுரமினைய தெய்தலும்
அருந்தவனிவர் பெரிதள விலாற்றலைப்
பொருந்தினர் ஆயினும் பூவின் மெல்லியர்
வருந்துவர் சிறிதென மனத்தினேக்கினான்.

பற்றி எரிகின்ற இத்தகைய பாலைவனத்தில் முனிவன் இச்சிறுவர் வரம்பில்லாத வல்லமை உடையவராயினும் மலரினும் இனிய இயற்கையுடையவர்கள். ஆதலால் சிறிது வருந்துவார்கள் என்று நினைத்தான்.

## விஞ்சைகள் இரண்டு

நோக்கினவர்முக நோக்க நோக்குடைக்
கோக்குமரருமடி குறுகநான்முகன்
ஆக்கிய விஞ்சைகளிரண்டு மவ்வழி
ஊக்கின னவைய வருள்ளத்துள்ளினர்

உள்ளியகாலையி னூழித்தீயினை
எள்ளுறு கொழுங்கனல் எஞ்சும் வெஞ்சுரம்
தெள்ளுதன் புனலிடைச் சேறலொத்தது
வள்ளலு முனிவனைவணங்கிக் கூறுவான்.

அவ்வாறு எண்ணி அவர்கள் முகம் பார்த்தான், உடனே பேரழகுடைய அரச குமாரர்கள் தன் பாதத்தை நெருங்கலும், பிரும்ம தேவன் தனக்குபதேசித்த இரு மந்திரங்களையும் அவர்களுக்கு உபதேசித்தான்,

அம்மா நிதியான மந்திரங்களைச் சிந்தித்த மாத்திரத்தில் செழுமையாகிய தீயும் வலிகுறைகின்ற அக்கொடிய பாலை குளிர்ந்த பூ பொய்கை ஒத்து இருந்தது.

## ஸ்ரீ ராமன் கூறலானன்

சுழிபடு கங்கையங் தொங்கல் மௌலியான்
விழிபட வெந்ததோ வேறுதானுண்டோ?
பழிபடா மன்னவன் படைத்த நாட்டினுங்
கழிவதென் காரண மறிஞ கூறென்ருன்.

சுழிகளுண்டாகின்ற கங்காஜலத்தையும், கொன்றை மாலையையுமணிந்த சடைமுடியை உடைய பரமசிவனது நெற்றிக்கண் பார்வை பட்டதால் வெந்து போயிற்ரே? அல்லது வேறு காரணமுண்டோ? இந்நாடு இப்படியழிய என்ன காரணம் அறிஞரே, சொல்லுமென்ருன்.

## தாடகை வரலாறு

என்றலுயிராமனே நோக்கி யின்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள் கூற்றின் தோற்றத்தள்
அன்றியுமையிரு நூறுமையன்மா
ஒன்றிய வலியினள் உறுதிகேளெனு,

மண்ணுருத் தெடுப்பினுங் கடலை வாரினும்
விண்ணுருத் திடுப்பினும் வேண்டிற் செய்கிற்பாள்
எண்ணுருத் தெரிவரும் பாவமீண்டியோர்
பெண்ணுருக் கொண்டென திரியும் பெற்றியாள்.

பெருவரை யிரண்டொடும் பிறந்த நஞ்சொடும்
உருமுறழ் முழக்கொரு மூழித்தீயொடும்
இருபிறை செறிந்தெழு கடலுண்டாமெனின்
வெருவரு தோற்றத்தள் மேனி மானுமே.

சூடக வரவுறழ் சூலக்கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்
ஆடவர் பெண்மையையவாவுந் தோளிணுய்
தாடகை என்பதைச் சழக்கி நாமமே,

கன்னவிரேனிஞய் கமலத்தோனருள்
மன்னுயிர் ரனைத்தையும் வாரிவாய்ப்படுத்
தின்னுயிர் வளர்க்குமோர் எரிகொள்கூற்றநேர்
அன்னவள் யாவளெனறையக் கேட்டியால்.

மலைக்கொப்பாகக் தோன்றுகின்ற புஜங்களையுடைய ஸ்ரீ ராமபிரானே, பிரம்மதேவன் கருணையினுல் படைத்த உயிர்கள் எல்லாவற்றையும் அள்ளி வாயில் போட்டுக் கொண்டு, இனிதான தன்னுயிர் ஒன்றையே வளர்க்கும் கோபாக்கினியைக்கொண்ட யமனை ஒத்த அந்தத் தாடகை யானவள் எவளென்று நான் சொல்ல நீ கேளாய்.

இயக்கர் தங்குலத்துளான் உலகமெங்கணும்
வியக்குறுமொய்ம்பினன் எரியின் வெம்மையான்
மயக்கில்சற்சரனெனும் வலத்தினனருள்
துயக்கிலன் சுகேதுவென்றுளனோர் தூய்மையான்

இயக்கர் குலத்திற் பிறந்தவனும், உலகத்தார் எல்லாம் வியக்கும்படி வலிமை கொண்டவனும், நெருப்பைப்போல கோபமுள்ளவனுகிச் சற்சரன் என்பவன் பெற்ற சுகேது என்று ஒரு தூயவன் இருந்தான்.

அன்னவன்மகவிலா தயருஞ்சிந்தையான்
மன்னெடுத்தாமரை மலரின்னவகுறு
நன்னெடு முதல்வனைவழுத்தி நற்றவம்
பன்னெடும் பகலெல்லாம் பயின்றபான்மையான்

அந்தச் சுகேது என்பவன் மைந்தனிலாது மனம் வருந்தி பெரிய தாமரைப் பூவில் தங்குகின்ற முதல்வனுகிய பிர்மதேவனைத் துதித்து அநேக நாட்கள் தவம் செய்தான்.

முந்தின னருமறைக்கிறுவன் முற்றுநின்
சிந்தனை என்னெனச் சிறுவரின்மையான்
நொந்தனனருள்கென நுணங்கு கேள்வியாய்
மைந்தர்களிலையொரு மகளுண்டாமென்ருன்.

இப்படி இவன் தவம் செய்கையில் அருமறைகளுக்கதிகாரியான பிரும்மதேவன் அவன் எதிரில் தோன்றி. உன் எண்ணம் என்னவென்று கேட்க. அவன் "புதல்வர்களில்லாமையினுல் வருந்தினேன், அருள்வாய்" என்ருள். அதற்குப் பிரும்மா, "நுண்ணறிவுடையனே, மைந்தர்கள் கிடையாது, ஆனுல் ஓர் மகள் உண்டாவாள்" என்ருர்.

பூமட மயிலிணைப் பொருவும் பொற்பொடும்
ஏமுறு மதமலை ஈரைஞ்ஞூறுடைத்
தாமிகு வலியொடுந் தனையள்தோன்றும் நீ
போவென மலரயன் புகன்று போயினன்

செந்தாமரைப் பூவின் வாழ்கின்ற இளமை பொருந்திய மயிலின் சாயலையுடைய திருமகளை நிகர்க்கும் அழகுடனும் களிப்படைந்த மதயானைகள் ஆயிரத்துக் குள்ள மிகுந்த பலத்துடனும் ஓர் புத்திரி உண்டாவாள், நீ போ '' என்று சொல்லி மறைந்தார் பிரும்மதேவன்.

ஆயவனருள் வழியலர்ந்த தாமரைச்
சேயவளெனவளர் செல்வி கண்டிவட்
காயவன் யார்கொலன் ருய்ந்துதன்கிளை
நாயகன் சுந்தன் என்றவர்க்கு நல்கினன்.

அப்படிச் சொன்ன பிரம்மதேவனது கட்டளைப்படியே தாமரைத் திருப்போல பிறந்து வளர்கின்ற தன் பெண்ணி னுடைய பருவத்தை யறிந்து இவட்குத் தகுதியான கணவன் யாரென்று ஆராய்ந்து தனது சுற்றத்தார்க்குத் தலைவன் ஆகிய சுந்தன் என்பவனுக்கு மணம் செய்து கொடுத்தான்.

சுந்தனும் தாடகையும் மதனனும் இரதியும் போல வாழ்ந்து வந்தனர்.

பற்பல நாட் செலிப்பதுமை போலிய
பொற்பினுள் வயிற்றிடைப் புவனம் ஏங்கிட
வெற்பணிபுயத்து மாரீசனும் விறல்
மற்பொருசுபாகுவும் வந்து தோன்றினர்.

அனேக நாட்கள் சென்ற பின்னர் திருமகளையொத்த அழகையுடைய தாடகையின் வயிற்றினிடத்து உலகத்து

மக்கள் புலம்பும்படி மலைபோன்ற புயங்களையுடைய மாரீசன் என்பவனும், மல்லனுகிய சுபாகு என்பவனும் வந்து பிறந்தனர்.

மாயமும் வஞ்சமும் வரம்பிலாற்றலும்
தாயினும் பழகினர் தமக்கும் தேர்வொணு
தாயவர் வளர்வுழி அவரை ஈன்றவக்
காய்ச்சினத்தியக்கனும் களிப்பின் மேன்மையான்.

மாயையும் வஞ்சனையும் அளவில்லாத பலமும் தாயைப் பார்க்கிலும் அதீதமாக நிறைந்தவர்களும், தங் களுக்கும் தெளியக்கூடாமல் அவ்விருவரும் வருங்காலத்தில் அவர்களைப் பெற்ற, பிறரைத் துன்புறுத்தும் கோபத்தை யுடைய அந்த இயக்கனும் மிக்க மகிழ்ச்சி அடைந்தான்.

தீதுறும வுணர்கள் தீமை தீர்தர
மோதுறுகடலெலா மொருகைமொண்டிடு
மாதவனுறைவிட மதனின் வந்துநில்
பாதவ மனைத்தையும் பறித்து வீசினுள்.

அனீதமிகுந்த அசுரர்கள் செய்கின்ற தீங்கு என்னும் அலைகள் மோதுகின்ற கடலெல்லாம் ஒரு கையினுல் முகந்து ஆசமனம் செய்த மகிமைபொருந்திய தவத்தையுடைய அகஸ்திய முனிவனது ஆச்சிரமத்தையடைந்து அங்கிருந்த உயர்ந்த மரங்களை எல்லாம் பிடுங்கி எறிந்தார்.

விழை வுறுமாதவம் வெஃகினேர் விரும்
புழைகலை யிரலையை யுயிருண்டோங்கிய
வழையொடு மரனெலா மடிப்பமாதவன்
தழலெழ விழித்தனன் சாம்பலாயினுன்.

யாவரும் விரும்புகின்ற மாதவத்தைச் செய்யும் முனி வர்களால் விரும்பப்பட்ட பெண் மான்களையும், ஆண் மான்

களையும், கலை மான்களையும் கொன்று சுரப்புன்னையுடன் மற்றுமுள்ள மரங்களெல்லாவற்றையும் அழித்தனல் கோபங் கொண்ட அகஸ்திய முனிவன் நெருப்புப்பொறி பறக்க விழித்தான். உடனே அந்த இயக்கன் சாம்பலாகி விழுந்தான்.

மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மோடும்
பொற்ருெடி கேட்டு வெங்கனலிற் பொங்குரு
முற்றுற முடிக்குவன் முனியை என்றெழா
நற்றவனுறைவிட மதனைநண்ணினுள்.

அந்த யட்சன் அவ்வாறு இறந்ததை தன் புத்திரர் களோடு அவன் மனைவியான தாடகை கேட்டு கொடிய நெருப்பைப் போலப் பொங்கி "என் கணவனை இவ்வாறு மடித்த முனிவனை முடிக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே அகஸ்த்தியாச்சிரமம் சென்ருள்.

இடியொடு மடங்கலும் வளியுமேங்கிட
கடிகெடவமரர்கள சதிருமுட்குறத்
தடியுடைமுகிற்குலங் கலிப்ப வண்டமும்
வெடிபடவதிர்த்தெதிர் விளித்துமண்டவே
தமிழெனுமளப்பருஞ் சலதிதந்தவன்
உமிழ்கனல் விழிவழியொழுக உங்கரித்து
அழிவன செய்தலாலரக்கராகியே
இழிகென வுரைத்தனன் அசனியஞ்சவே.

அப்படி வந்தவள் இடியுடன், ஊழித்தீயும், ஊழிக் காற்று மேங்கிட, தேவர்கள் காவல் குலைந்திட, இரு சுடர் களும் அச்சமடைய, மேகக் கூட்டம் நடுநடுங்க, அண்டங் களெல்லாம் சிதறுண்டு வெடிக்க ஆரவாரித்து எதிரில் கூவிக்கடிதோடிவரவே.

தமிழ் என்னும் அளக்க முடியாத கடலைத் தந்த வனாகிய அகத்திய முனிவன் கண்களிலுருந்து நெருப்புப் பொறி பறக்க, அவர்களைப் பார்த்து ஹுங்காரம் செய்து அழிதற்குரிய காரியங்களை நீங்கள் செய்கின்றபடியால் அரக்கர்களாகி இழிவடையக்கடவீர்கள்'' என்று இடிஇடிக் கும் குரலில் சொன்னான்.

வெருக்கொள உலகையும் விண்ணுள்ளோரையும்
முருக்கி எவ்வுயிரு முண்டுழலு மூர்க்கராம்
அரக்கர்களாயினரக் கணத்தினில்
உருக்கிய செம்பென உமிழ்கட்டீயினர்.

ஆங்கவன்வெகுளியும் மறைந்தசாபமும்
தாங்கினரெதிர் செயுந்தருக்கிலாமையால்
நீங்கினர் சுமாலியை நேர்ந்துநிற்கியாம்
ஓங்கிய புதல்வரென்றுறவுகூர்ந்தனர்.

அப்படி அந்த அரக்கர்கள் அகத்திய முனிவரது கோபத்தையும், சாபத்தையும் பெற்றனர் அதற்கு எதிர் செய்யும் வல்லமை இல்லாமையால் அங்குவிட்டு நீங்கி, சுமாலி என்னும் அரக்கனிடம் சென்று நாங்கள் உனக்கு புதல்வர் முறை'' என்று உறவு கொண்டாடினார்கள்.

அவனொடும் பாதலத்தனேகநாட் செலீஇத்
தவனுறு தசமுகன்றனக்கு மாதுலர்
இவரெனப்புடைத் தழிழ்துலகமெங்கணும்
பவனனிற்றிரிகுநர் பதகிமைந்தர்கள்.

அந்த சுமாலியுடன் பாதாள உலகத்தில் பல நாட்கள் கழித்தனர். அதன் பிறகு தவம் புரிந்த இராவணனுக்கு இவர்கள் மாமன்மார் என்பது விளங்க உலகங்கள் எல்லா வற்றையும் அடித்து நாசம் செய்து ஊழிக்காற்றைப்போலத் திரிகின்றார்கள், அப்பாதகியின் மைந்தர்கள். அந்தத்

தாடகையோ தன் மைந்தர்களை விட்டுப் பிரிந்து, மிகக் கொதிக்கும் நெஞ்சையுடையவளாய், அகத்தியனின் கோபத்தை எண்ணி, ஊழித்தீ குடிகொண்டிருக்கும் இவ் வனத்தில் திரிந்துகொண்டிருக்கிறாள். நற்குணங்கள் யாவற்றையும் கெடுக்கும் துராசையைப் போல அக்கொடிய அரக்கி அம்மருத நிலத்தை இப்படிப் பாழாக்கி விட்டாள்.

தாடகை வரவு இங்கு வெகு அழகாகச் சித்தரிக்கப் படுகிறது. அதற்கு முன்னதாக வால்மீகியின் தாடகை வரலாற்றைப் பார்த்துவிடலாம்.

## வால்மீகி ராமாயணம்

இராமா, கேள். இந்நிலம் கொடிய காடாக மாறிய காரணம் கேள். இங்கு இரு நகரங்கள் முன்பு வளமை கொழித்த பூமியாக இருந்தன. தேவர்களால் நிருமாணிக்கப்பட்டு மலதம், கருசம் என்று பெயர்கொண்டு விளங்கின முன்னொரு காலத்தில் விருத்தாசுரனை வதம் செய்தபடியால், தேவேந்திரனை பிரும்மஹத்தி பிடித்துக்கொண்டு விட்டது அதனால் அவனை உட்காரவைத்துத் தேவர்களும், முனிவர்களும், தவசிகளும் தீர்த்தநீர்களால் அபிடேகம் செய்து அவன் அங்கத்து மலத்தை, அழுக்கைப் போக்கினர். அவன் உடல் அழுக்கை இப்பூமி ஏற்றுக்கொண்டது. நிர்மலமாக, அழுக்கு நீங்கிப் புத்தொளி பெற்றவுடனே மன மகிழ்ந்த மகேந்திரன் ஓர் வரமளித்தான். "இந்த இரு இடங்களும் உலகில் பிரசித்துபெறும் மலதம், கருசம் என்று பெயரும் பெறும்" என்றான். பேஷ்; பேஷ்; என்றார்கள் தேவர்கள். இந்த இரு இடங்களும் வெகு காலம் வரை தனதான்யம் நிறைந்து இன்பபூமியாக விளங்கின.

### இயக்கி கதை, பிறப்பு, வளர்ப்பு, மணம், சாபம்.

பிறகு ஒரு காலத்தில்—ஆயிரம் யானை பலமுடைய யட்சி ஒருத்தி இங்கு இருந்தாள்.

தாடகாநாம பத்ரம்தே பார்யாசுந்தஸ்யதீமத :
மாரீசோ ராட்சஸ : புத்ரோயஸ்யா : சக்ரபராக்ரம :

அவள் பெயர் தாடகை. அறிவாளியான சுந்தன் என்பவன் இவள் கணவன். இந்திரனுக்கு ஒப்பான வீரபராக்கிரமமுடைய மாரிசன் என்னும் ராட்சஸன் புதல்வன். இந்த மாரீசன் என்பவன் நீண்ட கைகளையும், அகன்ற முகம், பருத்த உடல், பார்க்கப் பயங்கரமான தோற்றம் இவற்றைக்கொண்டவன். அத்துடனல்ல ; குடிஜனங்களை மிகவும் பயமுறுத்திவருகிறுன். இந்த இரு நாடுகளையும் அழித்து வருகிறுன். தாடகையோ கேட்கவேண்டாம். அவள் இந்த வழியில்தான் அரையோசனை தூரத்தில் இருக்கிருள். ஆகையால் நாம் இப்பொழுது தாடகாவதத்துக்குத்தான் போகவேண்டும்.

வெல்க

ஸ்வபாகுபலமாச்ரித்யஜஹீ இமாம் துஷ்டசாரிணீம்
மந்நியோகாதிமம் தேசம் குருநிஷ்கண்டகம் புன :

உன் சொந்தத் தோள்வலியிஞல் இக்கொடியவளை ஜயித்து வெல். என் கட்டளையிஞல் இவ்விடத்தை உபத்திரவமில்லாது ஒழி. பொறுக்க முடியாது கொடுமை புரியும் இந்த யட்சினியின் செயல்களால் இங்கு யாருமே அண்ட முடிவதில்லை. நீ கேட்டதற்குப் பதில் சொல்லி விட்டேன். இந்த யட்சினியின் கொடுமை இன்னும் நிர்முலமான பாடில்லை'' என்கிருர்.

அம் முனிவர்கூறக் கேட்ட போர்ரேருகிய ஸ்ரீராமன் :-

அல்பவீர்யா யதாயட்சா ச்ருயந்தே முனிபுங்கவ
கதம் நாகஸஹஸ்ரஸ்ய தாரயத்ய பலாபலம்’

முனிவரே, யட்சர்கள் ''அல்பவீர்யம் குறைந்த பல முடையவர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறோமே. ஒரு இயக்கி, அதிலும் பெண்மணி, ஆயிரம் யானை பலமுள்ள வள் ஆக எப்படி இருகக முடியும்'' என்றான்.

அதைக்கேட்ட முனிவர் ''இராமா, இவள் பலோத் தரா'' பலத்தில் மிகுந்து விளங்குவதற்கு காரணம் கேள், என்று கூறத் தொடங்கினார்.

''வரதான கிருதம் வீர்யம் தாரயத்யபலாபலம்'' வர தானம் பெற்றதனால் பெண்மணியாயினும் பலமிகுந்து விளங்குகிறாள்.

## வால்மீகி ராமாயணத்தில் தாடகை வரலாறு

முன்னொரு காலத்தில் சுகேது என்று பெயர்கொண்ட பலசாலியான ஓர் யக்ஷன் இருந்தான். அவனுக்குக் குழந்தைகள் இல்லை. மகா சீலவானான அவன் தவம் புரிந்தான்.

> பிதாமகஸ்துசுப்ரீதோ தன்ய யட்சபதேகஸ் ததா
> கன்யாரத்னம் ததௌ ராம தாடகாம்நாம நாமத:
> பலம் நாகஸஹஸ்ரஸ்ய ததௌசாஸ்யா பிதாமக:

அந்த யட்சபதியின் தவத்தினால் மகிழ்ந்த பிரும்ம தேவர் அவனுக்கு, தாடகை என்று பெயர் கொண்ட ஓர் கன்யா ரத்தினத்தை அளித்தார். ஆனால் அவனுக்கு ஆண் மகவு அளிக்கவேயில்லை. உருவம், இளமை இவைகளில் சிறந்து வளர்ந்து வந்த அத்தாடகையை ஜம்பாசுரனின் மகனாகிய சுந்தனுக்கு மணம் செய்து கொடுத்தான் சுகேது. தாடகைக்கு மாரீசன் என்று பலமிகுந்த ஒரு பிள்ளை பிறந் தான். அவன் பிறகு சாபத்தினால் ராட்சஸனானான். சுந்தன்

கொல்லப்பட்டான். ஆதலால் கோபங்கொண்ட தாடகை தன் மகன் மாரீசனுடன் சேர்ந்து கொண்டு அகத்திய முனிவரை அப்படியே கபளீகரம் செய்துவிட கர்ஜித்து கொண்டே ஓடி வந்தாள். அதைப் பார்த்த அகத்திய முனிவர்:

ராட்சஸத்வம் பஜஸ்வேதி மாரீசம் வ்யாஜஹார ஸ:

"ராட்சஸனுகக் கடவாய்" என்று மாரீசனை சபித்து விட்டார் அடங்காத கோபங்கொண்டு தாடகையையும் சபித்துவிட்டார்

புருஷாதீ மகாயட்சி விரூபா விகிருதானனு
இதம்ரூபம் விஹாயாததாருணம் ரூபமஸ்துதே.

"உன் உருவம் அழிந்து கோர ரூபம் கொண்டு முகம் மாறி புருடர்களைத் தின்னும் மாபெரும் இயக்கி யாகக் கடவாய்" என்று சபித்துவிட்டார். சாப மடைந்ததனல் ரௌத்ராகாரம் கொண்ட தாடகை "அகஸ்திய சரிதம் சுபம்" அகத்தியர் வாழ்ந்த இப் புண்ணிய பூமியை சுடடுப் பொசுக்கி சாம்பலாக்கி விட்டாள்.

ஏனும்ராகவ துர்விருத்தாம் யட்சிம் பரம தாருணும்
கோப்பிராம்மண ஹிதார்த்தாயஜஹிதுஷ்டே
பராக்ரமாம்.

கெட்ட செய்கை உடையவளும், மிகவும் கொடிய வளும், கெடுதல் செய்வதிலேயே தன் பலத்தைப் பிரயோ கிப்பவளுமான இந்தயட்சியை, பசுக்களுக்கும், அந்தணர் களுக்கும், நன்மையுண்டாவதன் பொருட்டு நீ, ஜயி, இராமா.

சாபமடைந்து நிற்குமிவளை வெல்லக்கூடிய மனிதன் மூவுலகங்களிலும் உன்னைத்தவிர வேறு யாரும் கிடையாது.

## பெண் கொலை அல்ல, இராமா

ந ஹிதே ஸ்த்ரி வதகிருதே க்ருணு கார்யா
நரோத்தம
சாதுர் வர்ண்யஹிதார்த்தாய கர்த்தவ்யம்
ராஜஸூநுநா
நிருசம்ஸம் அநிருசம்ஸம்வா பிரஜா ரட்சண காரணாத்
பாதகம்வா ஸதோஷம் வா கர்த்தவ்யம் ரட்சதா ஸதா
ராஜ்யபாரநியுக்தானும் ஏஷதர்ம : ஸனதன :
அதர்ம்யாம் ஜஹிகாகுஸ்த தர்மோ ஹ்யஸ்யா
நவித்யதே.

## முனிவரின் வாதம்

"ஏ மனிதருள் சிறந்தவனே, இவளைக்கொன்ருல் "பெண் கொலை" ஆகும் என்று கருதி நீ அறுவெருப்பு அடையக்கூடாது. நான்கு வருணத்தினரான குடிபடைகளைக் காப்பாற்றும் பாரம் தாங்கிய ஆட்சிபீடத்திலிருக்கும் அரசகுமாரனுக்கு ஹிம்ஸையானுலும் சரி, அஹிம்ஸையானுலும் சரி", காப்பதற்காகக் காரியம் செய்ய வேண்டியதுதான் கடமை. தருமம், தகுதி, அழகு, இராஜதர்மம், அது. அதுவுமன்றி, தருமங் கெட்டவளிடம் தருமம் காட்டலாமா? நியாயமற்றவளிடம் நியாயம், நீதி பார்க்காதே, இராமா.

## உதாரணம்

முன்பு பூமாதேவியைக் கொலை செய்ய முயன்ருே விரோசன் மகள் மந்தரையை இந்திரன் கொன்ருன்.

விஷ்ணுனுச புராராம ப்ருகு பத்னீ திருடவ்ரதா
அந்த்ரம் லோகமிச்சந்தி காவ்யமாதா நிஷூதிதா.

முன்பு, உலகில் இந்திரனே இல்லாது செய்ய விரும்பிய பதிவ்ரதையான ப்ருகுவின் மனைவி "காவ்ய மாதா" விஷ்ணுவினால் கொல்லப்பட்டார். இன்னும் எத்தனையோ அதர்மவாதிகளான பெண்களை தர்மவாதிகளான மகான்கள் கொன்றுமிருக்கிறார்கள். ஆகையால் நீ சந்தேகப்படாதே.

நேயர்களே, இராமனது மனப்போக்குத் தெரிந்த விசுவாமித்திரர் இப்படி பெண்வதை செய்ய அனுகூலமான காரணங்கள் காட்டுகிறார். இராமன் நியாயவாதி: நீதியே உருவானவன்; நேர்மையே வடிவானவன். பின்னால் சகிக்கமுடியாது தவறு செய்யும் அயோமுகி, சூர்ப்பனகை, இவர்களைக்கூட "தண்டித்து" விட்டு விடுகிறானேயன்றி "பெண் வதை" செய்யவில்லை. அது கருணை வள்ளலான இராமன் கொள்கைக்கு ஒவ்வாத ஒன்று. அதிலும் இராமன் சுத்த வீரன். பின்னால் இராமன் பெரியவனாகி தன் இச்சைப் படி செய்யும்போது "பெண் வதை"யைத் தடுக்கிறான். ஆனால், இப்போதோ அவன் உலக அனுபவமற்ற இளைஞன். திறமை இருந்தும் சிறியவனானதாலும் ஒரு கட்டளை இடுவதாலும் "குரு சொற்படி நட" என்பது தந்தையின் க்ட்டளை ஆதலாலும், இப்போது இராமன் பிறர் கொள்கைக் கருவியாக அமைகின்றான். தாடகையைக் கொன்றது இராம பாணமாயினும் கொள்வித்தது முனிவர் தான். "பெண் இவள் அல்ல இராமா, தாடகை ரூபம் கொண்ட நமன்" என்கிறது இராம நாடகம். அகிம்ஸா யுகமாகிய இக்காந்தி யுகத்தில் முனிவரின் வாதம் சற்று விநோதமாகத் தோன்றினாலும் அவரது காலத்தில் பொருத்த மாகவே பட்டது. ஆம், "அகிம்ஸாயுகம்"தானே "அணு குண்டு, நீர் வாயு குண்டு யுகம்" ஆகவும் இருக்கிறது. எப்போதுமே இவ்விதம் தர்ம சங்கடங்கள் அறநெறிக்கும்

மறநெறிக்கும் இடையே உண்டு. அதிலும் மறக்குலத்தில் பிறந்தவன் அற வள்ளலாக, அற மகனுக இருந்து விட்டால் ரேட்கவும் வேண்டுமா? அரச குமாரன் "அறக் கடவுள்" ஆக நின்ருல் அதற்காக தருமம் மாறுமா? இந்த அதீதி மான அறக்கொள்கையால் தானே "அஜாத - சத்ரு" வான தரும புத்திரர் தனியாய்த் தவித்தார். விசுவாமித்திரர் அரச ராக விருந்தவர் ஆயுதமெடுத்தவர். வீரர். உலகை நன்கு அறிந்தவர். அரசருஷி. தவிர, வேறு உலகையே படைத்த வல்லுநர். அஞ்சாத, கலங்காத ஆண்மையாளர். அவர் தாடகையைக் கொல்வது 'தருமம்" என்று தான் கூறுவார். அதற்கேற்றபடிதான் அத்தாடகையும் இருந்தாள். பாவம், இங்கு இராமனது சொந்த உணர்ச்சிக்கு இடமில்லை. கருணையை வழி மறித்துக்கொண்டு "கடமை" குறுக்கே நிற்கிறது சுவர்போல.

## தாடகா - வதம்

முனிவர் அப்படிச் சொல்லக் கேட்ட இராமன் இரு கைகளையும் கூப்பிய வண்ணம் பதில் சொன்ஞன் :

பிதுர் வசன நிர்த்தேசாத் பிதுர்வசன கௌரவாத்
வசனம் கௌசிகஸ்யேதி கர்த்தவ்யம் அவிசங்கயா.
அநுசிஷ்டோஸ்ம்யயோத்யாயாம்
குருமத்யே மகாத்மஞ
பித்ரா தசரதேனுஹம் நாவஞேயம் ஹிதத்வச:
லோஹம் பிதுர் வசச் சுருத்வா சாஸனுத்
பிரும்ம வாதின :
கரிஷ்யாமி ந சந்தேஹஸ் தாடகாவதமுத்தமம்

தந்தையின் கட்டளை என்பதாலும், தந்தையின் கட்டளையை நிறைவேற்றக் கடமைப்பட்டவன் என்பதாலும், கௌசிகர் என்பதாலும், தர்க்கம் செய்யக்கூடாது, செயலில் இறங்க வேண்டியதுதான் என் கடமை.

அயோத்தியில், பெரியவர்கள் மத்தியில் தந்தையான தசரதரால் கட்டளை இடப்பட்டேன். அவரது வாக்கை - மீறமுடியாது அல்லவா ? அப்பாவின் கட்டளை குருவின் உத்தரவு இரண்டும் சேர்ந்து உள்ளது. ஆதலால் தாடகையைக் கொல்கிறேன்.

பசு, பிராம்மணர்களின் நன்மைக்காகவும், மகானுகிய உங்கள் வார்த்தைக்குக் கட்டுப்பட்டும் இதோ தயாராக இருக்கிறேன் ''. என்ருன் இராமன்.

## நாண் - ஒளி முழக்கம்

ஏவமுக்த்வா தநுர்மத்யே பத்வாமுஷ்டிம் அரிந்தம:
ஜயாகோஷம் அகரோத்தீவ்ரம் திசச்சப்தேன நாதயன்

இவ்விதம் கூறிய இராகவன் தனது முட்டியைக் கூப்பி வில்லை வளைத்து நாணை இழுத்து ஒலித்தான். அந்தக் கடுமையான சப்தம் பத்து திக்குகளிலும் பரவி ஒலித்தது.

அந்தப் பெரும் சப்தத்திஞல் தாடகா வனவாசிகள் நடுநடுங்கினர். தாடகையும் அந்நாண் ஒலியைக் கேட்டு வெகுண்டு வெகு வேகமாக சப்தம் வந்த திக்கை நோக்கிப் பாய்ந்தோடிவந்தாள். அப்படிக் கோபமாக வரும் பயங்கர மான, அளவுக்கு மீறிய உடல் பருமனுடைய தாடகையின் உருவத்தைப் பார்த்து இராமன் தம்பி இலக்குவனிடம் கூறினன்.

"லட்சுமணு, யட்சினியின் பயங்கரமான இவ் வுருவைப்பார். கோழைகளின் இதயங்கள் இவளைப் பார்த் தாலே பிளந்துவிடும்.

ஏனும் பச்ய துராதர்ஷாம் மாயாபலசமன்விதாம்
விநிவிருத்தாம் கரோம்யத்ய ஹிருதகர்ணுக்ரநாசிகாம்

மாயா பலத்தோடு கூடியவளும், பிறரால் அண்டமுடி யாதவளும் இவளை காது, மூக்கு நுனி இவைகளை வெட்டி விட்டுத் திரும்பிப் போகச் செய்கிறேன் பார்.

நான் கொல்லமாட்டேன்

நஹ்யேனு முத்ஸஹே ஹந்தும் ஸ்திரீ ஸ்வபாவென ரட்சிதாம்
வீர்யம் சாஸ்யா கதிம்சாபி ஹனிஷ்யாமீதி மேமதி:

"இவள் என்ன இருந்தாலும் பெண்; இவளைக் கொல்ல என் மனம் சம்மதியாது. இவளது பலத்தையும் புகலிடத்தையும் அழிக்கிறேன் பார்" என்ருன். இராம னது கருணை உள்ளம் இங்கு சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. கடமையும், கட்டளையும், பிடரி பிடித்துந்தும்போதுகூட, இராமனது இயற்கையான கருணை பளிச்சிடுகிறது. "கொல்ல சம்மதியேன்" என்கிருன் கோசலைக் குலக் கொழுந்து. அங்கஹீனம் அதுவும், காது மூக்கு நுனி ஆகிய மெல்லிய சதையை பாகம் செய்தால் போதும் என்கிறது அவனது ஜீவகாருண்ய இதயம் இவ்விதம் இராமன் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே கோபத்தி ஞல் தலைகால் புரியாத தாடகை கைகளைத் தூக்கிக் கர்ஜித்துக்கொண்டே ஓடி வந்தாள். இனி யுத்தம் தொடடங்கப்போகிறது. அதற்குமுன் கம்பர் அருமையாக எழுதிக் காட்டும், தாடகை வரும் வைபவத்தைப் பார்ப் போம். வழக்கம்போல துளஸியில் இங்கு வருணனை கிடை யாது. கம்பரும், வால்மீகியும் போட்டிப் போடுகிருர்கள். இருவரில் ஒருவரையும் மேலெழுந்தவாரியாக விட்டுவிட்டுப் போகமுடியாது. ஆதலால் இருவரையும் ஒருவர்பின் ஒருவராகவும், தேவையான இடங்களில் இணைந்தும் காண்போம்.

## தாடகை வந்தாள்

இலங்கை யரசன் பணி யமைந்தொரிடையுரு
விலங்கல் வலி கொண்டெனது வேள்வி நலிகின்ருள்
அலங்கல் முகிலேயே வளிவ்வங்கநில மெங்கும்
குலங்களொ டடங்கநனி கொன்று திரிகின்ருள்

முன்னுலகளித்து முறைநின்ற உயிரெல்லாம்
தன்னுயிரெனக் கருது தன்மையவன் மைந்த
என்னிளி யுணர்த்துவதினிச் சிறிது நாளின்
மன்னுயிர னைத்தையும் வயிற்றினிடு மென்ருன்

இராவணனது கட்டளைக் கிணங்க இவள், எல்லார்க்கும் ஒரு இடையூருக மலைபோன்ற பலமுடையவளாய் என் யாகத்தைக் கெடுக்கிருள். ஏ பூமாலை யணிந்த கருமுகிலே, இந்த அங்க நாட்டிலுள்ள உயிர்களை எல்லாம் குலங்களோடு அழிய மிகவும் செய்து திரிகின்ருள். முற்பட்ட உலகத்தைக் காத்து முறை நின்ற உயிரெல்லாம் தன் உயிர் போல நினைக்கின்ற இயல்புடைய மன்னவன் மைந்தனே,

இனியும் என்ன சொல்வது? இன்னம் சில நாட்களில் உலகில் நிலைபெற்ற ஜீவராசிகளை எல்லாம் தன் வயிற்றுக்குள் அடக்கிக்கொள்வாள் என்ருர் முனிவர்.

அங்கிறை வனப்பரி சுரைப்பவது கேளா
கொங்குறை நறைக்குல மலர்ச்செனி குறுக்கா
எங்குறைவ தித்தொழிலி யற்றுபவ ளென்ருள்
சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்.

தவசிகட்குத் தலைவராகிய முனிவரப்படிச் சொல்ல, அதைக் கேட்டு, சங்கு தங்குகின்ற தனது இடது கையில் ஒப்பில்லாத வில்லைத் தரித்ததவனுகிய ஸ்ரீராமன். வாசனையும் தேனும் பொருந்திய சிறந்த மலர் மாலைகளணிந்த தன்

தலையை யசைத்து "இந்தத் தீச் செய்கை செய்பவள் எங்கே வசிக்கிருள்?" என்று கேட்டான்.

கைவரை யெனத்தகைய காளையுரை கேளா
ஐவரை யகத்திடை யடைத்த முனியைய
இவ்வரை யிருப்பதவள் என்பதனின் முன்போர்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள்.

தனது ஐந்து புலன்களையும் புறம் சொல்லவொட்டாது வடக்கிய விசுவாமித்திரர் மத்த கஜம் போன்ற வாலிபனுகிய ஸ்ரீராமன் அப்படிச் சொல்லக் கேட்டு, "ஐயனே, அவ் வரக்கி இந்த மலையில் இருக்கிருள்" என்று சொல்லி முடிப்பதற்கு முன்பே ஓர் மலையானது கரிய கடு நெருப்பைக் கக்கிக்கொண்டு வந்தது போலத் தாடகை வந்தாள்.

ஆர்ப்பாட்டத் தாண்டவ வரவு

சிலம்புகள் சிலம்பிடை செறித்த கழலோடு
நிலம்புக மிதித்தனள் நெளித்த குழிவேலைச்
சலம்புக வனற்றறுகள் அந்தகனு மஞ்சி
பிலம்புக நிலக்கிரிகள் பின்தொடர வந்தாள்.

பெருத்த மலைகளைக் காற்சிலம்புகளுக்குப் பரலாக அணிந்துகொண்டு, பூமி அழுந்தும்படி மிதித்தாள். பூமி குழியாக நெளிந்தது. அப்படி உண்டான குழிகளில் கடல்நீர் பாய்ந்தது. தீயைப்போல அஞ்சாமையையுடைய யமராஜனும் அஞ்சி பாதாள உலகத்தில் புகுந்துகொண் டான். அவள் நடையின் வேகத்தால் பூமியிலுள்ள மலைகள் எல்லாம் பின்தொடர்ந்து வர வந்தாள்.

நெருப்பெழ விழித்தாள்

இறைக்கடை துடித்த புருவத்தள் எயிறென்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்த பிலவாயள்
மறைக்கடை யரக்கி வடவைக்கன விரண்டாய்
நிறைக்கடன் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்,

கடையில் துடிக்கின்ற புருவத்தையும், பிறை வடிவ முள்ள கோரைப் பற்களையும், வடிக்கப்பட்ட குகையை யொத்த வாயையும் உடையவளாய், வேத வொழுக்கத் துக்குப் புறம்பாகிய தொழிலுடைய அவ்வரக்கி, நிறைந்த கடலில் வடவைத் தீயானது இரண்டாக எழுந்தது என்று கூறும்படியாக நெருப்புப் பொறிகள் பறக்க விழித்துப் பார்த் தாள்.

ஆர்த்தாள்

கடங்கலுழ் தடங்களிறு கையொடுகை தெற்று
வடங்கொள நுடங்குமிடையாள், மறுகி வானோர்
இடங்களு நெடுந்திசையு மேழுலகு மெங்கும்
அடங்கலுநடுங்க வுருமஞ்ச நனி யார்த்தாள்

மதநீர் ஒழுகப் பெற்ற பெரிய யானைகளை துதிக்கை யொடு துதிக்கையை முடிந்து வடமாக அணிந்துகொண் டிருப்பதால் துவளுகின்ற இடையையுடைய அத்தாடகை, தேவலோகங்களும், நெடிய திக்குகளும், ஏழு உலகங்களு மாகிய எங்கு மடங்கலும் உள்ள உயிர்கள் கலங்கி நடுங்க வும், இடியோசை அஞ்சவும் அட்டகாசம் செய்து ஆர வாரித்தாள்.

உரை செய்தனள்

ஆர்த்தவரை நோக்கி நகைசெய் தெவருமஞ்சக்
கூர்த்தநுதி முத்தலை யயிர்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்று பகுவாய் முழை திறந்தோர்
வார்த்தையுரை செய்தன ளிடிக்கு மழையன்னாள்.

இப்படி யாரவாரித்து, அவர்களை நோக்கி அவமதித்து சிரித்து, கூர்மையான நுனியையும், முக்கவட்டையுமுடைய சூலமாகிய கொடிய யமனைப் பார்த்து, பல்லைக்கடித்து,

பிளந்த வாயாகிய குகையைத் திறந்து இடிக்கின்ற மேகம் போன்ற தாடகை ஒரு வார்த்தை சொன்னாள்.

பகர்மின் வந்த பரிசு

கடக்கரும் வலத்தெனது காவல் இதில் யாவும்
ெ டக்கரி சறுத்தனன் இனிச்சுவை கிடைக்கும்
விடக்கரி தெனக் கருதியோ விதிகொடுந்தப்
படக்கருதியோ பகர்மின் வந்த பரி சென்றே

எவராலும் வெல்லுதற்கரிதான வலிமையுடைய என் காவலிடமாகிய இந்த வனத்திலுள்ள எல்லா உயிர்களையு மழித்துவிட்டேன் பூண்டோடு. ஆதலால் சுவை மிக்க இறைச்சி எனக்குக் கிடைப்பது அரிது என நினைத்தோ, அல்லது என் நல்ல விதி கொண்டுவந்து தள்ள மாண்டு போக நினைத்தோ, நீங்கள் இங்கே வந்தது? சொல்லுங்கள் ’’ என்று சொல்லி,

அழன்றுன்

மேகமவை இற்றுக விழித்தனள் புழுங்கா
மாகவரை யற்றுக உதைத்தனள் மதித்திண்
பாகமெனு முற்றெயி றதுக்கி அயில்பற்று
ஆகமுற வுய்த்தெறிவ னென்றெதிர் அழன்றுள்

மேகங்கள் பொடிப் பொடி புழுதியாக விழித்தாள். மனம் புழுங்கி ஆகாயத்தை அளாவுகின்ற மலைக்கட்டடங்கள் துகள் துகள் ஆகும்படி உதைத்தாள். சந்திரனின் முன்பாக மெனும்படியான கோரைப்பற்களை அதுக்கி, சூலத்தைப் பற்றி இராமனது மார்பில் குறி தவராது எறிகிறேன், பார் என்று எதிரில் நின்று சீறினுள்.

பெருந்தகை நினைந்தாள்

அண்ணல் முனிவர்கது கருத்தெனினு மாவி
உண்ணென வடிக்கணை தொடுக்கிலன் உயிர்க்கே

துன்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுள
ளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்

பெருமை பொருந்திய முனிவரது கருத்து அது என்றும் கூட "உயிரைக்குடி" என்று கூர்மையான பாணங்களைத் தொடுக்க மாட்டேன். தனது உயிருக்கே உலை வைக்கக் கூடிய தொழிலை இவள் தொடங்கி இருக்கிறாள். உண்மை. இருந்தாலும்கூட ஓர் பெண்ணல்லவா என்று கருணை வள்ளலாகிய இராமன் மனத்தில் நினைத்தார்.

இங்கு இராமன் மனிதப் பண்பிற் சிறந்த மாணிக்கமாகச் சுடர் விடுகிறான். அவள் கொடியவளாயினும் நான் கொடுமை புரியேன் என்னும் அற்புதமான மனிதப் பான்மையைக் காண்கிறோம். பெருந்தன்மையில் இப்படிச் சிறந்து விளங்குவதாலேயே "பெருந்தகை" என்ற பொருத்தமான பட்டத்தைக் கம்பனுடன் சூட்டுகிறான்.

அறிந்து அந்தணன் கூறுவான்

வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றுளயில்
எறிந்து கொல்வனென் றேற்கவும் பார்க்கிலா
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்தெல்லாம்
அறிந்து நான்மறை யந்தணன் கூறுவான்

பரட்டையான சிவந்த தலைமயிரையும் வெண்மையான கோரைப் பற்களையுமுடைய அவ்வரக்கி சூலத்தை எறிந்து கொல்வேனென்று எதிர்க்கவும், அதை மதியாத, மாலையணிந்த இராமனது எண்ணங்களையெல்லாம் நன்கு அறிந்த முனிவர் சொல்லலானார்.

மாதென் றெண்ணுவதோ ?

தீதென் றுள்ளவை யாவையும் செய்தெமைக்
கோதென் றுண்டிலள் இத்தனையே குறை

யாதென் றெண்ணுவயதிக் கொடியா ளையும்
மாதென் றெண்ணுவதோ மணிப்பூணிஞய்.

இரத்திஞபரணங்களை யணிந்த ஸ்ரீராமா, தீமை என்று சொல்லப்படும் எல்லாவற்றையும் செய்து, எங்களை கோது, சக்கை, என்று ஒதுக்கித்தள்ளியே இதுவரைத் தின்ஞது இருக்கிருள். அது ஒன்றுதான் குறை. என்ன வென்று சொல்வது? இந்தக் கொடியவளையும் பெண்ணென்று எண்ணத்தகுமோ?

இராமனது கருணைக்கு நேர் எதிரிடையாக பழிக்குப் பழி வாதம் சரியான கொள்கை-மோதல்.

நாண்மையே உடையார் பிழைத்தார் க்கு
வாண்மையே பெற்றவன் றிற லாடவர்
தோண்மை யிவள் பேர் சொலத்தோற்பரேல்
ஆண்மை என்ஞமதாரிடை வைகுமே?

இராமா, இவளோடு போர் செய்ய நாணங் கொண்டவர்களே உயிர் தப்பிப் பிழைத்தார்கள். வாள் வலியுடைய, வலிய வெற்றி பொருந்திய ஆடவர்கள் இவள் பேர் சொன்ன உடனேயே தங்கள் புய வலியைத்தோற் பாராயின் "ஆண்மை" என்று சொல்லப்படுகின்ற அப் பொருள் யாரிடத்தில்தான் இருக்கும்?

## இந்திரனும் இடைந்தான்

இந்திரன் இடைந்தா னுடைந்தோடினுர்
தந்திரம் படத்தானவர் வானவர்
மந்தரம் மிவடோதெனின் மைந்தரோ
டந்தரம்மினி யாது கொலாண்மையே?

தேவேந்திரன் இவளிடம் தோற்ருன். அரக்கரும், தேவரும், தமது சேனைகள் யாவும் பட்டழிய தோற்ருேடி ஞர்கள். இவளுடைய புயங்கள் மந்தரமலையை ஒப்பன

என்ருல் ஆண்மைத் தன்மை, முடிவாக, ஆண் மக்களிடத்தில் ஏது?

மன்னர் மன்னவன் காதல மற்றுமொன்
றின்னம் யானுரைக்கின்ற தியாதெனின்
முன்ஞேர் காலநிகழ்ந்த முறைமையீ
தென்ன வோதலுற்ருன் றவத்தீறிலான்,

சக்கரவர்த்தித் திருமகனே, வேறு ஒரு செய்தியும் நான் சொல்ல வேண்டியது இருக்கிறது. அது என்னவென்ருல், முன்ஞெரு காலத்தில் நடந்த முறைமை இது என்று முடிவற்ற தவத்தையுடைய விசுவாமித்திர முனிவன் சொல்லத் தொடங்கிஞன்.

இப்பொழுது முனிவர் தன் கட்சியின் நியாயத்துக்குக் காரணங்கள் காட்டத் தொடங்குகிருர். பெண் வதை பொல்லாதது அல்ல நியாயமானது. பெரியோர்களாலும் முன்ஞேர்களாலும் செய்யப்பட்டது. பெண் தனது இயல்பைக் கைவிடுவாளாஞல் ஆண் போல அக்ரமம் செய்ய முற்படுவாளேயாஞல், அவளைக் கொல்வது நியாயம் தருமம் சாஸ்திர சம்மதம் என்று முனிவர் மேற்கோள் எடுத்துக் காட்டி வாதாடுகிருர். முன்பு விட்டுணுவும், வாசவனும், கியாதியையும், குமதியையும் கொல்லவில்லையா? ஆதலால் நீ தாடகையைக் கொல்வது தவறல்ல, தகும் என்பது முனிவரது வாதம். இது இராமனுக்குச் சம்மதமில்லைதான்.

பிருகு வென்னும் பெருந்தவன் தன்மனை
வருசயற்கட்கியாதி வல்லாசுரர்க்
குருகு காதலுறவறவாதலே
கருதியாவி கவர்ந்தனன் நேமியான்

பிருகு என்ற பெயர் கொண்ட தவசியின் மனைவியாகிய சேல்மீன் போன்ற கண்களுடைய கியாதி என்

பவள், அசுரர்களுக்கே உதவி செய்து உறவு பூண்டமை யால் சக்கரபாணியான நாராயணன் அவள் உயிரை வாங்கிவிட்டான்.

வானகத்தினின் மண்ணினின் மன்னுயிர்
போனகந்தனக்கென்றனன் புந்திய
தானவள் குமதிப் பெயராள் தனை
ஊனெழித்தனன் லச்சிரத்தும்பர் கோன்

விண் உலகத்திலும், மண் உலகத்திலும் நிலை பெற் றிருக்கிற உயிர்களையெல்லாம் தனக்குச் சாப்பாடு என்று எண்ணிய குமதி என்று பெயர் கொண்ட அரக்கியைத் தேவேந்திரன் தன் வச்சிராயுதத்தினால் உடலை உயிரில் இருந்து வேறு ஆகும்படி பிரித்து விட்டான். அதாவது கொன்று விட்டான்.

ஆதலால் அரிக்காகண்டலன் றனக்
கோது கீர்த்தி யுடைய வல்லாதிடை
ஏதமென்பன வெய்தியவோ சொலாய்
தாதடர்ந்து தயங்கிய தாரினாய்

மகரந்தம் நெருங்கி விளங்கும் பூமாலையணிந்த ஸ்ரீ ராமா, அக் கொலைகளினால் நாராயணனுக்கும், இந்திர னுக்கும் பெருமை யுண்டாயிற்றே தவிர சிறுமை ஏதும் சம்பவிக்கவில்லையே?

அறங்கிடச் திகிரிப்படி காத்தவர்
பிறங்கடைப் பெரியோய் பெரியோரொடும்
மறங்கொடித்தரை மன்னுயிர் மாய்த்து நின்
றறங்கெடுத்தவட் காணமையும் வேண்டுமோ?

தங்களது ஆணை எங்கும் செல்லும்படி அரசாண்ட சூரியகுல மன்னர்களின் வழி மகனாகிய இராமா, உலகத்து உயிர்களை மாய்த்து அறநெறியைக் கொன்ற பாபிக்கு வீர தருமம் வேறு காட்ட வேண்டுமா?

சாற்று நாளற்றலெண்ணித்தருமம் பார்த்
தேற்றும் விண் என்பதன்றி இவளைப் போல்
நாற்றங் கேட்டலும் தின்ன நயப்பதோர்
கூற்றுண்டோ சொலை கூற்றுறழ் வேலினுய்?

ஆயுள் முடிந்து விட்டது என்பதை ஆலோசித்து அவ்வுயிர்கள் செய்த புண்ணியம் இவளை விண் உலகத்துக்கு அனுப்பினுல்தான் உண்டு. இல்லையெனின் பிராணி வாசனை எங்கோ வருகிறது என்று கேட்ட உடனேயே தின்ன ஓடி வரும் இவளைவிட எமன் வேறு உண்டா, சொல், பகைவர்களுக்கு யமனை ஒத்த வேலாயுத முடைய ஸ்ரீ ராமா?

மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப் பெய்து
தின்னும புனமையிற் றிமைய தேயைய
பின்னுந்தாழ்குழற் பேதைமைப் பெண்ணிவள்
என்னுந் தன்மை எளிமையின பாலதே,

நிலையான பல உயிர்களையும் அள்ளி, அள்ளித் தன் வாயிற் போட்டுக்கொண்டு மெல்லுகின்ற தீமையைவிட வேறு தீமை யாது, ஐயா? இவ்வரக்கியை பின்னியக் கூந்தலும், பேதமையுங் கொண்ட பெண் என்று எண்ணினுல் அது அறியாமையே ஆகும்.

ஈறி னல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின்றேனலேன்
ஆறி நின்றதற னன்றரக்கியைக்
கோறி என்றெதிரந்தணன் கூறினுன்

முடிவற்ற தருமத்தின் தன்மை நோக்கி இவ்வாறு சொல்கிறேன். இவள் மீதுள்ள கோபத்தால் நான் இப்படி சொல்லவில்லை. நீ தணிந்து நிற்பது தர்மம் அல்ல. ஆதலால், ''கொல்'' என்று இராமனுக்கெதிரே நின்று முனிவன் சொன்னுன்.

தன்னுடைய கட்சியை வாதாடி மேற்கொள்கள் காட்டி எடுத்துரைத்து, இராமனையும் போடுகிறார் ஒரு போடு. அறியாமை, நீதியல்ல என்று முனிவர் இதுவரை ஆறிநின்ற இராமன் கொள்கை எதுவாயினும் கண்ணை மூடிக்கொண்டு கட்டளையை நிறைவேற்ற வேண்டியது தான் இப்போது இது இராமனுடைய அடக்கத்துக்கும் விநய குணத்துக்கும் பரிசு.

ஐயனங்கது கேட்டறனல்லவும்
எய்தினுலது செய்கவென்றேவினால்
மெய்ய நின்னுரை வேதமெனக்கொடு
செய்கை யன்றேவறஞ் செய்யுமாறென்றாள்

ஸ்ரீ ராமன் முனிவரது கட்டளையைக் கேட்டு தருமம் இல்லாத ஒரு வேலை செய்ய வேண்டி நேர்ந்து அதைச் செய் என்று கட்டளை இடுவீராயின் உமது வாக்கை வேத வாக்காக மதித்து அதை நிறைவேற்ற வேண்டியது என் கடமையன்றோ என்றான். இதிலிருந்தே இராமனுடைய கருத்து நன்கு புரியவில்லையா ?

வீசினாள் தீயனையாள்

கங்கைத் தீம்புனலுடன் கருத்தையும்
மங்கைத்தீய னையாளும் மனக்கொளா
செங்கைச்சூல வெந்தீயினைத் தீயதன்
வெங்கட்டீயொடு மேற்செல வீசினாள்

தாடகை தொடங்கி விட்டாள் கடும்போர் இராமனுக்கு நேரமில்லை மேலும் வாதாட. இனிய நீரையுடைய கங்கை நதி பாயும் கோசல நாட்டிளவரசராகிய இராமனுடைய கருத்தையும் பெண் உருக்கொண்ட நெருப்பை யொத்த தாடகை மனத்திற்கொண்டு தன் சிவந்த கையிலுள்ள கொடிய சூலமாகிய நெருப்பை, தன் வெம்மை

யான கண்களிலுண்டான தீப்பொறியோடு கூட, இராமன் மேல் வீசி எறிந்தாள்.

வந்ததே

புதிய கூற்றனையாள் புகைந்தேவிய
கதிர்கொள் மூவிலைக்கால வெந்தீ முனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல் வரும் கோளென வந்ததே

புதிய யமனை ஒத்தவளான தாடகை கொதித்து ஏவி விட்ட ஒளி உமிழும் சூலம் என்ற அக் காலாக்கினியானது முனிவன் நியமித்த கட்டளையை மேற்கொண்டு நின்ற இராமன் மீது பூரண சந்திரனை விழுங்கவரும் இராகு வருவது போல வந்தது

விலக்கினான்

மாலுமக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
காலனைப் பறித்தக் கொடியாள் விட்ட
சூலமற்றன துண்டங்கள் கண்டனர்.

அல்லின் மாரியனைய நிறத்தவள்
சொல்லின் மாத்திரையிற்கனல் தூர்ப்பன
கல்லின் மாரியைக் கைவகுத்தாளது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினான்

இராமன் அக்கணம் பாணத்தைத் தொட்டதையோ, வில்லை வளைத்ததையோ யாரும் பார்க்கவில்லை. யமனைப் பறித்து அவ்வரக்கி வீசிய சூலத்தின் உடைந்து விழுந்த துண்டுகளைப் பார்த்தார்கள்.

இராக்காலத்து மேகம்போன்ற நிறமுடையவளான தாடகை ஒருசொல்சொல்லும் நேரத்துக்குள் கடல்களையும்

தூர்த்துவிடக் கூடிய கல் மழையைக் கைகளால் வாரி யடித்தார்கள்.

இராம பாணத்தின் வேகம்

சொல்லொக்குங் கடியவேகச்சுடுசரங் கரிய
செம்மல்
அல்லொக்கும் நிறத்தினள் மேல்
விடுதலும்வயிரக்குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்காது
அப்புறங்கழன்றுகல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப்
போயிற்றன்றே

கரிய திருமேனியுடைய இராமன் தவசியாரின் சொல்லுக்கு ஒப்பான மிக்க வேகத்தையுடைய ஒரு கொடிய பாணத்தை இருளை ஒத்த தாடகை மீது விடவே, அப்பாணம் வைரமலை ஒத்த அவளது மார்பில் தைத்துப் பின் அங்குத் தங்கி இராமல் முதுகுப்புறம் ஊடுருவி கீழ்மைக் குணமுடையோருக்கு மேன்மைக் குணமுடை யோர் சொன்ன நல்ல பொருள் போலப் போய்விட்டது.

வீழ்ந்தாள் தாடகை

பொன்னெடுங் குன்ற மன்னான் புகர்முகப்
பகழி என்னும்
மன்னெடுங் காலவெங்காற்ற டித்தலு
மிடித்துவானில்
கன்னெடு மாரி பெய்யக் கடையுகத்தெழுந்த மேகம்
மின்னெடுமசனியோடும் வீழ்வதேபோல
வீழ்ந்தாள்

பொன்மலை யொத்த இராமபிரானுடைய கபில நிறங் கொண்ட பாணம் என்கிற அந்த ஊழிக்காற்றானது

அடித்து வீசவே, ஆகாயத்தில் பெரிய கல்மாரி பெய்வதற்காக, யுகமுடிவு காலத்தில் இடித்துக் கொண்டு சீறி எழுந்த மேகமானது, மின்னலொடும், இடியோடும் விழுவது போலத் தாடகை விழுந்தாள். மின்னல் அவள் கோரைப் பற்களுக்கும், இடி அவள் பயங்கறக் கதறலுக்கும் உவமை.

பொடியுடைக் கானமெங்குங் குரிதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப்பேழ் வாய்த் தாடகை தலைகடோறும்
முடியுடைக் யரக்கற்கந்நாண் முந்தி யுற்பாதமாகப்
படியிடையற்று வீழ்ந்த வெற்றியம்பதாகை யொத்தாள்

புழுதி நிறைந்த அக்கானக முழுதும் இரத்தத்தை யடித்துக்கொண்டு பிற உயிர்களைத் தின்ற இறைச்சி நிறைந்த பற்களையும், பெரிய வாயையையுமுடைய, தாடகை, பத்துதலைகளிலும் முடிகள் அணிந்த இராவணனுக்கு வரப்போகும் கெடுதலுக்கு அறிகுறியாக, பூமியில் அறுந்து விழுந்த அவன் வெற்றிக்கொடியைப்போல விழுந்தாள்.

கான்றிரிந் தாழியாகம் தாடகைக் கடினமார்பத்
தூன்றியபகழி வாயூடொழுகிய குருதி வெள்ளம்
ஆன்றவக்கானமெல்லாம் ஆயின தந்திமாலைத்
தோன்றிய செக்கர்வானந் தொடக்கற்று வீழ்ந்த தொத்தே

அக்கானகம் கடலாகும்படி தாடகையின் கடினமான மார்பில் தைத்த பாணத்தின் வாய்வழியாக ஒழுகிய இரத்தவெள்ளம், அந்திகாலத்தில் தோன்றும் செவ்வானமானது, தன் ஆதாரமற்றுக் கீழே வீழ்ந்ததுபோலத் தோன்றியது.

## கூற்றுஞ்சுவை சிறிதறிந்தது

வாசநாண் மலரோனன்ன மாமுனி பணிமறுத
காசுலாங்கனகப்பைம் பூண் காகுத்தன் கன்னிப்
போரில்
கூசிவாளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்கவஞ்சி
ஆசையா லுழலுங் கூற்றும் சுவை சிறிதறிந்த
தன்றே

மணமிக்க தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்ம தேவனுக்கொப்பான பெருமை உள்ள முனிவரின் கட்டளையை மறுக்காத, இரத்தினங்களிழைத்த பொற்பணிகளணிந்த இராமனது முதன் முதல் போரில், வாளைத் தாங்கிய அரக்கர் குலத்தாரது உயிரைக்குடிக்க விரும்பியும் பயத்தினுல் அவ்வாறு செய்யாமல் திரிந்துகொண்டிருந்த யமனும், கொஞ்சம் சுவைத்துப் பார்த்து ருசியறிந்தான்.

## விண்ணவர் பூமழை

யாமுமெம்மிருக்கை பெற்ருேம் உனக்கிடையூறு
மில்லை
கோமகற்கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி
யென்ன
மாமுனிக்குரைத்துப் பின்னர்விற்கொண்ட
மழையனுன் மேல்
பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர்
போயினுரே

நாங்களும் எங்கள் இருப்பிடங்களைப்பெற்ருேம் 'உனக்கும் இடையூறுகள் வாரா, அரசிளங்குமரனுக்கு கடவுட்டன்மை பொருந்திய படைக்கலன்களை அருள் என்று மாமுனிக்குச் சொல்லிப் பின், இந்திரவில்லைத் தரித்து நிற்கும் மேகம் போன்ற ஸ்ரீராமனை வாழ்த்தி அவன் மீது பூமாரி பெய்து விண்ணவர்கள் வானுலகு சென்ருர்கள்.

## வாலமீகியில் தாடகைவீழ்ச்சி

தாடகை அப்படி ஓடிவருவதைப் பார்த்த விசுவாமித்திரர், ஒரு "ஹுங்காரம்" செய்து அவளை அதட்டிவிட்டு "இராமஇலக்குவருக்கு மங்களம் உண்டாகுக" என்று வாழ்த்தினர். உடனே தாடகை புழுதியை வாரியடித்து அண்ணன்-தம்பியைத் திணறச் செய்தாள். பிறகு மாயையினுல் கருங்கல் மழையாக நம்பிமீதும், தம்பிமீதும் பொழிந்தாள். அதன் பிறகுதான் இராமனுக்கு கோபம் வந்தது. அவளது கல் மழையைத் தன் பாண மழையால் தடுத்த இராமன், அவள் கைகள் இரண்டையும் துளைத்து அறுத்துவிடடாள். அதனுல் கொஞ்சம் தளர்ந்து "ஆ" என்று கத்திக்கொண்டு ஓடி வரும் அரக்கியைத் தம்பி இலக்குவன், மூக்கு காதுகளை அறுத்துக் கதறஅடித்தான்.

உடனே தாடகை மாயை செய்து பல ரூபங்கள் எடுத்தாள். மறைந்து நின்று கல்மழை பெய்தாள். பயங் கரமாகப் பாருங்கற்களை வீசினுள். இப்படி எங்கு பார்த் தாலும் கற்களினுல் வாரியடிக்கப்பட்ட சகோதரர்களைப் பார்த்து முனிவர், "அலம் தே கிருணயாராமா, பாபைஷா துஷ்ட சாரணீ. "ராமா உன் கருணைபோதும், இவள் பாபி, துஷ்டை, யாகத்தைக் கெடுப்பவள், மாயையில் வல்லவள், மாலை வந்து விட்டால் இன்னும் வலுவடைந்து விடுவாள். இருட்டிவிட்டால் பிறகு இவளை வெல்லவே முடியாது. இருட்டில் அரக்கர்களை யாராலும் வெல்ல முடியாது' என்ருர். அதைக்கேட்ட ராமன், "சப்தவேதி" பாணங்களை மழையாகப்பொழிந்து அவளைத் திக்குமுக் காடச் செய்தான். இதனுல் கடுங் கோபங்கொண்ட தாடகை இராம இலக்குவர்களை அப்படியே அலாக்காகத் தூக்கிப்போவதற்காக ஓடோடி வந்தாள்.

தாமாபதந்தீம் வேகேன விக்ராந்தாம் அசனீமிவ
சரேணோரசி விவ்யாத ஸா பபாத மமார ச

அப்படி படுவேகமாக ஓடிவருபவள் மார்பில் ராம வாணம் தைத்தது, அவள் வீழ்ந்தாள், இறந்தும் விட்டாள். பயங்கரமாக விழுந்து இறந்துகிடக்கும் அவளைக்கண்ட இந்திரன் "சபாஷ்" "பலே" என்று ஓடிவந்தான். தேவர்கள் இராமனைப் பூஜித்தனர். அனைவரும் மன மகிழ்ந்து. முனிவரைப்பார்த்து, நாங்கள் மகிழ்ந்தோம், "ஸ்நேகம் தர்சயராகவே" இராமனிடம் உங்கள் அன்பைக் காட்டுங்கள் பிராஜாபதி புதல்வர்கள், பிருசாஸ்வ குமாரர் சத்தியத்தையும், தத்துவத்தையுமே வல்லமையாக உடைய பாணரூபமான அந்தரிடிகளைக் கொடுத்துவிடுங்கள் இராமனுக்கு."

"பாத்ரபூதஸ்ச தே பிரும்மன்" உங்களுக்குச் சிஷ்யனாக இருக்கும் தகுதிபெற்றவன், உங்கள் கட்டளைப்படி நடப்பவன்,

"கர்த்தவ்யம் ச மகத் கார்யம் சுராணாம் ராஜசூநுநா" இந்த அரசிளங்குமாரன் செய்யவேண்டிய பெரிய தேவ காரியம் இருக்கிறது, என்று சொல்லிப் பாராட்டிச் சென்றார்கள். பிறகு மாலையும் வந்தது. தாடகா வதத்தினால் மனமகிழ்ந்த முனிவர் இராமனை அழைத்துக் கொண்டு உச்சிமுகர்ந்தார். இராமா, இன்றிரவு இங்கு கழிப்போம். நாளைக் காலையில் எனது ஆசிரமத்துக்குப் போகலாம் என்றார்".

மூவரும் அன்றிரவைத் தாடகாவனத்தில் கழித்தனர். சாபவிமோசனமடைந்த அக்கொடிய காடு அப்பொழுதே, "ரமணீயம் பிபப்ராஜ யதா சைத்ரரதம்வனம்" கந்தர்வச் சக்கரவர்த்தியின் சைத்திரரத வனம்போல விளங்கியது.

இப்படித் தாடகையை வென்று புகழ்ப்பட்ட இராமன் தூங்கினான். காலையில் முனிவர் எழுப்பினார் என்பது

வால்மீகி தரும் தாடகாவத வருணனை. கம்பரும், வால்மீகிப் படி சக்கைபோடுபோட, நம் துளஸியோ இரத்தினச் சுருக்கமாக ஒரே வரியில் தாடகை வதப் படலத்தையே முடித்து விடுகிறூர்.

சௌபாயி

சலே ஜாத் முனிதீனி தேகாய், சுனி தாடகா க்ரோத்
கரி தாயீ :
ஏகஹும் பாண் பிரான்ஹரி லீனூ, தீன் ஜானி
தேஹநிஜ பத் தீனூ.

முனிபோவதைப் பார்த்து தாடகை வெகுண்டு ஓடி வந்தாள். ஒரே பாணம் அவள் உயிரைக் குடித்துவிட்டது. "எளியள்" என்று உணர்ந்து இராமன் அவளுக்குத் தனது பரமபதத்தைத் தந்தான். முடிந்தது கதை.

காசிக்குப் போனேன், காவடி கொண்டுவந்தேன் என்று முடிப்பதில் துளஸி மகா சமர்த்தர். "இராமக் கோன் பெண்சாதியை இராவணக்கோன் கொண்டு போனுன், அனுமந்தக் கோனுன் அடிச்சுப்பிடிச்சுக் கொணர்ந்தான்" என்ற அருமையான பழமொழியை உண்டாக்கிய அதிமேதாவி ஒரு வேளை துளஸியின் கதை சொல்லும் நடையைப் பார்த்துவிட்டுத்தான் அதை உண்டாக்கினூனே என்னமோ? அப்படியே "அஸ்திரங் களைக் கொடுப்பதும்" அரை வரியில் முடிகிறது. "வித்தியா நிதி கஹும்வித்யாதீனி" என முடிந்தது அஸ்திரப் பிரதானம். வித்தைக்கடலுக்கு வித்தையளித்தார். அது துளசியின் போக்கு. அவருக்கு பக்தியே பிரதானம். கதை யல்ல அதுவும் தவிர அவர் ராமன் பரம்பொருள். அவன் அறியாதது ஒன்றுமில்லை. எல்லாம் வல்ல இறைவன். ஆதலால் இந்த நம்பிக்கை அவருக்கு மற்ற விவரங்களை வளர்த்த இடமளிப்பதில்லை. அதுவும் ஒரு முக்கிய காரணம். அவருடைய அருமைக்கு ஒரு வரி. அரை வரி

வருணனைகளுக்கு; அதுவும் சுவையளிக்கிறது நமக்கு ஒப்பு நோக்குகையில்,

உம்பர்கள் உறைத்தபடி மறுநாட்காலே முனிவர், அரசிளங்குமரனும், கட்டிளங்காளையுமாகிய ஸ்ரீ ராமபத்ர னுக்கு தெய்வப்படைகலங்களை முறைப்படி தந்தருளினர். இந்தக் கட்டம் வால்மீகியில் மிக்க விவரமாகவும் ரஸமாக வும் வர்ணிக்கப்படுகிறது துளசியோ வழக்கப்படி அரை வரி வருணையில் அதிஜோராக முடித்துவிடுகிறர். ஆனல் கம்பரும் இங்கு துளசி மாதிரி இரண்டே பாடல்களில் விடயத்தை முடித்துவிடுவது சற்று அதிசயமாகத் தானிருக்கிறது. மூவரையும் கொஞ்சம் பார்ப்போம்.

## கம்பர்

விண்ணவர் போயபின்றை விரிந்த பூமழையினுலே
தன்னெனுங்கான நீங்கித்
தாங்கருந்தவத்தின்மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தென
சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லேயன்ன படைக்கல
மருளினனே

தேவர்கள் போன பிறகு, பூமாரியால் குளிர்ச்சியடைந் திருக்கிற அக்காட்டைவிட்டு, நிருபதி குமாரர்களும், தவத்தின் மிக்க முனியும் நீங்கி வேறு இடம் சென்றூர்கள். தாித்திர வியாதிக்கு மருந்து போன்ற திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலுடைய சொல்லைப் போன்ற, தெய்வப்படைக் கலங்களை இராமனுக்கு அருளினர் முனிவன். மருந்தைக் கண்டால் வியாதி நில்லாதது போலச் சடையப்ப வள்ளலைக் கண்டால் தரித்திரம் நில்லாது. அவரது சொல் தவருமை போலப் படைக்கலங்களும் தத்தம் தொழில் தவரு என்பது கருத்து. கம்பராமாயணத்தில் வரும், கம்பரது ஆதரவாளர் சடையப்ப வள்ளலைக் குறித்து பல பாடல்களுள் இதுவும் ஒன்று.

## வருவ போல் வந்த

ஆறியவறிஞன் கூறியளித்தலும் மண்ணறன்பால்
ஊறியவுவகையோடு மும்பர்தம் படைகளெல்லாம்
தேறிய மனத்தான் செய்த நல்வினைப்
பயன்களெல்லாம்
மாறிய பிறப்பிற்றேடி வருவ போல்வந்தவன்றே

காம-வெகுளி-மயக்கமற்ற அறிஞன் மந்திரோபதேசம் செய்து அளித்தவுடனேயே அந்த தெய்வீகாஸ்திரங்களெல்லாம், ஐயமற்ற மனமுடை நல்லவள் ஒருவன் முன் சென்மத்தில் செய்த நல்வினைப் பயன்களெல்லாம், மறு பிறப்பில் அவனைத் தேடிக்கொண்டு வருவது போல, இராமனிடத்தில் சுரந்த அன்புடன் வந்தன. காளிதாஸரும் குமாரசம்பவத்தில் பார்வதி படிக்கும்போது "பிரபேதிரே பிராக்தன ஜன்ம வித்யா" என்கிறார். விட்டகுறை தொட்டகுறை என்பதுமதுதான். ஆதலால், ஆயுதராஜமாகிய சுதரிசனத்தையுமைய இராமனிடம் மற்ற தெய்வாஸ்திரங்கள் அன்புடன் வந்தடைந்தன என்கிறார் கம்பர்.

## படைக்கலங்கள் வேண்டுகோள்

மேவினம் பிரிதலாற்றேம் வீரநீ விதியினெம்மை
ஏவின செய்து நிற்றும் இளையவன் போல வென்று
தேவர்தம் படைகள் செப்பச் செவ்விதென்றவனும்
நேரப்
பூவை போனிறத்திருர்க்குப் புறத் தொழில்
புரிந்தவன்றே

அவ்வாறு வந்த தேவாஸ்திரங்கள் ஸ்ரீ ராமபிரானை நோக்கி, "ஏ பராக்கிரமசாலியே, உன்னை வந்தடைந்தோம். இனியுன்னை விட்டுப்பிரிய மாட்டோம். இளைய பெருமாள் ஏவின தொழிலையுனக்குச் செய்வதுபோல,

நாங்களும் செய்வோம், '' என்று சொல்ல, இராமனும், '' அப்படியே ஆகுக '' என்று சம்மதிக்க, காயாம்பூ வண்ணத்தனுகிய ஸ்ரீ ராமனுக்கு புறத்திலுள்ள திருப்பணிகளைச் செய்து கொண்டிருந்தன. இவ்விதமாக இரண்டே பாடல்களில் அஸ்திரப் பிரதானத்தை முடித்து விடுகிருர் கம்பர். துளசியோ, '' ஆயுத சர்வ சமர்ப்பி கை, பிரபு நிஜ் ஆச்ரமம் ஆனி '' என்று '' எல்லா ஆயுதங்களையும் அளித்துவிட்டு, தன் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார் ' என ஒரே வரியில் முடித்து விடுகிருர். ஆனுல் ஸ்ரீவால்கியோ இக்கட்டத்தை, விரிவாகவும் மிக்க சுவையுடனும், வருணிக்கிருர், ஆதலால் அவரது வருணனையைக் கவனிப்போம்.

## வால்மீகியில் திவ்யாஸ்திரப் பிரதானம்

அத தாம் ரஜனீமுஷ்ய விஸ்வாமித்ரோ மகாயசா:
ப்ரஹஸ்ய் ராகவம்வாக்யம் உவாச மதுராட்சரம்,
பரிதுஷ்டோஸ்மி பத்ரம் தே ராஜபுத்ர மகாயச :
ப்ரீத்யா பரமயா யுக்தோ ததாம்யஸத்ராணி ஸர்வச,
தேவாசுர கணுன்வாபி ஸகந்தர்வோரகானபி
யைரமித்ரான் ப்ரஸஹ்யாஜௌ வசீகருத்ய ஜயிஷ்யஸி
தானி திவ்யானி பத்ரம்தே ததாம்யஸ்த்ராணி சர்வச:
தண்டசக்ரம் மஹத் திவ்யம் தவதாஸ்யாமி ராகவ

அன்றைய இரவு கழிந்தவுடன், ஸ்ரீ ராகவனைப் பார்த்து முனிவர் புன்முறுவலுடன் இனிய சொற்களால் பின்வருமாறு கூறினுர். '' அரசிளங்குமரா, உன்னிடம் நான் மிக்க மகிழ்ச்சியடைந்துள்ளேன். உனக்கு எல்லாவகைப் படைக்கலங்களையும் தருகிறேன். தேவர்களோ, அசுரர்களோ கந்தர்வர்களோ, உரகர்களோ, யாவராயினும், எதிர்த்து வரும் பகைவர்களை, மடக்கி வெற்றிக் கொள்ளமுடியும் யுத்தத்தில் இவைகளால். அந்தப் தெய்வீகப் படைக்கலங்களை உனக்கு அப்படியே தருகிறேன். ''

என்று கூறிவிட்டு வித விதமான அஸ்திரங்களின் பிரயோகம், பெயர், மந்திரோச்சாடன முறை யாவற்றையும் இராமனுக்கு விளக்குகிருர். அஸ்திரங்களின் பெயர்களும் அற்புதமான வகையில் வருணிக்கப்படுகின்றன.

சக்கரங்கள்

தர்மசக்ரம் ததோ வீர காலசக்ரம் ததைவ ச
விஷ்ணுசக்ரம் ததாத் யுக்ரம் ஐந்த்ரமஸ்த்ரம்
ததைவ ச

திவ்யமான தண்டசக்ரம், தரும சக்கரம், யமசக்கரம் மகா உக்கிரமான வீரியம் நிறைந்த விஷ்ணுவின் சக்கரம், இவைகளையும், இன்னம் அதி உக்கிரமான இந்திராஸ்திரம் அப்படியே.

அஸ்திரங்கள்

வஜ்ரமஸ்திரம் நரஸ்ரேஷ்ட சைவம் சூலவரம்
ததா
அஸ்த்ரம் பிரும்ம சிரஸ்சைவ ஐஷீகம் அபிராகவ
ததாமி தே மஹாபாஹோ பிரம்மாஸ்த்ரம் அனுத்தமம்

வச்சிராயுதம், சிவனுடைய சூலாயுதம், பிரும்மசிரம் என்று பெயர்கொண்ட பிரம்மாஸ்திரம், பிரும்மபாவம் இவைகளையும் உனக்குத் தருகிறேன்.

கதைகள்

கதே த்வே சைவ காகுஸ்த மோதகீ சிகரீ உபே
ப்ரதீப்தே நர சார்தூல பிரயச்சாமி நிருபாத்மஜ

மிகவும் ஒளிபொருந்திய மோதகி, சிகரி என்று பெயர் பெற்ற இரண்டு கதைகளையும் நான் உனக்குத்தருகிறேன்.

பாசங்கள்

தர்ம பாசம் அஹம் ராம காலபாசம் ததைவச
பாசம் வாருணம் அஸ்த்ரம் சததாம்யஹம்
அனுத்தமம்

தரும பாசத்தையும், யம பாசத்தையும், வருண பாசத்தையும், வருண அஸ்திரத்தையும் உனக்கு அளிக்கிறேன்.

## இடியாஸ்திரம்

நீரிடி, நெருப்பிடி,

அசனீ, த்வேபிரயச்சாமி சுஷ்கார்த்ரே ரகு நந்தன

நீரிடி, நெருப்பிடி என்னும் இரண்டு இடி அஸ்திரங்களையும் தருகிறேன் ரகுராமா.

## தேவாஸ்திரங்கள்

ததாமி சாஸ்திரம் பைநாகம், அஸ்த்ரம்
நாராயணம் ததா
அக்னேயமஸ்த்ரம் தயிதம் சிகரம் நாம நாமத:
வாயவ்யம் பிரதமம் நாம ததாமிச தவானக
அஸ்த்ரம் ஹயசிரோ நாம கிரௌஞ்சமஸ்த்ரம் ததைவச

சிவனுடைய பைநாகம் என்னும் பாசுபதாஸ்திரம், நாராயண அத்திரம், சிகரம் என்னும் அக்கினி அத்திரம், பிரதமம் நாமமுடைய வாயு அத்திரத்தையும், ஹயசிரஸ் என்னும் அஸ்வினிதேவ அத்திரங்கள், கிரௌஞ்சம் என்னும் குமாராஸ்திரத்தையும் உனக்குத் தருகிறேன்.

## பல வகை ஆயுதங்கள்

சக்தித்துவயம் சகாகுஸ்த ததாமி தவ ராகவ
கங்காளம் முஸலம் கோரா கபாலம் அத கங்கணம்
தாரயந்தய்சுரா யானிததாம்யேதானி சர்வச:

வல்லமை மிக்க இரண்டு வடிவேல்கள், எலும்பாயுதம் கொடிய உலக்கை. கொடுமைமிகு மண்டையோட்டாயுதம், கங்கணம், இன்னம அரக்கர்கள் உபயோகிக்கும் எல்லா வகை ஆயுதங்களையும் தருகிறேன்.

## பலப்பல வகைப் படைக்கலம்

வைத்யாதரம் மகாஸ்த்ரம் ச நந்தனம் நாம நாமத :
அஸிரத்னம் மகாபாஹோ ததாமி ந்ருவாரத்மஜ
காந்தர்வாஸ்த்ரம் தயிதம் மானவம்நாம நாமத :
பிரஸ்வாபன பிரசமனேதத்மி சௌரம் ச ராகவ
தர்ப்பணம் சோஷணம் சைவ சந்தாபன விலாபனே
மதனம் சைவ துர்த்தர்ஷம் கந்தர்ப்பதயிதம் ததா
பைசாசமஸ்த்ரம் தயிதம் மோகனம் நாம நாமத :
பிரதீச்ச நரசார்தூல ராஜபுத்ர மகா யச :
தாமசம் நரசார்தூல ஸௌமனம் சமகாபல
ஸம்வர்த்தம் சைவதுர்த்தர் ஷம் மௌசலம்
சநிருபாத்மஜ
ஸத்யமஸ்திரம் மகாபாஹோ ததாமாயாதரம் பரம்
கோரம் தேஜப்பிரபம் ராமபரதேஜோபகர்ஷணம்
சௌம்யாச்த்ரம் சிசிரம நாமத்வாஷிட்ரமஸ்த்ரம்
சுதாமனம்
தாருணம் சபகஸ்யாபி சீதேஷுமத மானவம்
ஏதான்ராம மகாபாஹோ காமரூபான் மகாபலான்
கிருஹாண பரமோதாரான் ஷிப்ரமேவ நிருபாத்மஜ

மிக உயர்ந்த படைக்கலங்களாகிய நந்தனம் என்னும் வித்தியாதர அத்திரம், வாட்களுள் இரத்தினம் போன்ற உடைவாள், மானவம் என்னும் கந்தருவாத்திரம், தூக் காத்திரம், மயக்காத்திரம், சூரியாத்திரம், பெருமிதப் படைக்கலம், வற்றவடிக்கும் படைக்கலம், கதறவடிக்கும் படைக்கலம், எரிக்கும் படைக்கலம், மதனம் என்னும் மன்மதப் படைக்கலம், ஒளிவீசும் படைக்கலம், புட்பப் படைக்கலம், மோகனம் என்னும் பிசாசு அத்திரம், இருட் டடிக்கும் படைக்கலம், மேகம் பொழியும் படைக்கலம், உலக்கைப் படைக்கலம், சத்தியப் படைக்கலம், மாயைப் படைக்கலம், தேஜைபபிரபம் என்னும் எதிரியின் தேஜஸை இழுக்கும் படைக்கலம், சிசிரம் என்னும் சாந்திப் படைக் கலம், சுதாமன் என்னும் துஷ்டாவின் படைக்கலம், தாருணம் என்னும் பகன் படைக்கலம், குளிர் அடிக்கும்

படைக்கலம், மானவம் என்னும் கொடிய படைக்கலம் இவைகளை, மகாபலம் பொருந்திய நினைத்த உரு எடுக்க வல்ல இந்த அஸ்திரக் கட்டங்களை உனக்கு நான் தருகிறேன், பெற்றுக்கொள் ” என்ருர் முனிவர்.

ஸதிதஸ்து பிராங் முகோ பூத்வாசுசிர் முனிவர ஸ்ததா
ததெள ராமாய சுப்ரீதோ மந்த்ரக்கிராமமனுத்தமம்

கிழக்கு முகமாக இருந்துகொண்டு மன மகிழ்ந்து இராமனுக்கு அத்திரங்கள், உச்சாடனமுறைகள், யாவற்றையும் தந்து உபதேசித்தருளினுர். எல்லா படைக்கலங்களையும் ஒரே இடத்தில் இப்படிக் காண்பதோ அடைவதோ தேவர்களுக்கும் அரிது. அவைகளை இராமன் முனிவரிடம் பெற்ருன்.

## படைக்கலங்களின் தோற்றம்

ஜபதஸ் து முனேஸ்தச்ய விசுவா மித்ரஸ்ய தீமத:
உபதஸ் துர்ம ஹார்ஹாணி சர்வாஸ்யஸ்த்ராணி ராகவம்
ஊசுஸ்ச முதிதாஸ் சர்வே ராமம் பிராஞ்ஜலயஸ்ததா
இமே ஸ்ம பரமோதாரா: கிங்கரா: ஸ்தவ ராகவ

முனிவர் துதிக்கவே அத்தனைப் படைக்கலங்களும் தோன்றிய இராமன் எதிரில். “இராமா. நாங்கள் இனி உன்னுடைய சேவகர்கள். என்ன கட்டளை ?” என்று கைகூப்பிய வண்ணம் கேட்டன.

## இராமன் பதில்

பிரதிகிருஹ்ய சகாகுஸ்த: ஸமாலப்ய சபாணிஞ
மானஸா மே பவிஷ்யத்வம் இதி தானப்யசோதயத்

அப்படைக்கலங்களை ஏற்றுக்கொண்டு, தனது கைகளால் தடவிக் கொடுத்து, ஸ்ரீ ராமன், “நான் எப்

பொழுது நினைக்கிறேனே அப்பொழுது வாருங்கள் " என்று என்று அருளிச் செய்தான். அதன்பிறகு முனிவரை இராமன் வணங்கிவிட்டுப் புறப்படச் சித்தமானான். இப்படி முடிகிறது வால்மீகி இராமாயணப் படைக்கலப்படலம். இதைத்தான் பவபூதி தனது உத்தர ராம சரித நாடகத்தில் உள்ளத்தை உருக்கும் வண்ணம் குச - லவர் பிறப்பின் போது வருணிக்கிறார். இராமனுக்குத் தவத்தினாலும், வீரத்தினாலும், அருளினாலும் கிடைத்த ஜிரும்பாகாஸதிரங் கள் இராம குமாரர்களுக்கு, " ஜன்ம சித்தானி ", பிறப்பு உரிமையாகவே கிடைத்துவிடுகின்றன. இதையறியாத இராமன் தம்பிமார்கள் லவ - குசர்கள் சந்திரகேது யுத்தத் தின்போது, இராமனுக்குமட்டுமே தெரிந்த இவைகள் இம் முனி குமாரர்களுக்கு எப்படி வசமாயின, " என்று திகைக் கிறார்கள். அற்புதமாக வருணிக்கிறார் இதை பவபூதி, நிற்க,

இப்படியாகத்தானே மூவரும் ஒரே கட்டத்தை மூன்று வகையில் கூறுகிறார்கள். கம்பர் ஓட்டம் என்றால் துளஸி கண்மண் தெரியாத ஓட்டம். இந்த இடத்தில் நின்று நிதானமாக ரசமாக வருணிப்பவர் வால்மீகியொருவர்தான், கம்பருக்கு அவசரம். துளசிக்கு அசட்டை. வால்மீகிதான் வந்தது வரட்டும், மெதுவாகத்தான் போவேன் என்று துணிகிறார். என்ன அருமையான வர்ணனை, அற்புதமான சித்திரிப்பு, அபாரமான கவிதை வெள்ளம் ?

இனி போகும் வழியெல்லாம் புதுப்புதுக் கதைகள் வரப்போகின்றன. பவளத்துடன் முத்துக் கோத்தது போல, இராம சரித்திரத்துடன் இக்கதைகள் கோக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு கதையும், கட்டமும், ஒரு துளி முத்துதான். இராமன் இளைஞன் கரைகாணு உற்சாகத்துடன் பார்க்குமிடமெல்லாம் நீக்கமற ஒரு அரிய கேள்வி போடு கிறான். அதற்குப் பதில் சொல்லி விளக்க முன்வரும் முனிவர் ஒரு கதையை சொல்லவேண்டி வருகிறது. நீண்ட வழிப்பிரயாணம் செய்பவர்களுக்கு, கதை சொல்லுதலும்,

கேட்டலும், ஒரு பொழுதுபோக்கு அது மட்டுமல்ல: நல்ல அறிவுக்குச் சாதனம். இது இயற்கை. இதை நன்கறிந்த வால்மீகி, இயற்கையில் வழி நடப்பவர்கள் எப்படிக் கேள்வி. கேட்பார்களோ, எபபடி கதை சொல்லும் வழியெல்லாம் சொல்லச் சொல்லுவார்களோ அப்படியே இராம, இலக்குவ, முனிவர்களையும் செய்ய வைக்கிறார். வேள்வி, சுபாகு வதம், அகலிகை சாபவிமோசனம் மிதிலைக் காட்சி இவைகளில் இடை இடையிடையே கதைகள், உபகதைகள் நிறைய வரும்.

சுரர் தொழுதிறைஞ்சற் கொத்த துT நதியாவதென்று
வரமுனிதன் னையண்ணல் வினவுற மலருள்வைகும்
பிரமனன்றளித்த வென்றிப்
பெருந்தகைகுசனென்றோதும்
அரசர்கோன் மனைவி தன்பாலளித்தவர் நால்வராகும்

அந்நதியினருகில் சென்றதும் ஸ்ரீ ராமன் "தேவர்களும் தொழுது வணங்குதற்குரிய இந்நதி என்ன நதி" என்று கேட்க முனிவர் சொல்லலானார். பிரமனளித்த நல்வரத்தாலும், வெற்றியினாலும் விளங்கிய குசன் என்ற பேராற்றல் மிக்க அரசபிரானுக்கு அரசியிடம் நான்கு குமாரர்கள் உண்டாயினர்.

குசன் குசநாபன் கோதில் குணத்தின தூர்த்தன்
கொற்றத்
திசைசெழு வசு வென்றோதுமிவர் பெயர் இவர்
கடம்மில்
குசன் கவுசாம்பி நாபன் குளிர்மகோதயம தூர்த்தன்
வசையில் தன்மவனமற்றை வசு கிரிவிரசம்
வாழ்ந்தார்.

குசன், குசநாபன், குற்றமற்ற குணமுடைய தூர்த்தன், வசு என்பன இவர்கள் பெயர்கள். இவர்களுள்

குசன் கௌசாம்பி நகரத்திலும், குசநாபன் குளிர்ச்சி பொருந்திய மகோதய நகரத்திலும் தூர்த்தன் தரும வன நகரத்திலும் வசு கிரிவிரிசம் என்ற நகரத்திலும் அரசு புரிந்துகொண்டிருந்தார்கள்.

அவர்களிற் குசநாபற்கே யையிரு பதின்மரஞ்சொல்
துவரிதழ்த்தெரிவை நல்லார் தோன்றினர் வளரு
நாளில்
இவர்பொழிற்ற லேக்கணுயைத் தெய்துழி வாயுவெய்தி
கவர் மனத்தின ஞயந்தக் கன்னியர் தம்மை
நோக்கி

அவர்களில் குசநாபற்கு பவளம்போன்ற உதடு களுடைய நூறு அழகிய பெண்கள் பிறந்தார்கள். கொஞ்ச நாட்கள் கழித்து இவர்கள் வளர்ந்து வருகையில், ஒரு நாள் தோட்டத்தில் இப்பெண்கள் தோழியருடன் விளையாடிக் கொண்டிருக்கும்போது, வாயு அவ்விடத்துக்கு வந்தான். அவர்களைக்கவர எண்ணங்கொண்ட வாயு அப்பெண்களைப் பார்த்துச் சொல்லலுற்றான்.

கொடித்தனி மகரங்கொண்டான் குனிசிலைச்
சரத்தானெந்தேன்
வடித்தடங் கண்ணிரென்னை மணத்திரென்றுரைப்ப
வெந்தை
அடித்தலத்து உரைத்து நீரோடளித்திடின
ணைதுமென்ன
ஒடித்தனன் வெரிஞை வீழ்ந்தாரொளிவளை
மகளிரெல்லாம்.

ஒப்பற்ற மகரமீனைத் தன் கொடியிற்கொண்ட மன்மத னுடைய புட்பபாணங்களால் நொந்தேன். ஆதலால் நீங்கள் என்னை மணந்துகொள்க என்றான். இதைக்கேட்ட அக்கன்னியர், "எங்கள் தந்தையிடம் சொல்லுங்கள். அவர் மணம் செய்துகொடுத்தால், செய்து கொள்ளு

கிறோம்'' என்ருர்கள். இதைக்கேட்டுக் கோபம்கொண்ட வாயு அவர்கள் முதுகுகளை ஒடித்துவிட்டான். அக் கன்னியர் உடனே கீழே வீழ்ந்துவிட்டார்கள்.

சமிரணனகன்ற பின்னர்த் தையலார் தவழ்ந்து சென்றே
அமிர்துகு குதலை மாழ்கி யரசன்மாட்டுரைப் பவன்ஞன்
நிமிர் குழல் மடவார் வேற்றிநிறைதவன் சூளிநல்கும்
திமிரறு பிரம தத்தத்ற்களித்தானன் றிருவனுரை.

முதுகுகளை ஒடித்த பின்னர் காற்றுக்கடவுள் சென்று விடவே, அமுதமொத்த குதலைச் சொற்களால் குழறிக் கொண்டே, தவழ்ந்துசென்று, அந்த அரசிளங்குமரிகள் தங்கள் தந்தையாகிய அரசனிடம் சொல்லவே. நீண்ட குழலையுடைய அப்பெண்களை அரசன் தேற்றி, சூளி என்றவருடைய குமாரராகிய ஞானியாகிய பிரம தத்தருக்குத் திருமணம் செய்துகொடுத்தான்.

அவன் மலர்க்கைகள் தீண்டக் கூன் நிமிர்ந்தழகு வாய்த்தார்
புவனமுற்றுடைய கோவும் புதல்வரில்லாமை வேள்வி
தவர்களிற் புரிதலோடும் தகையுறத்தழலினுப்பன்
கவன வேகத்துரங்கக் காதி வந்துதயஞ் செய்தான்.

அந்த அரசகுமாரிகள் தாமரை மலர் போன்ற கைகளை அப்பிரமதத்தன் தொட்டதுமே அவர்கள் கூன் நிமிரப் பெற்று அழகு பெற்ருர்கள். அதன் பின், உலக முழுதும் தன் ஆளுகையினுடைய குசநாபவரசன், தனக்கு ஆண் மகனில்லாமையால் புத்திர காமேட்டி வேள்வினய

முனிவர்களைக்கொண்டு செய்தான். அந்த வேள்வி நெருப்பினிடையே வேகமான நடையையுடைய குதிரைப்படைக் கதிபன் ஆகிய காதி என்பவன் வந்து பிறந்தான்.

## கௌசிகர் – கௌசிகை பிறப்பு

அன்னவன்றனுக்கு வேந்தனரசொடு முடியுமீந்து
பொன்னகரடைந்த பின்னர் புகழ் மகோதயத்தில்
வாழும்
மன்னவன் காதிக்கியானும் கௌசிகை என்னும்
மாதும்
முன்னர் வந்துதிப்பவந்த முடியுடை வேந்தர்
வேந்தன்

அந்தக் காதிக்கு குசநாபன் அரசாட்சியை அளித்து விட்டு விண்ணுடு அடைந்த பின்னர், அந்தக் காதி மன்னனுக்கு நானும், கௌசிகை என்ற பெண்மணியும் பிறந்தோம்.

## கௌசிகை நதியானது

பிருகுவின் மதலையாய பெருந்தகைப்பிதாவு
மொவ்வா
இருசிகனென்பவர்க்கு மெல்லியலாளை ஈந்தான்
அருமறையவனுஞ் சின்னுளறம் பொருளின்பமுற்றி
விரிமலர்த்த விசோன்றன்பால் விழுத்தவம்
புரிந்து மீண்டான்.

காதி தன் மகளை இருசிகன் என்பவருக்கு மணம் செய்து கொடுத்தான்; அந்த இருசிகனும் சில காலம் இருந்து பின் தவம் செய்து சித்தியடைந்தான்.

காதலன் சேணிங்கக்கவுசிகை தரிக்கலாற்ருள்
மீதுரப்படரலுற்ருள் விழு நதி வடிவமாகி
மாதவர்க்கரசு நோக்கி மாநிலத்துறுகணீக்கப்
போதுக நதியாயென்னுப் பூமகனுலகு புக்கான்

தன் கணவன் விண்ணுடு செல்லுதலைப் பொறுக்க மாட்டாதவளாகிய கௌசிகை தான் ஒரு உயர்ந்த நதி உருக்கொண்டு ஆகாயத்தில் செல்லத்தொடங்கினுள். பெரிய தவத்தரசாகிய இருசிக முனிவர் அதைப்பார்த்து “இப்பெரிய பூவுலகில் உள்ளவர்களது துயரத்தைத் தீர்ப் பதற்கு நீ இந்நதி வடிவாகவே பூமிக்குப் போ” என்று சொல்லிவிட்டு தான் பிரமனது உலகம் போய்விட்டார்.

எம்முனு ணங்கையிந்த விருநதியாயினுளென்
றம்முனி புகலக்கேளா வதிசய மிகவுந்தோன்றச்
செம்மலுமிளைய கோவும் சிறிதிடந்தீர்ந்த பின்னர்
மைம்மலி பொழில் யாதென்ன மாதவன்
கூறலுற்ருன்

“எனக்கு மூத்த தமக்கையராகிய கௌசிகை இந்த நதியானுள்” என்று கௌசிக முனி சொல்லக் கேட்ட இராம-இலக்குவர்கள், கொஞ்ச தூரங்கடந்த பிறகு, அங்கு ஒரு சோலையைக் கண்டு மேகங்கள் படிந்து விளங்கும் இது என்ன சோலை என்று கேட்க, விசுவாமித்திரர் சொல்லத் தொடங்கினுர்.

தங்கணுயகரிற்றெய்வந் தவம் பிறிதில
வென்றெண்ணும்
மங்கைமார் சிந்தைபோலத் தூயது மற்றுங்
கேளாய்
எங்கணேன் மறைக்குந் தேவர் அறிவிற்கும்
பிறர்க்குமெட்டாச்
செங்கண்மாலிருந்து மேனுள் செய்தவஞ்செய்த
தன்றே

தங்கள் கணவரைப் பார்க்கிலும் தெய்வமும் தவமும் வேறு இல்லை என்றெண்ணு நிற்கும் கற்புடைய மங்கை மார்களின் மனம்போல பரிசுத்தமானது. இதன் பெரு மையை இன்னும் சொல்லக்கேள். எங்களுக்குரிய நான்கு வேதங்களுக்கும் தேவர்கள் அறிவுக்கும் பிறர்க்கும் எட்டா

மல் நிற்கும் எங்கள் செங்கண்மாலின் தவம் செய்தற் குரிய தவம் செய்யப்பட்ட ஆசிரமம் இது.

பாரின்பால் விசும்பின் பாலும் பற்றறப்படிப் பதன்றூன்
பேரென்பானவன் செய் மாயப் பெரும் பிணக் கொருக்கு தேர்வார்
ஆரென்பானமல மூர்த்தி கருதியதறிதறேற்றும்
ஈரைம்பானூழி காலம் இருந்தவமியற்றியிட்டான்

மண்டலத்திலும், விண்டலத்திலும் உள்ளவர்கள் படிப் பது அவனது திருநாமம் அவன் மாயையை அறிய வல்லர் யாவர்? அந்த தூய வடிவமுள்ள கடவுள் இங்கு நூறு ஊழிக்காலம் பெருந்தவம் செய்தான்.

"ஸ்வயம் விதாதா தபஸ: பலாறும் கேனுபி காமேன தபஸ்சசார" என்று காளிதாஸன் குமார சம்ப வத்தில் பரமசிவன் தவத்தைப்பற்றிக் கூறுவது போல, இங்கு கம்பர் திருமாலின் தவத்தைப்பற்றிக் குறிப் பிடுகிறார். தானே தவத்தின் பலனாக விளங்குபவன் தவம் செய்வது ஏனோ? யார் அறிய முடியும்? அவன் திருவிளையாடல்.

மண்ணளந்த மாதவன் மாவலியின் வேள்வியில்

ஆனவனிங் குறைகின்ற வந்நாள் வாய்
ஊனமில் ஞாலமொடுங் குமெயிற்றூன்
ஏனமெனுந் திறன் மாவலி என்பான்
வானமும் வையமும் வவ்வுதல் செய்தான்

அத்தன்மையன் ஆன இறைவன் இங்கு வசித்து வந்த அக்காலத்தே குறைவற்ற இவ்வுலகுகளை எல்லாம் தன் வயிற்றிலே அடக்கும் வல்லமைகொண்ட, ஆண் பன்றிக்கடவுள் என்று சொல்லத்தக்க வலிமை பொருந்திய

மாவலி ('' மகாபலி '') என்பவன் மண்தலத்தையும், விண் தலத்தையும் தவத்தினுல் கவர்ந்துகொண்டான்.

செய்தவர் வானவரும் செயலாற்ரு
நெய்தவழ் வேள்வியை முற்றிட நின்ருன்
ஐயமில் சிந்தையன் அந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்

தவ முனிவர்களும், தேவர்களும் செய்ய இயலாத ஒரு மாபெரும் வேள்வியைத் தொடங்கிய மாபலி, வேள்விப் பயனில் சிறிதும் ஐயமற்ற மனத்தினன் ஆக, வேதியர் களுக்குப் பூமி முதல் மற்ற எல்லா பெரிய, சிறிய பொருள் களையும் தானம் செய்யத் துணிவு கொண்டான்.

ஆயதறிந்தனர் வானவரந்நாள்
மாயனை வந்து வணங்கி இரந்தார்
தீயவன் வெந்தொழில் தீர் என நின்ருர்
நாயகனும்மது செய்ய நயந்தான்

அந்தச் செய்தியைத் தேவர்கள் அறிந்து, அக்காலத் தில் இங்கு வந்து, மாயவனை வணங்கித் தொழுது, ''இம் மாபலியின் கொடும் செய்கையைத் தீர்த்து அருள்க'' என்று வேண்டினுர்கள். இறைவனும் அது செய்ய ஒப்புக் கொண்டார். மாபலி செய்யும் வேள்வி இந்திர பட்டத்தை யும், பதவியையும் பெறுதற் பொருட்டு. ஆதலாலே அவ னைத் தீயவன் என்றும் அவன் செய்யும் நற் கருமத்தை '' வெந்தொழில் '' என்றும், அசுரரிடத்தில் பகைமை பாராட்டும் தேவர்கள் கூறலாயினர்.

வாமனுவதாரம்

கால நுனித்துணர் காசிபனென்னும்
வாலறிவற் கதிதிக்கொரு மகவாய்

நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தின ருங்குறளானன்

நீல நிறமுடைய நெடுந்திருமால், முக்காலமும் உணர வல்ல மெய் ஞானியாகிய காசியபர் என்னும் முனிவருக்கும், அவர் மனைவி அதிதி என்பவருக்கும், ஒரு மகனாகப் பிறந்து, ஒரு பெரிய ஆலமரத்தையே உள்ளடக்கிய ஆலம் விதையைப் போல, அரிய வாமன உருவம் எடுத்தான்.

முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதொர் நாவன் அனற்படு கையன்
அற்புதன் அற்புதரே யறியுந்தன்
சிற்பத மொப்பதொர் மெய்க்கொடு சென்றான்

மூன்று முறுக்காயிருக்கின்ற பூண் நூலையணிந்தவனும், முஞ்சிப் புல்லாற் செய்த அரை நாணையுடையவனும், வேதம் முதலிய கலைகள் விளங்கும் நாவை யுடையவனும் வேள்வித் தீ விளங்கும் கைகளை யுடையவனும், ஞானமே திருமேனியாகவும் உடைய, மெய்ஞானிகளே அறியத்தக்க தனது பரமபதம் என்னும் வைகுந்தத்துக்கு ஒப்பான, திரு உருக்கொண்டு வந்தான்.

அன்றவன் வந்ததறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெதிர் கொண்டான்
நின்றனின் அந்தணரில்லை நிறைந்தோய்
என்றனின் உய்ந்தவர் யாரினி என்றான்.

அக்குறளன் தன்னிடம் வந்து எழுந்தருளியதைக் கண்ட மாவலி, ஆச்சரியத்துடன் முன் வந்து எதிர் கொண்டழைத்தான். "தவம் நிறைந்தோனே, உன்னை விடச் சிறந்த அந்தண்மைப் பூண்டோர் வேறு யாருமில்லை. என்னைவிட உயர்ந்தவர் இனி வேறு யார்?" என்றான்.

ஆண்டகை யவ்வழி கூற அறிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்ட கையாய் இனி நின்னுழை வந்தோர்
மாண்டவர் அல்லவர் மாண்பிலர் என்றான்.

மாவலி அப்படி சொல்லக் கேட்ட வாமனன், "வேண்டியடைந்தவர்களின் விருப்பந்துக் கதிகமாகவே கொடைகளை வீசிக் கொண்டிருக்கும் நீண்ட கைகளை யுடையவனே, இனிமேலும் உன்னிடம் 'கொடு" என்று வந்தால் அவர்கள் மாண்புப் பான்மை யில்லாதவர்களே.

சிந்தையுவந்தெதிர் என்செய வென்றான்
அந்தணன் மூவடி மண்ணருளுண்டேல்
வைந்திறலாயிது வேண்டுமென முன்
தந்தனன் என்றனன் வெள்ளி தடுத்தான்.

குறளுருவன் இப்படிச் சொல்லக் கேட்ட மாவலி யானவன் அவனது புகழ் உரைக்கு மிக்க மனமகிழ்ந்து, "அடியேன் உமக்கு என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான். "பலசாலியே, உன்னிடமிருந்தால் எனக்கு மூன்று அடி மண் அளந்துகொடு" என்றான் வாமனன். அவன் அப்படிக் கூறி முடிக்குமுன் "தந்தேன்" என்றான் மாவலி. அப்படி அவன் சொன்னதை யருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த சுக்கிரன் "கொடுக்காதே" என்று தடுத்தான்.

கண்ட திறத்திது கைதவமைய
கொண்டல் நிறக்குறள் என்பது கொள்ளேல்
அண்டமு முற்றுமகண்டமும் மேனாள்
உண்டவனமிதுவுணர்ந்துகொள் என்றான்.

வேந்தே, இந்த மேக வண்ணம் கொண்ட குறளுரு

வன் வஞ்சகன், குறள் வடிவாகிய ஒரு அந்தணன் அல்ல இவன். அண்ட பகிரண்டமெல்லாம் முன்பு உண்ட திரு மால் என்று உணர்ந்துகொள் என்றான். அமைச்சன் போன்ற ஆசாரியன் சுக்கிரன் என்னும் வெள்ளி.

மாவலியின் மேலான பதில்

நினைக்கிலே என் கை நிமிர்ந்திட வந்து
தனக்கியலாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரியானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேநலம் யாது சொலென்றான்

வெள்ளி அப்படிக் கூறக் கேட்ட மாவலி, "என் கை மேலாகவும், சகல கலியாணகுண சம்பன்னனான ஸ்ரீமந் நாராயணன் மேக வண்ணக்கை, தன் தகுதிக்கே துளியும் ஒவ்வாதபடி, கீழாகவும் இருந்தால், இதைவிடச் சிறந்த நன்மை எனக்கு வேறு என்ன இருக்கப் போகிறது?

துன்னினர் துன்னலர் என்பது சொல்லார்
முன்னிய நந்நெறி நூலவர் முன்வந்
துன்னிய தானமுயர்ந்தவர் சொள்க
என்னினிவன்றனை யாவருயர்ந்தார்

அறிஞர்களால் மதிக்கப்பட்ட நல்ல நல்ல நெறியைச் சொல்கின்ற நூலறிவாளர்கள் தானம்பெற வந்தவர்களைப் பார்த்து "இவர் உன் பகைவர்" என்று சொல்லமாட் டார்கள். உயர்ந்தவர் தான் தானம் பெறத் தகுதியுள்ள வர் என்பது நீதிநெறி யாயின், இக் குறளுருவனை விடச் சிறந்தவர், தானங் கொள்ளத் தக்க சற்பாத்திரம் வேறு யார்?

வெள்ளியையாதல் விளம்பினை மேலோர்
வள்ளியராக வழங்குவதல்லால்

எள்ளுவவென் சில இன்னுயிரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்ருல்.

வெள்ளி என்று உமக்கு பெயர் இருப்பதால் இப்படி வெள்ளறிவு உடையவன் ஆகப் பேசுகிறீர் போலும். உயர்ந்தவர்கள் வள்ளல்கள் ஆகும் பொருட்டே கொடை அளிப்பார்கள். அவர்களால் இகழப்படும் பொருளும் சில உலகில் உண்டோ ? ஒருவன் தன்னுடைய இன்னுயிரை யுங் கூடப் பிறரிடம் கேட்டுப் பெறுவது தீமையே பயப்பது ஆகும் அதே தனது இன்னுயிரைப் பிறர் பொருட்டு அளிப்பது என்றும் நன்மை தருவதாகும்.

மாய்ந்தவர் மாய்ந்தவரல்லர் கண்மாயா
தேந்தியகை கொடிரந்தவரெந்தாய்
வீய்ந்தவரென்பவர் வீய்ந்தவரேனும்
ஈந்தரவல்லதிருந் தவர் யாரே?

எம் தந்தையே, இவ்வுலகில் இறந்தவர் இறந்தவரல்லர். வெட்கமின்றிப் பிச்சை யேற்கக் கையேந்தி நிற்பவரே மாய்ந்தவர் ஆவர். பூதவுடலால் இறந்து விட்ட போதி லும் உயிரோடு இருக்கும்போது வரையாது கொடுத்த வள்ளல்களே என்றும் புகழுடம்பால் இறவாது இருப்பவர் கள்.

அடுப்பவரும் பழி செய்ஞ்ஞருமல்லர்
கொடுப்பவர் முன்பு கொடேல் என நின்று
தடுப்பவரே பகை தம்மையு மன்னர்
கெடுப்பவரல்லதோர் கேடிலை என்ருன்

ஒருவனுக்கு அரும்பழி உண்டாக்குவோர் அவனுக்குப் பகைவர் ஆகமாட்டார்கள். ஆனல், இரப்பவர்களுக்குக் கொடுப்பவன் முன் நின்று, "கொடுக்காதே" என்று

அவனைத் தடுப்பவரே அவன் பகைவர் ஆவர். அப்படித் தடுப்பவர், கொடுப்பவனை மட்டுமன்றி தன்னையும் கெடுத்துக் கொள்பவர் ஆகிறார்கள். ஆதலால் கெடுப்பவனைப் போன்ற கேடு மற்றொன்று இவ்வுலகில் கிடையாது.

கட்டுரையிற்றம கைத்துள போழ்தே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகையாவது லோபம்
விட்டிடலென்று விளக்கினர் தாமே

பெரியோருடைய பெருமொழியின் படி தமது பொருள் தம் கைவசமிருக்கும் போதே இரப்பவர்களுக்குக் கொடுத்து இம்மையில் புகழ்பெற்று மறுமையில் அறத்தின் பயனைப் பெற முயன்றவர்கள் எல்லாம். உள்ளிருந்து தம்மைக் கெடுப்பது கருமித்தனம். லோபம் ஆதலால், அதை விட்டு விடவேண்டும், என்று விளக்கியிருக்கிறார்கள்.

வெள்ளிக்கு மாவலி சாபம்

எடுத்தொருவருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினைக்கிதழகோ தகவில் வெள்ளி
கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதவும் இன்றி விடுகின்றாய்

இரப்பவர் இரந்த பொருளை எடுத்துக் கொடுப்பதன் முன்பே தடுப்பது ஆசான் ஆகிய உனக்கு அழகாமோ? நடுவு நிலை மனப்பாங்கு இல்லாத ஏ, கொடியவனே, வெள்ளி, உன் சுற்றத்தாருக்கு உண்ண உணவும் உடுக்க உடையுமில்லாமல் நீயே கெடுக்கின்றாய். நீ செய்யும் இம் மாபாவம் அவர்களையும் தாக்கும் என்பது கருத்து. இங்கு மாவலியின் மகோன்னதமான மனப்பான்மை, தியாகம், லட்சியம்; பற்றற்ற கொடைத்தன்மை யாவும் சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றன.

மாவலியின் கொடை

முடிய இம்மொழிஎலா மொழிந்து மந்திரி
கொடியன் என்றுரைத்த சொல் ஒன்றுங்
கொண்டிலன்
"அடியொரு மூன்று நீ அளந்து கொள்கென"
நெடியவன் குறிய கை நீரின் நீட்டினன்

இப்படி மறுமொழி கூறிய மாவலி, "வந்திருப்பவன் கொடியவன்" என்று தன் மந்திரி வெள்ளி சொன்ன வார்த்தையையும பொருட் படுத்தாது, "மூன்றடி நீயே அளந்து கொள்" என்று நெடியவன் ஆகிய திருமாலின் குறள் உருவினால் குட்டையான கையில் தானம் செய்ய நீர் வார்க்கப் போனான்.

வாமனன் திரிவிக்கிரமன் ஆவது

கயந்தரு நறும்புனல் கையிற்றீண்டலும்
பயந்தவர்களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பினோங்கினான்
உயர்ந்தவர்க்குதவிய உதவியொப்பவே

தாமரைப் பொய்கையின் நறுமண நன்னீர் தன் கையிற்ப் பட்டது தான் தாமதம், உடனே பெற்றவர்களும் இகழத்தக்க உருவங் கொண்டிருந்த அக்குறளன், நல்லவர் களுக்குச் செய்த உதவிபோல, வானளாவ உயர்ந்து ஓங்கினான்.

வானமும், வையமும் ஈரடியால் அளத்தல்

நின்ற கால் மண்ணெலா நிரப்பியப் புறம்
சென்று பாவிற்றிலை சிறிது பாரென
ஒன்ற வானகமெலா ஒடுக்கியும் பரை
வென்ற கால் மீண்டது வெளி பெறுமையே

நீண்டு நின்ற நெடியவனின் பாதமானது பூமண்டலத்தை ஓரேயடியின்பால் அளாவி, பூமி சிறியது என்று அப்புறம் போய் அங்கும் பரவாமல், ஆகாயத்தை எல்லாம் ஒடுக்கித் தன்னுள்ளடக்கி விண்ணகத்தைக் கடந்து அண்டச் சுவரை ஊடுருவிய அப்பாதம் மேலும் செல்ல வேற்றிடமில்லாமையால், மீண்டும் பூமிக்கே திரும்பி வந்து விட்டது.

மூன்றாவது அடி மாவலி மன்னனின்
மணிமுடியணிந்த தலையில்

உலகெலா முள்ளடியடக்கி ஓரடிக்
கலகிலா தவ்வடிக்கன்பன் மெய்யதாம்
இலகுலாந்துழாய் முடி ஏக நாயகன்
சிலகுலாந் தோளினாய் சிறியன் சாலவே

கோதண்ட வில் விளங்கும் திண்டோள் இராமா, மண்ணையும் விண்ணையும் தன் உள்ளடியில் அடங்கச் செய்து, மற்றோரடிக்கு இடமின்மையால், ''மூன்றாவது அடி அளக்க இடம் காட்டு'' என்ற மாலுக்கு அன்பன் மாவலி தன் மணிமுடி சொலிக்கும் தலையைக்காட்ட, அவன் சிரசில் தன் பாதத்தை வைத்து, அவனைப் பாதாள உலகுக்கு அனுப்பிய துளசி மாலையணிந்த ஏக நாயகன் மிகவும் சிறியவன்தானே, இல்லையா? இல்லை என்பது கருத்து.

உரிய திந்திரற்கி தென்றுலக மீய்ந்து போய்
விரி திரைப்பாற்கடல் பள்ளி மேவினான்
கரியவன் உலகெலாங் கடந்த தாளிணை
திருமகள் கரந்தொடச் செவந்து காட்டவே

''இவ்வுலகம் இந்திரனுக்குரியது'' என்று அதை

அவனுக்கு அளித்து விட்டு, அலை மோதும் திருப்பாற் கடலில் பூவிரிந்த வல்லியாகிய திருமகள் தன் மென்மை யான கைகளால் வருடவும், சிவந்து நோகும்படி உல கெலாம் கடந்த தாளிணைகளையுடைய நீலமால் பள்ளி கொண்டு விட்டாள்.

ஆதலா லருவினை யறுக்குமாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறார்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கீதலாதில்லை வேறிருக்கற் பாலதே

பிறரால் தெரிவிக்க முடியாத இருவினைக் கட்டை யறுத்தருளும் இராமா, இது இந்தச் சோலையின் பழைய வரலாறு. அன்புடன் இதைக் கண்ணுல் கண்டவர் பிறகு பிறவியே காணமாட்டார்கள். வேத சாஸ்திர முறைப்படி யாகம் செய்கின்ற எனக்கு இருக்கத்தக்க இடம் இதைத் தவிர வேறு கிடையாது, என்று கூறி முடித்தார் விசுவா மித்திர மாமுனிவர்.

முதற் பாகம் முற்றும்